# இலக்கிய இதழ்கள்



பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி
மா.ரா. அரசு




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# இலக்கிய இதழ்கள்

பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி

மா.ரா. அரசு




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
இரண்டாவது முதன்மைச்சாலை, சி.ஐ.டி. வளாகம்,
தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Ilakkiya Idhalgal |
| Editors | : | E. Sundaramoorthy<br>M.R. Arasu |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Tharamani, Chennai - 600 113<br>Ph:22542992 |
| Publication No | : | 511 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2004 |
| Edition | : | First |
| Paper used | : | TNPL 18.6 Kg Maplitho |
| Size of the Book | : | Demy 1/8 |
| Printing Types | : | 10 Points |
| No. of Pages | : | xiv+386 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.110/- (Rupees One hundred and one only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Luz, Mylapore, Chennai - 600 004 |
| Sunmbject | : | Studies on Tamil Journalism |

இதழியல் ஆய்வு - தொகுதி 10

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

அரிய பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாகத் தொகுத்து வெளியிடுவது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தொடர் பணிகளில் ஒன்றாகும். அவ்வகையில் பல்வேறு நிலைகளில் இதுகாறும் சுமார் 1500 கருத்தரங்குகள் இந்நிறுவனத்தால் நடத்தப்பெற்றுள்ளன.

1999 ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டாக்டர் மா.இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையத்துடன் இணைந்து இதழியல் கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தியது. இக்கருத்தரங்கக் கட்டுரைகளில் நான்கு தொகுதிகள் வெளிவந்துள்ளன. இலக்கிய இதழ்கள் பற்றி நடைபெற்ற கருத்தரங்கக் கட்டுரைகள் **இலக்கிய இதழ்கள்** எனும் பெயரில் இப்போது நூலாக வெளிவருகின்றன.

தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன. புதிய இலக்கிய வகைகளையும், கவிஞர்களையும், எழுத்தாளர்களையும் அறிமுகப்படுத்துவதற்கு இதழ்களே வாயில்களாக அமைந்தன.

தமிழகத்தில் அரசியல், சமுதாய, பொருளாதார மாற்றத்திற்கு இதழ்கள் குறிப்பிடத்தக்க பங்காற்றியிருக்கின்றன.

இவ்வகையில் இலக்கிய இதழ்களைப் பற்றிய இக்கருத்தரங்கக் கட்டுரைகள் இலக்கிய வளர்ச்சிக்கு இதழ்கள் ஆற்றிய பங்கை மிக விரிவாக ஆராய்ந்துள்ளன. 1935 முதல் 1991 வரை 55 ஆண்டுகளில் ஸ்ரீசுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம் தொடங்கிச் சுபமங்களா வரையிலான பதினேழு இதழ்களைப் பற்றிய விரிவான ஆய்வு நூலாக இந்நூல் அமைந்துள்ளது. இதழ்கள் இலக்கிய உலகிலும், இலக்கிய சுவைஞர்கள் நிலையிலும்

எவ்வளவிற்கு நிலைபெற்றிருந்தன என்பதை அவ்விதழ்களின் பெயராலேயே அறியப்பட்ட எழுத்தாளர்களைக் கொண்டே நாம் தெரிந்து கொள்ளவியலும்.

**முல்லை** முத்தையா, **எழுத்து** சி.சு. செல்லப்பா, **தீபம்** நா. பார்த்தசாரதி என இதழ்கள் பெயரிலேயே இந்த எழுத்தாளர்கள் அடையாளம் காணப்பட்டிருந்ததை நன்கு அறியலாம்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் பற்றிய வரலாற்றை அறிந்துகொள்வதற்கும், அவற்றுள்ளும் குறிப்பாக இலக்கிய இதழ்கள் பற்றிய வரலாற்றைத் தெரிந்துகொள்வதற்கும் இந்நூல் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இலக்கிய இதழ்கள் பற்றிய விரிவான விளக்கங்களுடன் அவற்றின் தோற்றம், கட்டமைப்பு, மொழிநடை, தமிழ் உலகில் அவற்றின் செல்வாக்கு ஆகியவற்றை நன்கு தெரிந்துகொள்ளும் வகையில் இந்நூல் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இந்நூல் இலக்கிய இதழ்கள் பற்றிய ஒரு கலைக்களஞ்சியம்.

1999இல் நடைபெற்ற இவ்விதழியல் கருத்தரங்கக் கட்டுரைகளை இப்போது நிறுவனம் முனைந்து நூலாகக் கொண்டு வருகின்றது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி மற்றும் பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும் **தமிழ் வளர்ச்சி பண்பாடு – மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பு. ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும் **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திரு சு. கண்ணனுக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை
26-07-2004

**இயக்குநர்**

# பதிப்புரை

இருபதாம் நூற்றாண்டில் இலக்கிய இதழ்கள் தமிழுக்கு அளித்த கொடை மிகப் பெரிது. தமிழில் இன்று வேகமாக வளர்ந்து வருகின்ற மேலைநாட்டுத் திறனாய்வுக் கூறுகள் பலவற்றை இலக்கிய இதழ்கள் நமக்கு அறிமுகப்படுத்தின. இவ்விதழ்களை உருவாக்கியவர்கள், இவற்றிற்கான வாசகர்கள், இவற்றில் வந்த பல்வேறு வகையான புதுமையான போக்குகள் ஆகியவை இவ் இதழியல் கருத்தரங்கக் கட்டுரைகளால் தெரியவரும். பொருளாதார நெருக்கடிகளுக்கு இடையில் தமிழ் வளர்த்தலில் சீரிய பங்களிப்பைச் செய்த இலக்கிய இதழ்களை நினைவு கூரவும் இக்கட்டுரைகள் துணைபுரியும்.

இத்தொகுதியில் 1935இல் தொடங்கப்பெற்ற 'ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்' தொடங்கி 1991இல் உருவான 'சுபமங்களா' உட்பட 16 இலக்கிய இதழ்களின் தனித்துவமான தன்மைகள் ஆய்வாளர்களால் கட்டுரைகளாகத் தரப்பெற்றுள்ளன. அவ்விதழ்களை - அவற்றின் கருத்தமைவுகளை ஒருங்கே, அருகருகே வைத்துப் பார்ப்பது இருபதாம் நூற்றாண்டின் இலக்கியத் தளத்தை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் துணை நிற்கும்.

### ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்

இது, 1935இல் பாரதிதாசனால் ஆசிரியர் பொறுப்பேற்று நடத்தப்பெற்ற ஓர் இதழாகும். அலங்காரம் அதிகமில்லாத ஆழமான கவிதைகளை, எளிய நடையில் எளிய சந்தத்தில் படைப்பதில் முன்னோடியாகத் திகழ்ந்த பாரதியாரின் கவிதைக் கருத்துருவை அவர் சீடரான பாரதிதாசன் இவ்விதழ் மூலமாக முன்னெடுத்துச் சென்றார். அவர் இவ்விதழால் பல கவிஞர்களை உருவாக்கியதோடு மட்டுமன்றிப் புதிய கவிதைச் சோதனைகளையும் செய்வதற்கான களம் அமைத்துக் கொடுத்தார். பாரதிதாசன் தமிழ் இசையில் பாடல்கள் வெளிவர முன்முயற்சிகள் எடுத்ததோடு பல்வேறு கவிஞர்களையும் இத்துறையில் ஈடுபடுத்தியுள்ளார்.

### முல்லை

1945ஆம் ஆண்டு பொங்கல் திருநாளில் 'முல்லை' இதழ் முத்தையாவால் தொடங்கப் பெற்றது. இவ்விதழை, 'முல்லை'

முத்தையா, பாரதிதாசன், தொ.மு.சி. ரகுநாதன் ஆகியோர் ஆசிரியர்களாய் இருந்து வளர்த்தனர். முல்லையில் பாரதிதாசன் தொடங்கிப் பல்வேறு கவிஞர்கள் தங்கள் எழுத்தாற்றலை, படைப்பை வெளிப்படுத்தினர். கவிதையோடு தமிழாய்வுத் தொடர்பான கட்டுரைகள், தாய்வழிக் கல்விக் கோட்பாட்டை வற்புறுத்தல், இயற்கை சார்ந்த வாழ்வு தொடர்பான செய்திகள் போன்றவற்றையும் இவ்விதழில் காணலாம்.

### தமிழ் முரசு

1946ஆம் ஆண்டு மே மாதம் ம.பொ.சி. 'தமிழ்முரசு' இதழை வெளிக்கொணர்ந்தார். தமிழ் மொழிக்கான ஏற்றம், தமிழ் நாட்டின் எல்லைகளைப் பாதுகாப்பது, தமிழ் மொழியை ஆட்சி மொழியாக மாற்றுவது போன்ற உயரிய நோக்கங்களைத் தமிழ்முரசு கொண்டிருந்தது. தமிழ் மொழி, வரலாறு, இலக்கியம் ஆகியவற்றில் ஆழ்ந்த பயிற்சியும் ஈடுபாடும் கொண்ட திரு.வி.க., பாரதிதாசன், ரா.பி. சேதுப்பிள்ளை, தெ.பொ.மீ., கி.ஆ.பெ. விசுவநாதன், மு. வரதராசனார், ப. ஜீவானந்தம், மு. அருணாசலம், தமிழ் ஒளி போன்ற பெருமக்களின் படைப்புகள் இவ்விதழில் தொடர்ந்து வெளிவந்தன.

### மஞ்சரி

தி.ஜ. ரங்கநாதனை ஆசிரியராகக் கொண்டு 1947இல் தொடங்கப்பெற்ற இதழ் 'மஞ்சரி'. இது ஆங்கிலத்திலுள்ள 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' போலத் தமிழில் வாசகர்கள் பலதரப்பட்ட செய்திகளையும் தெரிந்துகொள்ள வழிவகுத்தது. இவ்விதழில் இலக்கியம், வரலாறு, சமுதாயம், சுற்றுலாத் தலங்களின் சிறப்பு, தலைவர்களின் வரலாறு, உளவியல், திருவிழாக்களின் வகைகள் என ஒவ்வொன்றையும் தமிழுக்கு அறிமுகம் செய்தும் விளக்கியும் கட்டுரைகள் வெளிவந்தன. தமிழர்களுக்குப் பரந்துபட்ட பொது அறிவு தந்ததில் இந்த இதழின் பங்களிப்புச் சிறப்பானது.

### அமுதசுரபி

1948இல் முனுசாமி முதலியாரால் தொடங்கப்பெற்றது 'அமுதசுரபி. விக்கிரமன் இவ்விதழின் ஆசிரியர்களுள் குறிப்பிடத்தக்கவர். எழுத்தாளர்களை ஒருங்கிணைத்துத் தமிழ் எழுத்தாளர் மாநாடு கண்ட இவ்விதழ், பல்வேறு இதழியல் பணிகளைச் சிறப்பாகச்

செய்தது. கவிதை, சிறுகதை, அறிவியல் கட்டுரைகள், தொடர்கதை முதலியவற்றை வெளியிட்டுத் தன் வாசகர் வட்டத்தை விரிவுபடுத்தியது.

### தென்றல்

'தென்றல்', கவிஞர் கண்ணதாசனை ஆசிரியராகக் கொண்டு 1954இல் வெளிவந்தது. பாரதியார், அறிஞர் அண்ணா போன்றோருக்குச் சிறப்பு மலர் வெளியிட்டுச் சிறப்புச் செய்ததோடு தமிழ் வளர்ச்சிக்கும் பெரும் பங்காற்றியது தென்றல். கேள்வி - பதில், இலக்கியக் கட்டுரைகள் ஆகியவற்றோடு மரபுக் கவிதைகளை எழுதுவோருக்குப் போட்டிகள் வைத்தல், தனித்தமிழ் இயக்க அறிஞர்களின் கட்டுரைகளை வெளியிடுதல் எனத் தமிழுக்கு ஏற்றம் தரும் வண்ணம் இவ்விதழ் பல பங்களிப்புகளைச் செய்துள்ளது. கவிஞர் கண்ணதாசன் என்பவர் இதழாளர் கண்ணதாசனாக எப்படிச் செயல்பட்டார் என்பதை அறியவும் இவ்விதழ் துணைபுரிந்தது. மேலும் 1954ஆம் ஆண்டு திராவிட முன்னேற்றக் கழகத்தின் செயல்பாடுகளைக் கண்ணதாசன் பார்வையில் புரிந்து கொள்ளவும் இவ்விதழ் ஓர் ஆவணமாக விளங்குகிறது.

### திங்கள்

1956ஆம் ஆண்டு முதல் 'திங்கள்' இதழ், டி.வி. ராம்நாத் என்பவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. இதற்கு முன்னரே தமிழில் வெளிவந்து கொண்டிருந்த மஞ்சரி போலவே திங்களும் பல்வேறு தகவல்களை உள்ளடக்கி அதே பாணியில் வெளிவந்தது. பொதுவாக இவ்விதழ் சமுதாயம், இலக்கியம், இலக்கியத் திறனாய்வு, வரலாறு, அறிவியல், கலை, மொழிபெயர்ப்பு, படக்கட்டுரை எனப் பலவற்றைத் தனது உள்ளடக்கமாகக் கொண்டது. வண்ணப் புகைப்படங்களோடு வெளிவந்தமை இதன் தனிச்சிறப்பாகும்.

### எழுத்தாளன்

'அ.வெ.ர.கி.' என்று அறியப்படும் அ.வெ.ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் 1958ஆம் ஆண்டில் 'எழுத்தாளன்' இதழைத் தொடங்கி நடத்தினார். தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் தொடங்கப்பெற்ற இவ்விதழ் தமிழின் பல்வேறு பரிமாணங்களை விளக்கும் தன்மையில் திகழ்ந்தது. அத்துடன் இலக்கியம் தொடர்பான ஆங்கிலக் கட்டுரைகளும் இவ்விதழில் தொடர்ச்சியாக வெளியாயின. அதனால் இதனை, 'Tamil - English monthly' என்றும் 'A Bilingual Journal'

என்றும் அழைத்தனர். தமிழர்களுக்கு இந்திய இலக்கியங்களையும் எழுத்தாளர்களையும் அறிமுகப்படுத்தி இவ்விதழ் சிறப்பான தொண்டாற்றியிருக்கிறது. மேலைநாட்டு எழுத்தாளர்கள், அவர்களின் படைப்புகள் ஆகியவற்றை அறிமுகம் செய்து வைத்தல், நலம் பாராட்டத்தக்க சில பகுதிகளை மொழிபெயர்த்துத் தமிழில் தருதல் போன்ற நிலைகளிலும் எழுத்தாளன் தமிழுக்கு ஆற்றிய தொண்டு நினைக்கத்தக்கது.

## எழுத்து

தமிழின் நவீன போக்குகளை மக்களுக்கு அறிமுகப்படுத்தவும் புதிய படைப்பாளிகளை உருவாக்கவும் சி.சு. செல்லப்பா 1959ஆம் ஆண்டில் 'எழுத்து' இதழைத் தொடங்கினார். புதுமை இலக்கிய மாத ஏடு எனத் தன்னை அறிவித்துக்கொண்ட எழுத்து இதழ், புதுக்கவிதையில் பல சோதனை முயற்சிகளைச் செய்தது. எழுத்துவில் வெளிவந்த கவிதைகளை அடிப்படையாகக் கொண்டும் பொது நிலையிலும் கவிதையின் வடிவம், உள்ளடக்கம், போக்கு போன்றவற்றைக் குறித்துப் பல கட்டுரைகளை இவ்விதழ் வெளியிட்டது. தருமு அரூப் சிவராமு, ந. பிச்சமூர்த்தி, கு.ப.ரா., சி. மணி, தி.சோ. வேணுகோபாலன், 'பசுவய்யா' என்கிற சுந்தர ராமசாமி, எஸ். வைத்தீஸ்வரன், நகுலன் மற்றும் பலர் எழுத்துவில் உருவாகிய சிறப்பான புதுக்கவிஞர்கள்..மேலும் சிறுகதைகள், தொடர்கதைகள் போன்றவற்றை வெளியிட்டும் எழுத்து, தனது இலக்கியப் பணியைத் தொடர்ந்தது. இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் தமிழ் வாசகர்களுக்குப் புதிய புரிதல்களை ஏற்படுத்தியதில் எழுத்துவின் பணி என்றென்றும் நினைக்கத்தக்கது.

## தமிழ்ச்செல்வி

ப. சுந்தரவேலனாரை ஆசிரியராகக் கொண்டு, 'தமிழ்ச்செல்வி' 1960ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்றது. அவருக்குப் பிறகு இவ்விதழை மது. ச. விமலானந்தம், சந்தனசாமி ஆகியோரும் நடத்தியிருக்கின்றனர். பண்டை இலக்கியங்களின் பெருமைகளை எடுத்துக்கூறும் இலக்கியக் கட்டுரைகள், இலக்கியத் தொண்டாற்றி வரும் அறிஞர்கள் குறித்த சிறப்புக் கட்டுரைகள், இலக்கியத்தையும் அறிவியலையும் இணைத்துப் பார்க்கும் கட்டுரைகள் போன்றவற்றைத் தமிழ்ச்செல்வி வெளியிட்டது. கவிதைகள், சிறுகதைகள், தொடர் கதைகள் போன்றவையும் இவ்விதழில் வெளிவந்தன. தமிழர்களின்

அறிவைச் செழுமைப்படுத்தும் பல கூறுகள் இவ்விதழில் அமைந்திருந்தன.

### தீபம்

நா. பார்த்தசாரதியை ஆசிரியராகவும் உரிமையாளராகவும் கொண்டு வெளிவந்த 'தீபம்' சிறந்த தரமான படைப்புகளைத் தரும் எழுத்தார்வலர்களுக்குப் போதிய இடமளித்தது. பலரும் இவ்விதழால் தமிழுக்கு அறிமுகமாகி வளர்ந்தனர். சிறந்த சிறுகதைகள், சமூகத் தொடர்கதைகள், வரலாற்றுப் புதினங்கள், கவிதைகள், திறனாய்வுக் கட்டுரைகள் போன்றன இவ்விதழில் வெளிவந்தன. மேலும் பிற இந்திய மொழிகள், மேலைநாட்டு மொழிகள் போன்றவற்றில் வெளியான சிறுகதைகளும் பிறவும் தீபத்தில் வெளிவந்தன. ஆதவன், இந்திரா பார்த்தசாரதி போன்றோரைத் தமிழுக்குத் தீபமே அறிமுகப்படுத்தியது. குறிப்பாக இந்திரா பார்த்தசாரதியின் முதல் நாவலான, 'தந்திர பூமி' இவ்விதழில் வெளிவந்தது. மேலும் 'நானும் என் எழுத்தும்' என்னும் பகுதி எழுத்தாளர்களைப் பேட்டி கண்டு அவர்களின் படைப்புலக அனுபவங்களைப் பதிவு செய்தது.

### கணையாழி

கி. கஸ்தூரிரங்கனால் டில்லியில் தொடங்கப்பெற்ற இதழ் 'கணையாழி'. இதன் போக்குகளை ஐந்து விதமாக அறிய இயலும். 1965-1970, 1970-1975, 1975-1980, 1980-1985, 1995 முதல் எனக் கணையாழியின் உள்ளடக்கத்தை - அமைப்பைக் கொண்டு, அதை ஐந்தாக வகைப்படுத்திக் காணலாம். தமிழ்நாட்டிற்கு வெளியே தொடங்கப்பெற்ற ஓரிதழ் தொடர்ச்சியாக இயங்கியது குறிப்பிடத் தக்கதாகும். தமிழுக்குப் பல்வேறு கொடைகளைத் தந்து தனக்கெனத் தனித்த ஓர் இடத்தை உருவாக்கிக் கொண்ட இதழ் கணையாழி. இதில் தொடர்ச்சியாகத் தமிழ் அறிஞர்கள் இலக்கியத்தின் பல பகுதிகளையும் விளக்கிக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். தொடர் கட்டுரைகள், இலக்கிய அறிஞர்களின் பேட்டிகள், சிறுகதைகள், நாவல்கள் போன்றனவற்றின் வளர்ச்சியில் கணையாழியின் பங்கு இன்றியமையாதது. குறுநாவல் என்கிற வடிவம் தமிழில் சிறப்புப் பெற இவ்விதழ் பல்வேறு சோதனை முயற்சிகளையும் செய்துள்ளது. கணையாழியில் வெளிவந்த இந்திரா பார்த்தசாரதியின் 'குருதிப் புனல்', அசோகமித்திரனின் 'தண்ணீர்', தி. ஜானகிராமனின் 'மரப்பசு', 'மோகமுள்', வண்ணநிலவனின் 'கடல்புரத்தில்' போன்றன பலரால்

பாராட்டப் பெற்ற நாவல்கள். இவற்றைப் போன்றே சிறுகதைகள், கவிதைகள் போன்றவற்றிலும் சிறந்த படைப்புகள் வெளிவந்தன. மொழிபெயர்ப்புகள், நேர்காணல்கள், தமிழோடு தொடர்புடைய ஒவியம் முதலான பிற துறைகளை அறிமுகப்படுத்தும் கட்டுரைகள் போன்றவற்றாலும் கணையாழி தமிழ் இதழியல் வரலாற்றில் உரியவாறு பதிவாகியுள்ளது.

ஞானரதம்

ஜெயகாந்தன், தம் நண்பர்களோடு இணைந்து சனவரி 1970இல், தேவசித்ரபாரதியை நிர்வாக ஆசிரியராகக் கொண்டு 'ஞானரதம்' இதழை ஆரம்பித்தார். இவ்விதழ் மாதந்தோறும் வெளிவரும் இதழ் என்கிற அறிவிப்போடு வந்த போதிலும் தொடர்ச்சியாக வரவில்லை. பல்வேறு இதழ்களை ந. முத்துச்சாமி, ஆ. ஞானக்கூத்தன், வல்லிக்கண்ணன் முதலியோர் தொகுத்திருக் கின்றனர். தமிழ் நவீன எழுத்தாளர்களில் பல முன்னணிப் படைப்பாளிகள் ஞானரதத்தில் சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள் ஆகியவற்றை வழங்கியுள்ளனர். ஜெயகாந்தனை ஓர் இதழாளராகக் காணவும் ஞானரதம் பயன்படுகிறது.

நாடகக் கலை

ஆறு. அழகப்பன் சிறப்பாசிரியராக இருந்து 'நாடகக் கலை' இதழை 1970ஆம் ஆண்டு முதல், மாத இதழாக நடத்தினார். நாடகக் கலையில் பெரும் சேவை புரிந்த நவாப் இராசமாணிக்கம் பேட்டி, நாடகம் தொடர்பான அறிஞர்களின் கட்டுரைகள், நாடகக் கலைஞர்களின் வாழ்க்கைக் குறிப்புகள், நாடகக் கலைஞர்கள் தங்களின் அனுபவங்களை வாசகர்களோடு பகிர்ந்து கொள்ளுதல் போன்ற பகுதிகள் இவ்விதழின் தனிச்சிறப்புகள்.

வானம்பாடி

'வானம்பாடி' 1971ஆம் ஆண்டிலிருந்து வெளிவந்தது. கோவையிலுள்ள முற்போக்குச் சிந்தனையாளர்கள் கவிதையின் பாடுபொருள்களிலும் உள்ளடக்கத்திலும் உத்தி அமைப்பிலும் பல்வேறு சோதனை முயற்சிகளை மேற்கொண்டு வெற்றியும் கண்டனர். வானம்பாடியாளர்களின் சாதனையால் தமிழகத்து இளைஞர்களில் பலரும் கவிதை எழுதும் முயற்சியில் ஈடுபட்டனர்; அவர்களுள் சிலர் வெற்றியும் கண்டனர். வானம்பாடி, கவிதைக்கு

ஆற்றிய தனித்த தொண்டினால் அவ்விதழ்க் கவிஞர்கள் 'வானம்பாடிக் கவிஞர்கள்' என்றே அழைக்கப்பெற்றனர். சிற்பி, தமிழன்பன், அப்துல்ரகுமான், கல்யாண்ஜி, கலாப்பிரியா, தமிழ்நாடன், புவியரசு, தமிழவன், மு. மேத்தா, அக்னிபுத்திரன் போன்றோர் வானம்பாடியின் கவிதைப் படைப்பாளர்களில் தனித்துக் குறிக்கத்தக்கவர்கள். புதுக்கவிதை பற்றிய கட்டுரைகள் பல இவ்விதழில் வெளிவந்துள்ளன. புதுக்கவிதை வரலாற்றில் தவிர்க்க இயலாத இடத்தைப் பெற்ற இதழ் வானம்பாடி.

சுபமங்களா

இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் செயல்பட்ட தமிழ் இலக்கிய இதழ்களில் 'சுபமங்களா'விற்குத் தனித்த இடமுண்டு. மிகுதியான எண்ணிக்கையில் வாசகர்களை இவ்விதழ் பெற்றிருந்தது. கட்டுரைகள், கவிதைகள், சிறுகதைகள், படைப்பாசிரியர்களின் அனுபவங்களைப் பதிவு செய்தல் போன்றவை இதழின் பகுதிகளாக அமைந்தன. படைப்பாளிகளையும் தமிழ் அறிஞர்களையும் நேர்காணும்முகமாக நடைபெற்ற பதிவுகளும் சுபமங்களாவில் இடம்பெற்றன.

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய பல்வேறு இலக்கிய இதழ்களில் சிலவே இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. இவ்விதம் இடம்பெற்ற பதினாறு இதழ்களும் தமிழுக்குச் செய்த பணிகளைத் தொகுத்துப் பார்க்கும்பொழுது, இவற்றின் இலக்கியப் பணிகள் மலைப்பை ஏற்படுத்துகின்றன. இவ்விதழ்களை ஆய்வு செய்துள்ள கட்டுரையாளர்கள் தாம் எடுத்துக்கொண்ட இதழ்களின் தனித்துவத்தைப் புலப்படுத்த பல சான்றுகளைத் தந்துள்ளனர். மேலும் இவற்றின் உள்ளடக்கங்களை விரிவுபடுத்தி, அட்டவணைப்படுத்தி, ஆவணப்படுத்த வேண்டியது நம்முடைய தலையாய கடமைகளுள் ஒன்றாகும். இவ்விதழ்களைப் போலவே இருபதாம் நூற்றாண்டில் வெளியான எஞ்சிய இலக்கிய இதழ்களுக்கான முறையான பதிவின் - ஆய்வின் தேவையையும் இத்தொகுப்பில் அமைந்த கட்டுரைகள் உணர்த்துகின்றன.

நிறுவனச் சார்பில் நடைபெறும் இதழியல் கருத்தரங்குகளில் ஆய்வுரை, அமர்வுத் தலைமையுரை, கருத்துரை, சிறப்புரைகள் வழங்குவதற்கு உரிய அறிஞர்களைத் தேர்வு செய்யும் குழுவினர்

முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, முனைவர் இ. சுந்தரமூர்த்தி, திரு. மா.ரா. அரசு ஆகியோருக்கு நன்றி.

இதழியல் கருத்தரங்குகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தோடு இணைந்து நடத்த இசைவளித்ததோடு கருத்தரங்குகள் சிறப்புற நடைபெற ஒத்துழைப்பு நல்கிய இந் நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு நன்றி.

இந்நூல் வெளியீட்டில் பெரிதும் ஈடுபாடும் ஆர்வமும் காட்டிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கு நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

பல்வேறு காலங்களில் பல்வேறு உயரிய நோக்கங்களுக்காகத் தொடங்கப் பெற்ற இலக்கிய இதழ்களைக் கட்டுரையாளர்கள் அரிதாகத் தேடிச் சிறப்பாக வடிவமைத்துத் தந்திருக்கிறார்கள். அவர்களின் கட்டுரைகள் முறையாகத் தொகுக்கப் பெற்று நூல் வடிவம் பெறுவது தமிழ் ஆய்வாளர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் நலம் பயக்கும் என்பதில் ஐயமில்லை. தகவல் பெட்டகமாகக் கட்டுரைகளை உருவாக்கிய அனைவருக்கும் நன்றி.

இந்நூல் உருவாகும்போது அச்சுப் பணிகளில் பெரிதும் துணைநின்ற முனைவர் கி. ஜெயகுமார் அவர்களுக்கு நன்றி.

# பொருளடக்கம்

# கட்டுரையாளர்கள்

1. முனைவர் கி. இராசா
தமிழ் இணைப் பேராசிரியர்
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி - 620 024

2. முனைவர் ஆ. இளங்கோவன்
தமிழ் இணைப் பேராசிரியர்
கரந்தைக் கலைக் கல்லூரி
தஞ்சாவூர் - 613 002

3. முனைவர் மு. இளமுருகன்
தமிழ் இணைப் பேராசிரியர்
கரந்தைக் கலைக் கல்லூரி
தஞ்சாவூர் - 613 002

4. முனைவர் ஆ. கந்தசாமி
405/4, காமதேனு அடுக்ககம்
இரண்டாவது நிழற்சாலை
அண்ணா நகர், சென்னை - 600 040

5. திரு. க. சந்திரசேகரன்
ஆசிரியர், நிலவளம்
சென்னை - 600 004

6. முனைவர் கா. சிவத்தம்பி
தகைசார் ஓய்வுநிலைப் பேராசிரியர்
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்
இலங்கை

7. முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்
50, அழகப்பா குடியிருப்பு
பொள்ளாச்சி - 642 001

8. முனைவர் மு. சுதந்திரமுத்து
தமிழ் இணைப் பேராசிரியர்
மாநிலக் கல்லூரி
சென்னை - 600 005

9. திருமதி சுப்புலட்சுமி இராசமுருகன்
8A, முதலாவது முதன்மைச் சாலை
டிஎஸ்.டி நகர், அரும்பாக்கம்
சென்னை - 600 106

10. முனைவர் ஆ. தசரதன்
திட்டக் கல்வியர்
பல்கலைக்கழக நல்கைக் குழுப்
பெருந்திட்டம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

11. முனைவர் தி.சு. நடராசன்
தமிழ்ப் பேராசிரியர் - ஓய்வு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

12. முனைவர் பு. பிரகாசம்
தமிழ் இணைப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை - 600 030

13. திரு. ப. புகழேந்தி
16, யுனைடெட் இந்தியா காலனி
முதல் மெயின்ரோடு
கோடம்பாக்கம்
சென்னை - 600 024

14. திரு. பெ.சு. மணி
11, இராமகிருஷ்ணாபுரம்
இரண்டாவது தெரு
மேற்கு மாம்பலம்
சென்னை - 600 033

15. முனைவர் சு. ராஜசேகரன்
13/4, சுப்பிரமணிய சுவாமி
கோயில் தெரு, சைதை,
சென்னை - 600 015

16. முனைவர் சா. வளவன்
தமிழ் இணைப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை - 600 030

17. முனைவர் வேனிலா ஸ்டாலின்
தமிழ் இணைப் பேராசிரியர்
அண்ணா ஆதர்ஷ் கல்லூரி
சென்னை - 600 040

# கருத்தரங்கத் தொடக்கவுரை

## தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் - விரிவான ஆய்வுக்கான முன்குறிப்புக்கள் சில

கார்த்திகேசு சிவத்தம்பி

### *தமிழுக்குப் புதிய பரிமாணங்களைத் தந்த இதழியல் பற்றிய நுண்ணாய்வு*

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் டாக்டர் மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையமும் இணைந்து நடத்தும் இதழியல் பற்றிய பத்தாவதும் நிறைவிறுதியுமாக அமைகின்ற கருத்தரங்கு (அக்டோபர் 8,9,10-1999) நடைபெறுகிறது.*

*தமிழிலக்கிய வரலாற்றில் மிக முக்கிய இடம்பெறுவனவாகிய பல்வேறு இதழ்களின் வரலாறுகளையும் அவற்றின் தமிழ்நிலை முக்கியத்துவத்தையும் பல்வேறு தொகுநிலைத் தலைப்புக்களின் மேல் நடத்திய பெருமை இவ்விரு நிறுவனங்களைச் சாரும். விடுதலைக்கு முந்திய இதழ்கள் என்றும் திராவிட இயக்க இதழ்கள் என்றும் பொதுவுடைமை இதழ்கள் என்றும் மகளிர் இதழ்கள் என்றும் பல நிலைப்பட்ட தொகுநிலைகளில் தமிழ் இதழ்கள் பெரும்பாலானவை ஆராயப்பட்டுள்ளன.*

*இக்கருத்தரங்கத் தொடரினதும் கருத்தரங்க வெளியீடுகளினதும் ஒழுங்கமைப்பாளர்களாகவும் பதிப்பாசிரியர்களாகவும் விளங்கும் பேராசிரியர் முனைவர் இ. சுந்தரமூர்த்தியும் திரு. மா.ரா. அரசுவும் தங்கள் பணியினை மிகச் சிறப்பாகச் செய்து வந்துள்ளனர். இத்துறையில் நீண்டகால ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு வந்துள்ள திரு. பெ.சு. மணி போன்றவர்களைப் பயன்படுத்தியும் புதிய ஆய்வாளர்களை ஊக்குவித்தும் இதழியல் பற்றிய விரிவான ஆய்வுக்கான ஒரு தளத்தை ஏற்படுத்தியுள்ளனர்.*

*இதழ்கள் (Journals) தமிழின் நவீனமயப்பாட்டில் முக்கிய இடம்பெறுவதுடன் தமிழ், சில புதிய பரிமாணங்களைப் பெற உதவியுள்ளன.*

தமிழில் இன்று, எழுதப்படுவதை (writings) 'எழுத்து' என்று சொல்லும் ஒரு மரபு வந்துவிட்டது. சி.சு. செல்லப்'பாவின் 'எழுத்து' என்ற சஞ்சிகை, நவீன தமிழிலக்கியர் ஆக்கங்களை 'எழுத்துக்கள்' (writings) என்ற நிலைநின்றே நோக்க வேண்டும் என்பதனை நிறுவியுள்ளது. 'இலக்கியம்' என்று சொல்லும்பொழுதே, அதற்குள் ஒரு தர ரீதியான மதிப்பீடு உள்ளார்ந்து நிற்கிறது. எழுத்து, எழுத்துக்கள் என்பன ஒரு நடுநிலைப் பதமாகும். தரம் இனிமேல்தான் நிச்சயிக்கப்பட வேண்டும். விமர்சனம் உடமையாகத் தொழிற்படத் தொடங்குகின்றது.

இதழியல் எழுத்துக்களிற் பல்வேறு வகைப்பாடுகள் உள்ளன. அவற்றிற் பலவற்றுக்கு இயைபான, சனரஞ்சகமான பதங்களை நாம் இன்னும்தான் உண்டாக்கிக் கொள்ளவில்லை. Feature writing, script writing, column writing, copy writing எனப் பல வரும்.

வீரசோழியத்தில் 'கத்தியத்தின்' (உரைநடையின்) வடிவமாக எடுத்துக் கூறப்பட்ட 'கட்டுரை' இன்று சிலரால் 'கட்டுரை இலக்கியம்' என்றே எடுத்துக்கூறப்படுகிறது ("கத்தியம் கட்டுரை செய்யுளின் போலி கலந்து, அவற்றோடு ஒத்து இயல்கின்றமையால் ஒன்று தாமும் உரைத் தனரே"). கல்வித் தேவைகள் முதல் சாதாரண வாசிப்புத் தேவைகள் பலவற்றுக்குக் கட்டுரை இன்று உதவுகிறது.

மேலும் இதழியலின் வரலாற்றினுள், நவீன தமிழிலக்கியத்தின் முக்கிய ஆக்க வடிவங்களான சிறுகதை, நாவல், கவிதை ஆகியனவற்றின் வரலாறு தொக்கு நிற்கின்றது.

பத்துக் கருத்தரங்குகளிலிருந்தும் பெறப்பட்ட அறிவினைத் தளமாகக் கொண்டு இதழியல், இலக்கிய வரலாற்றின் அங்கமாக அமையும் தன்மையும் எழுத்துக்களின் அமைவியல், அழகியல் அமிசங்களும் ஆராயப்படவேண்டும். மேலும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் தமிழ் இதழியல் வளர்ந்த வரலாறு அறியப்படவேண்டும்.

இந்தப் பணிக்கான வழிகாட்டிகளாக அமைந்த இரு நிறுவனங்களுக்கும் இரு பதிப்பாசிரியர்களுக்கும் தமிழ்கூறு நல்லுலகம் கடமைப்பட்டுள்ளது.

## I

நூல்களைத் தளமாகக் கொண்ட பாரம்பரியத்தைச் சேர்ந்தன வற்றை மாத்திரமே ஆதாரமாகக் கொண்டு தமிழிலக்கிய வரலாற்றினை

நோக்கும் இயல்பு நம்மிடையே இருந்து வந்துள்ளது. நாம் ஒரு குறிப்பிட்ட எழுத்துப் பாரம்பரியத்தையே போற்றி வந்துள்ளோம். அதனுள்ளும்கூட சில அமிசங்களை விட்டுவிட்டோம். உதாரணமாகத் தமிழில் உள்ள அறிவியற் பாரம்பரியம் பற்றி நமது இலக்கிய வரலாற்று நூல்கள் பேசுவதில்லை. இலக்கிய வரலாறென்பது அந்த மொழியில் எழுதப்பட்ட எல்லா எழுத்துக்களினதும் வரலாறு ஆகும். அதாவது தமிழர் சிந்தனை எவ்வெவ்விடங்களிலெல்லாம் தொழிற்பட்டுள்ளதோ அந்த எழுத்துக்கள் யாவும் - அவை பிறமொழிகளில் இருப்பினும் - எடுத்துப் பேசப்படுதலே முறைமை (13ஆம் நூற்றாண்டின் பின்னர் தென்னகத்தில் தோன்றிய சமஸ்கிருத நூல்களில் காணப்படும் தமிழ்ச் சிந்தனைகள், பாரம்பரியங்கள் பற்றிய நேர்மையான ஆய்வுகள் இருந்திருப்பின் தமிழ்நாட்டில் சமஸ்கிருத எதிர்ப்பு குறைந்திருக்கும்).

இத்தகைய ஒரு புறக்கணிப்பை நவீனத் தமிழ் இலக்கியத்தில் (காலனித்துவ, பின்காலனித்துவ காலங்களில்) செய்துவிட முடியாது. ஏனெனில் இக்காலத்தில் தமிழில் முன்னர் நிலவாத இரு முக்கிய அமிசங்கள் காணப்படுகின்றன. ஒன்று கல்வியில் தமிழ். இது இரண்டு விடயங்களை உள்ளடக்கியது. (அ) சகலருக்குமான கல்வி, (ஆ) புதிய பாடங்களின் அறிமுகம். இந்த இரண்டாலும் ஒரு புதிய உலக நோக்கே தமிழ் மக்களிடையே ஏற்பட்டது.

அடுத்து, வேறுபடும் வாசக மட்டங்களுக்கான எழுத்து முறை நம்மிடையே பரவத் தொடங்கிற்று. இது எழுத்தறிவின் காரணமாக ஏற்பட்டது. எழுத்தறிவு வளர்ச்சியுடன் வாசிப்பில் இரு மட்டங்கள் துல்லியமாகின்றன. ஒன்று காத்திரமான வாசிப்பு நிலை. இரண்டு ஜனரஞ்சக நிலை. இது உண்மையில் நமது சமூகத்தில் தோன்றியுள்ள ஒரு புதிய நிலைப்பாடு ஆகும். ஒருவரே இரண்டு மட்ட வாசிப்புக்களைச் செய்கின்றமையையும் அவதானித்தல் வேண்டும்.

தமிழ்நாட்டில் அச்சிதழ்கள் வந்த சமூகப் பின்புலத்தைத் தெளிவுற விளங்கிக்கொள்ள வேண்டும். அவ்வாறு நோக்கும் பொழுது நாம் தமிழகத்தின் மீதான பிரித்தானிய ஆட்சியின் ஆரம்ப காலத் தாக்கத்திற்குச் செல்லல் வேண்டும்.

பிரித்தானிய ஆட்சியின் வருகையுடன் தமிழகத்தில் குறுநில ஆட்சியாளர்களின் அதிகார முறைமை சிதைக்கப்பட்டு தாமிரபரணி,

காவேரி ஆகிய ஆற்றுப்படுகைகளிலும் கொங்கு நாட்டிலும் ஒரு புதிய சுதேச உயர்குழாத்தினர் (Elite) முக்கியம் பெறத் தொடங்குகின்றனர்.

இந்த நன்மையைப் பெற்றோர் பிராமண, வேளாள சாதியினரே. ஆற்றுப்படுகை நகரங்களான திருச்சி, திருநெல்வேலி போன்ற இடங்களில் கிடைக்கப்பெற்ற கல்வி வசதி காரணமாகக் கீழ்மட்ட அரசு உத்தியோகத்துக்கு இவர்களிலிருந்து உத்தியோகத்தர் தெரிவு செய்யப்பட்டனர். இந்த நடைமுறை காரணமாக அரசாங்கத்திற்கும் வெகுசனங்களுக்குமிடையே ஊடாடுகின்ற ஒரு சமூக வாய்ப்பு இவர்களுக்குக் கிடைக்கிறது. மேற்குறித்த இந்தப் புதிய வட்டத்திலிருந்து வந்தவர்களிடையே தம்முடைய தனித்துவம், பாரம்பரியம், பழமை பற்றிய கருத்து, துணிபு நிலைக்குப் படிப்படியாக வளரத் தொடங்குகிறது. இது சமஸ்கிருதம், தமிழ் பற்றிய மொழிகளின் மீள்நோக்குக்கு இட்டுச் செல்லும் அதே வேளையில் குறிப்பாகத் தொண்டை மண்டலப் பகுதியில் இதுகாலம் வரை எத்தகைய கல்வி வசதிக்கும் வாய்ப்பற்றிருந்த அடிநிலை மக்கள் பிரித்தானியத் தொடர்புகளால் சமூக உணர்வு பெறுகிறார்கள். இது ஒரு முக்கியப் பண்பாகும். இந்த அடிநிலை மக்களின் கிளம்புகையில் கிறித்தவத்துக்கும் ஒரு முக்கிய பங்கு உண்டு.

மேற்கூறியவை காரணமாகத் தமிழ்நாட்டின் வரலாற்றில் தோன்றும் இரு சக்திகளும் (உயர் குழாத்தினரும் அடிநிலை மக்களும்) தங்களை நவ இந்தியமயமாக்கப் பின்புலத்தில் இனங்கண்டு கொள்ள முயன்றனர். இதனால் தமிழ்ச்சமூக நிலையில் நான்கு நிலைப்பட்ட ஒரு எழுகை தெரியவருகிறது.

1. இந்தியாவுக்குள் தமிழ்நாடு (தமிழிலும் பார்க்க இந்தியா வலியுறுத்தப்பட்டது) என்ற நிலைப்பாடு.
2. தமிழ்நாடு பிரதானப்படுத்தப்படுகிறது (அதாவது தமிழ் என்பது இந்தியாவுக்குள் உள்ள ஒன்று என்பது மறுக்கப்படாமல் தமிழ் வலியுறுத்தப்படுகிறது).
3. தமிழ்நாட்டிற்குள் உள்ள சமூகக் குழுமங்கள் (பெரும்பாலும் அடிநிலைச் சாதிகள்) தங்கள் இருப்புப் பற்றிய பிரக்ஞையைக் கொள்ளுதல்.
4. நிருவாக எதிர்ப்புடைய, பகுத்தறிவுவாதக் கருத்துநிலை பேசும் ஒரு குழுமம்.

அச்சுசாதனப் பரவுகையுடன் மேற்கிளம்பும் இதழ்கள் மேற்கூறிய இந்த ஒவ்வொரு மட்டங்களில் இருந்தும் வெளிவருவதைக் காணலாம். உதாரணம்,

1. சுதேசமித்திரன் (1882), இந்தியா (1906)

2. தமிழ்நேசன் (1917), நவசக்தி (1920)

3. பஞ்சமர் (1871), திராவிட பாண்டியன் (1885), ஆன்றோர் மித்திரன் (1886), பறையன் (1893), தமிழன் (1907), திராவிடக் கோகிலம் (1908)

4. அயோத்திதாஸ் (1845-1914) - ஒருபைசாத் தமிழன்

இவற்றுள் நாம் முதலிரண்டு பற்றியே விரிவாக ஆராய்ந்துள்ளோம். சஞ்சிகைகளின் தேவை பற்றிய சமூகப் பின்புலம் முக்கியமானதாகும்.

சஞ்சிகைகளின் எழுகையை இன்னொரு நிலைநின்றும் பார்க்கலாம். தமிழ்நாட்டின் எழுத்தறிவுமயமாக்கத்துடனும் சனநாயக மயமாக்கத்துடனும் சஞ்சிகைகள் தொடர்பு கொண்டுள்ளன.

(அ) தமிழ், தமிழரின் நவீன மயமாக்கம், மேல்நாடுகளில் காணப்பட்ட வளர்ச்சிகளைத் தமிழுக்குள் கொண்டு வந்தது. சமூக மாற்றத்திற்கும் இதற்கும் ஒரு ஊடாட்டம் இருந்தது.

(ஆ) இந்த நவீன மயப்பாட்டு வளர்ச்சி காரணமாக இதழ்களினூடே சிறப்பு நிலைப்பட்ட (Specialised) இதழ் வளர்ச்சி ஏற்பட்டது. அதாவது தொடக்க காலத்தில் அரசியல், சமூகம், அறிவியல், பண்பாடு, இலக்கியம் என்பனவற்றைத் தொகுத்துத் தருகின்ற மரபினையுடையனவாகிய இதழ்கள் படிப்படியாக ஒவ்வொரு துறைக்கும் உரியனவாக, சிறப்புநிலை பெறும் தன்மை இங்குக் குறிப்பிடப் பெறுகின்றது (அரசியல் சஞ்சிகைகள், அறிவியற் சஞ்சிகைகள், இலக்கியச் சஞ்சிகைகள்).

(இ) மகிழ்வளிப்பு வாசிப்பின் தொடக்கம் (பிரசண்ட விகடன், ஆனந்த விகடன்).

சுதந்திர காலம் வரையும் எந்தப் பத்திரிகைக்கும் அடிநாதமான ஒரு அரசியல் வரிப்புணர்வு (commitment) இருந்தது. அத்தகைய ஒரு சூழல் மாறி 'வாசிப்பதற்காகவே வாசிப்பு' என வாசிப்பு, ஒரு விற்பனைப் பண்டமாகக் கையாளப்படும் நிலைமையின் எடுத்துக்காட்டாகக் 'குமுதம்' அமைகிறது. விடுதலைக்கு முன்னர், பின்னர் என்ற கோடு பிரிப்பில் இது ஒரு முக்கிய அமிசமாகும். ஆயினும் இதழ்களின் வளர்ச்சியை ஒரு தொடர்ச்சியாகவும் பார்த்தல் வேண்டும். ஏனெனில் 1947க்குப் பின்னர் வருகின்ற வளர்ச்சிகளுக்கான விதைகள், முளைகள் (சில வேளைகளிற் செடிகள்) சுதந்திரப் போராட்டக் காலத்திலேயே காணப்படுகின்றன.

இந்தப் பின்புலத்திலேயே நவீன தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் பெறும் இடத்தினை நோக்கல் வேண்டும்.

## II

தமிழில் நவீன காலத்திற்கு முன்னர், அதாவது அச்சு யுகத்திற்கு முன்னர் காணப்படாதனவும் நவீன யுகத்தோடு மாத்திரமே வருகின்றனவுமான எழுத்துக்கள் யாவை என்பது பற்றி ஒரு தெளிவு நமக்கு முதலில் தேவை. அவற்றைப் பின்வருமாறு விரித்து நோக்கலாம்:

1. அரசியல், சமூக விமர்சனங்கள்: இத்தகைய விமர்சனங்கள் இப்பொழுது நடைபெறுகின்ற வகையில் முன்னர் நிகழவில்லை.

2. புனைகதை - சிறுகதை, நாவல்: ஏற்கனவே நிலவிய கதை மரபுகளுக்கும் இதற்கும் வேறுபாடுகள் உள்ளன. அந்த வேறுபாடுகளை மீறி, இவை தமக்கே உரிய பெரும் வளர்ச்சியைப் பெற்ற முறைமைகளையே இவற்றின் வரலாறாகக் கொள்ளவேண்டும்.

3. புதுக்கவிதை: சந்த ஒத்திசையை நம்பியிருக்காததும் பிரதானமாகக் கட்புலனுக்கே உரியதுமான கவிதை வடிவம்.

4. புதிய நாடகம்: கூத்து மரபில் வராது முற்றிலும் மேல்நாட்டு மரபினைச் சார்ந்தது.

5. இலக்கிய விமர்சனம்: அதாவது எந்த ஒரு இலக்கியப் பாடமும் தர ரீதியாக மதிப்பிடப்படலாம்; படவேண்டும் என்ற எடுகோளை உடையது.

மேலே கூறிய இந்த ஐந்து எழுத்து வகைகளும் உலகப் பொதுவானவை ஆகும். இவற்றுக்கான பிரதான கூறுகள் இந்திய மரபிலிருந்தோ தமிழ் மரபிலிருந்தோ எடுக்கப்பட்டவை அல்ல.

இந்த வருகையில் இரண்டு நிலைகளைப் பிரித்துப் பார்த்தல் நலம்.

1. அவற்றின் வருகை அல்லது அவை மேற்கொள்ளப்படுகை.
2. வந்தவை, மேற்கொள்ளப்பட்டவை, தமிழ் அனுபவத்துடன் சுவறுகை. இந்தச் சுவறுகையுடன் தமிழ் அனுபவமும் சித்திரிப்பு முறையும் ஆழமாகின்றன.

இந்தச் சுவறுகையுடன்தான் உண்மையான நவீனத்துவம் வருகிறது. 'நவீனத்துவம்' (modernism) 'நவீனமாம் தன்மை'யிலிருந்து (modernity) வருவது. இந்த modernity-யின் அடித்தளம் மனிதாயதச் சிரத்தையாகும் (Humanitarian Concern). இந்த நவீனத்துவம் தமிழில் இரு துறைகளில் வெளிப்படுகிறது.

(அ) ஆக்க எழுத்து (creative writing)

(ஆ) படைப்பாக்கம் சாரா எழுத்து (non-creative writing)

நவீன தமிழ் இலக்கியத்தின் முதலாவது பெருவளர்ச்சி எனக் கொள்ளப்பட வேண்டியது படைப்பாக்கம் சாரா எழுத்துக்களின் வருகையாகும். இதழ்கள் இதனை ரஞ்சகப்படுத்தின. இதழியலின் (journalism) அடித்தளமே இதுதான். இது செய்திகளை அறிவித்தல் என்கின்ற புதிய தொடர்பு முறைமையை வளர்த்தது. மதம், கல்வி, அரசியல், சமூகம் சார்ந்த பல இதழ்கள் வெளிவரத் தொடங்கின. இவை ஒவ்வொன்றும் 'சராசரி வாசகர்' எனப்படுபவரை நோக்கி அளிக்கப்பட்டன. இங்கே சுதந்திரம் பற்றிய எழுத்துக்கள், தமிழ், தென்னிந்திய அரசியற் பிரச்சினைகள் பற்றிய எழுத்துக்கள் என இவை பல்கிப்பெருகின.

ஏற்கனவே கண்டபடி ஆரம்ப நிலையில் இவை அறிவுத் தகவல்களையும் குறிப்புரைகளையும் (அபிப்பிராயங்கள்) கூறுவனவாக அமைந்து படிப்படியே இலக்கியச் சிறப்பு நிலையினை எய்தின. இப்போக்கினூடே புதிய இலக்கிய வடிவங்கள் படிப்படியாக அறிமுகமாயின (மாதவையாவின் பஞ்சாமிர்தம், வ.வே.சு. ஐயரின் பாலபாரதி ஆகியன சிறுகதையின் வளர்ச்சிக்கு முக்கியமானவையாகும்).

இந்த வளர்ச்சிகளினூடே 1930களில், வாசிப்பில் இரண்டு போக்குகள் துல்லியமாகத் தொடங்கின (இவற்றுக்கான மூலக் கூறுகள் அதற்கு முன்னரேயே காணப்பட்டன. 'துப்பறியும் நாவல் வாசிப்பு - வெகுசன வாசிப்பு', 'விமர்சனங்கள் - காத்திர வாசிப்பு').

ஒன்று வெகுசன வாசிப்பு; இரண்டு காத்திர வாசிப்பு. தமிழின் முதலாவது காத்திரமான சிறப்புநிலை இலக்கிய நவீனத்துவ இதழாக மணிக்கொடி கிளம்புகிறது. மணிக்கொடியின் வரலாற்றினுள்ளே இந்தச் செல்நெறியைக் காணலாம். 1933 - 35 வரை அது பிரதானமாக ஒரு அரசியல் விமர்சன இதழே. 1935-38இல் அது இலக்கிய நவீனத்துவ இதழாகப் பரிணமித்தது.

இக்கட்டத்தில் இலக்கிய நவீனத்துவம் என்பது மேற்கில் தொழிற்பட்ட முறைமைக்கும் (இந்தியாவில்) தமிழில் தொழிற்பட்ட முறைமைக்கும் வித்தியாசம் உள்ளது என்பதை மனத்திருத்திக் கொள்ளல் அவசியமாகும். மேல் நாட்டில் modernism என்பது பிரதானமாக முதலாவது உலக யுத்தத்துடன் வருகின்ற சமூக, உணர்முறைமை மாற்றங்களின் அதாவது, மனிதர்களைப் புதிய நோக்கில் பார்க்கின்ற ஒரு முறைமையுடன் வருகின்றது.

தமிழில் நவீனத்துவம் என்பது, புதியவற்றின் வருகை தமிழினுள் உள்வாங்கப்படுவதன் வரலாறு ஆகும். இது பாலபாரதி, பஞ்சாமிர்தம் முதலே நடைபெற்று வருவதாகும். ஆனால் மணிக்கொடியுடன்தான் சமூக மாற்றத்தினால் ஏற்படும் தாக்கங்களைத் தனிமனித உணர்வு நிலைநின்று சித்திரிக்கும் பண்பு கலாநேர்த்தியுடன் செய்யப்படும் முறைமை வளமடையத் தொடங்குகிறது. அத்துடன் தமிழ் இலக்கியப் பாரம்பரியத்தில் எடுத்துப் பேசப்பெறும் முக்கிய "கட்டங்களை இக்கண்ணோட்டத்தில் மீள்நோக்குச் செய்யும் தன்மையும் காணப்படுகிறது (புதுமைப்பித்தனின் 'அன்றிரவு', 'சாப விமோசனம்' முதலிய கதைகள்). எனவே நவீனத்துவம் என்ற சொல்லைக் கையாளுகையில் ஒரு விமர்சன நிதானமிருத்தல் அவசியம்.

நவீனத்தின் (modernity) வருகையோடேயே தமிழில் 'மறுமலர்ச்சி இயக்கம்' என்ற எண்ணக்கரு வருகிறது. மறுமலர்ச்சி என்பது Renaissance என்பதன் தமிழாக்கமாகும். அதாவது, புதிய வருகைகளுடன் தமிழை மீண்டும் முதனிலைப்படுத்தல் என்பது இதன் கருத்தாகும். இது இலக்கியம் பற்றிய ஒரு புதிய பார்வைக்கு இடமளித்தது. ஆனால் தமிழ்ப் புலமையாளரிடையே இந்த எண்ணக்கரு பற்றிக் கருத்துவேறுபாடு காணப்பட்டது. எஸ். வையாபுரிப்பிள்ளை

தமது கட்டுரைத் தொகுதி ஒன்றுக்குத் 'தமிழின் மறுமலர்ச்சி' என்றே பெயர் வைத்தார். ரா.பி. சேதுப்பிள்ளை 'மறுமலர்ச்சி' என்ற எண்ணக் கருவையே எதிர்த்தார்.

இந்தக் காலகட்டம் முதல் ஐரோப்பிய, இந்திய மொழிகளிலிருந்து ஆக்கங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்படத் தொடங்கின. ரஷ்ய எழுத்தாளர்கள் ஆங்கிலம் வழியாக அறிமுகம் செய்யப்பட்டனர். முன்னர் சமஸ்கிருதத்திலிருந்து மாத்திரமே (ஒரோ வேளைகளில் பிராகிருதத்திலிருந்தும்) இலக்கிய மாற்றம் செய்யும் முறைமை போய், இப்போது வங்காளம், மராட்டி, ஹிந்தி முதலிய மொழிகளிலிருந்தும் தமிழில் நாவல்கள் மொழிபெயர்க்கப்படத் தொடங்கின. தமிழ் நாவல் வளர்ச்சியில் வங்காள, மராட்டிய மொழிப் புனைகதைகளின் தாக்கம் மிகப்பெரியதாகும். பெரும்பாலான தமிழ் எழுத்தாளர்கள் பலர் தமிழ்ச் சமூகத்தை, குறிப்பாகப் பாத்திர மோதல்களையும் அவை பற்றிய சித்திரிப்புக்களையும் காண்டேகர், தாராசங்கர் பானர்ஜி, சரத்சந்திரர் போன்றவர் தீர்மானித்தனர். இந்த வருகைகள் தமிழ் இலக்கியத்துக்கு அனைத்திந்தியப் பரிமாணத்தை வழங்கின.

எழுத்தைச் சமூக, அழகியல் விமர்சனத்துக்கான ஒரு விடயமாகப் பார்க்கின்ற தன்மை படிப்படியே ஆழமாகத் தொடங்குகிறது. இந்த ஆழப்பாடு நடக்கும் அதே வேளையில்தான் தமிழ்நாட்டின் இதழியல் வளர்ச்சியில் முக்கியம் பெறும் நான்கு அம்சங்கள் நிலைபெறத் தொடங்குகின்றன.

1. அரசியல் இதழியல்: திராவிட இயக்க எழுத்துக்கள், பொதுவுடைமை இயக்க எழுத்துக்கள்.

2. நவ வாசக வட்டத்துக்கான எழுதுமுறைமை: தினத்தந்தியின் வருகையும் அது செய்திகளை அறிவித்த முறைமையும். இது தமிழ்ப் பத்திரிகை உலகில் பெரும் புரட்சிகர மாற்றத்தை ஏற்படுத்தியது.

3. புலனாய்வுச் சஞ்சிகைகள்: தமிழ்நாட்டின் இதழியல் துறையில் இன்று மிக முக்கியமான ஓர் இடத்தைப் பெற்றுள்ள இதழ் வடிவம் புலனாய்வு முறைமையாகும். பொது முக்கியத்துவம் உடைய மக்கள் விடயங்கள், செய்திகள் பற்றிய பின்புல நடவடிக்கைகளை வெளிக்கொணர்ந்து 'பெரிய இடங்கள்' பற்றிய வாசக

அவாவினைத் தீர்ப்பதில் இவை முக்கிய இடம் வகிக்கின்றன. தமிழ்நாட்டின் அரசியல் வாழ்க்கையில் இப்புலனாய்வு இதழ்கள் தமது தாக்கத்தை மிக வன்மையாகவே பதிவு செய்துள்ளன. 'இந்துநேசன்' காலம்முதலே இவ்வெழுத்து முறைமைக்கு ஒரு பாரம்பரியம் உண்டு. இன்றைய அரசியலில் இவற்றுக்கு ஒரு முக்கிய இடம் உண்டு. இதற்கான உதாரணங்களாக அமைபவை தராசு, நக்கீரன், ஜூனியர்விகடன், தமிழன் எக்ஸ்பிரஸ் முதலானவை ஆகும்.

4. சனரஞ்சக வாசிப்புச் சஞ்சிகைகள்: ஏற்கனவே குறிப்பிட்ட குமுதத்தைக் குறியீடாகக் கொண்டவை.

இத்தகைய ஒரு பின்புலத்திலேதான் இலக்கியச் சிறப்பு நோக்குள்ள இலக்கியத்துக்கான சிற்றிதழ்கள் (little journals) தோன்றின. 1950-80கள் வரையுள்ள காலப்பகுதியில் இவற்றின் போக்கும் தொழிற்பாடுகளும் நுண்ணியதாக அறியப்பட வேண்டியனவாகும்.

வல்லிக்கண்ணன் இலக்கியச் சிற்றிதழ்கள் பற்றிய பின்வரும் பட்டியலைத் தருவார்: மணிக்கொடி, கலாமோகினி, கிராம ஊழியன், சரஸ்வதி, சாந்தி, எழுத்து, கசடதபற, ஞானரதம், பிரக்ஞை, வானம்பாடி, கொல்லிப்பாவை, சுவடு, வைகை, மானுடம், தாமரை, சிகரம், யாத்ரா, இலக்கிய வெளிச்சம், விடியல், படிகள், பரிமாணம், மனவோசை, மல்லிகை, கணையாழி, தீபம், புதிய பார்வை (சுபமங்களா, காலச்சுவடு போன்றவற்றை இதில் சேர்த்துக் கொள்ளவேண்டும்).

இந்த இலக்கியச் சஞ்சிகைகளின் முக்கிய அமிசமாகக் குறிப்பிடப்பட வேண்டியது இவற்றின் கருத்துநிலை மையப்பாடு ஆகும்.

சனரஞ்சக எழுத்தானது வெகுசன வாசிப்புக்கான எழுத்தாக மாறி ஒரு குறிப்பிட்ட உலகப் பார்வையைக் கொண்டதாய், மக்களை எதிர்நோக்கும் பிரச்சினைகளை அவற்றின் காத்திரப்பாட்டுடன் எடுத்துக்கூறும் முறைமையிலிருந்து பிறழ்ந்தனவாய் அமையும் ஒரு பண்பு படிப்படியாக மேற்கிளம்பத் தொடங்குகிறது. இந்த ஒரு அமிசமே அவற்றின் வாசக விசாலிப்புக்கும் கவர்ச்சிக்கும் அடித்தளமாக அமைந்துவிடுவது உண்டு. இத்தகைய ஒரு சூழலில் அதே சஞ்சிகைகளில் காத்திரமான விவாதங்களும் இலக்கியப் பரிசோதனைகளும் நடைபெறுவதென்பது முடியாது.

ஆனால், இதே காலகட்டத்தில் இலக்கியத்தின் பயன்பாடு, கையாளுகை பற்றிய அடிப்படைக் கருத்து வேறுபாடு கொண்ட, இலக்கியத்தின்பால் ஒரு வரிப்புணர்வு கொண்ட (commitment) ஒரு எழுத்தாளர் குழாம் தோன்றியிருந்தது. இவர்களிடையே இலக்கியம் பற்றிய அடிப்படைக் கருத்துநிலை வேறுபாடுகள் காணப்பட்டன. இலக்கியத்தின் தன்மை, பயன், அழகியல் ஆகியன பற்றி ஒன்றுக்கொன்று முரணான கருத்துக்களுடைய குழுக்கள் தொழிற்படத் தொடங்கின.

மேற்குறிப்பிட்ட இரு செல்நெறிகளும் இலக்கியச் சிற்றிதழ்களின் தோற்றத்திற்குக் காரணமாயின. 1970-80-90களில் நடைபெற்ற இலக்கியக் கருத்துநிலைப் போர்கள் இவற்றின் வழியேயே நிகழ்த்தப்பட்டன. அந்த அளவில் தமிழ் இலக்கிய வரலாற்றில் இச்சஞ்சிகைகளுக்கு முக்கியமான இடம் உண்டு.

ஆனால், நமது இலக்கிய வரலாறு பதிவு செய்யாது விட்ட ஒரு முக்கிய அமிசம் யாதெனில் இத்தகைய சிறப்பு நிலை முனைப்புக் கொண்ட சஞ்சிகைகள் மற்றைய தொழில்துறைகளிலும் வளர்ந்தமையே ஆகும். வேளாண்மை, தொழில்நுட்பம், தட்டச்செழுத்து, பொது அறிவியல், கணினி, தையற்கலை, சோதிடம் போன்றவற்றுக்கும் இச்சஞ்சிகைகள் வெளியிடப்பட்டன என்பதை நோக்கும்பொழுது சஞ்சிகைத் துறையில் ஏற்பட்டு வருகின்ற சிறப்பு நிலைக் கூர்மை (specialisation) நன்கு தெரியவருகிறது. சினிமா பற்றியும் மகளிருக்கெனவும் பிரசுரிக்கப்படும் இதழ்களும் சனரஞ் சகத்தன்மையும் வெகுசன இயல்பும் கொண்டனவாகக் காணப்படினும் உண்மையில் இவற்றின் 'இலக்கு வாசகர்'களை (target readers) சிறப்புநிலை வாசகர்களாகவே கொள்ள வேண்டும். இதழ்களின் வரலாறு பற்றிப் பேசும்போது இவை அதிகம் முக்கியத்துவம் பெறாதுபோவது கவலைக்குரியது. இதழியல் துறையின் ஒரு துறையான (photo journalism) நிழற்பட இதழியல், சினிமா இதழ்களுக்குப் பெரிதும் பயன்படுவதை அவதானிக்கலாம். இது மகளிர் இதழ்களிலும் கணிசமான இடத்தைப் பெறுகிறது. உண்மையில் இலக்கியச் சஞ்சிகைகளின் வளர்ச்சியை இப்பின்புலத்தி லிருந்து பிய்த்தெடுத்துப் பார்க்கக்கூடாது.

இலக்கியச் சிற்றிதழ்களால் ஏற்பட்ட முக்கியப் பெறுபேறுகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்:

1. புதுக்கவிதையின் ஏற்பும் நிலைப்பாடும் - சிற்றிதழ்கள் வழியாகவே தமிழில் புதுக்கவிதை நிலைபெற்றது என்பது ஒரு பொருத்தமான கூற்றாகும். எழுத்து, கசடதபற, வானம்பாடி ஆகியனவற்றின் வரலாற்றினுள் இவ்வுண்மை தொக்கு நிற்கிறது.

2. புனைகதை மரபு வளமூட்டப்பட்டமை - இதில் கணையாழி, சரஸ்வதி, சாந்தி, அலை, காலச்சுவடு, சுபமங்களா ஆகியனவற்றின் பணி முக்கியமானது. ஜெயகாந்தன், அசோகமித்திரன், சா. கந்தசாமி, வண்ணநிலவன், அம்பை, நீல. பத்மநாபன், கி. ராஜ நாராயணன், ஜெயந்தன் போன்றவர்களுடைய புனைகதைகள் சிறுசஞ்சிகைகள் மூலமாகவே முதலில் வெளிவந்தன.

3. காத்திரமான இலக்கிய விவாதங்கள் - சிறு சஞ்சிகைகளின் இயல்பு காரணமாக இத்தகைய விவாதங்கள் தவிர்க்க முடியாதன ஆயின. மார்க்சியம், மார்க்சிய எதிர்ப்பு பற்றியும் கவிதையின் இயல்பு பற்றியும் அமைப்பியல் வாதம் பற்றியும் தலித் இலக்கியம் பற்றியும் ஆழமான விவாதங்கள் மேற்கொள்ளப்பட்டன.

4. முன்னிலை நவவேட்கை வாத (avant - gardist) அமிசங்கள் - இவை சிற்றிதழ்கள் பலவற்றில் காணப்பட்டன. அதாவது, சர்வதேசிய மட்டத்தில் நவமாகத் தோன்றிய இலக்கியக் கொள்கைகளை, போக்குகளை அறிமுகம் செய்வதிலும் அவற்றின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுவதிலும் இச்சஞ்சிகைகள் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன.

இவற்றை எடுத்துக் கூறும்பொழுது இலக்கியச் சிற்றிதழ்களுக்கும் சனரஞ்சக இதழ்களுக்கும் இடையே நிலவிய ஊடாட்டத்தினை மறந்துவிடக்கூடாது. உண்மையில் சனரஞ்சக இதழ்கள் இலக்கிய சிற்றிதழ்களைத் தமக்குப் பயன்படக்கூடிய எழுத்தாளர்களைப் பெறுவதற்கான நாற்றுப்பதிகைகளாகவே கொண்டிருந்தன. ஜெயகாந்தன், சு. சமுத்திரம், பாலகுமாரன், கி. ராஜ நாராயணன், பிரபஞ்சன், மேலாண்மை பொன்னுச்சாமி எனப் பல பெயர்களைக் குறிப்பிடலாம்.

இலக்கியச் சிற்றிதழ்களின் இப்பண்பினைக் கூறும்பொழுது இன்னொரு விடயமும் முக்கியப்படுத்தப்பட வேண்டும். அதாவது, சில இலக்கியச் சிற்றிதழ்கள் தங்களுடைய ஏற்புடைமை காரணமாகச் சிற்றிதழ்கள் என்ற வட்டத்தை மீறி, சிறு சனரஞ்சகச் சஞ்சிகைகளாக மாறக்கூடிய நிலைமை இருந்ததையும் மறந்துவிடக்கூடாது. தீபம், சுபமங்களா ஆகிய இரு சிற்றிதழ்களும் இச்செல்நெறிக்கான உதாரணங்களாகக் கொள்ளலாம்.

## III

இக்கட்டத்தில் இலங்கையில் இதழ்களின் வரலாறு பற்றிய ஒரு மிகச்சிறிய அறிமுகக்குறிப்பு அவசியமாகிறது. தமிழின் பொதுவான வளத்துக்கு உதவுகின்ற ஈழத்து இதழ்கள், எழுத்து என்பதற்கு ஒரு வரலாற்று, சமூக, பொருளாதாரப் பின்புலம் உண்டு என்பதையும் நிறுவுகின்றன.

இங்கு இலங்கையின் முக்கியமான வளர்ச்சிநிலைகளே குறிப்பிடப்படுகின்றன. இலங்கையிலும் அச்சுச் சாதனம் மேனாட்டாட்சியாலும் கிறித்தவ தேவ ஊழியக் கருமங்களாலுமே அறிமுகம் செய்யப்படுகின்றன. இவற்றுள் கிறித்தவமே அச்சு ஊடகத்தை மக்கள் நிலைகொண்டு செல்வதற்குத் தொடங்குகின்றது. சாதாரண சனங்களின் எழுத்தறிவு எழுகைக்கான காரணமாக அமைந்த புரோட்டஸ்தாந்த கிறித்தவர்களே இப்பணியிலும் ஈடுபடுகின்றனர். இதன் முதல் முயற்சியாக அமைந்தது 1841இல் வெளியிடப்பெற்ற 'உதயதாரகை' என்ற இதழாகும். இதன் ஆங்கிலப் பெயர் Morning Star ஆகும். இதனைத் தொடர்ந்து வேறுசில இதழ்களும் வெளிவந்தன. குழந்தைகளை நோக்கி 'பாலியர் நேசன்' என்பது முக்கியமானது.

19ஆம் நூற்றாண்டின் நடுக்கூற்றில் யாழ்ப்பாணத்தில் நாவலருக்கும் கிறித்தவர்களுக்கும் இடையே அச்சு ஊடகக் கையாளுகையில் ஒரு பலப்பரீட்சையே நடைபெற்றது. யாழ்ப்பாணத்தில் அச்சக்கூடம் நிறுவிக் கிறித்தவர்களை எதிர்க்க முடியாத நிலையில்தான் நாவலர் 1866இல் தமிழகத்திற்கு வந்து இங்கு 'வித்யாநுபாலன அச்சியந்திரச்சாலை'யை நிறுவிப் பதிப்பு வேலைகளையும் தொடங்குகிறார். ஆறு வருடங்களின் பின்னரே ஈழம் திரும்புகிறார். 1870களில் இலங்கையில் சுதேச நிலைப்பாட்டினை வற்புறுத்துவனவாக ஆங்கில, தமிழ் இதழ்கள் வெளியாயின. நாவலர்

'இலங்கைநேசன்' என்ற ஓரிதழோடு சம்பந்தப்பட்டிருந்தார். 1870களின் பிற்கூற்றிலேயே ஈழத்துச் சைவ எழுச்சியின் பிரதான ஏடுகளாகிய 'இந்துசாதனம்', Hindu Organ வெளியாகின்றன. மேல்நாட்டு மயமாக்கத்தை எதிர்த்து இலங்கை முஸ்லிம்களின் பண்பாட்டு நிலைப்பாட்டினை வற்புறுத்துகின்ற 'முஸ்லிம் நேச'னும் 19ஆம் நூற்றாண்டின் பிற்கூற்றிற்குரியதே. இதனைப் பிரசித்தி பெற்ற சித்திலெப்பை அவர்கள் நடத்தினார். கத்தோலிக்கர்களின் இதழான 'சத்திய வேத பாதுகாவலன்' (The Cathalic Guardian) இக்காலத்தைச் சேர்ந்ததே.

இலங்கை அச்சு ஊடக வளர்ச்சியின் அடுத்த பிரதான கட்டமாக அமைவது சுதேச தேசிய உணர்வு முளைவிடத் தொடங்கிய 1930களாகும். இக்காலகட்டத்திலேயே அரசியல், சமூக விமர்சன இதழ்கள் வரத் தொடங்குகின்றன. இவ்வகையில் 1930 ஒரு பிரிகோடாக அமைகிறது. அவ்வருடம்தான் யாழ்ப்பாணத்தின் ஈழகேசரியும் (அரசியல் சமூக விமர்சன செய்தி வாராந்திர இதழ்) கொழும்பிலிருந்து முதல் தமிழ்த் தினசரியான வீரகேசரியும் வெளிவந்தன. 1932இல் 'லேக்ஹவுஸ்' பத்திரிகை நிறுவனத்தினரால் 'தினகரன்' பத்திரிகை வெளியிடப்படத் தொடங்கிற்று. இவற்றினுள் ஈழகேசரி இன்று இல்லை. தினகரன், வீரகேசரி ஆகியன தொடர்ந்து நாளிதழ்களாக வெளிவருகின்றன. 1930களில் இலங்கையின் தோட்டப் பகுதியாகிய மலையகத்தில் வாழும் தமிழக வம்சாவழித் தமிழர்க்கான தொழில்நிலை முன்னேற்ற நடவடிக்கைகளில் நடேசையர் என்பவரும் அவர் மனைவியும் ஈடுபடுகின்றனர். இக்காலகட்டத்தில் அங்கும் இதழ்கள் தொடங்குகின்றன. செய்தி நாளிதழ் வெளியீட்டில் இலங்கையில் நடந்தேறிய சில முக்கிய மைல்கற்களைக் குறிப்பிடவேண்டும்.

இலங்கையின் அரசியல் வளர்ச்சி கொழும்பை மையமாகக் கொண்டே இயங்கி வந்தமையால் நாளிதழ்கள் கொழும்பிலிருந்தே வெளிவந்தன. ஆனால் 60களின் பிற்கூற்றிலிருந்து வடகிழக்குப் பகுதியில் வாழ்கின்ற தமிழ் மக்களின் அரசியல் செயற்பாடுகள் யாழ்ப்பாணம் மட்டக்களப்பை மையமாக வைத்தே நடைபெறத் தொடங்கியமையாலும் யாழ்ப்பணத்தில் நாளிதழ்கள் தொடங்க வேண்டிய சூழலும் தேவையும் ஏற்பட்டது. இவ்வாறு தோன்றியதே 'ஈழநாடு' என்பதாகும். இதனைத் தொடர்ந்து 80களில் ஏற்பட்ட அரசியல் போராட்டங்கள் காரணமாக 'ஈழமுரசு', 'ஈழநாதம்', 'உதயன்'

எனும் நாளிதழ்கள் தொடங்கப்பெற்றன. இவற்றினுள் உதயன் மட்டுமே இன்று தொழிற்படுகிறது.

இலங்கையின் இலக்கிய இதழியல் நடவடிக்கைகளை நோக்கும் பொழுது ஈழகேசரி முக்கிய இடத்தைப் பெற்றதெனினும் சிறப்பு நிலை இலக்கிய இதழ்களாக வெளிவருபவை 1940லேயே வெளிவருகின்றன. . . 'மறுமலர்ச்சி' (யாழ்ப்பாணம்), 'பாரதி' - இந்த இரண்டு பத்திரிக்கைகளுடனும் ஈழத்தின் இலக்கிய நவீனத்துவம் ஆரம்பிக்கிறதென்று ஆய்வாளர்கள் வாதிட்டுள்ளனர். மறுமலர்ச்சி, ஒரு குழுவினரால் வெளியிடப்பட்டது. பாரதி, கே. கணேஷ் என்பவரால் வெளியிடப்பட்டது. இந்த இரு இதழ்களினதும் பெயர்களே தமிழ்நாட்டுக்கும் இலங்கைக்கும் நிலவிய இலக்கியத் தொடர்பினையும் தமிழ்நாட்டின் செல்வாக்கு மேலாண்மையையும் காட்டுகின்றன எனலாம்.

இலங்கையில் தனி இலக்கியப் பத்திரிகைகள் வெளிவந்தனவெனினும் இலங்கை எழுத்தாளர்கள் பலர் தமிழகச் சஞ்சிகைகளிலேயே எழுதினர். உதாரணம் 'இலங்கையர்கோன்' வைத்திலிங்கம். இவர்கள் கலைமகளில் எழுதினர். 50களின் பிற்கூற்று முதல் 60, 70களில் முற்போக்கு இலக்கிய வீச்சு பரவியிருந்த காலத்தில் முற்போக்கு அணியையும் எதிரணியையும் சேர்ந்த பல சஞ்சிகைகள் வெளிவந்தன. இவற்றின் முக்கிய இடம் வகிப்பது 'மல்லிகை' ஆகும். 70களில் தொடங்கிய மல்லிகை இன்றும் வெளிவருகிறது. முற்போக்கு எதிர்நிலைச் சஞ்சிகைகளாக முக்கிய பணியை ஆற்றியனவற்றுள் 'கலைச் செல்வி', 'அலை' முக்கியமானவை. இவற்றுள் அலை, முற்போக்கு எதிர்ப்பு நிலைப்பாட்டைத் தமிழக முற்போக்கு எதிர்ப்பாளர்களுடன் சேர்ந்து மேற்கொண்டது. 80களில் ஏற்படுகின்ற மாற்றங்களோடு வெளிவரத் தொடங்கிய சஞ்சிகைகள் இரண்டு முக்கியமானவை. ஒன்று 'திசைகள்'; மற்றொன்று 'வெளிச்சம்'.

கொழும்பை மையமாகக் கொண்டு வெளிவரும் இலக்கியச் சிற்றிதழ்களுள் முக்கியமானவை இன்று 'மல்லிகை', 'மூன்றாவது மனிதன்'. கிழக்கு மாகாணத்தில் வெளிவருவனவற்றுள் முக்கியமானது 'களம்' ஆகும்.

இலங்கையின் இன்றைய பிரதான நாளிதழ்கள் வீரகேசரி, தினக்குரல், தினகரன், உதயன் என்பனவாகும். தினமுரசு என்ற வார இதழ் மிகப்பிரபலமானது.

இலங்கையின் இதழியல் வளர்ச்சியில் அரசியல், தொழிற் சங்க இதழ்கள் முக்கிய இடம் பெறும். தமிழ்த் தேசியத்தின் வெளிப்பாடாக அமைந்த 'சுதந்திரன்', கம்யூனிஸ்ட் கட்சிகளின் வெளியீடுகளாக அமைந்த 'தேசாபிமானி', 'தொழிலாளி' முக்கியமானவை ஆகும். மலையகத் தமிழ் எழுத்துகளின் களமாக வெளிவந்தவை 'செய்தி', 'அஞ்சலி' என்பன. இப்பொழுது 'கொழுந்து' முதலிய இதழ்கள் வெளிவருகின்றன. இலங்கைத் தமிழ் இதழியல் வெளியீட்டில் இன்று ஒரு முக்கியமான இடம் வகிக்கும் 'சரிநிகர்' என்ற வார இதழ் கலை, இலக்கியம், பண்பாடு பற்றிய உயர்நிலை விமர்சனங்களைக் கொண்ட ஓர் இதழாகும். உண்மையில் இதனை வெகுசனப் பண்பாட்டு வட்டத்துள்ளிருந்து வரும் பத்திரிகைக்கான ஒரு மாற்றுப் பத்திரிகையாகவே (alternate Journal) கொள்ளவேண்டும்.

மலேசியா, சிங்கப்பூரிலும் அவ்வந்நாடுகளின் சமூக அரசியல் பின்புலங்களிலிருந்து வரும் இதழ்களாக 'தமிழ்நேசன்', 'தமிழ்முரசு' ஆகியன வெளிவருகின்றன. புலம் பெயர்ந்த தமிழர்களிடையே இருந்து 'ஈழநாடு' போன்ற பத்திரிகைகள் பிரான்சிலும் கனடாவிலும் வெளிவருகின்றன. புகலிடத் தமிழர்களின் இலக்கியச் சிற்றிதழ்களாக, 'சுவடுகள்', 'எக்ஸில்', 'உயிர்நிலை', 'அஆஇ' முதலானவை வெளிவருகின்றன.

## IV

தமிழில் இதழ்களின் வளர்ச்சி பற்றி மிகமிக மேலோட்டமாக எடுத்துக் கூறப்பட்ட இவற்றின் பின்னர் இதழ்களின் தொடர்பு வன்மை குறித்தும் அவற்றின் வாசகத்தளம் குறித்தும் சிலவற்றைக் கூறுவது அவசியமாகிறது.

இதழ்கள் என்ற சொல் செய்திப்பத்திரிகைகள், சஞ்சிகைகள் ஆகிய இரண்டையும் பொதுப்படக் குறிப்பதாக உள்ளது. சஞ்சிகைகளையும் (Magazines - ஐயம்) நாளிதழ்களையும் மிகத்துல்லியமாகப் பிரித்து நோக்க வேண்டும். நாளிதழ்கள் ஒவ்வொரு நாளும் வருபவை. வந்த அடுத்த நாள், முதல் நாளின் வெளியீட்டுக்கு மதிப்பிருக்காது. ஆனால் சஞ்சிகைகளைப் பொறுத்த வரையில் அடுத்த இதழ் வரும் வரையும் நடப்பிதழுக்கு முக்கியத்துவம் உண்டு. அத்துடன் நூல்களுக்கும் சஞ்சிகைகளுக்குமான தொடர்பியல் வேறுபாடுகளையும் அவதானித்துக் கொள்ளல் வேண்டும். நூல்களுக்குச் சஞ்சிகைகளுக்கில்லாத ஒரு நிரந்தரத் தன்மை உண்டு.

சஞ்சிகைகளுடனேயே மகிழ்வளிப்புக்கான வாசிப்பு என்பது (entartainment reading) நிலைபெறத் தொடங்குகிறது. இந்த முக்கியத்துவத்தை வெகுசனப் பண்பாடு மிக நுட்பமாகப் பயன்படுத்தியுள்ளது. சஞ்சிகைகள் ஒரு பெரும்பொருள் பற்றிய சகல விடயங்களையும் தருவனவாகவும் அன்றேல் பல்வேறு விடயங்கள் பற்றிய பல்வேறு தரவுகளைத் தருவனவாகவும் அமையும். பண்பாட்டின் வடிவங்களை நம்மிடையே நிலைநிறுத்துவதற்கும் அவற்றின் செல்வாக்கை விரிவடையச் செய்வதற்கும் சஞ்சிகைகள் பயன்படுகின்றன. இதனைத் தமிழ்நாட்டின் இன்றைய பண்பாட்டு வடிவங்களை நோக்கும்போது தெரிந்துகொள்ளலாம் - சினிமா, தொலைக்காட்சி, வானொலி, சனரஞ்சக புனைகதை.

இந்த நிலையில் மாத்திரமல்லாமல் பொதுவான மத, பண்பாட்டு நிலைகளிலும் சஞ்சிகை முக்கிய இடம் பெறுகிறது. பரந்துபட்ட வாசிப்பு என்பது நவீன யுகத்தின் ஒரு கொடையாகும். இன்றைய வெகுசனப் பண்பாட்டுச் சூழலில் வாசிப்பு என்பது தரவுகளைத் தருவது, சிந்தனையைத் தூண்டுவது என்கின்ற நியமங்களுக்கு அப்பாலே சில முக்கியப் பயன்பாடுகளுக்குத் தளமாகிறது என்று தொடர்பியற் சமூகவியலாளர் கூறுவர். அவை பின்வருமாறு:

1. எழுத்தறிவு நமது கற்பனையைத் தூண்டுகிறது. நமது நினைவு நிறைவேற்றங்களுக்காக நாம் வாசிக்கிறோம்; எழுதுகிறோம்.

2. எழுத்தறிவு அக உணர்வுகளை வெளிக்கொணர்ந்து மனத்தைச் சமநிலைப்படுத்துகிறது. பாலகுமாரனின் நாவல்கள் சில, வாசிப்பு மட்டங்களில் ஒரு உளவியல் தேவையாக மாறுவதை அவதானிக்கலாம்.

3. இவற்றின் காரணமாக வாசிப்பு, நம்மைச் சூழலை ஏற்க வைக்கிறது.

மிக நுணுக்கமாகச் சிந்திக்கும்பொழுது இவை ஒவ்வொன்றிலும் இதழ்களின் தொழிற்பாட்டினைக் காணலாம். விரிவஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறோம்.

வாசிப்பில் வாசகரின் மனப்பக்குவம் முக்கியமாகும். இந்த அடிப்படையில் வாசகர்களை இரண்டு நிலைப்படுத்திப் பார்ப்பார்கள்.

(அ) அவர்களின் உடல்வயது (Physical age)
(ஆ) அவர்களின் மனவயது (mental age)

உடல்வயதில் கூடியவர்கள் பலர் மனவயதில் குறைந்தவர்களாக இருப்பார்கள். தமிழின் சனரஞ்சக எழுத்துக்கள், புனைகதைகள் பெரும்பாலும் 18-35 வயதினரை நோக்கியே எழுதப் பட்டிருத்தலை அவதானிக்கலாம்.

இங்கும் மிக நுணுக்கமாக நோக்கும்பொழுது வெகுசன இதழியல் தொடர்பு வன்மைக்கான காரணங்கள் மிகத் துல்லியமாகத் தெரிகின்றன. வாசிப்பு தனிநிலைப்பட்ட ஒரு மனித முயற்சியாகையால் அது மனிதரின் தனித்துவப்பாட்டை மேலும் வலுக்கச் செய்கிறது எனலாம்.

## V

நவீன தமிழிலக்கியத்தின் அச்சாணியான ஓர் அமிசத்தை நினைவு கூர்ந்து இச்சிறு கட்டுரையினை நிறைவு செய்யலாம்.

நவீன தமிழ் இலக்கியம் தமிழ்நாட்டில் முன்னர் எக்காலத்திலும் நிலவாத சனநாயக மயப்பாட்டின் சிசுவும் செவிலியுமாகும். இதழ்களின் தேவை, வளர்ச்சி, விரிவு எழுத்துச் சனநாயகமயப்படுகையின் தவிர்க்கமுடியாத பெறுபேறு ஆகும். அதற்குள் இனியவையுமுண்டு; இன்னாதவையுமுண்டு.

### பிற்குறிப்பு

எனது இந்த வருகைக்கால்ப் பேராசிரியப் பணி நிறைவுறும் வேளையில் இந்தத் தொடக்கவுரையை ஆற்றுமாறு கேட்ட முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும் திரு. மா.ரா. அரசு அவர்களுக்கும் எனது மனம் நெகிழ்ந்த நன்றிகள். உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், முனைவர் இராமர் இளங்கோவுக்கும் எனது நெஞ்சு நிறைந்த நன்றிகள்.

நினைவுகள் மகத்தானவை. அந்த நினைவுகளின் நிழல்களிலேயே நாம் வாழ்கிறோம்.

இவ்வுரை ஒரு நல்நினைவாக அமைகிறது.

அன்புடன்

**கார்த்திகேசு சிவத்தம்பி**

சென்னைப் பல்கலைக்கழக
விருந்தினர் விடுதி
சென்னை - 600 005

8.10.1999

# ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்

க. சந்திரசேகரன்

'ஏடு பெருக்கு' என்பது பாரதிதாசனின் ஆத்திசூடி. இதற்கு, தானே உரையாகவும் உதாரணமாகவும் திகழ்ந்தவர் பாரதிதாசன். பாரதிதாசன் ஆசிரியர் பொறுப்பேற்று நடத்திய இதழ்கள் இரண்டு. அவை:

ஒன்று : புதுவை முரசு - வார இதழ்

மற்றொன்று : ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் - கவிதைத் திங்கள் இதழ்

தம்மை ஆதரவாளராகக் கொண்டு வெளிவந்த இதழ் ஒன்று; அது, முல்லை மாத இதழ்.

தாமே உரிமையாளராகவும் ஆசிரியராகவும் இருந்து நடத்திய இதழ்கள் ஆறு. அவை:

குயில் புத்தகம், குயில் ஒரு பெயர்ப் பன்னூல், குயில் திங்கள் இதழ், குயில் தினசரி இதழ், குயில் கிழமை இதழ், குயில் திங்களிருமுறை.

1930ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது புதுவை முரசு; 1935ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்.

1946 ஜனவரியில் தொடங்கப்பட்டது குயில் ஒருபெயர்ப் பன்னூல்; செப்டம்பரில் வெளிவந்தது குயில் திங்கள் இதழ்.

1948 செப்டம்பரில் வந்தது குயில் தினசரி; 1958 ஜூனில் வெளியிடப்பட்டது குயில் கிழமை; 1962 ஏப்ரலில் வெளிவந்தது குயில் திங்களிருமுறை.

புதுவை முரசு, ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், குயில் ஒருபெயர்ப் பன்னூல், குயில் திங்கள், குயில் தினசரி, குயில் கிழமை ஆகிய ஆறு இதழ்களும் புதுச்சேரியிலிருந்து வெளிவந்துள்ளன.

"ஆதரவாளர்: கவியரசர் பாரதிதாசன் அவர்கள்" என்ற குறிப்பை அட்டைப்பட முகப்பில் தாங்கி வெளிவந்த முல்லையும், குயில் புத்தகமும் அனைத்துலகத் தமிழ்க் கவிஞர் பெருமன்ற வெளியீடாகவும் "ஆயிரம் கவிஞர்கள் எழுதும் ஏடு" என்ற அடைமொழியுடனும் வெளிவந்த குயில் திங்களிருமுறையும் சென்னையிலிருந்து வெளிவந்துள்ளன. இவற்றுள் இங்கே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள இதழ் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்.

## 1. இதழ் தோற்றம்

'ஓர் மாதாந்தரக் கவிதைப் பத்திரிகை', 'ஆசிரியர் பாரதிதாஸன்' என்ற விவரங்களுடன் பிரதி விலை அணா 4, புத்தகம் 1, வெளியீடு 1 புதுச்சேரி பவ வருஷம் பங்குனி மாதம் 1935 என்ற விவரங்களையும் அட்டையில் தாங்கி வெளிவந்த ஸ்ரீசுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், ஒரு கவிதைத் திங்கள் இதழாகும். பவ ஆண்டு பங்குனித் திங்களில் தொடங்கப்பட்ட இவ்விதழ் யுவ ஆண்டு புரட்டாசித் திங்கள் வரை ஏழு இதழ்களே வெளிவந்தன. முழுவதும் கவிதைகளாய்ப் பொலிந்த இவ்விதழ், தமிழ் இலக்கிய இதழியல் உலகில் குறிப்பிடத்தக்கதாகும். "பற்பல உணர்ச்சியை எழுப்பக் கூடிய கவிதைகளுக்கும் செவிகளுக்கு இன்பச் சுவையூட்டும் பல திறப்பட்ட கீதங்களுக்கும் தமிழ்நாட்டில் ஒரு தனிப்பத்திரிகை வெளிவந்திருப்பது இதுவே முதல் தடவையாகும். ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ள அநேக புராண கதைகளைப் பற்றிய கவிப்பகுதிகளைக் கொண்ட சஞ்சிகைகள் தமிழ்நாட்டில் பல உண்டு. ஆனால் ஒரு சாதாரண உயர்தரப் பத்திரிகையில் தோன்றக்கூடிய ருசிகரமான பற்பல விஷயங்களையும் கவிதைகளையும் இன்னிசைக் கீதங்களாகவும் கொண்டு வெளிவரும் தமிழ்ப் பத்திரிகை வேறு இல்லை என்றே சொல்லலாம்"[1] என்று, கவிதா மண்டலம் இதழைப் பற்றி நகரதூதன் இதழ் வழங்கியுள்ள மதிப்புரையும் இங்கு குறிப்பிடத்தக்கது.

## 2. பெயர்க்காரணம்

பாரதிதாசன், முதன்முதலில் பாரதியார்முன் எழுதிய 'எங்கெங்கு காணினும் சக்தியடா' என்ற கவிதையை, பாரதியார் தம் கைப்பட பெயர்த்தெழுதி, அத்துடன், 'ஸ்ரீசுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனக சுப்புரத்தினம் எழுதியது' என்ற குறிப்பினையும் எழுதிச் சுதேசமித்திரன் நாளிதழுக்கு அனுப்பிவைத்தார்

என்று நிலவும் செய்தியின்படி, 'சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்' என்று பாரதி முன்மொழிந்த பெயரே பின்னாளில் பாரதிதாசன் தொடங்கிய இதழுக்குப் பெயராயிற்று எனலாம்.

### 3. அட்டை அமைப்பு

கவிதா மண்டலத்தின் முதல் ஐந்து இதழ்களின் மேலட்டையில் எழுஞாயிற்றின் பின்னணியில் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் பெயரும், மிடுக்கான தலைப்பாகையுடன் சோகமும் வீரமும் ததும்பி நிற்கும் விழி வீச்சையும் மீசை முறுக்கையும் வெளிப்படுத்தும் பாரதியின் உருவப்படமும் அச்சிடப்பட்டுள்ளன. ஆறாவது இதழின் அட்டையில், கடலிலிருந்து சூரியோதயம் எழுந்து வருவதுபோன்றும் அந்தச் சூரிய ஒளிக்கற்றைக்குள்ளே இருக்கும் இரத்தச் சிவப்பு நிறத்திற்குள் சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் இளந்தாடி பாரதியின் உருவப்படமும் வெளியிடப்பட்டுள்ளது. ஏழாவதாகவும் இறுதியாகவும் வெளிவந்த கவிதா மண்டலத்தின் அட்டையில் பாரதி படமின்றி மேலே எழுஞாயிற்றின் பின்னணியில் ஸ்ரீசுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் எனப் பொறித்து,

> "நல்லதோர் வீணை செய்தே - அதை
> நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ"

என்று தொடங்கும் பாரதியின் பதினாறு வரிக்கவிதை வெளியிடப் பட்டுள்ளது. அதன்மூலம் இதழ் நிறுத்தவேண்டிய சூழ்நிலை குறிப்பால் உணர்த்தப்பட்டுள்ளது எனக் கொள்ளலாம்.

### 4. கடைசிப் பக்கம்

முதலிரு இதழ்களின் கடைசிப் பக்கத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் பெயர் கீழ்க்காணுமாறு ஆங்கிலத்தில் வெளியிடப் பட்டுள்ளது.

"Printed and published by R. SUBARAYAN at the Saigon Sinnaya Press, Pondicherry"

இதர இதழ்களின் கடைசிப் பக்கங்கள் காணக் கிடைக்கவில்லை.

### 5. குறிக்கோள்

"நமது பத்திரிகைக்குக் கவிதை தந்துதவ முன்வரும் கவிஞர்கட்கு வேண்டுகோள்" என்ற தலைப்பில், கவிதா மண்டலம்

இதழின் குறிக்கோள், முதல் இதழில் கீழ்க்காணுமாறு வெளியிடப் பட்டுள்ளது.

1. எக்கொள்கை பற்றியும் எழுதுக; எண்ணங்களைக் கவிதையால் அமைத்தல் வேண்டும்.

2. அனைவரும் பாட்டுக்களைப் படித்துச் சுவையறிதல் வேண்டும். தமிழ்க் கவிஞர்கள் பெருகுதல் வேண்டும். இதனால் தமிழர் வாழ்வு உயர்வுபெற வேண்டும் என்ற எண்ணத்தோடு, ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் எளிய நடையில் புதிய வகையில் சுவையோடு கவிதை தந்தார்கள்; இதில் அவர்கள் வெற்றி பெற்றார்கள். அவர்கட்குப் பின் அவ்வகையிற் கவிதை வரைதல் வேண்டும் என முயல்பவர்கள் பலர் உண்டு.

3. பாரதி கவிதா மண்டலம் சிறப்புறுதல் வேண்டும்; பெருகுதல் வேண்டும். இயற்கையழகு, தமிழ், நாடகம், இவை பற்றிக் கவிதை புனைந்து உதவுக. மாணவர்கட்குப் பாட்டு எழுதித் தருக. தேசியம் பாடுக. சமூக சீர்திருத்தம் பாடுக. பெண்கள் உரிமை பாடுக. பெண்கள் முன்னேற்றம் பாடுக. பெண்கள் பெறும் கொடுமைகளைப் பாடுக. பிறமொழியில் உள்ள பாட்டுக்களைத் தமிழ்ப் பாட்டுக்களாக்கித் தருக. உங்கள் உள்ளத்தில் ததும்பி வரும் இனிய தமிழ்க் கவிதைகளைத் தொகுத்துக் காட்டுவதுதான் - தமிழுக்குத் தொண்டு செய்வதுதான் - ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம் மேற்போட்டுக் கொண்ட வேலை.

ஆதரிக்க வேண்டுகிறேன். - ஆசிரியன்.[2]

என்றும், இன்னொரு இடத்தில், 'தமிழ்க் கவிஞர்களே!' என்ற தலைப்பின்கீழ் இதே கொள்கையைச் சுருக்கமாக வெளியிட்டு, "எளிய நடையில் புதிய வகையில் சுவை ஒழுகும்படி கவிதை தந்து உதவிய ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரைப் போல், நூற்றுக்கணக்கான பாரதிகள் நமது கவிதா மண்டலத்தில் தோன்றி மிளிர வேண்டும் என்பது பேரவா"[3] என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் மூலம், தமிழ்க் கவிதையுலகில் ஒரு பாரதி பரம்பரையை உருவாக்கப் பாரதிதாசன் முயன்றுள்ளார் என்பது புலனாகிறது.

### 6. உள்ளடக்கம்

கவிதா மண்டலம் இதழின் உள்ளடக்கமாக சங்கீதம், சங்கீதப் பகுதி, விஞ்ஞானம், மாதர் பகுதி, இயற்கை, மாணவர் போன்ற

பொதுத் தலைப்புகளிலும் தனித்தனித் தலைப்புகளிலும் தலைப்புகளே இல்லாமலும் கவிதைகள் வெளியிடப்பட்டுள்ளன.

## 7. கவிதா மண்டலத்தில் வெளிவந்த கவிதைகள்

கவிதா மண்டலம் முதல் மூன்று இதழ்கள் தனித்தனியே வெளி வந்துள்ளன. நான்காவது இதழும் ஐந்தாவது இதழும் இணைக்கப்பட்டு ஒரே இதழாக வெளிவந்துள்ளது. பின்னர் ஆறாவது இதழும் ஏழாவது இதழும் தனித்தனியே வந்துள்ளன. ஏழாவது இதழோடு கவிதா மண்டலம் நின்றுவிட்டது. எனவே, சுவடி எண்ணிக்கைப்படி 6 இதழ்கள்தான். வரிசை எண்ணிக்கைப்படி ஏழு இதழ்கள்.

இந்த ஏழு இதழ்களிலும் வெளிவந்த தமிழ்க் கவிதைகள் 201. மொழிபெயர்ப்பாகவும் தழுவலாகவும் வந்த கவிதைகள் 34. ஆக வெளிவந்த கவிதைகளின் மொத்த எண்ணிக்கை 235.

இதில் பாரதிதாசன் கவிதைகள் 114; பாரதியார் கவிதைகள் 7; சுவாமி சுத்தானந்த பாரதியார் கவிதைகள் 13; கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை கவிதைகள் 6; சாமி சிதம்பரனார் கவிதைகள் 9; புதுவை எஸ். சிவப்பிரகாசம் கவிதைகள் 10; புதுவை எஸ்.ஆர். சுப்பிரமணியன் கவிதைகள் 4; மாஸ்டர் ஜிஎஸ். அழகர்சாமி கவிதைகள் 6; சமரச சன்மார்க்க சங்கத்தின் கவிதைகள் 5; எஸ். நடனசபாபதி கவிதைகள் 6; புதுவை முத. வேலாயுதம் கவிதைகள் 6; கே. பஞ்சாபிகேசய்யர் கவிதைகள் 4; க. புருஷோத்தமன் கவிதைகள் 3; நல்பொன் கவிதைகள் 3.

புதுவை காசிவிஸ்வநாதன், சமுத்திர நாராயணன், காரைக்கால் சொ. சிதம்பரம், க.அ. ஆறுமுகன், தென்னாப்பிரிக்கா டர்பன் ச. முனீஸ்வாமி பிள்ளை, ஆண்டான் கவிராயன் ஆகிய ஒவ்வொருவரும் இரண்டிரண்டு கவிதைகளும் ப. ஜீவா, கோவை அ. ம. அய்யாமுத்து, அரக்கோணம் ஜமத்கனி, சங்கு சுப்பிரமணியன், கோமதியப்பன், புதுவை இராஜமாணிக்கம் பிள்ளை, அ.கி. ஜெயராமய்யர், வாலாஜாபாத் சி. விஸ்வநாதன், சேது, பி.என். ராஜமாணிக்கம், டி.எஸ். ஸ்ரீபால், ந. பழனிவேலு, ந. ஆதிமூர்த்தி, சென்னை கே. கிருஷ்ணசாமி, மீ. நாகலிங்கம், மீனாட்சிபுரம் கே. சுப்பிரமணியம், திருநெல்வேலி கே. சுப்பிரமணியம், புதுவைக் கிழார், ஈரோடு தி.ச. நடராஜன், வி. சுடலைமுத்துப் பிள்ளை, புதுவை மு. மாணிக்கன், க.சி. கமலையா, கே. ஸ்ரீனிவாசன் ஆகியோர்

ஒவ்வொரு கவிதையும் எழுதியுள்ளனர். இவைபோக பெயர் குறிப்பிடப்படாத மொழிபெயர்ப்புக் கவிதைகள் இரண்டும் வெளிவந்துள்ளன.

இவற்றுள் "பிரெஞ்சு தேசத்து மக்களைப் போருக்குக் கிளப்பிய மர்செயேஸ் என்ற வீரஎழுச்சிப் பாட்டானது உலகத்திலேயே கீர்த்தி பெற்றதுவாகும். அதன் தமிழ் மொழிபெயர்ப்பு வருமாறு:" என்ற குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ள 'தூக்குவீர் கத்தியை'[4] என்ற தலைப்பிலான கவிதையை மொழிபெயர்ப்பு செய்தவரின் பெயர் குறிப்பிடப்படவில்லை. மேலும், இரண்டாவது இதழில் வெளிவந்த இக்கவிதையின் முடிவில் 'தொடரும்' என்று போடப்பட்டுள்ளது. ஆனால், இந்த இதழுக்குப் பிறகு ஐந்து இதழ்கள் வெளிவந்தும் இந்தக் கவிதையின் தொடர்ச்சி வெளியிடப்படவே இல்லை. கவிதா மண்டலத்தில் பெயர் குறிப்பிடாமல் வெளியிடப் பட்டுள்ள கவிதைகளையும் பாரதிதாசன் கவிதைகள் என்றே நாம் கணக்கிட்டிருப்பதால் பெயர் குறிப்பிடாமல் வெளிவந்துள்ள மேற்கண்ட கவிதை பாரதிதாசனால் மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டிருக்கக் கூடும் என்றே கூறலாம்.

அதேபோல, 'குழந்தைகள்'[5] என்ற தலைப்பிலான மொழிபெயர்ப்புக் கவிதையைப் பெயர்த்தவரின் பெயரும் குறிப்பிடாமல் கவிதைக்குக் கீழே "M" என்று மட்டும் போடப் பட்டுள்ளது. பாரதிதாசன், "K.S. பாரதிதாசன், புதுவை கே.எஸ்.ஆர்., K.S.R., பாரதிதாஸன், நாடோடி, வழிப்போக்கன், அடுத்த வீட்டுக்காரன், K.S., சுயமரியாதைக்காரன், வெறுப்பன், கிறுக்கன், கிண்டற்காரன், அரசு, கைகாட்டி, கண்டெழுதுவோன், செய்தி அறிவிப்பாளர், உண்மை உரைப்போன், K.R., குயில் செய்தியாளர்"[6] ஆகிய புனைபெயர்களில் எழுதி வந்துள்ளார். எனவே, இது யார் என விளங்கிக்கொள்ள இயலவில்லை. அதைப் போலவே, 'S' என்றும் 'SS' என்றும் குறிப்பிட்டு, கவிதா மண்டலத்தில் இரண்டு விகடங்கள்[7] வெளியிடப்பட்டுள்ளன. இதுவும் பெயர் விளங்கிக்கொள்ள இயலாததாகவே இருக்கிறது. எனினும், இந்தப் புனைபெயருக்குரியவர் கவிதா மண்டல இதழ்ப் பணியில் மிகுந்த ஈடுபாடு காட்டிவந்த புதுவை எஸ். சிவப்பிரகாசமாக இருக்கலாம் என்று கருத இடமுண்டு.

அடுத்ததாக, கவிதா மண்டலத்தில் வெளிவந்துள்ள கவிதை எண்ணிக்கையைப் பற்றி ஒரு செய்தியை இங்கே குறிப்பிட வேண்டும்.

இவ்விதழில் வெளிவந்த கவிதைகள் எண்ணிக்கை பற்றிக் குறிப்பிட்டுள்ள மன்னர் மன்னன், 'வெளிவந்த கவிதைகளின் மொத்த எண்ணிக்கை 225 என்றும், இவற்றில் பாரதிதாசன் கவிதைகள் 114; கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் கவிதைகள் 6; சுத்தானந்த பாரதியாரின் கவிதைகள் 12; பாரதியாரின் படைப்புகள் 6; சாமி சிதம்பரனார் கவிதைகள் 9[8] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

கவிதா மண்டலத்தில் வெளிவந்த கவிதைகளின் மொத்த எண்ணிக்கை 225 அல்ல; 235.

### 7.1 பாரதிதாசன் கவிதைகள்

கவிதா மண்டலத்தில் வெளிவந்த பாரதிதாசனின் 114 கவிதைகளில் தலையங்கக் கவிதைகள் 6; கொய்யாக் கனிகள் என்ற தலைப்பில் வெளிவந்துள்ள கவிதைகள் 6; சங்கீதம் என்ற தலைப்பில் தமிழில் வெளிவந்த தியாகராஜரின் தெலுங்குக் கீர்த்தனைகள் 11; மதிப்புரை என்ற தலைப்பில் வெளிவந்த இதழ் மதிப்புரைக் கவிதைகள் 4; விடுகவி என்ற தலைப்பில் வெளிவந்த கவிதைகள் 4; எஞ்சிய கவிதைகள் 83. அந்தக் கவிதைகளை அவற்றின் தலைப்புகளையும் உள்ளடக்கத்தையும் கொண்டு இயற்கை, காதல், கல்வி, அறிவியல், தேசியம், பெண்ணுரிமை, பெண்கள் முன்னேற்றம், குடும்ப முன்னேற்றம், சமூக சீர்திருத்தம், தமிழ் முன்னேற்றம், தமிழர் முன்னேற்றம், தொழிலாளர் ஒற்றுமை, கும்மிப் பாட்டு, தாலாட்டுப் பாட்டு, மணவிழாப் பாட்டு, மாணவர் பாட்டு, மதுவிலக்குப் பாட்டு, ஏற்றப் பாட்டு, பாரதியார் புகழ்ப்பாட்டு என்று வகைப்படுத்தலாம்.

#### 7.1.1 தலையங்கக் கவிதைகள்

தமிழ்,[9] தமிழ்த்தொண்டு,[10] குவட்டாவில் கூட்டக் கொலை,[11] கூடித் தொழில் செய்க,[12] பாரதியார் நாமம் வாழ்க,[13] எந்நாளோ?[14] என்ற தலைப்பிலான 6 கவிதைகள் தலையங்கக் கவிதைகளாக வெளிவந்துள்ளன. மேசையில் உட்கார்ந்து பாரதியார் கவிதை எழுதுவது போன்ற படத்தைப் போட்டு படத்தையொட்டி 'பாட்டினில் அன்பு செய்' - (பாரதி) என்னும் தலையங்கப் பக்கம் அச்சிடப்பட்டு அதற்குக் கீழே தலையங்கக் கவிதை தொடங்குகிறது. ஐந்தாவது இதழ்வரை இவ்வாறு வெளியிடப்பட்டுள்ளது. ஆறாவது இதழிலும் ஏழாவது இதழிலும் பாரதியின், 'பாட்டினில் அன்பு செய்' என்ற பாடல்வரி நீக்கப்பட்டு பாரதி படமும் அதையொட்டி ஆசிரியர்

பகுதி என்று பெரிய எழுத்திலும் சேர்த்து ஒரே படக்கட்டையில் செய்து அச்சிடப்பட்டு அதற்குக் கீழே தலையங்கக் கவிதை வெளியிடப் பட்டுள்ளது. இவற்றுள் 'தமிழ்' என்ற தலையங்கக் கவிதை பிலகரி ராகத்திலும் ஆதி தாளத்திலும், 'கூடித் தொழில் செய்க' என்ற கவிதை, தோழர்களே என்ற கண்ணி என்னும் மெட்டிலும் அமைந்துள்ளன.

> "தனிமைச் சுவையுள்ள சொல்லை - எங்கள்
> தமிழினும் வேறெங்கும் யாங்கண்ட தில்லை!"[15]

என்ற வரிகளும்,

> "பீடுற்றார் மேற்கில் பிறநாட்டார் என்பதெலாம்
> கூடித்தொழில் செய்யும் கொள்கையினால் தோழர்களே!
>
> வாடித் தொழிலின்றி வறுமையாற் சாவதெல்லாம்
> கூடித் தொழில்செய்யாக் குற்றத்தால் தோழர்களே"[16]

என்ற வரிகளும்,

> "வெள்ளம்போல் தமிழர்கூட்டம் வீரங்கொள் கூட்டம்! அன்னார்
> உள்ளத்தால் ஒருவரேமற் றுடலினால் பலராய்க் காண்பார்.
> கள்ளத்தால் நெருங்கொணாதே? எனவையம் கலங்கக்கண்டு
> துள்ளும்நாள் எந்நாள்உள்ளம் சொக்கும்நாள் எந்தநாளோ?"[17]

என்ற வரிகளும் தலையங்கக் கவிதைகளில் கவிதா மண்டலத்தில் வெளிந்துள்ளன. 'தமிழ்த்தொண்டு' என்ற தலையங்கத்தில்,

> "தமிழ்க் கவிதைக்கெனத் தனிப் பத்திரிகை
> அமைப்போம் என்றே ஆண்டு பல சென்றன.
> தமிழ்ப் பற்றுடையார், தம்புசாமி என்று -
> அமைந்த சீமான் அன்புறு தோழர்
> ஸ்ரீசுப்ரமண்ய பாரதி திருப்பெயர்
> வாய்ந்த கவிதா மண்டலம் எனுமிதை
> ஆய்ந்த அறிஞர் கவிஞரால் ஆக்கி
> வெளியிட முன்வந் தொளிருகின்றார்"[18]

என்ற கவிதை வரிகளால் தமிழ்ப் பற்றாளர் தம்புசாமி என்பார் கவிதா மண்டலம் வெளியிடும் பொறுப்பை ஏற்றுச் செயல்பட்டுள்ளார் என்பதை அறிய முடிகிறது.

### 7.1.2 கொய்யாக் கனிகள்

"கொய்யாக் கனிகள்"[19] என்ற தலைப்பில் வெளிவந்துள்ள 6 கவிதைகளும் ஒரு கவிதை நாடகத் தொடராகும். பரம்பரைச் சொத்தின் பங்கு தம்பிக்குப் போய்விடக் கூடாது என்பதற்காக உடன்பிறந்த தம்பியையே ஆள் வைத்துக் கொலை செய்ய முயலும் அண்ணனைப் பற்றிய கதை இது. "இரண்டே காட்சிகள். இரண்டே நாட்களின் நிகழ்ச்சி, ஆச்சரியம் சோகம் உள்ளிட்ட இனிய நாடகம். இது சகோதரர்மீது அன்பு. பெண்கல்வி ஆகியவற்றை இனிது விளக்கும் - பதிப்பாசிரியர்" என்ற குறிப்புடன் புதுச்சேரியைக் கதைக் களமாகக் கொண்டு முதல் இதழிலேயே தொடங்கப்பட்ட இக்கவிதை நாடகத் தொடர், ஏழு இதழ்களிலும் தொடர்ந்து வெளியிடப் பட்டிருந்தாலும் முதல் காட்சி முடிந்து இரண்டாவது காட்சி முடிவதற்குள் இதழே நின்றுவிட்டதால், இக்கவிதை நாடகத் தொடர் முற்றுப் பெறவில்லை.

### 7.1.3 தமிழில் தெலுங்குக் கீர்த்தனைகள்

'சங்கீதம்' என்ற தலைப்பில் தியாகராஜரின் 11 தெலுங்குக் கீர்த்தனைகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு கவிதா மண்டலத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

> "த்ஸனி தோடி" என்ற கீர்த்தனை,
> ததிகூட்டி வாராய் ஓ மனமே![20]

என்றும்,

> "ராகஸுூ தாரஸ பானமுஜேசி" என்ற கீர்த்தனை,
> ஓர் இசையாம் அமு தார்ந்திவண் நீயே,
> ஓதெங்கணும் மனமே![21]

என்றும்,

> "இதர தைவ முல வல்ல" என்ற கீர்த்தனை,
> இதர தெய்வமெனில் உன்ற னைவிட சௌக்யமா ராமா![22]

என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

> "அலக லல்ல லாடக கநி" என்ற கீர்த்தனை,
> இலகு குஞ்சி சூழ்மூலம் கண்டே
> யாதா நந்தம் முனி பெற்றானோ.[23]

என்றும்,

"ப்ருந்தாவன லோல"! என்ற கீர்த்தனை,

ப்ருந்தாவன லோல! கோவிந்த! அரவிந்த முக[24]

என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

"ச்யாம சுந்தராங்க" என்ற கீர்த்தனை,

நீலவண்ணம் வாய்ந்தோய்!
சகல சக்தியும் நீயேடா.[25]

என்றும்,

"துளசி பில்வமல்லி" என்ற கீர்த்தனை,

துளசி வில்வம் மல்லிகை ஜாதி
வனசாதியின் பூசைகைக் கொள்வாய்[26]

என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

"நிஜமரம முலனு" என்ற கீர்த்தனை,

நிஜமர்ம மதை அறிந்துள்ள பேர்களை
நீ அலையவிடல் ஏதுக்கோ ராமா![27]

என்றும்,

"மருகேலரா" என்ற கீர்த்தனை,

மறைவென்ன காண் ஓ ராகவா?[28]

என்றும்,

"ஸரச ஸாமதான" என்ற கீர்த்தனை,

ரசிகனே நற்சாம தான பேத தண்ட
சவரன் நின்னின் தெய்வம் ஏது? காத்தருள்[29]

என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

"மனஸா ஸ்ரீராமசந்த்ருனி" என்ற கீர்த்தனை,

மனசே ஸ்ரீராம சந்த்ரனை மறந்திடேல்
ஏமாறாதே[30]

என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

"மேலும் சில மொழிபெயர்ப்புக் கீர்த்தனைகள் இன்னும் கையெழுத்துப் படிகளிலேயே இருக்கின்றன. இதழ்களிலும் கையெழுத்துப் படிகளிலுமுள்ள மொழிபெயர்ப்புப் பாடல்கள்

நூலாக்கம் பெறுமாயின் தமிழிசை உலகு மிக்க பயன்பெறும்"[31] என்ற கருத்து கருதற்பாலது.

"செந்தமிழில் இசைப்பாடல்
இல்லையெனச் செப்புகின்றீர்
மான மின்றிப்

பைந்தமிழில் இசையின் றேல்
பாழ்ங்கிணற்றில் வீழ்ந்துயிரை
மாய்த்த லன்றி;

எந்தமிழில் இசையில்லை,
எந்தாய்க்கே உடையில்லை
என்ப துண்டோ?"[32]

என்ற கருத்துக் கொண்டிருந்த பாரதிதாசன் தெலுங்குக் கீர்த்தனையைத் தமிழில் வெளியிட்டுள்ளதன் மூலம் தமது கவி ஆற்றலை வெளிப்படுத்தியுள்ளார்.

## 7.1.4 இதழ் மதிப்புரைகள்

மதிப்புரையைக் கவிதை நடையிலேயே வழங்குவது இவ்விதழின் சிறப்புகளில் ஒன்றாகும். நூல்களுக்கும் உரைநடையில் மதிப்புரை வழங்குவதுபோல இதழ்களுக்குக் கவிதை வடிவிலேயே மதிப்புரை வழங்கும் முறை கவிதா மண்டலத்தில் பின்பற்றப் பட்டுள்ளது.

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் முத்திங்கள் வெளியீடான 'தமிழ்த்தாய்',[33] சிங்காரவேலரின் 'புது உலகம்',[34] புன்னைமுத்து என்பவரை ஆசிரியராகக் கொண்டு அருப்புக்கோட்டையிலிருந்து வெளிவந்த 'வழிகாட்டி',[35] ஈ.வெ. கிருஷ்ணசாமியை ஆசிரியராகக் கொண்டு ஈரோட்டிலிருந்து வெளிவந்த 'பகுத்தறிவு'[36] ஆகிய இதழ்களுக்குக் கவிதை மதிப்புரை வெளியிடப்பட்டுள்ளது. மேற்கண்ட நான்கு இதழ் மதிப்புரைகளும் இதழாசிரியர் பாரதிதாசனாலேயே எழுதப்பட்டுள்ளன. இதழின் சிறப்பம்சங்களையும் அதன் உள்ளடக்கச் சிறப்பையும் கவிதை நடையில் சொல்லி, இதழ் வெளியிடப்படும் முகவரியும் சந்தா விபரங்களும் அதன்கீழே குறிக்கப்பட்டுள்ளன.

'பகுத்தறிவு' இதழுக்கு, கவிதா மண்டலம் வெண்பாவில் வெளியிட்ட மதிப்புரையின் ஒரு பகுதி குறிப்பிடத்தக்கது.

"புகுத்தறிவீ னத்தைப் புதைக்கப் புவியில்
பகுத்தறிவு வந்ததுநாம் பார்த்தோம் - தொகுத்திருக்கும்
கட்டுரைகள் யாவும் அறிஞர் கவின்கனவாம்
அட்டூழியக் காரர்வாய் ஆப்பு"

வருட சந்தா ரூ. 1 - 0 - 0
தனிப்பிரதி ரூ. 0 - 1 - 0

விலாசம் : மானேஜர், 'பகுத்தறிவு' ஆபீஸ், ஈரோடு என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால் "புது உலகம், தமிழின்பம், வழிகாட்டி, பகுத்தறிவு, ஆச்சர்ய கணிதம், தமிழ்த்தாய் போன்ற நூல்களுக்கும் இதழ்களுக்கும் கவிதையாலேயே மதிப்புரைகள் வழங்கியுள்ளார் பாவேந்தர்"[37] என்று 'பாரதிதாசன் இதழ்ப் பணிகள்' என்ற நூலில் டாக்டர் மா. அண்ணாதுரை கூறியுள்ளார்.

புது உலகம், வழிகாட்டி, பகுத்தறிவு, தமிழ்த்தாய் ஆகிய நான்கு இதழ்கள் நீங்கலாக, தமிழின்பத்தையும் ஆச்சர்ய கணிதத்தையும் நூலெனக் கருதியுள்ள டாக்டர் மா. அண்ணாதுரை பாவேந்தர் மதிப்புரை வழங்கியுள்ளதாகக் கூறியுள்ளார். கவிதா மண்டலத்தில் வெளிவந்துள்ள தமிழின்பம் தலைப்பிலான கவிதையும், ஆச்சர்ய கணிதம் தலைப்பிலான கவிதையும் இதழ் மதிப்புரையுமன்று; நூல் மதிப்புரையுமன்று; பாரதிதாசனால் எழுதப்பட்டவையுமன்று. அவையிரண்டும் தனிக் கவிதைகள். மேலும், அவை சமரச சன்மார்க்க சங்கத்தின் சார்பில் கவிதா மண்டலத்துக்கு அனுப்பப்பட்ட கவிதைகள். தனி ஒருவர் பெயர் எதுவும் குறிப்பிடாமல் சமரச சன்மார்க்க சங்க வெளியீடு என்றே கவிதைக்குக் கீழே குறிப்பிட்டு வெளியிடப்பட்டிருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

அதைப் போலவே, "சிந்தனைச்சிற்பி சிங்காரவேலரின் 'புது உலகம்', ஈரோடு 'பகுத்தறிவு', 'குடியரசு' போன்ற இதழ்கட்குக் கவிதையிலேயே மதிப்புரையும் வந்துள்ளன"[38] என்று மன்னர் மன்னன் கூறியுள்ளார். புது உலகம் இதழுக்கும், பகுத்தறிவு இதழுக்கும்தான் கவிதை மதிப்புரை கவிதா மண்டலத்தில் வெளியிடப்பட்டுள்ளது. 'குடியரசு' இதழுக்குக் கவிதை மதிப்புரை வெளியிடப்பட வில்லை. இதழ் வெளியிடும் முகவரி, தனி இதழ் விலை, ஆண்டுச் சந்தா போன்ற விவரங்கள் மட்டும் பெட்டிச் செய்தியாக வெளியிடப்பட்டுள்ளன[39] என்பதே சரியானதாகும்.

### 7.1.5 விடுகவி

கவிதா மண்டலத்தில் விடுகதைகள் கவிதை வடிவில் விடுகவிகளாக வெளியிடப்பட்டுள்ளன. பாரதநாடு, கள், இமயமலை, அடிமை, உரிமை, கவிதா மண்டலம் ஆகிய பொருள்களை மையமாக வைத்து வெளிவந்துள்ள ஆறு விடுகவிகளில் பாரதநாடு,[40] கள்,[41] இமயமலை,[42] அடிமை - உரிமை[43] என்ற பொருளிலான விடுகவிகளைப் பாரதிதாசன் எழுதியுள்ளார். கவிதா மண்டலம் என்ற விடையை மையமாக வைத்து வெளிவந்துள்ள இரண்டு கவிதைகளில் ஒன்றைப் புதுவை எஸ். காசிவிஸ்வநாதனும்[44] மற்றொன்றை மதுரை மாஸ்டர் ஜி.எஸ். அழகர்சாமியும்[45] எழுதியுள்ளனர்.

இவற்றுள் 'பாரத நாடு' என்ற விடையை மையமாக வைத்து பாரதிதாசன் புனைந்துள்ள விடுகவி படித்து இன்புறத்தக்கது.

"கங்கைநதி தலையில் உண்டு சிவனார் அல்ல
காலடியிற் குமரியுண்டு ராமன் அல்ல
சங்கையற்ற வயதுண்டு கிழவி அல்ல
சாத்திரத்தின் ஊற்றனையாள் கலைமா தல்ல
எங்குலத்தைப் பெற்றதுண்டு பிரமன் அல்ல
ஏற்றுண்ணும் எண்ணமில்லை இறுமாப் பல்ல
மங்கை என்று பாடிடுவர் புலவரெல்லாம்
மற்றிதனை இன்னெதென வழுத்து வீரே"

என்பது அந்த கவிதை.

### 7.1.6 பாரதிதாசனின் பிற கவிதைகள்

கவிதா மண்டலம் ஆறாவது இதழ் பாரதி சிறப்பிதழாகவே வெளிவந்துள்ளது. பாரதியார் நாமம் வாழ்க, பாரதியார் திருப்பள்ளியெழுச்சி, பாரதியார் நாடக விமர்சனம், பாரதியார் பட்டினி உபதேசம், பாரதியார் அலங்காரக் குறும்பு, பாரதியார் முன் இரு பிரசங்கங்கள், பாரதியாரும் நாடகமும், பாரதியார் சமத்வ உள்ளம், பாரதியாரும் பையனும் ஆகிய கவிதைகள் ஆறாவது இதழில் வெளிவந்துள்ளன. இவை அனைத்தும் பாரதிதாசனால் எழுதப்பட்டுள்ள கவிதைகளாகும்.

"வாளேந்து மன்னர்களும் மானியங்கொள் புலவர்களும்
மகிழ்வாய் அந்நாள்

*தாளேந்திக் காத்தநறுந் தமிழ்மொழியைத் தாய்மொழியை*
*உயிரை இந்த*
*நாள்ஏந்திக் காக்குநர்யார்? நண்ணுநர்யார்? என அயலார்*
*நகைக்கும் போதில்*
*தோளேந்திக் காத்த எழிற் சுப்ரமண்ய பாரதியார் நாமம் வாழ்க"*[46]

*என்று தொடங்கும் 'பாரதியார் நாமம் வாழ்க' தலையங்கக் கவிதையும்,*

*"இட்டகூழ் இன்றைக்கு நன்றா யிராவிட்டால்*
*பட்டினியாற் போட்டுவிட்டு நாளைக்குப் பார்ப்பாய் - நீ*
*இட்டதொரு கூழில் இனிமை கிளம்புவதை!*
*பட்டினியால் லாபம் பல"*[47]

*என்று முடியும் பட்டினி உபதேசக் கவிதையும்,*

*கொஞ்ச வயதுடையான் - அவன்*
*கூனற் கிழவனைப் போல்*
*அஞ்சி நடந்து சென்றான் - ஐயர்*
*ஆரடா தம்பி என்றார்!*
*அஞ்சலி செய்து நின்றான் - ஐயர்*
*அவனிடம் உரைப்பார் :*

*"நெஞ்சு நிமிர்ந்து நட! - உன்*
*நேரில் அச் சேவலைப்பார்!"*
*சொன்னசொல் பையனுளம் - தனில்*
*சுடர் கொளுத்திடவே*
*முன்னைய கூனல் நடை - தனை*
*முற்றும் அகன்றவனாய்ச்*
*சென்னிதனை நிமிர்த்திக் - கொஞ்சம்*
*சிரிப்பையும் காட்டிச்*
*சன்னத்த வீரனைப் போல் - அந்தச்*
*சாலை வழிநடந்தான்"*[48]

*என்ற 'பாரதியாரும் பையனும்' கவிதையும், கவிதா மண்டலத்தில் வெளிவந்த பாரதியைப் பற்றிய கவிதைகளில் குறிப்பிடத்தக்க கவிதைகளாகும்.*

*மேலும்,*

*"எங்கெங்கு காணினும் சக்தியடா! - தம்பி*
*ஏழுகடல் அவள் வண்ணமடா!"*

என்று பாரதிதாசன், பாரதியார்முன் பாடிய பாடல் 'சக்திப்பாட்டு' என்ற தலைப்பிலும், இதன் ஆங்கில மொழிபெயர்ப்பு 'THE MOTHER'S MAJESTY' Translated by K. Sreenivasan என்றும் குறிப்பிட்டு, இரண்டும் கவிதா மண்டலத்தில் வெளியிடப்பட்டுள்ளன.[49]

"சு.பா, கவிதாமண்டலம் ஆசிரியர் ஸ்ரீ பாரதி தாஸன் சுமார் 20 ஆண்டுகளாக எழுதி வெளியிட்டு வந்துள்ள தமிழ்க் கவிதைகளில் அநேகம் இங்கிலீஷ், தெலுங்கு முதலிய பாஷை வல்லுநர்த் தமது பத்திரிகையில், மொழிபெயர்த்து வெளியிட்டு வந்துள்ளார்கள். ஸ்ரீ பாரதிதாசன் முதல்முதலில் ஸ்ரீ பாரதியார் முன்னிலையில் அவர் கட்டளைப்படி எழுதிய சக்திப்பாட்டு ஒன்றை "பாம்பே ஸ்டாண்டர்டு" என்ற சிறந்த இங்கிலீஷ் பத்திரிகையில் அதன் ஆசிரியர் ஸ்ரீ கே. ஸ்ரீநிவாசனவர்கள் இங்கிலீஷில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அசலும் மொழிபெயர்ப்பும் வருமாறு:" என்ற குறிப்புடன் எஸ்.ஆர். சுப்பிரமணியன் பெயரில் வெளியிடப் பட்டுள்ளதும் இங்கு சுட்டத்தக்கது.

> "தெருப்பெருக் கிடுவோருக்கும் செகம்காக்கும் பெரியோர்க்கும், கை
> இருப்பிற் பத்திரிகை நாளும் இருந்திடல் வேண்டும்' மண்ணிற்
> கருப்பெற் றுருப்பெற் றிளநடைபெற்றுப் பின்னர் ஐந்தே ஆண்டு
> வரப்பெற்றார் பத்திரிகை வாசித்தல் உண்டென்றால் வாழ்க்கை
> பெற்றார்"[50]

என்ற வரிகளடங்கிய 'பத்திரிகைப் பெண்' கவிதையும், யாத்திரை போகும்போது கைக்கொள்ள வேண்டிய,

> "சீப்புக் கண்ணாடி ஆடை சிறுகத்தி கூந்தல் எண்ணெய்
> சோப்புப் பாட்டரி விளக்குத் தூக்கும் கூஜா தாள் பென்சில்
> தீப்பெட்டி கவிகை சால்வை செருப்புக் கோவணம் படுக்கை
> காப்பிட்ட பெட்டி ரூபாய் கைக்கொள்க யாத்திரைக்கே"[51]

என்ற பாரதிதாசனின் புகழ்பெற்ற கவிதையும், பாரதியாரின் 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே' என்ற பாடல் எப்படி உருவானது; எப்போது எழுதப்பட்டது என்பதைக் கவிதை நடையில் விளக்குகின்ற வகையில், 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே என்ற பாடல் உற்பத்திக்குக் காரணம்' என்று தலைப்பிட்டு,

> தமிழ்நாட்டைப் பற்றித் தமிழ்க்கவிகள் தந்தால்
> அமைவான பாட்டுக் களிப்போம் பரிசென்று

சான்ற மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் உரைத்தார்
தேன்போற் கவிஒன்று செப்புகநீர் என்று
பலநண்பர் வந்து பாரதி யாரை
நலமாகக் கேட்டார்; அதற்கு நமதையர்
என்கவிதான் நன்றா யிருந்திடினும் சங்கத்தார்
புன்கவிஎன் றேசொல்லிப் போட்டிடுவார்; போட்டால்தான்
சங்கத்தில் சர்க்கார் தயவிருக்கும்! ஆதலினால்,
உங்கட்கு வேண்டுமெனில் ஓதுகின்றேன் என்றுரைத்தார்!
அந்தவிதம் ஆகட்டும் என்றார்கள் நண்பரெலாம்
செந்தமிழ் நாடென்னும் போதினி லேயின்பத்
தேன்வந்து பாயுது காதினி லேஎன்
றழகுத் தமிழ்நாட்டை அப்படியே நெஞ்சால்
எழுதி முடித்தார்! இசையோடு பாடினார்!
காதினிக்கும் நல்ல கருத்தினிக்கும் பாட்டிந்நாள்
மேதினியிற் சோதி விளக்கு![52]

என்ற கவிதையும் கவிதா மண்டலத்தில் வெளிவந்த பாரதிதாசனின் பிற கவிதைகளில் குறிப்பிடத்தக்க கவிதைகளாகும்.

### 7.1.7 பாரதிதாசன் கவிதைகளில் ராகங்கள்

கவிதா மண்டலத்தில் தாம் எழுதி வெளியிட்டுள்ள கவிதைகளில் பல்வேறு ராகங்களைப் பாரதிதாசன் பயன்படுத்தி உள்ளார். அவை:

பிலகரி,[53] நாட்டை,[54] ஆனந்தபைரவி,[55] ஹரிகாம்போதி,[56] அந்தோளிகா,[57] சாயாதரங்கினி,[58] அடாணா,[59] நோட்டு,[60] மாயமாதி,[61] தோடி,[62] ஸகானா,[63] ஆனந்தபைரவி,[64] தனயாஸி,[65] கேதார கௌள,[66] உமாபரணம்,[67] ஜயத்தஸ்ரீ,[68] ஈசமனோகரி[69] ஆகியவை ஆகும்.

### 7.1.8 தாளங்கள்

ஆதி,[70] சதுர்ஸ ஜாதி திரிபுடை,[71] 28வது மேளம்,[72] ரூபகம்,[73] அட,[74] ஒற்றை[75] ஆகிய தாள வகைகளையும் கவிதா மண்டலத்தில் வெளிவந்த தமது கவிதைகளில் பாரதிதாசன் பயன்படுத்தியுள்ளார்.

### 7.1.9 மெட்டுகள்

கவிதா மண்டலத்தில் பல்வேறு மெட்டுகளையும் பாரதிதாசன் பயன்படுத்தியுள்ளார். வேலவா எனை ஆளாக்கித் தரணும்,[76]

தில்லானா,[77] நீ மதிச் சல்லக நன்று,[78] தினம் கருணை புரிவாய் தேவி,[79] ஐயா ஒரு சேதி ஐயா ஒரு சேதி (லாவணி),[80] மகாவதி குணமாதரே வேகமாய்,[81] சென்று கனிபறித்துக்கொண்டு,[82] கல்யாணம் செய்துக்கோ,[83] பக்ஷமிருக்கவேணும் மன்னனே,[84] திருக்கடையூர் தனிலே,[85] எல்லாரும் போனாப்போல நானும் போனேன் மாங்காத் தோப்பு,[86] சுத்தாழம் பழமே உனை நத்தினேன் தினமே,[87] நமஸ்தே,[88] ஸ்ருங்காரலகரி,[89] ஏலப்பாட்டு,[90] கும்மி,[91] தோழர்களே என்ற கண்ணி,[92] காவடிச்சிந்து,[93] மாதவனே என்ற இந்துஸ்தான்,[94] மாமயிலேறி நீ வா மகா நுபாவா,[95] ஆநந்தக்களிப்பு,[96] நாதசங்கீதப் பொன்மணி மண்டபம்[97] ஆகிய மெட்டுகள் பாரதிதாசனால் பயன்படுத்தப் பட்டுள்ளன.

## 8.0 பாரதியார் கவிதைகள்

நான்குவரித் தனிக்கவிதை ஒன்று,[98] கனவு,[99] காலனுக் குரைத்தல்,[100] நல்லதோர் வீணை செய்தே,[101] சிவாஜி கூறியது,[102] கவிதா தேவி[103] ஆகிய தலைப்பிலான பாரதியின் கவிதைகள் கவிதா மண்டலத்தில் இடம்பெற்றுள்ளன.

கவிதா மண்டலத்தின் இரண்டாவது இதழில் இடம்பெற்றுள்ள 'கனவு' என்ற கவிதையின் தலைப்பின்கீழ் 'காதல்' என்று அடைப்புக் குறிக்குள் போட்டு, அதன்கீழ் 'ஸ்ரீ சி. சுப்ரமணிய பாரதியார்' என்றும் அடைப்புக்குறியிட்டு, அதற்கும் கீழே 'உரிமையாளர் : தமிழறிந்தோன்' என்றும் குறித்துக் கவிதை பிரசுரிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது இதழில் வெளிவந்த இந்தக் கவிதையின் தொடர்ச்சி ஏழாவது இதழில் முடிவுறுகின்றது. அந்த இதழில் 'பாரதியார்' என்று மட்டும் குறித்து வெளியிடப்பட்டுள்ளதால் 'உரிமையாளர் தமிழறிந்தோன்' என்று முன்கவிதையில் குறிப்பிட்டிருப்பது அந்தக் கவிதையைப் பாதுகாத்துக் கொடுத்தவரின் புனைபெயராய் இருக்கலாம் என்று கருத இடமுண்டு.

'காலனுக்குரைத்தல்' என்ற தலைப்பிலான கவிதை "இப்பாட்டு இதுவரை வெளிவராதது, ப - ர்" என்ற குறிப்புடன் வெளியிடப் பட்டுள்ளது. இதன்படி, இக்கவிதை இதற்குமுன் வேறு எந்த இதழிலும் வெளியிடப்படவில்லை என்பதையும் கவிதா மண்டலம் இதழ்தான் முதன்முதலில் இக்கவிதையை வெளியிட்டுள்ளது என்பதையும் அறிய முடிகிறது.

மராட்டிய மன்னன் சிவாஜி தனது படை வீரர்களுக்கு வீர எழுச்சியை ஊட்டிப் பேசுவதாக அமைந்துள்ளது - "சிவாஜி கூறியது"

என்ற தலைப்பிலான கவிதை: "1663ஆம் ஆண்டில் ஔரங்கசீப் சக்கரவர்த்தியின் இரண்டாவது குமாரர் மூசாம், சிவாஜியைப் பூனாவில் எதிர்த்தார். அப்போதிருந்த மகாராஷ்டிர வீரனின் மனநிலையைத் தமக்குச் சொந்தமான இனியநடையில் கற்பனை செய்திருக்கின்றார் நமது மகாகவி பாரதியார்" என்ற குறிப்புடன் இக்கவிதை வெளியிடப்பட்டுள்ளது. அந்த வீர எழுச்சிக் கவிதையிலிருந்து சில வரிகள்.

"ஆரிய ரிருமின் ஆண்களிங் கிருமின்
வீரிய மிகுந்த மேன்மையோ ரிருமின்

மானமே பெரிதென மதிப்பவ ரிருமின்
ஈனமே பொருதல் இயல்பின ரிருமின்

தாய்நாட் டன்புறு தனையரிங் கிருமின்
மாய்நாட் பெருமையின் மாய்ப்பவ ரிருமின்

புலையர்தம் தொழும்பைப் பொருக்கிலா ரிருமின்
கலையறு மிலேச்சரைக் கடிபவ ரிருமின்

ஊரவர் துயரில் நெஞ்சுருகுவ ரிருமின்
சோர நெஞ்சிலாத் தூயவ ரிருமின்

தேவிதாள் பணியுந் தீரரிங் கிருமின்
பாவியர் குருதியைப் பருகுவா ரிருமின்

உடலினைப் போற்றா உத்தம ரிருமின்
கடல்மடுப் பினுமனங் கலங்கல ருதவுமின்"

என்று நீள்கிறது கவிதை.

"நமது கவிச் சக்கரவர்த்தி பாரதியாரின் அநேக எழுத்துக்கள் மறைந்து போய்க் கிடந்தன. மறைந்து போன எழுத்துக்களில் சில, அன்பர்களின் அரிய முயற்சியால் வெளிவந்து கொண்டுமிருக்கின்றன. அத்தகைய மறைந்து போன எழுத்துக்களில் 'கவிதா தேவியும்' ஒன்று. மேற்படி கவிதை பாரதி அன்பர் ஒருவரால் நமக்கு அளிக்கப்பட்டது. அதைக் கீழே பிரசுரித்திருக்கிறோம்" என்ற குறிப்புடன் 'அருள் வேண்டல்' என்ற தலைப்பில் மேற்படி கவிதை பிரசுரிக்கப்பட்டுள்ளது. இந்தக் கவிதையும் கவிதா மண்டலத்தின் மூலம்தான் தமிழ் உலகுக்கு வெளிக்கொணரப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

"காலத்திற் கேற்க வகைகள் அவ்வக்
காலத்திற் கேற்க ஒழுக்கமு நூலும்
ஞால முழுமைக்கு மொன்றாய் - எந்த
நாளு நிலைத்திடு நூலொன்று மில்லை!"

என்ற பாரதியாரின் நான்கு வரித் தனிக்கவிதை இங்கு சிந்தனைக்குரியதாகும்.

## 9.0 சுத்தானந்த பாரதியார் கவிதைகள்

கவிதா மண்டலம்,[104] எழுந்திரு தமிழா,[105] கவிமலர் இனிது,[106] எந்தாய் வாழ்க,[107] அச்சமே யமன்,[108] அருங்கலை விளக்கம்,[109] பெண் சக்திக் கும்மி,[110] கால முன்னேற்றம்,[111] இரவில் அருளிய இன்பம்,[112] இயற்கைச் சித்திரம்,[113] குருநானக் பெருமை அல்லது ஸமதர்ம ஸாதனம்[114] ஆகிய கவிதைகள் சுவாமி சுத்தானந்த பாரதியாரால் எழுதப்பட்டுள்ளன.

இவற்றுள் அருங்கலை விளக்கமும், பெண் சக்திக் கும்மியும் குறிப்பிடத்தக்கன.

"இயலழகை இசைப்பது காவியம்
இயலைக்கண்முன் இலக்குவ தோவியம்
செயலுருவிற் செதுக்கி யுயிர்க்களை
திகழவைப்பது சீரிய சிற்பமாம்

கயல்விழியும் கனியிதழ் வாயும்பூங்
கையுங் கஜ்ஜல் ஜலீரெனுங் காலிலும்
இயலின்பம் விளையாடப் பொன்னாருடல்
இயங்குநற்கலை நாட்டியம் எண்ணுவாம்

தூயவாழ்வைத் துலக்கி யுலகில்
தோற்றவைத்து நடித்திடல் நாடகம்
நேயமன்பு நெறியறி வொற்றுமை
நிலவமாந்தர் நிறுவுதல் சங்கமாம்"

என்று காவியம், ஓவியம், சிற்பம், நாட்டியம், நாடகம், சங்கம் ஆகிய அருங்கலையைப் பற்றிய கவிதையும், பெண் சக்திக் கும்மியில்,

"கற்பது பெண்ணுக்குக் கற்பென்போம் தெய்வக்
கலைமக ளொருபெண் ணன்றோ"

என்ற வரிகளும் மனங்கொளத்தக்கன.

குருநானக்கின் சுயசரிதம்போல் வளர்ந்து வந்த குருநானக் பெருமை அல்லது ஸமதர்ம சாதனம் என்ற கவிதை மூன்று இதழ்களில் வெளிவந்து முற்றுப் பெறாமலே முடிந்துவிட்டது.

'எழுந்திரு தமிழா' என்ற கவிதை பியாகு ராகத்திலும் ஆதிதாளத்திலும், 'எந்தாய் வாழ்க' என்ற கவிதை குறவஞ்சி மெட்டிலும், குருநானக் பெருமை, இரவில் அருளிய இன்பம் ஆகிய கவிதைகள் நொண்டிச் சிந்திலும், 'இயற்கைச் சித்திரம்' கலிவெண்பாவிலும் அமைந்துள்ளன.

## 10.0 கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை கவிதைகள்

ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள்,[115] ஒமர்கய்யாம் பாடல்,[116] மலர் வட்டம்,[117] பறவையின் சிந்தனை,[118] ஒற்றுமையின் உயிர்நிலை,[119] நினைப்பதொன்று முடிவதொன்று[120] ஆகிய கவிதைகள் தேசிகவிநாயகம் பிள்ளையின் கவிதைகளாகும். இவற்றுள், 'ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள்' என்ற தலைப்பில் வரும்,

"ஜாதி ஜாதியென்று நிதம்
சண்டைபோட்டு மண்டைகளை
மோதி மோதி யுடைப்ப தொரு
மூடச் செயலென் றுணரீரோ?"

என்ற கவிதையும் 'ஒற்றுமையின் உயிர்நிலை' என்ற தலைப்பில் வரும்,

"கூடி விருந்துண்ண வேண்டவில்லை - பெண்ணைக்
கொண்டு கொடுக்கவும் வேண்டவில்லை
நாடி எவரொடும் நட்பினராய்த் - தேச
நன்மைக் கிழைப்பதில் நஷ்டமுண்டோ?"

"கீரியும் பாம்புமாய்ச் சண்டையிட்டு - ஜாதி
கீழென்றும் மேலென்றும் நாட்டிவிட்டுப்
பாரதத் தாய்பெற்ற மக்களென்று - நிதம்
பல்லவி பாடிற் பயனெதுவோ?"

என்ற கவிதைகளும் குறிப்பிடத்தக்கன.

## 11.0 சாமி. சிதம்பரனார் கவிதைகள்

கல்வி வளர்ப்பீர்,[121] உடல் நலம்,[122] எனது மனப்போக்கு,[123] புத்தகம்,[124] மாதர் சுதந்திரக் கும்மி,[125] தமிழ்த்தொண்டு,[126] நாய்,[127]

விதவைக் கொடுமை,[128] முருகு[129] ஆகிய தலைப்பில் வெளிவந்துள்ள ஒன்பது கவிதைகளும் சாமி சிதம்பரனார் கவிதைகளாகும்.

"மனம் போன போக்கெல்லாம்
போயுண்மை காண்போம்"

என்று தொடங்கும் 'எனது மனப்போக்கு' என்ற தலைப்பிலான கவிதை 'மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்' என்ற பழங்கவிதையை எதிர்த்துப் பாடுவது போல் அமைந்துள்ளது. இக்கவிதையில் வரும்,

"செழித்து வளர் முளை மீதே
நிழல் மூடி வளர்ச்சி
அழித்துவிடும் செயல் அறிவீர்
அறிவை யடக் காதீர்!"

என்ற வரிகளும்,

'விதவைக் கொடுமை' என்ற தலைப்பிலான கவிதையில்,

"பச்சை யிளம்வய தான பெண்கள் தமைப்
பார்த்தும் மணம்புரி விப்பீர்! - பின்னர்-
இச்சகம் நீங்கி ஆடவர் மாண்டபின்
என்செய் வோம்விதி என்பீர்!"

என்று இளவயது மணத்தையும் விதவைக் கொடுமையையும் ஒரு சேரச் சாடும் வரிகளும் குறிப்பிடத்தக்கன.

'உடல் நலம்' என்ற கவிதை வராளி ராகத்திலும் ஆதி தாளத்திலும், 'எனது மனப்போக்கு' என்ற கவிதை சிந்து மெட்டிலும், 'புத்தகம்' என்ற கவிதை முத்திநெறியறியாத என்ற மெட்டிலும், 'தமிழ்த் தொண்டு' ஆனந்தக்களிப்பு ராகத்திலும், 'விதவைக் கொடுமை' தில்லை வெளியிலே கலந்துவிட்டால் என்ற நந்தனார் சரித்திரக் கீர்த்தனை மெட்டிலும் அமைந்துள்ளன.

## 12.0 புதுவை எஸ். சிவப்பிரகாசம் கவிதைகள்

ஸ்ரீ சுப்ரமணிய பாரதி கவிதா மண்டலம் வாழ்த்தும் வரவேற்பும்,[130] எங்கள் நாட்டுப் பெண்கள்,[131] ஒவ்வாமணம்,[132] பகுத்தறிவு வேண்டும்,[133] மோக்ஷப் பித்து,[134] கல்வி,[135] அந்திப் போழ்து,[136] இயற்கை சமதர்மம்,[137] வைதவ்யக் கொடுமை,[138] துக்கவீடு[139] ஆகிய தலைப்பில்

வெளிவந்த பத்துக் கவிதைகளும் புதுவை எஸ். சிவப்பிரகாசத்தின் கவிதைகளாகும். இவற்றில் 'எங்கள் நாட்டுப் பெண்கள்' கவிதை குறிப்பிடத்தக்கதாகும்.

கொச்சிமலை குடகுமலை எங்களது நாடு என்ற மெட்டில் அமைந்துள்ள இக்கவிதையில்,

"பொன்னுடைகள் பூஷணத்தில் ஆசைக் கெல்லையில்லை - அதில்
ஆசைக் கெல்லையில்லை - இன்னும்
பூண்டிடுவார் உரல் அமியும் பொன்னிறமாயில்லை!"

என்று பெண்களின் நகைப்பித்தைச் சாடுகிறார். அதே கவிதையில்,

கோல மயில் பெண்களை நான்குறை சொல்லுவதில்லை - வீண்
குறை சொல்லுவதில்லை - இந்தக்
கொடிய நிலை தீர்வதற்கே சொன்ன திந்தச் சொல்லை"

என்று முடிப்பது மனங்கொளத்தக்கது.

## 13.0 புதுவை எஸ்.ஆர். சுப்பிரமணியன் கவிதைகள்

அழகு,[140] சக்திப்பாட்டு,[141] வீரத்தமிழன்,[142] விடுதலைச் சிங்கம்,[143] தமிழனுக்கு[144] ஆகியவை இவரது பெயரில் வெளிவந்துள்ள கவிதைகளாகும் எனினும் இவற்றுள் சக்திப்பாட்டு பாரதிதாசன் கவிதையாகும். பாரதிதாசன், பாரதியார் முன் பாடிய இந்தக் கவிதையையும், இதை 'பாம்பே ஸ்டாண்டர்டு' இதழ் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டிருப்பதையும் சேர்த்து அதற்கு எஸ்.ஆர். சுப்பிரமணியன் எழுதியுள்ள முன்னுரையையும் கவிதா மண்டலம் வெளியிட்டிருப்பதால் இது எஸ்.ஆர். சுப்பிரமணியன் மூலம் பெறப்பட்டு, கவிதா மண்டலத்தில் வெளியிடப்பட்டிருக்கலாம் என்று கருத இடமுண்டு.

இவரது 'வீரத்தமிழன்' என்ற கவிதையில் வரும்,

"பொங்கு கடல்வந்து போர்செய்யத் தாவிடினும்
அங்கம் கலங்கான்இவ் ஆண்மைத் தமிழன்காண்!"

என்ற கவிதை வரிகளும்,

"மேன்மைக்கு என்ன விதை என்று கேட்பார்க்கு
நான் தமிழன்! எனது தமிழ்! என்பான் தமிழன் காண்!"

என்ற கவிதை வரிகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

## 14.0 மாஸ்டர் ஜி.எஸ். அழகர்சாமி கவிதைகள்

உண்மைக் கடவுள் வழிபாடு,[145] எழுந்திரடா இந்தியனே,[146] நன்மதி,[147] உயிர்ப்பலி நீக்கல்,[148] ஒற்றுமை,[149] விடுகவி (மூளைக்கு வேலை)[150] ஆகிய கவிதைகள் மாஸ்டர் ஜி.எஸ். அழகர்சாமி கவிதைகளாகும். இவருடைய கவிதைகள் யாவும் வழிபாட்டை ஆதரிக்கின்றன. ஆனால், அதே சமயத்தில் மூடநம்பிக்கைகளை விமர்சிப்பதோடு அறிவு போதிப்பதாகவும் நீதி போதிப்பதாகவும் அமைந்துள்ளன.

> இரக்கமின்றி உயிரைக் கொல்லாதீங்கோ - கேட்டால்
> எனக்கில்லை சாமிக்கென்று சொல்லாதீங்கோ - உயிர்
> பறக்கத் துடிக்க ஆட்டை வெட்டாதீங்கோ - இன்னும்
> பாவங்களை மூட்டை கட்டாதீங்கோ

என்கிற கவிதை உயிர்ப்பலியிடுவதைக் கண்டிக்கிறது.

'எழுந்திரடா இந்தியனே' கவிதை வீரத்திருவிழிப் பார்வையும் என்ற பாரதி பாடல் மெட்டிலும் கும்மியிலும், 'நன்மதி' மாதவனே என்ற மெட்டிலும், 'உயிர்ப்பலி நீக்கல்' கூடை முறங் கட்டுவோம் என்ற மெட்டிலும் அமைந்துள்ளன.

## 15.0 சமரச சன்மார்க்க சங்கக் கவிதைகள்

சமரச சன்மார்க்க சங்க வெளியீடு என்றும், புதுப்பாளையம் சமரஸ சன்மார்க்க சங்க வெளியீடு என்றும் குறிப்பிட்டு கவிதா மண்டலத்தில் வெளிவந்துள்ள கவிதைகள் மொத்தம் ஐந்து. அவை கவிதா மண்டல வாழ்த்து,[151] தமிழ் இன்பம்,[152] ஆச்சர்ய கணிதம்,[153] ஊன்றிய நோக்காலுள பயன்[154] என்ற தலைப்புகளில் அமைந்துள்ளன.

இவற்றில் 'கவிதா மண்டல வாழ்த்து' என்ற கவிதை, கவிதா மண்டலம் இதழ், நீடூழி வாழ வேண்டும் என்று வாழ்த்துகிறது. 'இங்கிலீஷ் நோட்'டிலும் ஆதிதாளத்திலும் அமைந்துள்ள 'தமிழ் இன்பம்' என்ற கவிதை,

> அஆ இம்மாதிரிய மாமோ - தண்டமிழ்த்தேன்
> அருந்தற்கிணை சொல்லப் போமோ?

என்று இரண்டு வரி பல்லவியில் தொடங்கி, எட்டுவரி அனுபல்லவியாகி இருபத்து நான்கு வரி சரணங்களில் முடிகிறது.

இந்தப் பாடலில் கவிதா மண்டலத்தின் தமிழ் போற்றிப் புகழப்பட்டுள்ளது.

'ஆச்சர்ய கணிதம்' தலைப்பிலான கவிதையில் 45இல் 45 போனால் 45 மிச்சமாவது எப்படி? என்பதையும், ஒன்பதைக் கொண்டு எந்த எண்ணைப் பெருக்கினாலும் எத்தனை எண்களைப் பெருக்கினாலும் கடைசியில், அதன் கூட்டுத் தொகை ஒன்பதாகவே இருக்கும் என்பதையும் விளக்கும் இரண்டு கவிதைகள் இடம்பெற்றுள்ளன. விடுகதையைக் கவிதையாக்கினால் 'விடுகவி' ஆகிவிடுவதைப் போல இதை 'விடுகணிதம்' என்று கூடக் கூறலாம்.

'ஊன்றிய நோக்கா லுளபயன்' என்ற கவிதை எதையும் நுண்மான் நுழைபுலம் கொண்டு ஊன்றிப் பார்த்து நுணுகி ஆராய வேண்டும் என்பதை விளக்குகிறது. மரத்திலிருந்து கனி வீழ்ந்ததைப் பார்த்து புவியீர்ப்பைக் கண்டான் ஆங்கிலேயன். பாத்திரத்தின் மூடி குதிப்பதைப் பார்த்து நீராவியின் திறத்தைக் கண்டான் பிரஞ்சுக்காரன். இறந்த தவளையின் கால்கள் பித்தளை, செம்பு இரும்புகளில் பட்டவுடன் துடிதுடிப்பதை அறிந்து மின்சாரத்தைக் கண்டான் இத்தாலிக்காரன். மரத்தின் பட்டையில் வரிகள் இருப்பதைக் கண்டு அச்செழுத்தைக் கண்டுபிடித்தான் மேல்நாட்டுக்காரன்.

நேசர் பலரு மிதைப் போல
நிசமுங் 'கவிதா மண்டல'த்தை
வாசித் தூன்றி நோக்கு வீரேல்
வல்லீ ரெதிலு மாவீரே

என்று முடிகிறது 'ஊன்றிய நோக்காலுள பயன்' என்ற கவிதை.

## 16.0 பிற கவிஞர்களின் கவிதைகள்

ப. ஜீவானந்தத்தின் 'பாரதி கீதம்',[155] கோவை அ. அய்யாமுத்துவின் 'தப்பேதுமுண்டோ?',[156] ஜமதக்னி எழுதிய முருகக் கடவுளைப் பற்றிய கீர்த்தனை[157] ஆகியவை பிற கவிஞர்களின் கவிதைகளில் குறிப்பிடத்தக்கனவாகும்.

ஜீவாவின் பாரதி கீதம் 'ஶ்ரீராம பாதமா' என்ற மெட்டிலும் அய்யாமுத்துவின் தப்பேதுமுன்டோ? அல்லி அரசாணி மாலை ராகத்திலும், "இது சங்கீத வித்வான் ஶ்ரீ யு. இராஜரத்தினம் அவர்கள் கண்டுபிடித்த 'அபூர்வ. ராகத்'தில் இயற்றப்பட்டுள்ளது" என்ற

குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ள ஜமதக்னியின் கீர்த்தனை சைந்தவி ராகத்திலும் 'ஆதி தாளத்'திலும் அமைந்துள்ளன.

## 17.0 மொழிபெயர்ப்பும் தழுவலும்

ஷெல்லி,[158] புளோரியன்,[159] ஓமர்காயம்,[160] சல்லிப்ருய்தோம்,[161] கீட்ஸ்,[162] விக்தோர் உய்கோ,[163] லாஷம்போதி,[164] எச்.டபிள்யூ. லாங்பெல்லோ,[165] மெக்கே,[166] சேக்சுபியர்,[167] பிரிசோ,[168] ஆந்த்ரே ஷெனியே,[169] சிப்பர்,[170] ஸ்ரீ ருழே தெலீஸ்,[171] ரோன்சார்டு[172] முதலான ஆங்கில - பிரெஞ்சு - அரேபியக் கவிஞர்களின் கவிதைகளையும் நாடகங்களையும் நல்பொன், மு.த. வேலாயுதம், தேசிகவிநாயகம் பிள்ளை, எஸ். நடனசபாபதி, கே. பஞ்சாபிகேசய்யர், க. புருஷோத்தமன், தென்னாப்பிரிக்கா டர்பன் ச. முனிஸ்வாமி பிள்ளை, எஸ். சிவப்பிரகாசம், சங்கு சுப்பிரமணியன் ஆகியோர் மொழிபெயர்ப்பாகவும் தழுவலாகவும் எழுதிய கவிதைகள் கவிதா மண்டலத்தில் இடம் பெற்றுள்ளன.

"ஓர் ஆங்கிலக் கவிதையைத் தழுவித் சங்கு ஸுப்ரஹ்மணியன் பாடியது" என்ற குறிப்புடன் 'யுத்தம் வராதா' என்ற தலைப்பில்[173] உள்ள கவிதை ஏராளமான போர்க்கருவிகளைத் தயாரித்து வைத்துக்கொண்டு விற்பனை செய்யமுடியாமல் தவிக்கும் ஆயுதத் தொழிற்சாலையினர் ஆண்டவனுக்கு விண்ணப்பம் செய்வதாக அமைந்துள்ளது.

அன்று மண் மீதிருந்த
அத்தனை பாலர் தாமும்
இன்று நல் இளைஞராக
இருப்பது கண்டா யன்றோ!
மாயுதல் இன்ப மென்று
மனிதர்மேல் மனிதர் சீறிப்
பாயுதல் வேண்டும்; மண்ணின்
பாரமும் குறைய வேண்டும்.

என்ற கவிதை ஆயுதம் தயாரிப்பவர்களின் தூண்டுதல் கூட மக்களை அழிக்கும், போருக்கு ஆயத்தப்படுத்தும் என்பதை வெளிப்படுத்துகிறது.

## 18.0 இதழில் வெளிவந்த பிற செய்திகள்

கவிதைகள் நீங்கலாக விகடம், சமகாலத்தில் வெளிவந்த பிற இதழ்கள், பரிசுப்போட்டி, படங்கள், பிழை திருத்தம், சந்தாக்

கட்டணம், விளம்பரக் கட்டணம், நமது விஞ்ஞாபனம் ஆகிய தலைப்புகளில் பல்வேறு செய்திகள் இடம்பெற்றுள்ளன.

### 18.1 விகடம்

நாளிதழ்களிலும் வார, மாத இதழ்களிலும் சிரிப்புத் துணுக்குகளாகவும் கருத்துப் படங்களாகவும் வெளிவரும் செய்திகள் கவிதா மண்டலத்தில் 'விகடம்' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளன.

ஆசிரியரும் - மாணவரும், மாணவரும் - மாணவரும் பேசிக்கொள்வது போன்று வெளியிடப்பட்டுள்ளன. இரண்டு விகடங்களில் ஒன்றை எழுதியவர் 'S' என்றும், இன்னொன்றை எழுதியவர் 'S.S.' என்றும் சுருக்கப் புனைபெயரில் குறிப்பிட்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்தச் சுருக்கப் புனை பெயர்களுக்குரியவர் புதுவை எஸ். சிவப்பிரகாசமாக இருக்கலாம் என்று ஏற்கனவே சுட்டப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டிற்கு ஒரு விகடம்.

ஆசிரியர் மாணவர்களைப் பார்த்து முறம் வரையச் சொல்லுகிறார். வரைய முடியாத ஒருவன் மற்றவனைப் பார்த்து,

முறம்போல் எழுத என்னால் முடியலை
முறம்போல் எழுதி முடித்துவிட் டாய்நீ...

என்று கேட்கிறான். அதற்கு மற்றவன் சொல்கிறான் :

போடா போடா சோதாப் பயலே,
வாத்தியார் முகத்தைப் பார்த்து
நேர்த்தியாய் எழுதினேன் நீயும் எழுதடா!

### 18.2 சமகாலத்தில் வெளிவந்த பிற இதழ்கள்

சமகாலத்தில் வெளிவந்த பல இதழ்களைப் பற்றிய விவரங்களைக் கவிதா மண்டலம் வெளியிட்டு வந்துள்ளது.

அந்நாளில் 'ஓர் உயர்தர ஹாஸ்யப் பத்திரிகை' என்ற அடைமொழியுடன் இனிய செந்தமிழ்க் கதைகளைத் தாங்கி புதுச்சேரியிலிருந்து வெளிவந்த 'விதூஷகன்' (மாதஏடு)[174] எம். சிங்காரவேலரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'புதுஉலகம்' (மாதஇதழ்),[175] மதுரையிலிருந்து ஞாயிறுதோறும் வெளிவந்த 'இந்தியத் தாய்',[176] பார்ப்பனரல்லாதார் முன்னேற்றத்துக்காகச் சென்னையிலிருந்து வெளிவந்த 'விடுதலை' (வாரம் இருமுறை),[177] பண்டித எஸ். முத்துசுவாமி

பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'திராவிட கேசரி' (வார ஏடு),[178] 'ஓர் ஹாஸ்ய மாசிகை' என்ற அடைமொழியுடன் வெளிவந்த 'வம்பன்',[179] மணவை ஆர். திருமலைசாமியை ஆசிரியராகக் கொண்டு திருச்சியிலிருந்து வெளிவந்த 'நகரதூதன்' (வாரப் பத்திரிகை),[180] யாழ்ப்பாணம் சுன்னாகத்திலிருந்து ஞாயிறுதோறும் வெளிவந்த 'ஈழகேசரி' (தேசிய தமிழ் வார ஏடு),[181] திருவாசகம் முதலான வேதாகமங்களை அடிப்படையாகக் கொண்டு புதுவையிலிருந்து வெளிவந்த 'வித்தகம்' (செந்தமிழ் வாரப் பத்திரிகை),[182] பி. சுப்பிரமணியத்தை ஆசிரியராகக் கொண்டு நாகர்கோவிலிருந்து வெளிவந்த தமிழன் (ஆங்கில - தமிழ் வாரப் பத்திரிகை),[183] ஈரோட்டிலிருந்து கே.ஜே. வேதமுத்துவை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'சிறுவர் அறிவுக்கதிர்' (மாத ஏடு),[184] ஈ.வெ. கிருஷ்ணசாமியை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'குடிஅரசு' (வாரப் பத்திரிகை)[185] ஆகிய இதழ்களைப் பற்றிய சந்தா விவரங்களும், கிடைக்குமிடங்களும் வெளியீட்டு முகவரிகளும் கவிதா மண்டலத்தில் வெளியிடப்பட்டுள்ளன.

'புதுஉலகம்' இதழ் பற்றிய செய்தியில், "இதில் எழுதுவோர் ஆசிரியர் உட்பட அனைவரும் பேரறிஞர் ஆவர்" என்று குறிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## 18.3 பரிசுப் போட்டி

வெளிவந்த ஏழு இதழ்களிலும் ஒரே ஒருமுறை மட்டும் கவிதை பரிசுப்போட்டி அறிவிக்கப்பட்டு பரிசு அளிக்கப்பட்டுள்ளது. 'முருகு' என்பதைப் பற்றிக் கவிதையெழுதி, புரட்டாசி மாதம் 30ஆம் தேதிக்குள் கீழ்க்கண்ட கம்பெனிக்கு அனுப்புதல் வேண்டும். கவிதா மண்டலம் ஆசிரியர் அங்கீகரித்த கவிதைக்கு ஒரு "சுவிஸ் மேட் வாட்சு" குஹா கம்பெனியாரால் இனாமாக அனுப்பப்படும் என கவிதா மண்டலத்தின் 4,5 இதழ்களில் விளம்பரம் வெளியிடப்பட்டு 7ஆவது இதழில் 'பரிசுபெற்ற கவிதை' என்ற குறிப்புடன் சாமி. சிதம்பரனார் எழுதிய 'முருகு' கவிதை மூன்று பக்கத்தில் வெளியிடப் பட்டுள்ளது.

## 18.4 படங்கள்

கவிதா மண்டலம் வெளியிட்ட காலத்தில் பிரெஞ்சுக் குடியரசுத் தலைவராக இருந்த முசியே லெப்ரானின் உருவப்படத்தை

முதல் இதழின் மூன்றாவது பக்கத்திலும், பிரெஞ்சு இந்திய கவர்னர் ஜெனரலாக இருந்த முசியே சொலோமியாக் உருவப்படத்தை இரண்டாவது இதழின் மூன்றாவது பக்கத்திலும் படங்களுக்கு மேலே அந்நாட்டின் கொள்கையாகப் போற்றி மதிக்கப்படும் சுதந்தரம் - சமத்வம் - சகோதரத்வம் என்ற வாசகமும் வெளியிடப்பட்டுள்ளன. இவை போக, கொய்யாக் கனிகள், சங்கீதம், விஞ்ஞானம், இயற்கை, மாதர் பகுதி ஆகிய தலைப்பில் வெளிவந்த கவிதைகளுக்கும் காதற் கவிதைகளுக்கும் வீர எழுச்சிக் கவிதைகளுக்கும் பொருத்தமான படங்கள் அங்கங்கே பிரசுரிக்கப்பட்டுள்ளன.

## 18.5 பிழை திருத்தம்

'இதழ்களுக்குரிய அச்சுப்படிவம் தயாரிக்கப்பட்டவுடன் பாரதிதாசனே மெய்ப்புத் திருத்தும் பணிகளிலும் ஈடுபடுவார் என்றும், மெய்ப்புத் திருத்தம் செய்வதில் கவனக்குறைவால் பிழைகள் நேர்ந்தால் அடுத்த இதழிலேயே பிழைத்திருத்தம் வெளியிட்டு தவறான கருத்துகளை நீக்கம் செய்வார்'[186] என்றும் பாரதிதாசனுடன் பணியாற்றிய அச்சுக்கோப்பாளர் இராமலிங்கம் தெரிவித்துள்ள செய்தி பாரதிதாசன் இதழ்ப்பணிகள் நூலில் பதிவு செய்யப் பட்டுள்ளது. அந்த வகையில், கவிதா மண்டலத்தில் 'பிழைதிருத்தம்'[187] என்ற தலைப்பிலும் 'ஓர் திருத்தம்'[188] என்ற தலைப்பிலும் இரண்டு திருத்தங்கள் பதிப்பாசிரியர் பெயரில் வெளியிடப்பட்டுள்ளன.

## 18.6 சந்தா கட்டணம்

ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலத்தில் இரண்டாம் பக்கத்தில் பின்வருமாறு சந்தா விவரம் தரப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| "வருடச் சந்தா உள்நாட்டிற்கு | - | ரூ. 3 - 0 - 0 |
| தனிப்பிரதி | - | அ. 0 - 4 - 0 |
| வருடச் சந்தா வெளிநாட்டிற்கு | - | ரூ. 4 - 0 - 0 |
| தனிப்பிரதி | - | அ. 0 - 5 - 0 |

குறிப்பு : மணியார்டர் முதலியவைகளை மானேஜருக்கு அனுப்புதல் வேண்டும்".[189]

ஸ்ரீ சுப்பிரமண்ய பாரதி கவிதா மண்டலத்தில் இதழுக்குச் சந்தாதாரராய்ச் சேருவோருக்கு, பாரதியாரின் வசனநடையில் அமைந்த 152 பக்க 'கட்டுரைத் தத்துவம் I' என்ற நூலும்,[190] ருஷ்யப்

புரட்சியின் முதல்பாகமும்[191] இனாமாய் அளிக்கப்படும் என்று கவிதா மண்டலத்தில் அறிவிக்கப்பட்டுள்ளது.

அதைப் போலவே, 'இனாம் ஜோதிஷம்'[192] என்ற தலைப்பில் சந்தாதாரருக்கு இலவசமாக சோதிடப் பலன் அளிக்கும் விவரம் ஒவ்வொரு இதழிலும் கடைசிப் பக்கங்களில் கவிதை வடிவிலேயே வெளியிடப்பட்டுள்ளது.

> உண்மைப் பலனை உணரவேண்டுமா?
> நன்மை தீமை யறிய வேண்டுமா?
> அப்படி யானால் இப்பொழு தேநீர்
> அடியில் காணும் கூப்பனை நிறைத்துக்
> கடிதம் எழுதும் நேரம் அல்லது
> ஜென்ம நக்ஷத்ரம் எழுதி, அதனுடன்
> அனுப்புவீர் இரண்டணா ஸ்டாம்பும் வைத்து
> மூன்று கேள்விகள் கேட்க வேண்டும்
> மூன்று விடையும் இனாமாய்க் கிடைக்கும்
> நவில்வ தெதற்கெனில் நீங்கள்
> கவிதா மண்டலம் நேயர் தாமே!

என்று அந்த விளம்பரக் கவிதை அமைந்துள்ளது.

'பாரதி நூல்கள், நேர்த்தியான காலிகோ பைண்டு (LIBRARY EDITION)'[193] என்ற தலைப்பின் கீழ், பாரதியின் கவிதைகள், வசனங்கள், பகவத்கீதை, Bharathiar and his works (பாரதியாரும் அவர் நூல்களும்) என்ற தலைப்பில் எழுதப்பட்ட ஆங்கில நூல் உட்பட பாரதியின் 18 வகையான நூல்களைப் பற்றிய விவரங்களும் விலை விவரங்களும் குறிப்பிட்டு, கிடைக்குமிட முகவரியாக ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், மதராஸ் வீதி, புதுச்சேரி என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'கவிதா மண்டலம் சந்தாதாரர்கட்கு 100க்கு 10 வீதம் கமிஷன் கொடுக்கப்படும்' என்ற குறிப்பும் அதன்கீழே வெளியிடப்பட்டுள்ளது.

மேலும், 'நமது சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் ஏஜெண்டுகள்'[194] என்ற தலைப்பில், முகவர்களின் பெயர்களும் ஊர்களும் வெளியிடப்பட்டுள்ளன. "நமது பத்திரிகைக்குக் கீழ்க்கண்ட ஊர்களில் ஏஜெண்டுகள் தேவை"[195] என்று குறிப்பிட்டு முகவர்கள் தேவைப்படும் ஊர்களின் பெயர்களும் பட்டியலிடப்பட்டுள்ளன.

## 18.7 விளம்பரக் கட்டணம்

இதழின் விளம்பரக் கட்டணம் பற்றிய விவரங்கள் இதழின் இரண்டாம் பக்கத்தில் சந்தா விவரத்துக்குக் கீழே பின்வருமாறு தரப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| "முழுப்பக்கத்திற்கு ஒரு தடவைக்கு | - | ரூ. 20 - 0 - 0 |
| அரைப்பக்கத்திற்கு | - | ரூ. 10 - 0 - 0 |
| கால் பக்கத்திற்கு | - | ரூ. 5 - 0 - 0 |

மற்றும் நீண்ட கால விளம்பரம் முதலியவைகட்கு மானேஜருக்கு எழுதுக."[196]

பண்டிட் ஆனந்தரின் மகா சந்தனாதித் தைலம், தாதுபுஷ்டி லேகியம், அமுதசுரபி,[197] பானியால் டூத்பேஸ்ட் மற்றும் சுந்தரி ஸ்னோ,[198] மாரோ மால்ட்[199] ஆகிய விளம்பரங்களும், பாரதிதாசனின் தேசிங்குராஜன் கதை,[200] கிராமபோன் ரெக்கார்டுகளில் வெளிவந்துள்ள விவரமும் தேசியக்கவி க.அ. ஆறுமுகன் இயற்றிய ஹரிஜன சேவாகீதம் சீர்திருத்தப் பாடல்கள் மற்றும் குவெட்டா பூகம்பகீதம்[201] ஆகிய நூல்களைப் பற்றிய விளம்பரங்களும் காணப்படுகின்றன.

மகாவித்வான் சித்தூர் சுப்ரமணிய பிள்ளையின் சங்கீதம், ஸ்ரீமதி கொச்சம்மாளின் ருக்மணி கல்யாணம், மிஸ்.எம்.எஸ். விஜயாவின் சீதா கல்யாணம், ரத்ன பத்தரும் மிஸ் கண்ணாமணியும் பாடிய வண்ணான் தர்க்கம் குறித்த இசைத்தட்டுகள் ஆகிய விளம்பரங்களும் ஒரே பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளன.[202]

'The Yoga of Sri Aurobindo' என்ற தலைப்பில் பாண்டிச்சேரி பாரத சக்தி நிலையத்தின் சார்பில் வெளியிடப்பட்டுள்ள விளம்பரத்தில், அரவிந்தரைப் பற்றியும் யோகாவைப் பற்றியும் வெளிவந்துள்ள ஆங்கில நூல்களைப் பற்றி இதழின் ஒரு பக்கத்தில் இடப்புறத்திலும் வலதுபுறத்திலும், 'அரிய, பெரிய, புதிய நூல்கள்' என்ற தலைப்பில் ஸ்ரீ அரவிந்த யோக விளக்கம், அன்னை, கீதை காட்டும் பாதை, ஸ்ரீ அரவிந்த ப்ரகாசம், புதுயுகப்பாட்டு (இவற்றை உள்ளன்பர் கூடிப் பாடுமிடம் ஆத்ம சக்தி தாண்டவமாடும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது), 'பாரத சக்தி' அரும்பெரும் புதிய தமிழ்க்காப்பியம் (இது மகா காவிய நடையில் உலகில் இதுகாறும் தோன்றிய ஞானிகள் வீரர் சரிதைகளை எல்லாம் தன்னுள் அடக்கி

விளங்கும் அரிய பெரிய நூலாகும். ஸ்ரீ வ.வெ.சு.அய்யர், 450 பக்கம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பெரியோர் வரலாறு : இனிய எளிய நடையில் 80 மஹான்களின் வரலாறுகளும் உபதேச மணிகளும் அடங்கி மனித வாழ்விற்கு அரிய வழிகாட்டியாய் விளங்குகிறது. சுப்பிரமணிய பாரதியார்: பற்றிய அரிய ஆராய்ச்சி நூல், ஸ்ரீ ரமண விஜயம், தர்மஸாதனம், பரமஹம்ஸ லீலை, இராமலிங்க விஜயம், வாகீஸ விஜயம், விரத வைராக்கியம், அரவிந்த வாசகம், ஜனமித்ரன் ஆகிய தலைப்புகளில் 16 நூல்கள் பற்றிய விவரங்களும் அரைப்பக்க விளம்பரமாக வெளியிட்டு, கிடைக்குமிட முகவரியாக, "அ. பாலசுப்ரமண்யம், மளிகை, பெரிய கடைவீதி, புதுவை" என்று குறிப்பிட்டு, நூலின் விலைகளும் நூலை அஞ்சலில் பெறும் விவரங்களும் தரப்பட்டுள்ளன. இந்த விளம்பரங்கள் பெரும்பாலும் அட்டைப் பக்கங்களில் இடம்பெற்றுள்ளன.

## 18.8 நமது விக்ஞாபனம்

கவிதா மண்டலம் முதல் மூன்று இதழ்கள் தடையின்றித் தொடர்ந்து வெளிவந்திருக்கின்றன. அதன்பிறகு வெளிவந்த எல்லா இதழ்களும் மிகுந்த சிரமத்திற்கிடையேதான் வெளிவந்திருக்கின்றன என்பதை அறிய முடிகிறது. குறிப்பாக, பிரட்டிஷ் அரசின் அஞ்சல் துறை குறுக்கீடு அதிகமிருந்திருக்கிறது.

"தனிஇதழ் விலை 4 அணா என்றிருக்க, ஒரு படியை அஞ்சலில் அனுப்ப ஓரணாவுக்கும் மேற்பட்ட அஞ்சல்தலை ஒட்ட வேண்டியிருந்தது. அஞ்சல் கட்டணச் சலுகைக்கு விண்ணப்பித்தும் பயன் ஏற்படவில்லை"[203] என்ற கருத்து அதை உறுதி செய்கிறது.

இந்நிலையில், இதழ் வெளிவருவதில் ஏற்பட்ட தாமதத்தையும் அதற்கு அஞ்சல்துறை குறுக்கீடு இருந்ததையும் கவிதா மண்டலம் ஏழாவது இதழில் 'நமது விக்ஞாபனம்'[204] என்ற தலைப்பில் வெளியிட்டு ஆழ்ந்த வருத்தத்தையும் கோபத்தையும் வெளிப்படுத்தியிருக்கிறது.

"தமிழ்நாடு, சிங்கப்பூர், தென் ஆப்பிரிக்கா, கோலாலம்பூர் முதலியவிடங்களிலிருந்து அநேக தோழர்கள் கவிதா மண்டலத்தின் தாமதத்திற்குக் காரணம் கேட்டிருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் விடை எழுதுவதாய் இருந்தால் அதற்கென தனிப்புத்தகம் அடிக்க வேண்டியிருக்கும். சுருங்கச் சொல்லின், பிரிட்டிஷ் போஸ்டல்

ரிஜிஸ்ட்ரேஷன் என்ற பெரிய பூகம்பம் நமது மண்டலத்திற்கு உண்டாகி, அதனால் ஏற்பட்ட அதிர்ச்சிக்கு அளவில்லை என்றுதான் ஒரே வரியில் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. மேற்சொன்ன அதிர்ச்சியினால், சிதைந்துபோன நமது பாதைகளைச் சீர்படுத்தும் நிர்மாண வேலையில் காரியாலயத்தார் ஈடுபட்டிருந்தமையால் நமது கவிதா மண்டலம் இவ்வளவு தாமதமாக வெளிவர நேருகின்றது - மானேஜர்" என்று அமைந்துள்ள அந்த விளக்கத்தின் மூலம் தமிழ்நாட்டில் மட்டுமல்லாது சிங்கப்பூர், தென் ஆப்பிரிக்கா, கோலாலம்பூர் முதலிய கடல்கடந்த நாடுகளிலும் கவிதா மண்டலத்துக்கு வாசகர்கள் இருந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

'வாசகர்கட்கு'[205] என்ற தலைப்பில், "நமது பத்திரிகை குறித்த காலத்தில் வெளிவராது தாமதப்பட்டுவிட்டபடியாலும் இனிக் குறித்த மாதத்தில் பத்திரிகையை வெளியிடயிருப்பதாலும் இப்பத்திரிகையை ஆனி - ஆடி மாத இதழ்களாக ஆக்கப்பட்டிருக்கிறதென்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம் - மானேஜர்" என்றும், 'அடுத்த இதழ்'[206] என்ற தலைப்பில், "அடுத்து ஆவணி மாத இதழ், ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியார் தின ஞாபகார்த்தமாக, நமது பத்திரிகை அழகிய ராப்பருடனும் பல அறிஞர்களின் கவிதைகளுடனும் வெளிவரும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்' (ப - ர்)" என்றும் அறிவிப்புகள் வெளியிடப்பட்டுள்ளன. அறிவித்தபடி, ஆவணி மாத இதழ் சுப்ரமண்ய பாரதியின் சிறப்பிதழாக வெளியிடப்பட்டுள்ளது. ஆனால், அதற்கு அடுத்து புரட்டாசி மாத இதழ் மட்டுமே வெளிவந்தது. ஏழாவதாகவும் இறுதியாகவும் வெளிவந்த அந்த இதழோடு கவிதா மண்டலம் நின்றுவிட்டது. ஏழு மாத காலத்திலேயே இதழ் நின்றுபோய் விட்டாலும் தமிழ் இலக்கிய இதழியல் உலகில் கவிதா மண்டலத்துக்கு நிலைத்த இடம் உண்டு.

பிற்காலத்தில் வெளிவந்த பாரதிதாசனின் முதல், இரண்டாம் கவிதைத் தொகுதிகளில் இடம்பெற்ற பல கவிதைகளும், 'படித்த பெண்கள்' என்ற நாடக நூலின் கதைக்கருவாக அமைந்த கொய்யாக் கனிகள் என்ற கவிதையும் ஒவ்வொரு தமிழ்க்குடும்பமும் படித்தறிய வேண்டிய 'குடும்ப விளக்கு' நூலின் தோற்றத்துக்கு மூலமாக விளங்கிய 'தகுந்த குடும்பம் சர்வகலாசாலை' என்ற கவிதையும் கவிதா மண்டலத்தில் வெளிவந்தவையே என்று அறிகிறபோது கவிதா மண்டலத்தின் பரப்பும் பங்களிப்பும் எளிதில் விளங்கும்.

## 19.0 முடிவுரை

பாரதிதாசன், சுவாமி சுத்தானந்த பாரதியார், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, சாமி சிதம்பரனார், புதுவை எஸ். சிவப்பிரகாசம், புதுவை எஸ்.ஆர். சுப்பிரமணியன், ப. ஜீவா, கோவை அய்யாமுத்து, ஜமதக்னி, சங்கு சுப்பிரமணியன் உட்பட ஏராளமான பாரதி பரம்பரைக் கவிஞர்களும் ஏராளமான இளங்கவிஞர்களும் கவிதா மண்டலத்தில் எழுதியுள்ளனர். எளிய நடையில் புதிய வகையில் சுவை ஒழுகும்படி கவிதை தந்து உதவிய சுப்ரமண்ய பாரதியாரைப் போல் நூற்றுக்கணக்கான பாரதிகள் நமது கவிதா மண்டலத்தில் தோன்றி மிளிர வேண்டும் என்ற பாரதிதாசனின் கனவை வெளிப்படுத்திய கவிதா மண்டலம் ஏழாவது இதழோடு நின்றுபோய்விட்டதால், பாரதி பரம்பரையை உருவாக்கும் பாரதிதாசனின் கனவு மெய்ப்படவில்லை. எனினும், எண்ணற்ற பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர்கள் தமிழ் மண்ணில் தோன்றி மிளிர்ந்தார்கள்; இன்னும் தோன்றிக் கொண்டே இருக்கிறார்கள்.

### குறிப்புகள்

1. டாக்டர் மா. அண்ணாதுரை, 'பாரதிதாசன் இதழ்ப் பணிகள்' பூங்கொடி வெளியீடு, கார்த்திக் இல்லம், 30. பாரதி நகர், மூலப்பாளையம், ஈரோடு, முதல்பதிப்பு 1990 செப்டம்பர், இயல் இரண்டில் வெளியிடப்பட்டுள்ள நகரதூதன் இதழின் மதிப்புரைப் பக்கத்தின் நகல் (பக்க எண் குறிப்பிடப்படவில்லை)
2. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், புத்தகம் 1, வெளியீடு 1, ப. 2
3. மேலது, புத்தகம் 1, வெளியீடு 3, ப. 3
4. மேலது, புத்தகம் 1, வெளியீடு 2, ப. 19
5. மேலது, புத்தகம் 1, வெளியீடு 3, ப. 27
6. டாக்டர் மா. அண்ணாதுரை, பாரதிதாசன் இதழ்ப் பணிகள், பக். 10-11
7. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், புத்தகம் 1, வெளியீடு 1, பக். 11, 30
8. பாரதிதாசன் குயில் இதழ், சுவடி 9, செப்டம்பர் 84, ப. 13
9. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், புத்தகம் 1, வெளியீடு 1, ப. 5

10. மேலது, புத்தகம் 1, வெளியீடு2, பக். 5-6
11. மேலது, புத்தகம் 1, வெளியீடு 3, ப. 4
12. மேலது புத்தகம் 1, வெளியீடு 4 & 5, பக். 3-4
13. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 3
14. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 1
15. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 5
16. மேலது புத்தகம் 1, வெளியீடு 4 & 5, ப. 4
17. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 2
18. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, பக். 5-6
19. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, பக். 23-30, வெளியீடு 2, பக். 30-36, வெளியீடு 3, பக். 39-42, வெளியீடு 4 & 5, ப. 34 வெளியீடு 6, பக். 38-40, வெளியீடு 7, ப. 30
20. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 31
21. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 10
22. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 10
23 மேலது புத்தகம் 1, வெளியீடு 3, பக். 25-26
24. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, பக். 25-26
25. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, பக். 7-8
26. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, பக். 7-8
27. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, பக். 23-24
28. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, பக். 23-24
29. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, பக். 23-24
30. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 29
31. டாக்டர் மா. அண்ணாதுரை, பாரதிதாசன் இதழ்ப் பணிகள், ப. 248
32. பாரதிதாசன், தமிழியக்கம், செந்தமிழ் நிலையம், புதுக்கோட்டை, 1978, ப. 37
33. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 17
34. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 23

35. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 32
36. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 33
37. டாக்டர் மா. அண்ணாதுரை, பாரதிதாசன் இதழ்ப் பணிகள், ப. 60
38. மன்னர் மன்னன், கறுப்புக் குயிலின் நெருப்புக் குரல், முத்துப் பதிப்பகம், 269, புதுவை கிழக்குச் சாலை, விழுப்புரம், முதல் பதிப்பு, 1985, டிசம்பர், ப. 258
39. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 28
40. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 42
41. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 43
42. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 43
43. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 31
44. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 14
45. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 30
46. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 5
47. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 5
48. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 7
49. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 12
50. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 35
51. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 21
52. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 4
53. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 5
54. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 8
55. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 17
56. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 31
57. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 10
58. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 10
59. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 13
60. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 15

61. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 25
62. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 26
63. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 29
64. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 31
65. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5. ப. 7
66. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 8
67. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 23
68. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 24
69. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 29
70. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 5
71. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 31
72. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 31
73. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 10
74. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 13
75. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 15
76. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 7
77. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 8
78. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 17
79. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப .17
80. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 18
81. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 18
82. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 19
83. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 20
84. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 20
85. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 21
86. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 21
87. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 22
88. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 13
89. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 14
90. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 41

91. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 32
92. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 3
93. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 26
94. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 30
95. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 31
96. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 33
97. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 33
98. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 34
99. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 38 & 7, ப. 11
100. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 15
101. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, மேலட்டை
102. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 16
103. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 25
104. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 6
105. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 16
106. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 21
107. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 8
108. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 14
109. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 6
110. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 16
111. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 10
112. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 7
113. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 8
114. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 11, வெளியீடு 6, ப. 8, வெளியீடு 7, ப. 6
115. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 9
116. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 9
117. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 16
118. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 11
119. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 13
120. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 13

121. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 32

122. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 27

123. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 9

124. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 5

125. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 16

126. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 11

127. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 12

128. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 12

129. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப .13

130. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 7

131. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 22

132. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 25

133. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 20

134. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 32

135. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 10

136. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 27

137. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 15

138. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 25

139. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 28

140. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 16

141. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 12

142. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 29

143. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 13

144. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 27

145. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 17

146. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 9

147. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 23

148. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 28

149. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 14

150. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 14

151. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 12
152. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 14
153. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 34
154. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 24
155. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 21
156. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 18
157. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 32
158. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 10, 2, பக். 7 & 8
159. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 15, 4&5, ப. 24
160. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 9
161. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 37, 4&5, ப. 25
162. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 40
163. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 22, வெளியீடு 4&5, ப. 31. வெளியீடு 7, ப. 28
164. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 24
165. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 27
166. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 36
167. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 37
168. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 35
169. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 23
170. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 25
171. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 19
172. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 28
173. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 11
174. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 40
175. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 20
176. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 32
177. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 12
178. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 25
179. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 22
180. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 35

181. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 34
182. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 37
183. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 21
184. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 28
185. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 28
186. டாக்டர் மா. அண்ணாதுரை, பாரதிதாசன் இதழ்ப் பணிகள், ப. 113
187. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 7
188. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 36
189. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 2
190. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 22
191. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 41
192. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 37
193. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 2
194. மேலது புத்தகம் 1, வெளியீடு 3, ப. 2
195. மேலது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 44
196. மேலது புத்தகம் 1, வெளியீடு 1, ப. 2
197. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 21
198. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 28
199. மேலது புத்தகம் 1, வெளியீடு 6, ப. 32
200. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 32
201. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 24
202. மேலது புத்தகம் 1, வெளியீடு 7, கடைசிப் பக்கம்
203. பாரதிதாசன் குயில், சுவடி 9, செப்டம்பர் '84, ப. 14
204. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் புத்தகம் 1, வெளியீடு 7, (பக்க எண் தெளிவாக இல்லை)
205. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.33
206. மேலது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 33

## இணைப்பு

## ஸ்ரீசுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் இதழில் வெளிவந்த கவிதைகள் பட்டியல்

1. பாரதிதாசன்

1. தமிழ் புத்தகம் 1, வெளியீடு 1, ப.5
2. உதயசூரியன் புத்தகம் 1, வெளியீடு 1, ப.6
3. தொழிற்கல்வி வேண்டும் புத்தகம் 1, வெளியீடு 1, ப.7
4. ஸ்ரீ சி. சுப்ரமண்ய பாரதியார் புகழ் புத்தகம் 1, வெளியீடு 1, ப.8
5. உலக முன்னேற்றம் புத்தகம் 1, வெளியீடு 1, ப.8
6. தமிழர் எழுச்சி புத்தகம் 1, வெளியீடு 1, ப.9
7. காதல் இயற்கை புத்தகம் 1, வெளியீடு 1, ப.12
8. சிட்டுக்குருவிப் பாட்டு புத்தகம் 1, வெளியீடு 1, ப.14
9. விரகதாபம் புத்தகம் 1, வெளியீடு 1, ப.17
10. தலைவி சேடிக்கு புத்தகம் 1, வெளியீடு 1, ப.17
11. நண்பனுக்குக் கடன்படும் தீமையுணர்த்தல் புத்தகம் 1, வெளியீடு 1, ப.18
12. கல்வி புத்தகம் 1, வெளியீடு 1, ப.18
13. வழிநடத்தல் புத்தகம் 1, வெளியீடு 1, ப.19
14. மாணவர்க்கு எழுச்சி புத்தகம் 1, வெளியீடு 1, ப.20
15. நல்வினஞ் சேர்தல் புத்தகம் 1, வெளியீடு 1, ப.20
16. படியாமை நினைந்து வருந்தல் புத்தகம் 1, வெளியீடு 1, ப.21
17. அம்மானை ஏசல் புத்தகம் 1, வெளியீடு 1, ப.21
18. அண்ணியை ஏசல் புத்தகம் 1, வெளியீடு 1, ப.22
19. கொய்யாக் கனிகள் புத்தகம் 1, வெளியீடு 1, பக்.23-30
20. சங்கீதம் (ஒரு கீர்த்தனை) புத்தகம் 1, வெளியீடு 1, ப.31
21. அதிகாலை புத்தகம் 1, வெளியீடு 1, ப.33
22. நிலாப்பாட்டு புத்தகம் 1, வெளியீடு 1, ப.34
23. ஆண் குழந்தையைத் தாலாட்டல் புத்தகம் 1, வெளியீடு 1, பக்.35-36
24. பெண் குழந்தையைத் தாலாட்டல் புத்தகம் 1, வெளியீடு 1, பக்.36-37

25. இனாம் ஜோதிஷம் புத்தகம் 1, வெளியீடு 1, ப.37
26. தமிழ்த் தொண்டு புத்தகம் 1, வெளியீடு 2, ப.12
27. சங்கீதம் (இரண்டு கீர்த்தனைகள்) புத்தகம் 1, வெளியீடு 2, ப.10
28. சக்திப் பாட்டு புத்தகம் 1, வெளியீடு 2, ப.12
29. தலைவி சேடிக்கு புத்தகம் 1, வெளியீடு 2, ப.13
30. கண்டதும் காதல் புத்தகம் 1, வெளியீடு 2, ப.13
31. தலைவன் தலைவி தந்த சுகம் நினைந்துருகல் புத்தகம் 1, வெளியீடு 2, ப.14
32. தேசீயத் திருமண வாழ்த்து புத்தகம் 1, வெளியீடு 2, ப.15
33. மதுவிலக்குப் பாட்டு புத்தகம் 1, வெளியீடு 2, ப.15
34. தமிழ்த்தாய் (மதிப்புரை) புத்தகம் 1, வெளியீடு 2, ப.17
35. சிறுவர் சிறுமியர் பாட்டு புத்தகம் 1, வெளியீடு 2, ப.18
36. காதலன் காதலிக்கு I பறந்து வா! புத்தகம் 1, வெளியீடு 2, ப.23
37. காதலி காதலனுக்கு II (பதில்) பறப்பதற்குச் சிறகில்லை புத்தகம் 1, வெளியீடு 2, ப.23
38. காதலியின் கடிதம் I காதலனுக்குச் சாட்டை புத்தகம் 1, வெளியீடு 2, ப.24
39. காதலன் கடிதம் II (பதில்) ஐஸ்கிரீம் அனலாகிறது புத்தகம் 1, வெளியீடு 2, ப.24
40. தாயைப் பிரிந்திருந்த குழந்தை புத்தகம் 1, வெளியீடு 2, ப.29
41. கொய்யாக் கனிகள் புத்தகம் 1, வெளியீடு 2, பக்.30-36
42. விடுதலைக்குச் செல்லும் கப்பல் புத்தகம் 1, வெளியீடு 2, ப.41
43. விடுகவி: பாரதநாடு புத்தகம் 1, வெளியீடு 2, ப.42
44. விடுகவி: கள் புத்தகம் 1, வெளியீடு 2, ப.43
45. விடுகவி: இமயமலை புத்தகம் 1, வெளியீடு 2, ப.43
46. குவட்டாவில் கூட்டக் கொலை புத்தகம் 1, வெளியீடு 2, ப.4
47. உலக சமாதானம் புத்தகம் 1, வெளியீடு 2, ப.7
48. தகுந்த குடும்பம் சர்வகலா சாலை புத்தகம் 1, வெளியீடு 2, பக்.11-12
49. பெண்களைப் பற்றி பெர்னார்ட்ஷா புத்தகம் 1, வெளியீடு 2, ப.13
50. நாணிக் கண் புதைத்தல் புத்தகம் 1, வெளியீடு 2, ப.21

51. புது உலகம் (மதிப்புரை) புத்தகம் 1, வெளியீடு 2, ப.23
52. சங்கீதம் (இரண்டு கீர்த்தனைகள்) புத்தகம் 1, வெளியீடு 2, ப.25
53. கொடை வாழ்க? புத்தகம் 1, வெளியீடு 3, ப.26
54. மாணவர் பாட்டு புத்தகம் 1, வெளியீடு 3, ப.28
55. குன்றும் மயிலும் புத்தகம் 1, வெளியீடு 3, ப.29
56. வறுமையிற் செம்மை புத்தகம் 1, வெளியீடு 3, ப.29
57. உலகின் இலக்ஷியம் புத்தகம் 1, வெளியீடு 3, ப.31
58. விடுகவி - அடிமை உரிமை புத்தகம் 1, வெளியீடு 3, ப.31
59. பழைய நினைப்பு புத்தகம் 1, வெளியீடு 3, ப.32
60. சென்னையில் வீட்டு வசதி புத்தகம் 1, வெளியீடு 3, ப.32
61. கொசு! உஷார்!! புத்தகம் 1, வெளியீடு 3, ப.32
62. காதலற்ற பெட்டகம் புத்தகம் 1, வெளியீடு 3, ப.33
63. சோலை புத்தகம் 1, வெளியீடு 3, ப.34
64. பத்திரிகைப் பெண் புத்தகம் 1, வெளியீடு 3, ப.35
65. எமனை எலி விழுங்கிற்று புத்தகம் 1, வெளியீடு 3, ப.36
66. பறக்கும் மிளகு புத்தகம் 1, வெளியீடு 3, ப.37
67. அந்திப் போதின் கதி புத்தகம் 1, வெளியீடு 3, ப.38
68. கொய்யாக் கனிகள் புத்தகம் 1, வெளியீடு 3, பக்.39-42
69. கூடித் தொழில் செய்க புத்தகம் 1, வெளியீடு 4&5, பக்.3-4
70. பேரிகை புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 4
71. நமது நாடகம், சினிமா புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.6
72. சங்கீதம் (இரண்டு கீர்த்தனைகள்) புத்தகம் 1, வெளியீடு 4&5, பக்.7-8
73. பூசணிக்காய் மகத்துவம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.10
74. யாத்திரை போகும் போது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.21
75. காடு புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.26
76. கஜராஜ் ஸரோஜா காதல் மகத்வம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.29
77. ஏற்றப்பாட்டு புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.30
78. வழிகாட்டி (மதிப்புரை) புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.32
79. பகுத்தறிவு (மதிப்புரை) புத்தகம் 1, வெளியீடு 4&5, ப.33

80. கொய்யாக் கனிகள் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 34
81. பாரதியார் நாமம் வாழ்க புத்தகம் 1, வெளியீடு 6, ப. 3
82. செந்தமிழ் நாடெனும் போதினிலே (பாடல் காரணம்) புத்தகம் 1, வெளியீடு 6, ப. 4
83. பாரதியார்: திருப்பள்ளியெழுச்சி புத்தகம் 1, வெளியீடு 6, ப. 5
84. பாரதியார்: நாடக விமர்சனம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 5
85. பாரதியார்: பட்டினி உபதேசம் ! புத்தகம் 1, வெளியீடு 6, ப. 5
86. பாரதியார்: அலங்காரக் குறும்பு புத்தகம் 1, வெளியீடு 6, ப. 6
87. பாரதியார் முன் இரு பிரசங்கங்கள் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 7
88. பாரதியாரும் பையனும் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 7
89. பாரதியார் : சமத்வ உள்ளம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 7
90. பாரதியாரும் நாடகமும் புத்தகம் 1, வெளியீடு 6, ப.7
91. சங்கீதம் (மூன்று கீர்த்தனைகள்) புத்தகம் 1, வெளியீடு 6, பக். 23-24
92. கண்டதும் காதல் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 29
93. பூங்காவனம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 30
94. யுத்த ஆயத்தம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 30
95. சுகாதார வாழ்வு புத்தகம் 1, வெளியீடு 6, ப. 31
96. பிள்ளைக்கு நீதி புத்தகம் 1, வெளியீடு 6, ப. 33
97. தாய் தனயனுக்குரைத்தல் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 33
98. கொய்யாக் கனிகள் புத்தகம் 1, வெளியீடு 6, பக். 38-40
99. தாயின் மணிக்கொடி புத்தகம் 1, வெளியீடு7, ப. 1
100. எந்நாளோ? புத்தகம் 1, வெளியீடு 7, ப. 2-3
101. மகாகவி பாரதியார் புத்தகம் 1, வெளியீடு 7, பக். 3-4
102. எழுதாக் கவிதை புத்தகம் 1, வெளியீடு 7, பக். 4-5
103. தமிழ் வீரரின் எழுச்சி புத்தகம் 1, வெளியீடு 7, ப. 19
104. சுதந்தரம் உயிரின் இயற்கை நாய்ப் பாட்டு புத்தகம் 1, வெளியீடு 7, ப. 20
105. மாதர் பகுதி புத்தகம் 1, வெளியீடு 7, ப. 21
106. வெற்றி நெருக்கம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 22

107. சில தருமங்கள் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 22
108. சங்கீதம் (ஒரு கீர்த்தனை) புத்தகம் 1, வெளியீடு 7, ப. 29
109. கொய்யாக் கனிகள் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 30

2. பாரதியார்

1. நான்குவரித் தனிக் கவிதை புத்தகம் 1, வெளியீடு 1, ப. 34
2. கனவு புத்தகம் 1, வெளியீடு 2, ப. 38
3. காலனுக்குரைத்தல் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 15
4. நல்லதோர் வீணை செய்தே புத்தகம் 1, வெளியீடு 7, மேலட்டை
5. கனவு (முன் தொடர்ச்சி) புத்தகம் 1, வெளியீடு 7, ப. 11
6. சிவாஜி கூறியது புத்தகம் 1, வெளியீடு 7, ப. 16
7. கவிதாதேவி புத்தகம் 1, வெளியீடு 7, ப. 25

3. சுவாமி சுத்தானந்த பாரதியார்

1. கவிதா மண்டலம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 6
2. எழுந்திரு தமிழா புத்தகம் 1, வெளியீடு 2, ப. 16
3. கவிமலர் இனிது புத்தகம் 1, வெளியீடு 2, ப. 21
4. எந்தாய் வாழ்க புத்தகம் 1, வெளியீடு 3, ப. 8
5. அச்சமே யமன் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 14
6. அருங்கலை விளக்கம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 6
7. குருநானக் பெருமை (அ) ஸமதர்ம ஸாதனம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 11
8. பெண் சக்திக் கும்மி புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 16
9. குருநானக் பெருமை (அ) ஸமதர்ம சாதனம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 8
10. கால முன்னேற்றம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 10
11. குருநானக் பெருமை (அ) ஸமதர்ம ஸாதனம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 6
12. இரவில் அருளிய இன்பம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 7
13. இயற்கைச் சித்திரம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 8

4. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

1. ஓமர்கய்யாம் பாடல் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 9
2. ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 9

3. மலர் வாட்டம் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 16
4. பறவையின் சிந்தனை புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 11
5. ஒற்றுமையின் உயிர்நிலை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 13
6. நினைப்பதொன்று முடிவதொன்று புத்தகம் 1, வெளியீடு 6, ப. 13

5. சாமி சிதம்பரனார்

1. கல்வி வளர்ப்பீர் புத்தகம் 1, வெளியீடு 1, ப. 32
2. உடல் நலம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 27
3. எனது மனப்போக்கு புத்தகம் 1, வெளியீடு 3, ப. 9
4. புத்தகம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 5
5. மாதர் சுதந்திரக் கும்மி புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 16
6. தமிழ்த் தொண்டு புத்தகம் 1, வெளியீடு 6, ப. 11
7. நாய் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 12
8. விதவைக் கொடுமை புத்தகம் 1, வெளியீடு 7, ப. 12
9. முருகு புத்தகம் 1, வெளியீடு 7, ப. 13

6. புதுவை எஸ். சிவப்பிரகாசம்

1. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் புத்தகம் 1, வெளியீடு 1, ப. 7
2. எங்கள் நாட்டுப் பெண்கள் புத்தகம் 1, வெளியீடு 1, ப. 22
3. ஔவா மணம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 25
4. பகுத்தறிவு வேண்டும் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 20
5. மோக்ஷப் பித்து புத்தகம் 1, வெளியீடு 3, ப. 32
6. கல்வி புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 10
7. அந்திப்போழ்து புத்தகம் 1, வெளியீடு 2, ப. 27
8. இயற்கை சமதர்மம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 15
9. வைதவ்யக் கொடுமை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 25
10. துக்க வீடு புத்தகம் 1, வெளியீடு 7, ப. 28

7. புதுவை எஸ்.ஆர். சுப்பிரமணியன்

1. அழகு புத்தகம் 1, வெளியீடு 1, ப. 16
2. வீரத்தமிழன் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 29
3. விடுதலைச் சிங்கம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 13

4. தமிழனுக்கு புத்தகம் 1, வெளியீடு 7, ப. 27

8. மாஸ்டர் ஜி.எஸ். அழகர்சாமி

1. உண்மைக் கடவுள் வழிபாடு புத்தகம் 1, வெளியீடு 3, ப. 17
2. எழுந்திரடா இந்தியனே புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 9
3. நன்மதி புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 23
4. உயிர்ப்பலி நீக்கல் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 28
5. ஒற்றுமை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 14
6. விடுகவி (மூளைக்கு வேலை) புத்தகம் 1, வெளியீடு 6, ப. 14

9. சமரச சன்மார்க்க சங்க வெளியீடு

1. கவிதா மண்டல வாழ்த்து புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 12
2. தமிழ் இன்பம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 14
3. ஆச்சர்ய கணிதம் (இரு கவிதைகள்) புத்தகம் 1, வெளியீடு 6, ப. 34
4. ஊன்றிய நோக்கா லுளபயன் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 24

10. எஸ். நடனசபாபதி

1. ஓர் கனவு புத்தகம் 1, வெளியீடு 2, ப. 37
2. ரயிலும் குதிரையும் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 24
3. ஸ்ரீ பஸ்தேருக்குக் கடிதம் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 25
4. காதல் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 31
5. மானுஷீகம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 17
6. காதற் கடிதம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 28

11. புதுவை மு.த. வேலாயுதம்

1. குருடனும் முடவனும் புத்தகம் 1, வெளியீடு 1, ப. 15
2. எளிய குடும்பம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 39
3. ஏழைகளுக்குப் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 22
4. செம்மறியாடும் நாயும் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 24
5. வானம்பாடியின் மரணம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 35
6. சுதந்திரம் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 23

12. கே. பஞ்சாபிகேசய்யர்

1. அழகுடைப் பொருள் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 40
2. சூரியாஸ்தமனம் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 6

3. கீர்த்தனை புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 15
4. கீர்த்தனை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 32

13. க. புருஷோத்தமன்
1. தாத்தாவின் மூக்குக் கண்ணாடி புத்தகம் 1, வெளியீடு 3, ப. 30
2. குருடன் கூறுவது புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 25
3. எனது நல்ல வலதுகரம் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 36

14. நல்பொன் கவிதைகள்
1. இரவை நோக்கி புத்தகம் 1, வெளியீடு 1, ப. 10
2. என் பக்கத்தில் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 7
3. சந்திரனை நோக்கி புத்தகம் 1, வெளியீடு 2, ப. 8

15. புதுவை எஸ். காசி விஸ்வநாதன்
1. விடுகவி புத்தகம் 1, வெளியீடு 3, ப. 30
2. செய்வன திருந்தச் செய் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 24

16. சமுத்திர நாராயணன்
1. புள்ளினம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 20
2. தாழ்த்தப்பட்டவருக்கிரங்கல் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 21

17. காரைக்கால் சொ. சிதம்பரம்
1. விஞ்ஞானம் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 18
2. பெண்கள் விடுதலை புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 26

18. கு.அ. ஆறுமுகன்
1. தொழிலாளர் நிலைமை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 31
2. பாரதீயம் வாழ்க புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 15

19. ச. முனீஸ்வாமி பிள்ளை
1. இரக்கத்தின் சிறப்பு புத்தகம் 1, வெளியீடு 6, ப. 37
2. சாதிக்கொடுமை புத்தகம் 1, வெளியீடு 7, ப. 24

20. ஆண்டான் கவிராயன்
1. சாதியில்லை புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 11
2. சிரங்கு சொறிய இரு கைகள் போதாதா புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 13

21. ப. ஜீவா
1. பாரதி கீதம் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 21

22. கோவை அ. அய்யாமுத்து

1. தப்பேதுமுண்டோ? புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 18

23. ஜமதக்னி

1. கீர்த்தனை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 32

24. சங்கு சுப்பிரமணியன்

1. யுத்தம் வராதா! புத்தகம் 1, வெளியீடு 2, ப. 11

25. கோமதியப்பன்

1. வேண்டும் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 10

26. புதுவை இராஜமாணிக்கம் பிள்ளை

1. தேவியின் திருமைந்தரியல்பு புத்தகம் 1, வெளியீடு 3, ப. 15

27. அ.கி. ஜெயராமய்யர்

1. நெஞ்சுக்கு நீதி புத்தகம் 1, வெளியீடு 3, ப. 20

28. வாலாஜாபாத் சி. விஸ்வநாதன்

2. தமிழ் வளர்க்கத் தாய்நாடு வளரும் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 12

29. சேது

1. அருள் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 12

30. பி.என். ராஜமாணிக்கம்

1. கோடையின் கொடுமை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 16

31. டி.எஸ். ஸ்ரீபால்

1. பலியின் வரலாறு புத்தகம் 1, வெளியீடு 6, ப. 18

32. ந. பழனிவேலு

1. பாரதத் தாயின் முற்கால நிலைமை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 19

33. ந. ஆதிமூர்த்தி

1. யதுகுலநாசமும் ஜாதிப்போரும் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 20

34. சென்னை கே. கிருஷ்ணசாமி

1. மீனாள் குப்பனுக்கு அப்பன் புத்தகம் 1, வெளியீடு 6, ப. 25

35. மீ. நாகலிங்கம்

1. மண வாழ்க்கை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 26

36. மீனாட்சிபுரம் கே. சுப்பிரமணியம்

1. தாய்நாட்டின் விடுதலை புத்தகம் 1, வெளியீடு 6, ப. 31

37. திருநெல்வேலி கே. சுப்பிரமணியம்

1. இறையிடத்துக் குறையிரத்தல் புத்தகம் 1, வெளியீடு 7, ப. 24

38. புதுவைக்கிழார்

1. மாதர்மாட்சி புத்தகம் 1, வெளியீடு 3, ப. 12

39. ஈரோடு தி.ச. நடராசன்

1. கவிதா மண்டலம் கண்டவர் கடிதம் புத்தகம் 1, வெளியீடு 2, ப. 42

40. வி. சுடலைமுத்து பிள்ளை

1. தென் திருவிதாங்கூரில் மலேரிய ஜுரத்தின் கொடுமை புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 9

41. புதுவை மு. மாணிக்கன்

1. மக்களைப் பள்ளிக்கனுப்புதல் புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 22

42. க.சி. கமலையா

1. மாலைக்காட்சி புத்தகம் 1, வெளியீடு 4&5, ப. 27

43. "S", "S.S" என்று பெயரிட்டது

1. விகடம் புத்தகம் 1, வெளியீடு 1, ப. 11
2. விகடம் புத்தகம் வெளியீடு 1, ப. 30

44. "M" என்று பெயரிட்டது

1. குழந்தைகள் புத்தகம் 1, வெளியீடு 3, ப. 27

45. பெயரில்லாதது

1. தூக்குவீர் கத்தியை புத்தகம் 1, வெளியீடு 2, ப. 19

46. K. Sreenivasan

1. The Mother's Majesty புத்தகம் 1, வெளியீடு 2, ப. 12

# முல்லை

மு. இளமுருகன்

தமிழக இதழியல் உருவாக்கம் ஆங்கிலேய வல்லாண்மை, மதப் பரவல் திசையில் பயணத்தைத் தொடங்கிற்று. இப்பயணப் பொழுதில் இந்திய விடுதலையைச் சுமந்த இதழ்கள் எழுச்சியுற்றன. இவ்வெழுச்சியின் மறுபுறம் ஒரு சாரார் தமிழிலக்கியம், தமிழர் மெய்யியல், கலை பற்றிய கருத்தோட்டங்களைத் தமிழக மக்களிடம் கொண்டு செல்ல வேண்டிய தேவையை உணர்ந்தனர். இவ்வழித் தமிழகத்தில் இலக்கிய இதழ்கள் எழுந்தன

இலக்கிய இதழ்கள் தமிழகச் சூழலில் இருநிலையினவாக அமைந்தன. முதல் நிலை, இலக்கியம், இலக்கணம், உரைகள், வாழ்வியல் செய்திகள், இவை பற்றிய ஆய்வுகள் ஆகியவற்றைக் கொண்டவை. இரண்டாவது நிலை, புதிய இலக்கிய வகைகளின் படைப்புக்களைச் சுமந்தவை. முன்னவை புலமையோரிடம் மட்டுமே நின்றவை. பின்னவை அரிச்சுவடி அறிந்தோரனைவரிடமும் சென்று பரவின.

## தமிழ் இதழ்ப் போக்குகள்

தமிழ் இதழியல் வரலாறு 1831இல் வெளிவந்த 'தமிழ் மாகசின்' வழித் தொடக்கமுறுகிறது. இக்காலம் முதல் தமிழகத்தில் முறையே 1855இல் 'தினவர்த்தமானி', 1882இல் 'சுதேசமித்திரன்', 1892இல் 'விவேக சிந்தாமணி', 1895ஆம் ஆண்டில் தோன்றிய 'லோகோபகாரி', 1917இல் 'தமிழர் நேசன்', 1919ஆம் ஆண்டில் வெளிவந்த 'தமிழ் நாடு', 1920இல் 'நவசக்தி', 1929இல் 'விமோசனம்', 1930ஆம் ஆண்டில் 'சுதந்திரசங்கு', 1931ஆம் ஆண்டில் வெளிவந்த 'காந்தி', 1933ஆம் ஆண்டிலிருந்து வந்த 'மணிக்கொடி, 1934இல் 'தினமணி' ஆகிய இதழ்கள் இந்திய விடுதலையை முதல் நோக்கமாகவும், மொழி, கல்வி, கலை, இலக்கியம் ஆகியனவற்றைத் துணை நோக்கமாகவும் கொண்டு அறிவொளி பாப்பின.

1902இல் நாகை வேதாசலம் பிள்ளையவர்கள் ஆசிரியராகத் திகழ்ந்து வெளிவந்த, 'ஞானசாகரம்' தமிழ், சைவம் இரண்டையும் சுமந்து இலக்கியத் திங்களிதழாக வெளிவந்தது என்பர்.[1] இதன் உள்ளடக்கத்தை முதல் இதழில், "சகளோபாசனை - தமிழ்

வடமொழியினின்றும் பிறந்ததா? - தமிழ்ச் சொல்லுற்பத்தி - சைவம் - சைவ நிலை - காப்பியம் - தொல்காப்பியப் பரிசீலனம் - உள்ளது போகாது - இல்லது வாராது - தொல்காப்பிய முழு முதன்மை - கேநோபநிடத மொழிபெயர்ப்பு - சமயப்பெருமை - இலக்கண ஆராய்ச்சி - நெஞ்சறிவுறுத்தல் - தமிழ் மிகப் பழைய மொழி - இறையனார் அகப்பொருளுரை வரலாறு - ஆநந்தக்குற்றம் - மாணிக்கவாசகர் கால நிருணயம் - மெய்நல விளக்கம் - தமிழ் வேத பாராயணத் தடை மறுப்பு - நாலடியார் நூல் வரலாறு - முன்மொழிப் பிரகாசிகை - பரிமேலழகர் உரையாராய்ச்சி" என்பதைக் காணலாம். ஞானசாகரம், தமிழ், மெய்யியல், இலக்கணம், இலக்கியம், உரைகள், கால ஆராய்ச்சி ஆகியனவற்றை உட்கொண்ட இலக்கிய இதழாக வெளிவந்ததென அறியமுடிகிறது. ஆசிரியரின் மொழித்தூய்மைச் சிந்தனை வளர்ச்சியால் ஞானசாகரம் 'அறிவுக்கடல்' என்றும், ஆசிரியர் சுவாமி வேதாசலம் என்பதை 'மறைமலையடிகள்' என்றும் பிற்கால இதழ்களில் குறிப்பிட்டவாற்றை அறியமுடிகிறது.

## தமிழ் இலக்கிய இதழ்களின் தோற்றம்

இந்நிலையில் தமிழ், தமிழிலக்கிய அறிமுகம், ஆராய்ச்சி, தமிழர் மேம்பாடு, தமிழ்ப் படைப்புக்கள் முதலியனவற்றை மட்டுமே முன்னெடுத்த திங்களிதழாக 1902இல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் தொடங்கப்பெற்று வெளிவரும், 'செந்தமிழ்' இதழைக் குறிக்கலாம். இம்முயற்சியில், "இதுவே முதலிடம் பெற்றுள்ளது" என்றும் தமிழ்ப் புலமை பெற்ற ஆசிரியர்களால் ஆராய்ச்சி நிரம்பிய கட்டுரைகள் எழுதப்பட்டு, இலக்கியப் பெட்டகம் எனக் கருதப்பட்டு வரும் திங்கள் இதழாகும் என்பர்.[2] 1923ஆம் ஆண்டு முதல் வெளிவரும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் 'செந்தமிழ்ச்செல்வி'யை இலக்கிய இதழாகக் குறிக்கலாம். இவ்விதழ் பற்றிய கருத்தாக ஆசிரியர், "செந்தமிழ்ச் செல்வி அரசியலைக் குறித்து யாதும் புகலாது மோன விரதம் பூண்டு நிற்கும்"[3] எனக் குறிப்பிடுவதால் அரசியல் சாராத இதழ் எனத் தன்னை அறிவித்துக் கொண்டதை அறியலாம். அவ்விதழ் ஆய்வாளர் திருமதி வெ. கனகசுந்தரம் செந்தமிழ்ச் செல்வியின் பங்களிப்பாக,

> சமயப் பணி, இலக்கியப் பணி, வரலாற்றுப் பணி, சொல்லாராய்ச்சி, நாடகப் பணி, இசைப் பணி, மொழிபெயர்ப்பு, கலைச் சொல்லாக்கம், தமிழ் முழக்கம், அறிவியல் ஆய்வு முதலியனவற்றை எடுத்துக்காட்டலாம்[4]

எனக் குறிப்பிட்டுள்ளார். இதனால் அரசியல் தவிர்ந்த இதர தமிழியற் செய்திகளை உள்ளடக்கமாகக் கொண்ட இதழாகச் செந்தமிழ்ச்செல்வி திகழுமாற்றை அறியலாம்.

இவ்வரிசையில் தமிழ், தமிழர் உரிமை, 'மீட்டல் கரந்தை' என்னும் தொன்னெறி மரபு போற்றும் தமிழாராய்ச்சித் திங்களிதழாக 1925 முதல் வெளிவந்த கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின், தமிழ்ப்பொழிலைக் குறிப்பிடலாம். இவ்விதழ் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் குறிக்கோளாகிய தொண்டு, தமிழ், முன்னேற்றம் ஆகிய மூன்றன் உள்ளடக்கமாகத் திகழ்கிறது. இவ்வழி இலக்கியம், இலக்கணம், வரலாறு, கல்வெட்டு, பண்பாடு, கலைச் சொல்லாக்கம் முதலியன இடம்பெற்றன. மேலும் தமிழ், தமிழர் நலம் குறித்த தமிழ்ச் சங்க நிகழ்வுகள், நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் தமிழ்ப்பொழிலில் இடம்பெற்றன. தமிழ்ப்பொழில் இதர இலக்கிய இதழில் இடம்பெறும் விளம்பரம், உள்ளிட்ட செய்திகளின்றி முழு தமிழாராய்ச்சித் திங்களிதழாக வெளிவருகிறது.

இவ்விலக்கிய இதழ்களில் மரபுவழி இலக்கியச் சிந்தனைகளின் வெளிப்பாடும், அவற்றைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டுமென்ற துடிப்பும் இருந்ததைக் காணமுடிகின்றன. இத்துடிப்பு பார்ப்பன மேலாண்மைக்கு எதிராகத் தமிழியல் ஆய்வுகளின் அவசியம் உணரப்பட்டதை வெளிப்படுத்துவது. இந்நிலையில் தமிழ், தமிழர் உயர்வு மேலோங்க வேண்டியதன் தேவை தமிழியலாய்வாளர்களால் உணரப்பட்டது. இவ்வுணர்தலுக்குத் திராவிட இயக்க எழுச்சி பெருங்காரணமாக அமைந்தது.

இந்நிலையில் தொடக்ககால இலக்கிய இதழ்களாகத் திகழ்ந்த செந்தமிழ், ஞானசாகரம், செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில் ஆகியவற்றில் கல்வி அறிவு நிரம்பப் பெற்றவர்களால் மட்டும் படிக்கக் கூடிய செவ்விய இலக்கண இலக்கிய ஆய்வுகள் இடம்பெற்றன. இப்போக்கு வளர்ந்து வரும் புதிய இலக்கியப் படைப்புகளுக்கு இடமளிக்க இயலாநிலையை இவ்விதழ்கள் வளர்த்தன. இதனால் அரிச்சுவடி அறிவு பெற்ற மக்களிடம் இவ்விதழ்களால் செல்ல இயலவில்லை. அவர்களுக்கு வாய்ப்பையும் வழங்கவில்லை. இந்நிலையை நா. பார்த்தசாரதி,

> தொடக்க காலத் தமிழ் இலக்கிய ஏடுகள் யாவும் இலக்கண-இலக்கிய ஆராய்ச்சிகளிலும் புலவர்களின்

> விவாதங்களிலுமே கவனம் செலுத்தின. பாமரத் தமிழ் மகன் அவற்றில் ஈடுபாடு கொள்ள வாய்ப் பளிக்கவில்லை. மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடான, 'செந்தமிழ்', கரந்தைத் தமிழ்ச்சங்க வெளியீடான 'தமிழ்ப்பொழில்', சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் 'செந்தமிழ்ச் செல்வி' ஆகியவற்றை இதன் தொடக்ககால இலக்கிய ஏடுகளில் சேர்த்துக் கொள்ளலாம். இவை தமிழ் இலக்கியப் பத்திரிகைகளாயினும், நவீன உத்திகளைத் தேடவில்லை. புலமை எல்லையிலேயே (Intellectuals rank) இவை இருந்தன. நச்சினார்க்கினியன், விவேகபாநு, வ.வே.சு. அய்யரின் பாலபாரதி, விவேக சிந்தாமணி, பஞ்சாமிர்தம் போன்றவற்றையும் ஏறத்தாழ இந்தத் தொடக்ககால இலக்கிய ஏடுகளில்தான் இணைக்க வேண்டும். நவீன இலக்கியப் பத்திரிகைகளின் வளர்ச்சிக் காலம் என்பது மணிக்கொடி, கலைமகள், திரு.வி.கவின் நவசக்தி, சந்திரோதயம், பொன்னி ஆகியவற்றிலிருந்து தொடங்குகிறது. தமிழ் இலக்கியப் பத்திரிகைகளில் புதுமையும், செழிப்பும் பெருகிய காலம் இதுதான்[5]

என்று குறிப்பிட்டுள்ளார். இவரது கருத்துப்படி தொடக்க கால இலக்கிய இதழ்கள் கற்றோர் காமுறுவதாகவே அமைந்தன் என்பது புலனாகிறது.

## 'முல்லை'த் தோற்றம்

செவ்விய ஆய்வுகளைக் கொண்ட செந்தமிழ், ஞானசாகரம், தமிழ்ப்பொழில், செந்தமிழ்ச் செல்வியின் உள்ளடக்கப் போக்குக் கல்வியாளர் மட்டத்தில் நிற்பதையும், விடுதலைப் போராட்ட வீச்சுகளை இதழ்கள் சுமந்து புதிய இலக்கிய வகைகளுடன் செல்வதையும், இந்திய விடுதலை வேட்கையோடு, திராவிட இயக்கம், பொதுவுடைமை இயக்கப் போக்குகள் மேலோங்கி வருவதையும், 1940ஆம் ஆண்டுகளில் காணமுடிகிறது.

இக்காலப் போக்கில் மரபும், புதுமையும் இடைமிடைந்த உள்ளடக்கத்தோடு பலரும் படிக்கும் பாங்கில், பல்வகைப் படைப்புக்களைக் கொண்ட இதழின் தேவை உணரப்படுகிறது. இத்தேவையை நோக்கிப் 'பொதுமக்கள் நலம் நாடிப் புதுக்கருத்தைச்

சொல்க'வெனப் பாவேந்தர் முழங்கியது 'முல்லை'யாக, முல்லை முத்தையாவால் 1945இல் தைத் திங்கள் பொங்கல் நாளில் தொடங்கப்பட்டது.

## இதழின் நோக்கம்

தமிழ் நலம் மேவவும், தமிழ்வழிப் பன்முக இயக்கத்தவரையும் மதமூட நம்பிக்கையற்ற, தமிழ்க் குடும்பமாக ஒருங்கிணைக்கும் எண்ணத்தோடு தம் இதழ் நோக்கத்தை,

> எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
> மங்காத தமிழென்று சங்கே முழங்கு!

என்ற பாவேந்தர் பாடல் வரிகளோடு முதற்பக்கத்தை அமைத்துள்ளார். மேலும் இதழ் நோக்கத்தை,

> முல்லையின் மணம் தமிழின்பமே. தமிழின்பமே முல்லையின் குறிக்கோள். முல்லையில் சிறப்பாக நம் கவியரசர் அவர்களின் கவிதைகளும், அவர்களைப் பற்றிய கருத்துரைகளும் முகிழ்த்து மலர்ந்து மணம் தரும் . . . . தமிழ் ஆக்கம் ஒன்றே முல்லையின் நோக்கம். அரசியல் சூழ்ச்சி, சமயவாதம் இவற்றிற்கு இடமில்லை. . . . இயன்றவரை தமிழையே கையாள்வது, பிற சொற்களில் பகைமையில்லை. எண்ணத்தில், கருத்தில், சொல்லில், செயலில் தமிழாட்சி நிலைபெறக் காணவேண்டும் (முல்லை 1, ப.2)

என்று கூறியுள்ளார். இந்நோக்கங்களில் தமிழ் வளர்ச்சி, பாவேந்தர் படைப்புகள், குறிப்புகள், அறிமுகம் செய்தல், சொல்லிலும் செயலிலும் தமிழ் ஆட்சியை நிலைநிறுத்தல் என்கிறார். அரசியற் சூழ்ச்சி, சமயவாதம் இவற்றிற்கு இடமில்லை என்று அறுதியிட்டுக் கூறக் காரணம் யாதென்று நோக்கும் போது, அரசியற் சார்புடைய செய்திகளை இதர இதழ்கள் விளக்குகின்றன. அவை அன்றாடச் செய்திகளாகவுள. அவற்றைத் திங்களிதழில் வெளியிடவியலா. மேலும் தமிழ் அரசியற் சார்பிற்கு அப்பாற்பட்டு அனைவரும் தமிழால் ஒன்றுபட வேண்டும் என்ற இலக்கை நோக்கியே குறிப்பிட்டார் எனலாம். அடுத்து, சமய வாதத்திற்கு இடமில்லை என்று குறிப்பிட்டுள்ளார். இதற்குக் காரணம் ஒன்று முல்லை முத்தையாவின் திராவிட இயக்க ஈடுபாடு, பிறிதொன்று பாவேந்தரின் சிந்தனை ஈட்டம் எனக் கருத இடமுள்ளது.

## பாவேந்தர் கண்ட முல்லை

முல்லை முதல் இதழில் பாவேந்தர் 'மலர்ந்தது முல்லை' என்னும் தலைப்பில்,

> பச்சைப் பசுந்தழைக் காட்டினிலே ஒரு
> பக்கத்தில் பூத்திட்ட முல்லையைப் பார்
> அச்சடையாளம் நல்வான் குளத்தில் மின்னும்
> ஆயிரம் மீனெனத் தோன்றுமடி!
> அச்சில் அடித்திட்ட வெள்ளிப்பணம் கையில்
> அள்ளி இறைத்தது போல் இருக்கும்!
> இச்சை நறுமணத்தால் அழைக்கும்! முல்லை
> ஏன் என்று பார்க்கையிலே சிரிக்கும் (முல்லை 1, ப. 3)

என முல்லை இதழின் முறுவலை, தமிழ்ப் புது வரவைத் தன் உள உவப்போடு குறிப்பிட்டுள்ளார்.

முல்லை இதழின் ஓராண்டுக் கால வளர்ச்சியைப் பார்க்கில், முல்லை 10ஆவது இதழ் முதல் ஆசிரியராகத் திகழ்ந்த தொ.மு.சி. ரகுநாதன் இதழின் நோக்கங்களை,

> முல்லை மென்மேலும் முன்னேறி, தனித்து தலைதூக்கித் தமிழர் மனத்தில் தனியரசு செலுத்த வேண்டும் என்பதே எங்கள் ஆசை, கனவு. எனவே கருத்துக்களை அமுக்காமல், திரையிட்டு மூடாமல் நெஞ்சுக்கு நீதியாய் தோளுக்கு வாளாய் நிமிர்ந்து நிற்கிறதோ, எவை காற்றிலேறி விண்ணையும் சாடும் கற்பனை வளமும் சிந்தனைச் செறிவும் பெற்றிருக்கிறதோ, எவை கீறல் விழுந்த இசைத் தட்டைப் போல் பழைய நொடிப் பாதையிலே சுற்றிச் சுற்றி வந்து செக்கடி மாட்டுத்தனம் பண்ணாமல், சிந்தனைக்கு வளமும் அறிவுக்கு உணர்வும் ஊட்டி, தமிழுக்கு வலிமை சேர்க்கிறதோ, அவை, புத்தாண்டு முல்லையில் இடம் பெற்று, கதையுருவிலும், கவிதையுருவிலும், கட்டுரையுருவிலும் வெளிவந்து, தமிழ் உள்ளங்களுக்கு ஊட்டமளிக்கும்; வளஞ்சுரந்து தமிழை வளர்க்கும்; ஊருக்கு நல்லது சொல்லும்; உண்மை தெரிந்துரைக்கும் (முல்லை 12, ப.5)

என விளக்குகிறார்.

## இதழாசிரியர்கள்

முதல் ஐந்து இதழ்களுக்குப் பாவேந்தர் ஆதரவாளராகவும், முல்லை முத்தையா தொகுப்பாளராகவும், 6, 7, 8, 9 ஆகிய இதழ்களுக்கு முல்லை முத்தையாவே ஆசிரியராகவும் தொகுப்பாளராகவும், இறுதி 10, 11, 12 இதழ்களுக்குத் தொ.மு.சி. ரகுநாதன் ஆசிரியராகவும் திகழ்ந்துள்ளனர்.

## பெயர்க்காரணம்

மலர்களில் நன்மணமுடையது முல்லை. இம்மணமே தமிழின்பம். தமிழின்பமே முல்லை என முத்தையா குறிப்பிட்டுள்ளார். தமிழை மேம்படுத்தும் குறியீடாக 'முல்லை' இதழுக்குப் பெயரிட்டார் என அறிய முடிகிறது.

இவ்விதழை வாழ்த்தும் பரலி சு. நெல்லையப்பர், முல்லையை மரபு வழி விளக்கமுடன் கற்பின் சின்னமாகப் பாராட்டியுள்ளார். பாராட்டுகையில் இக்கால மகளிர் மணம்பரப்பும் முல்லையைப் புறக்கணித்துக் கனகாம்பரத்தின்மீது நாட்டம் செல்வதைக் கடிந்துள்ளார். இதை, 'வாழிய முல்லை' எனும் பகுதியில் பரலி சு. நெல்லையப்பர்,

> கற்புக்குரிய முல்லையை நமது முற்கால மகளிர் பெரிதும் போற்றி வந்தார்கள். முல்லையங்கோதை நல்லார்களாய் நமது மாதர்கள் விளங்கினார்கள். ஆனால் இன்று முல்லையைப் போற்றுவோர் அருகி வருகின்றனர். மணமும் குணமுமற்ற கனகாம்பரத்தின்மீது இன்று நாகரிக மகளிரின் காதல் சென்றிருக்கிறது. மணமுள்ள முல்லை, மல்லிகை முதலிய மலர்களுக்கு நோய்க் கிருமிகளை அழிக்கும் குணமுண்டு. மணமற்ற மலர்களுக்கு அந்தக் குணம் இல்லையென்பதை நமது மாதர்கள் உணர வேண்டும். படர்ந்து வளர்ந்து சிறந்து வாழ்வதற்குரிய கொழுங் கொம்பின்றி வருந்திக் கொண்டிருந்த முல்லையைப் போல, இந்த நாட்டிலே பல்லாயிரக்கணக்கான ஏழை மக்கள் உண்ணச் சோறின்றி உடுத்தத் துணியின்றி வறுமையிலும் சிறுமையிலும் வருந்திக் கொண்டிருக்கிறார்கள். அந்நாளில் முல்லைக்குத் தேரளித்தப் பாரியைப் போல் இந்நாளில் இந்த நாட்டுச் செல்வர்கள் ஏழைகளுக்குத் தங்கள் பொருளை உதவி அவர்களை ஆதரிக்க வேண்டும்.

> பாரியின் கருணையையும் கொடையையும் அவர்கள் மேற்கொள்ள வேண்டும்.
>
> இன்று தோன்றும் இந்தப் புதிய 'முல்லை'யை ஆதரிக்கும் பாரிகள் பலர் தோன்றுவார்கள் என்பதிலும் இது சிறந்து வளர்ந்து அரும்பீன்று மணம் வீசி நின்று நிலவும் என்பதிலும் ஐயமில்லை (முல்லை 1, பக். 14-15)

என்று வாழ்த்தியுள்ளார்.

## முல்லையைக் குறித்து திரு.வி.க.

> முல்லை வரப்பெற்றேன், அதில் தமிழ்த்தாய் முல்லை நகை புரிதல் கண்டேன். முல்லையின் முயற்சியால் நம் தாய் அரியாசனம் ஏறுவாள் என்று நம்புகிறேன் (முல்லை 2, ப. 33)

என்று குறிப்பிட்டுள்ளார். முல்லைப் பெயர்க் காரணத்திற்குத் திரு.வி.க. கருத்தும் ஒத்ததாக அமைவதை அறியலாம். ஆகத் தமிழ்க் குறியீடாக 'முல்லை' பெயரமைந்ததெனக் கருதமுடிகிறது.

## இதழமைப்பு

முல்லை இதழ் இரண்டு விதமான வடிவுடன் வெளிவந்தது. முதல் 9 இதழ்கள் 1:8 கிரவுன் வடிவிலும் இறுதி 4 இதழ்கள் 1:8 டெம்மி அளவிலும் அமைந்தவை ; 30 பக்கங்களைக் கொண்டு, நான்கு அணா விலையுடன் வெளிவந்தவை.

### நறுக்குகள்

இதழில் படைப்புகள் முடியும் பக்கங்களில் வரும் எஞ்சிய இடங்கள் புரட்சிக்கவிஞர், கல்வியமைச்சர், நாவலர் ச.சோ. பாரதியார், பிட்டாகஸ், லிங்கன் ஆகியோரது மேற்கோள்கள் இடம்பெற்றுச் சிந்தனையைத் தூண்டுகின்றன. சான்றாக,

> ஆடை, அணிகலன், ஆசைக்கு வாசமலர் தேடுவதும், ஆடவர்க்குச் சேவித்திருப்பதுவும், அஞ்சுவதும், நாணுவதும் ஆமையைப் போல் கெஞ்சுவதும் ஆகக் கிடக்கும் மகளிர் குலம், மானிடர் கூட்டத்தில் வலிவற்ற ஒரு பகுதி (3:9)

என்ற பாவேந்தர் மேற்கோள் மகளிர் விடுதலை வேட்கையுடன் இடம்பெற்றுள்ளது.

அடுத்தடுத்த இதழில் வரவுள்ள படைப்புக்களை இட நிரப்புப் பகுதியில் இடம்பெற்றுப் படிப்போருக்கு ஆர்வத்தைத் தூண்டுவனவாக,

> மூன்றாவது வெளியீட்டில்
> காலதேவா, அடிச்சுவடு! - புதுமைப்பித்தன் (2:13)

என்ற அறிவிப்புப் பெட்டிச் செய்தியாக இடம்பெற்றுள்ளது.

## நாவலர் ச.சோ. பாரதியார்

> ஆத்திகர்கள் அனைவோரும் அறிவாட்சிக்கு உட்பட்டு, மடமறைக்க நடமாடும் பழங் குருட்டுக் கொள்கைகளை வாங்காமல் வேரறுத்து, அறிவுக்குச் சங்கூதி வெற்றி தர விரும்ப வேண்டும் (6:9)

என்ற மேற்கோள் மூடநம்பிக்கையற்ற முற்போக்குக்கொள்கையை வலியுறுத்துவதாக இடம்பெற்றுள்ளது. மேலும்,

> தாய்மொழியை மிக்க கவனம் செலுத்திப் படிப்பதானது, ஆங்கிலம் - இந்தி முதலான மொழிகளைப் பயிலுவதை எவ்விதத்திலும் பாதிக்காது. ஆங்கிலமும் இந்தியும் அவசியந்தான். ஆனால், தமிழ் மொழியில் நல்ல ஞானமும் இருந்தால்தான் தன்மதிப்பும், தன்னம்பிக்கையும் உண்டாகும் (7:22)

என்ற அன்றைய கல்வி மந்திரியாரின் மேற்கோள் இடம்பெற்றுள்ளது.

## ஆப்ரகாம் லிங்கன் மேற்கோள்

> ஒவ்வொரு நாளும் அறிவுத் திறமையில் வளர்ந்து கொண்டு வருகிற மனிதனைப் பற்றித்தான் நான் கவலைப்படுகிறேனே தவிர, மற்றவர்களைப் பற்றி நான் கவலை கொள்வதில்லை.

## முல்லை - ஓவியம்

தொ.மு.சி. ரகுநாதன் அவர்கள் ஆசிரியப் பொறுப்பேற்ற வந்த இதழ்களின் தொடக்கத்தில் எழிலார்ந்த ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன.

ஆற்றல் வாய்ந்த ஆர். கிருஷ்ணன், என். ராமகிருட்டிணன், தாசானந்தா ஆகியோரது வண்ணப் படங்கள் கருத்துப் புலப்பாட்டுடன் காட்சியளிக்கின்றன.

> 'ஓலை கிறுக் காச்சுதே'... வரியின் மேல்
> தலைவி மடல் வரையும் காட்சி
> எதிரில்
> தலைவன் உணர்வை வெளிப்படுத்தும்
> . . . உள்ளமும் கிறுக்காச்சுதே

என்ற வரியுடன் படங்கள் இடம்பெற்றுள்ளன. பின்புறம் முல்லை என்ற தலைப்புடன் தலைவியின் அமர்ந்த தோற்றத்தை,

> ஆளைத் துரத்தி எதிர்த்தோரைக் குத்தி அதட்டிநின்று
> மீளத் திரும்பி இளையோரைப் பார்த்து மிரட்டியதே

என்ற வரிகள் ஓவியத்தின் உள்ளடக்கத்தை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன.

தமிழ்ப் படைப்பாக்கத்தில் ஓவியம் இலக்கியத்தோடு நெருங்கிய தொடர்புடையது. அது இலக்கிய உருவாக்கத்தின் உந்து சக்தியாகவும் (Inspiration), இலக்கியத்தின் பொருளாகவும் (Subject matter), இலக்கியம் ஓவியமாகவே அமையும் நிலையாகவும் (ப. 129) காணமுடியும்.

இந்நிலையில் முல்லையில் இடம்பெற்றிருக்கும் இவ்வோவியங்கள் இலக்கியத்தின் பொருளாக, பிரதிபலிப்பாக இடம்பெற்றுள்ளன. இம்முயற்சி 'இலக்கிய இதழ்' தரத்தை ஆர்வமூட்டி உயர்த்துவதாக அமைந்துள்ளது எனில் மிகையாகாது.

## மதிப்புரை

நூல் மதிப்புரைத் தலைப்பில் புதுமைப்பித்தன்,

> இலக்கியத்தைக் காணும்போது, யார் வந்து நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் அது போலி என்று சொல்லுவதற்கு நெஞ்சு அழுத்தம் கொண்டிருக்க வேண்டும் (முல்லை 1, ப. 20)

சிலர் பரங்கிக்காய் குதிரை முட்டையாகி விடுவது போல மதிப்புரை அமையக் கூடாது என்று சாடுகிறார்.

## விளம்பரங்கள்

இதழில் வணிக நோக்குடன் செய்திகளைச் சுமந்து கவர்ச்சியானவை இடம் பெறுவதை இன்று காண்கிறோம். அன்று

முத்தையா நல்ல நூல்களைத் தமிழர்களுக்கு அறிமுகம் செய்து, அவற்றின் பட்டியலை இதழின் இறுதியில் கொடுத்துள்ளார்.

கவியரசர் பாரதிதாசன் நூல்கள்-விரைவில் வருபவை

அமைதி, காதல் நினைவுகள், இருண்ட வீடு,
இரணியன், கொய்யாக்கனிகள்,
ஏழை உழவன்

முல்லைப் பதிப்பகம், ஸ்டார் பிரசுரம் போன்ற விளம்பரங்கள், வெளியீடுகள், பாரி நிலைய வெளியீடுகள் போன்றவை, T.K.S. & சகோதரர்களின் நாடகம், பி.யு. சின்னப்பா மங்கையர்க்கரசி - உன்னத திரைப்படம் 'குரு மருந்துகள்' - தமிழ் மருந்து விளம்பரங்கள் இடம்பெற்றுள்ளன.

## படைப்பாளர்களும் படைப்புகளும்

முல்லை இதழ்களில் (இதழ்கள் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 11, 12) கவிதைகள் பதினொன்று இடம்பெற்றுள்ளன.

கதைகள் பத்து, வளர்கதை ஒன்று, நாடகங்கள் மூன்று, கட்டுரைகள் முப்பத்தாறு, பேச்சு ஒன்று, மொழிபெயர்ப்புகள் இரண்டு, உரையாடல்கள் இரண்டு, மதிப்புரை ஒன்று, மடல்கள், அறிவிப்புத் துணுக்குகள், படைப்பாளர் குலமுறை இரண்டு, 48 படைப்பாளர்கள் எழுதிய படைப்புக்கள் என 79 தலைப்புக்களில் பழமையும், புதுமையும் கைகோர்த்தனவாக முல்லை இதழ்களில் வெளிவந்துள்ளன.

முல்லைப் படைப்பாளர்களாக முறையே பாவேந்தர் பாரதிதாசன், திருவிக, சி.என். அண்ணாதுரை, டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், நாவலர் சோமசுந்தர பாரதியார், கா. அப்பாத்துரையார், கி.ஆ.பெ. விசுவநாதம், எம்.எம். தண்டபாணி தேசிகர், மு.வ., நாரண துரைக்கண்ணன், கு. அழகிரிசாமி, லா.ச. ராமாமிர்தம், புதுமைப்பித்தன், தொ.மு.சி. ரகுநாதன், டாக்டர் மு. அண்ணாமலை, கோவை அய்யாமுத்து, முருகு சுப்பிரமணியன், கா.ஸ்ரீ.ஸ்ரீ., பெ. தூரன், கவிஞன் கம்பதாசன், வ.உ.சி. சுப்பிரமணியம் முதலியோர் திகழ்ந்துள்ளனர். பன்முக நோக்கங்களைக் கொண்ட இப்படைப்பாளர்களை முல்லை முத்தையா தம் இதழ்வழி ஓர்மையாக்கிப் பொதுமக்கள் நலம் நாடிப் புதுக்கருத்துக்களை வெளியிட்டுள்ளார்.

கவிதைப் படைப்புக்களாகப் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் 'மலர்ந்தது முல்லை' (முல்லை 1, ப. 3), 'தொழிலே எழில்' (முல்லை 2, பக். 3, 4), 'அவள் இல்லை' (முல்லை 3, பக். 3, 4), 'தென்றல்' (முல்லை 4, பக். 3,4), 'நிலவே' (முல்லை 6, ப. 3) ஆகிய தலைப்பிலமைந்த பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

அ. சிதம்பரநாத செட்டியாரின் 'மக்கட்கு அன்பன்' என்ற தலைப்பிலமைந்த லே ஹாண்டு என்பார் ஆங்கிலக் கவிதைத் தழுவலாக அமைந்துள்ளது (முல்லை 1, ப. 6). கோவை அய்யாமுத்துவின் 'அக்காள்' (முல்லை, பக். 29-30), கம்பதாசனின் 'உண்டு இல்லை' (முல்லை 7, ப. 12), வ.உ.சி. சுப்பிரமணியத்தின், 'முல்லை சிரிக்க முழங்கிய சங்கம்' (முல்லை 7, பக். 2-9), சொக்கு அவர்களின் 'முல்லையின் பெருமிதம்' (முல்லை 7, ப. 38) ஆகியன தனிப் பாடல்களாக இடம்பெற்றுள்ளன.

## முல்லை மொழிந்தவை

முல்லை இதழில் இடம்பெற்றுள்ள படைப்புக்கள் வழி அறியவரும் பொருண்மைகளை இவண் காண்பாம்.

## தமிழ் வளர்ச்சி

முல்லை இதழ் நோக்கத்தின் முதன்மையாகக் கூறுவது, 'தமிழாட்சி' என நிறுவனர் முத்தையா குறிப்பிட்டவாறு இதழ் உள்ளடக்கத்தில் தமிழ் வளர்ச்சி வலியுறுத்தப்பட்டுள்ளது. நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் 'தமிழ் மறுமலர்ச்சி' எனும் கட்டுரையில்,

> தமிழரின் குன்றாத ஆர்வத்தால் அவர் கலை, மொழி நின்று நிலவும், உணர்வின் பெருக்கால் ஓங்கி வளரும், உரன் தரும் ஒளியால் நறுமலரும் தீங்கனியும் நனி நல்கும், தமிழ் மறுமலர்ச்சிக்கு இம்மூன்றும் இன்றியமையாதவை. இவற்றில் ஒன்று குன்றினும் நன்றாகாது. குன்றா உள்ளமும், குறையா உணர்வும், பொன்றா உரனும் என்றும் வேண்டும். இன்னும் யாண்டும் எஞ்ஞான்றும் துறைதோறும் பொய் வளி தீண்டில் தமிழில் கலையும் புலனும் எய்த்து மடியும் (முல்லை 3, பக். 8-9)

எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும் தமிழ்மீது பொய்மை ஆர்வத்தை அகற்றி, மெய்யான வளர்ச்சியைக் கொண்டு செலுத்தும்போது பிற கலைகளை, மொழிகளைத் தமிழ்ப் பகையென்று தள்ளக்கூடாது என,

. . . . அவற்றைச் சீரணவுணவாக வேண்டுமளவு கொள்ளுதல் அறிவறமாகும். புல்லுருவி போல் அவை ஒட்டி வளருமேல், உய்யும் தமிழ்க் கலை நையுமென்பதில் ஐயமில்லை (முல்லை, பக். 3-9)

என அறிவுறுத்தியுள்ளார். தெய்வப் பெயரால் வைகிவரும் பொய்வகைகளை அறக்கழிவுடையனவாகத் தள்ள வேண்டு மென்கிறார். இவ்அரிய கூற்றில் மூட நம்பிக்கையற்ற வாழ்வும், பிற மொழிகள் மீது வெறுப்பின்றி அறிவார்ந்தனவற்றை ஏற்றுத் தமிழ்வளம் மேவுமாறு மொழிந்துள்ளதை நாம் கவனமுற வேண்டும்.

திரு.வி.க. தமிழ் வளர்ச்சிக்குத் துணை நின்ற நமசிவாய முதலியாரைத் 'தமிழ்க் கற்பகம்' என்று பாராட்டுகையில்,

ஆண்டுதோறும் தைத்திங்களிலே பொங்கல் விழாவிலே தமிழ்த் திருநாள் கொண்டாட்டத்தை முதல்முதல் தொடங்கியவர் கா.ரா. நமசிவாய முதலியாரேயாவர். பின்னாளிலே அக்கொண்டாட்டம் என்னையும் வயப்படுத்தியது. தமிழ்த் திருநாள் கொண்டாட்டத்தைக் குறித்து நாங்கள் கட்டிய கோட்டை பெரிது. எல்லாம் மாயமாய்ப் போயின (முல்லை 4, பக். 9-10).

என்று குறிப்பிட்டுள்ளார். இக்கூற்றில் பொங்கல் விழாவழித் தமிழ்த்திருநாள் நிகழ முதலில் தொடங்கியவர் கா.ரா. நமசிவாய முதலியாரென்பதை அறிய முடிகிறது. மேலும் அவ்விழாவழித் தமிழுக்கும், தமிழருக்கும் ஆற்ற வேண்டியன பல நினைந்து முடியாமையைக் கவலையுடன் திரு.வி.க. குறிப்பிடுமாற்றையும் அறிய முடிகிறது.

முருகு அவர்கள், 'தனித்தமிழ் ஏன்?' என்ற கட்டுரையில் மொழித் தூய்மையை வலியுறுத்தி, அன்று தனித்தமிழுணர்ச்சிக்கு எதிராகப் பலர் பேசியதை,

தனித்தமிழ் பட்ட தொல்லையும், அடைந்த கேலியும் மானக்கேடும் அளவு கடந்தன. தெருவெல்லாம் கேலி செய்தனர். அந்நிலையினும் இந்த எழுச்சி வெற்றியடையும் என்று கருதியவர்களும் உளர். அச்சிலரின் உள வலிமை போற்றத்தக்கதே (முல்லை 4, பக். 31-32)

என்று குறிப்பிட்டுள்ளார். கேலிக்கும், கிண்டலுக்கும் ஆட்பட்ட தனித்தமிழ்த் தொண்டர்களின் உறுதிப்பாட்டை மதிப்பனவாக இவரின் கட்டுரை அமைந்துள்ளதை அறிய முடிகிறது. மேலும் இக்கட்டுரையின் தொடர்ச்சியில், தனித்தமிழ் நடைமுறைக்கு ஏற்கவியலாது என்ற கருத்தாளர்களை மறுக்கும் நோக்கில்,

> பிறமொழிச் சொற்கள் கூட இரண்டு மூன்று ஆண்டுகள் வழக்கில் இருந்தால் புரியும்போது பழந்தமிழ்ச் சொல்லும் அவ்வாறு வழக்கில் கொண்டுவரப் பட்டால் ஏன் புரியாது? சிறிது சிறிதாக இம்முயற்சியும் நடைபெற வேண்டும் (முல்லை 6, பக். 31-32)

என்ற கருத்தினைக் குறிப்பிட்டுள்ளார். தனித்தமிழின் இன்றியமையாமையை இக்கட்டுரை தெளிவுறுத்திய வழி முல்லை இதழ் இப்பணியில் மக்கள் மன்றத்தைச் சென்றடைந்ததெனில் மிகையாகாது.

## தாய்மொழிக் கல்வி

நடுநிலைப் பள்ளிகளில் தமிழ் முதன்மொழிப் பாடமாகவும், ஆங்கிலம் இரண்டாவது மொழிப் பாடமாகவும் வந்த அரசின் அறிவிப்பைப் பாராட்டும் முருகு. சுப்பிரமணியன்,

> . . . .சென்னை அரசியலார் இட்ட உத்தரவு தமிழ் மக்களின் காதுகளில் இன்பத் தேன் பாய்ச்சும் என்பதில் ஐயமென்ன? பலர் ‘இது கனவோ, நனவோ’ என்று ஐயுறும் வகையில் இந்தப் பெரும் மாறுதல் நடைமுறைக்கு வருகிற தென்றாலும் மிகையில்லை. ஆங்கிலேயர் ஆளுகையில் தாய்மொழிக்கு முதன்மை ஏற்படும் என்று பலர் எதிர்பார்க்கக்கூட இல்லை. ‘அது எப்படி முடியும்’ என்று எதிர்ப்புச் செய்தோர் பலராவர். இந்நிலையில் தமிழகத்தை உய்விக்கும் முறையில் தமிழுக்கு முதன்மை தரக் கல்வி மந்திரியார் செய்துள்ள இவ் ஏற்பாடு நமக்கு அளவு கடந்த மகிழ்ச்சியை அளிக்கிறது (முல்லை 7, ப.5)

எனக் குறிப்பிட்டுள்ளார். தமிழுக்கு நல்லன யார் வழி வந்தாலும் பாராட்டும் இதழாக முல்லை விளங்கியதை இக்கட்டுரை வழி அறியலாம். மேலும் தமிழாசிரியர்களுக்குப் பல ஆண்டுகளாக இருந்து

வந்த கேவல நிலைமை, ஊதியக் குறைவு இச்சட்டத்தால் நீங்கின என்றும் குறிப்பிட்டுள்ளார். இப்புதிய ஏற்பாடு தமிழாசிரியர்களின் வாழ்வுக்கே மறுமலர்ச்சியைத் தருகிறது எனவும் முல்லை பாராட்டியது.

"இனி தமிழாசிரியர்கட்குத்தான் முதலிடம். இனி அவர்களும் தலைமை ஆசிரியர் ஆகலாம். ஏன்? அவர்களே தலைமை ஆசிரியர்களாக வரவேண்டும் என்ற நிலைமையும் ஏற்படும்" (முல்லை 7, ப. 6) என்று 1945இல் எழுந்த இவ்வேண்டுகோள் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் முதல்வராக இருந்தகாலை நிறைவேறி, இன்று தமிழாசிரியர்கள் தலைமையாசிரியர்களாகத் திகழ்வதைப் பார்க்க முடிகிறது. முல்லை இதழின் தமிழ், தமிழாசிரியர் உயர்வு வேண்டுகோள்கள் பல பின்னாட்களில் சட்டமாகியுள்ளதை நன்றியுடன் சுட்ட வேண்டும்.

## திறனாய்வு

1945இல் தமிழ்க் கல்வித் தேடலில் திறனாய்வு வளர்ச்சி அரும்பத் தொடங்கியது. இவ்வளர்ச்சிக்கு முல்லை இதழ் இடமளித்தது. புதுமைப்பித்தன் அவர்கள் இலக்கிய மரபு எனும் கட்டுரையில்,

> சமூகம் அடிமாண்டுபோய், போன இடம் புல் முளைத்து, தடந் தெரியாது மறைந்து விடாதிருக்க ஏற்றி வைக்கப்பட்ட சிந்தனை விளக்குகளில் ஒன்று இலக்கியம் என்பதற்காக ஒரு வார்த்தைக்கு இடங்கொடுத்து அதற்கு வணங்கி வழிபட்டு வருகிறோம். அதற்கு நாம் இட்ட பெயர் மரபு என்பது. இலக்கியத்தின் மரபு என்றால் அதில் இன்னின்ன விஷயங்களைத்தான் சொல்ல வேண்டும் என ஒரு கோட்பாடு வகுப்பதாகும் (முல்லை 3, பக். 23-24)

என மரபிற்கும், இலக்கிய மரபிற்கும் தெளிவான விளக்கத்தைக் கொடுத்துள்ளார். இலக்கியம் மனிதனுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்ற கருத்தினராய்ப் புதுமைப்பித்தன் விளங்கியதை இக்கட்டுரையில் காண முடிகிறது. இன்றைய இலக்கிய மரபு குறித்து,

> இன்று இலக்கிய மரபு மனித சகவாசத்தை அவனுடைய பலவீனங்களால் விரும்பித் தோழமை கொள்கிறது. அந்தரத்து வான தேவர்களைத் தேடித் திரிந்து கால்

> சலித்த இலக்கியம் இன்று வாழ்வின் பாதையில் மனிதனுடன் சமமாக - அவனோடவனாகப் பொருந்திச் செல்கிறது (முல்லை 3, ப. 25)

என மொழிந்துள்ளார். இவர் கருத்துப்படி இலக்கியம் மனிதனுக்குரியது என்ற தளத்தில் இலக்கிய மரபுகள் வகுக்கப்பட வேண்டுமென்பது புலனாகிறது. கா. அப்பாத்துரையார், 'இலக்கியப் பண்பு' எனும் கட்டுரை வழி,

> தமிழ் மொழியும் தமிழிலக்கியமும் பல வகையில் வெளியிலிருந்து ஏற்றப்பட்ட தாக்குதலினால் சீரழிவுற்றும் உள்ளூர உயிர்ப்பண்பு உடையதாயிருப்பதனால் மட்டுமே அழிவுக் கிடந்தராமல் உயிர்ப்பு உரங்கொண்டு போராட வல்லதாய் இருக்கிறது ...உண்மைத் தமிழ்ப் புத்திலக்கியம் ஏற்பட வேண்டின் உண்மைத் தமிழ்க் கலை நூல்களும் அறிவியல் நூல்களும் எழவேண்டுமானால், தமிழ்ப் பண்பும் மரபும் பிழையாத, உயிருடைய இலக்கிய உணர்வு எழ வேண்டும் (முல்லை 3, ப. 12)

என்று கூறியுள்ளார். தமிழ், இலக்கியப் பண்பு மிக்கதால் அழியாது நிற்கிறது. கால வளர்ச்சிக்கேற்ற புத்திலக்கிய உருவாக்கத்திலும் இப்பண்பு உயிருடையதாக அமைய எழுத்தாளர்கட்கு வேண்டுகோள் விடுத்துள்ளார் என அறிய முடிகிறது.

டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், த.பு. நவநீத கிருட்டிணன் இருவருக்கிடையிலான உரையாடல் பாங்கில் இலக்கியத்தின் நோக்கம் அறிவு புகட்டுவதா? இன்பம் நல்குவதா? என்ற விவாதத்தைத் தொடங்கினர். முடிவாக,

> இலக்கியம் இன்பம் தருவதோடு நில்லாது அறிவினையும் புகட்ட வேண்டும் என்ற முடிவிற்கு வந்தோம். அறிவும் இன்பமும் அழகுற இயைந்ததாய் இலக்கியம் இருக்க வேண்டும் என்ற முடிவினைப் பெற்றோம் (முல்லை 4, ப. 21)

என்றார் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார். இலக்கியத்தில் அழகியலும், மக்கள் வளர்ச்சிக்கான அறிவார்ந்தனவும் இடைமிடைந்து இடம்பெற வேண்டும். இவ்வரிய கருத்தை, இலக்கியத் தேடலும் படைப்பார்வமும் மிக்காருக்குரிய நோக்கமாக அமைய வேண்டும் என்பதை என்றறிய முடிகிறது.

மு. இராசகோபாலன் அவர்கள், 'யார் கவிஞர்?' என்ற வினாவை எழுப்பி, விளக்கம் கூறியுள்ளார். முதலில் எவர் கவிஞராவர் என்பதற்கு மெதியோ ஆர்னால்ட் அவர்களின் மேற்கோளை,

> கற்பனா சக்தியும், கவின்பெறு சொல்லணிகளும், இசை மலிந்த எதுகை மோனைகளும், உயர்வான உவமைகளும் கவியின் போக்கை ஆற்று நீர் ஓட்டம் போல் படிக்கப் படிக்க அழகுபடுத்திப் போனாலும் கற்போர் உள்ளத்தில் கருத்துக்கள் ஒன்றும் வேரூன்றாது போயின் பயன் என்ன? இத்தகைய கவிகளைப் பொருளற்ற பொலிவு (Style without substance) (முல்லை 6, ப. 16)

என்று குறிப்பிட்டுள்ளார்.

இக்கூற்றுப்படி ஆற்றல் வாய்ந்த கவிஞர் என்பவர் கற்போர் உள்ளத்தில் கருத்தைப் பதிய வைப்பவரே என்ற உண்மை புலனாகிறது. தொடர்ந்து தமிழ்நாட்டில் சிறந்த கவிஞராக எடுத்துக்காட்டுகையில்,

> இழுக்கொன்றுமிலாது கழுத்தை அழுத்தும் யமகம், அந்தாதி, நாகபந்தம் முதலிய கோளாறுகளை நீக்கி, உயர்ந்த கருத்துக்கள், பளிங்கு போன்ற சொற்கள், இனிய ஓசை, மதுரச் சுவை, கள்ளமற்ற உள்ளொளி, இயற்கையின் உவமைகள் நிறைந்து - உயர்ந்து மிளிர்வது நம் பாரதிதாசன் அவர்களின் தமிழ்க் கவிகள். இது என் தாய்நாடு, இவர் என் தோழர், இது என் தாய்மொழி என மனங்கொள உரைப்போர், மண்ணுயிர் யாவும் நன்னிலை வாழ்வுறப் பாடுவோர், 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும், அசைவிலா ஊக்கம் உடையான் உழை' என்னும் பொன்மொழியை உளங்கொள எடுத்துரைப்போர், உயரிய ஒழுக்கமும், வண்மையும் பொறையும், வளர்ப்போர் அன்பும், ஒற்றுமை உணர்ச்சி - உலகியல் அறிவும் பெற்றிமை வீரம், பெருமை, உரிமை ஆகியவை பிறவும் அடைந்து இவ்வுலகில் தூய இன்பப் துய்க்கச் செய்வோர் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் ஆவார்கள் (முல்லை 6, ப. 17)

என்று விரிவான விளக்கத்தைக் கூறியுள்ளார். முல்லையில் இடம்பெற்றுள்ள இக்கட்டுரைகள் தமிழிலக்கியம் கற்போர், ஆராய்வோர், புதிய இலக்கியம் படைக்க வருவோர் ஆகியோருக்கு

அரிய இலக்கியக் கல்வியை வழங்குவனவாக அமைந்துள்ளன. மேலும் முல்லையில், வி.சு. திருநாவுக்கரசுவின், 'இலக்கிய உணர்ச்சி' (முல்லை 8, பக். 8-11), ஆ. முத்து சிவன் அவர்களின், 'கவிதை வெளிவடிவம்' (முல்லை 10, பக். 31-36) ஆகியன இலக்கியத் திறனாய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படவல்ல பாடப்பகுதியாகவே இடம்பெற்றுள்ளன. கு. அழகிரிசாமியின் 'இலக்கியத்தில் ஆபாசம்' (முல்லை 11, பக். 18-27) என்னும் நெடிய கட்டுரையில்,

> சரீர மர்ம சாஸ்திரங்களை மாணவர்களுக்கு இளம்பிராயத்திலேயே தக்க முறையில் போதித்து விட்டால் ஒழுக்கக் கேடுகளைப் பெரும்பாலும் தவிர்த்து விடலாம் என்ற கருத்து நாளுக்கு நாள் உரம் பெற்று வருகிறது. இயற்கை ரகசியங்களை இலக்கியத்தில் படிப்பதன் மூலம் இளைஞர்கள் மனம் பாழ்படும் என்பது அபத்தம்; அதற்குப் பதிலாக அவர்கள் சரீர மர்ம சாஸ்திர ஞானத்தையும், சரீர மர்ம நிகழ்ச்சிகளைப் பற்றிய சுகாதாரத்தையும் நன்கு உணர்ந்து கொள்ள வழி ஏற்படுகிறது. அதனால் தாம்பத்ய வாழ்வில் காமசாஸ்திர ஞானமின்மையால் ஏற்படும் ஆபாசமான விகாரங்களையும் பூசல்களையும், தீராக் குரோதங்களையும், வீண் பயங்களையும் போக்கிவிட முடியும். நல்ல இலக்கியங்களில் இப்படிப்பட்ட விஷயங்கள் கூறப்பட்டால், கீழ்த்தரமான பாணியில் எழுதப்படும் புத்தகங்களின் மதிப்பைக் குறைத்து விட முடிகிறது என்று சரீர மர்ம சாஸ்திரத்தைத் தத்துவ ரீதியில் ஆராய்ந்துள்ள பிரபல நிபுணர் ஹேவ்லாக் எல்லிஸ் கூறுகிறார்

என்று குறிப்பிட்டுள்ளார்.

இதிலிருந்து பால் கல்வியின் அவசியத்தை இக்காலக் கல்வியுலகம் அறிய வேண்டும் என்பதையும், அவ்வுண்மைகள் இலக்கியப் படைப்பில் இடம்பெற வேண்டுமென்பதையும் தெளிவுறுத்திய கு. அழகிரிசாமியின் பார்வை பாராட்டத்தக்கதாக அமைந்துள்ளது. இப்பார்வையால்,

> தமிழில் விறலி விடு தூது, கூளப்ப நாயக்கன் காதல், வருண குலாதித்தன் மடல், அண்ணாமலை ரெட்டியார்

காவடிச் சிந்து ஆகியவற்றைத் திருத்தங்களுடன், சில கத்தரிப்புகளோடு வெளியிடல் தவறு எனவும், இவைகளை ஆபாசமானவை என்று சொல்லும் தப்பான மனோபாவத்தைக் கொன்றுவிட வேண்டியதுதான் முக்கியம் (முல்லை 11, ப. 26)

என்று தெளிவுறுத்தியுள்ளமை இலக்கியப் புரிதலில் பயன்தக்க பார்வையாக அமைவதை மறுக்கவியலாது.

## முல்லையில் முத்தமிழ்

பாவேந்தரின் பாடல், 'கவிஞர் வாழ்க்கையில்' என்ற தொடர் (முல்லை, பக். 15, 2: 19, 4: 11-12), பாவேந்தரின் துணுக்குகள் என்ற அளவில் பாவேந்தரையே மையமிட்டு முல்லை இதழ் நடந்துள்ளதை அறிய முடிகிறது.

மேலும் சங்க இலக்கியம் தொட்டு இக்கால இலக்கியம் வரை இலக்கிய விளக்க்க் கட்டுரைகள் நிரம்ப இடம்பெற்றுள்ளன. திரு.வி.க. அவர்களின், 'காதலும் வீரமும்' (முல்லை 6, பக். 6-9), மு.வ.வின் 'மகிழ்ச்சியின் எல்லை' (முல்லை 1, பக். 7-9), 'அவள் வேண்டுகோள்' (முல்லை 3, பக். 14-17) கட்டுரைகளில் சங்க அகப்பாடல் காதற் காட்சிகளை உயிரோவியமாக விளக்கியுள்ளனர்.

காப்பியம்சார் இலக்கிய விளக்கமாக 'விசு. திருநாவுக்கரசு அவர்களின் 'பூச்சூட்டடல்' (முல்லை 3, பக். 18-22) பெருங் கதையினதாகவும், நா. அறிவழகனின் 'பூக்காரி' (முல்லை 3, பக். 26-28), பாரதிதாசனின் கவிதைக் காட்சியாகவும், பாவேந்தரின் குடும்ப விளக்கினை மையமாகக் கொண்டு, மு. அண்ணாமலையின் 'பள்ளிப் பிள்ளைகள்' (முல்லை 6, பக். 23-26) ஆகியன அமைந்துள்ளன.

பொதுவான கட்டுரைகள் என்ற வரிசையில் பாமரனும் அறிந்து ஒழுக வேண்டியவற்றை முல்லை இதழ் சுமந்து வந்துள்ளது. சி.என். அண்ணாத்துரை அவர்களின், 'வாழ்க்கையின் இலட்சியம்' என்னும் கட்டுரையில், "மத மூட விளக்கங்களைச் சாடி, 'வாழ்வு' பற்றி நிர்ணயிக்காமல் வாழ்வது முறையா? அது வாழ்க்கையா" என்ற வினாவுடன் (முல்லை 2, பக். 25-29) எழுச்சியூட்டியுள்ளார்.

நல்வாழ்வு பற்றி கி.ஆ.பெ. விசுவநாதன் அவர்களின் கட்டுரை நல்வாழ்விற்கு, "வெயில், மழை, பனி, காற்று ஆகிய நான்கும் உடலுக்கு

உறுதி செய்யும் இயற்கை செல்வங்கள். இவற்றில் ஒன்றை விலக்கி மூன்றை மட்டும் ஏற்றால் உடல் நலம் கெடாமல் என்ன செய்யும்? மனிதன் செய்கின்ற மலை போன்ற இத்தவறுதலை விலங்குகளும் செய்வதில்லை, பறவைகளும் செய்வதில்லை" (முல்லை 2, பக். 30-31) என்று மொழிந்துள்ளதில் இன்றைய சுற்றுச்சூழல் பேணுகையுடன் நல்வாழ்வு இணைந்து செல்ல வேண்டும் என்ற குரல் ஒலிப்பதைப் பார்க்கலாம்.

'கலா நிலையம்' என்ற பெயரில் வந்துள்ள 'புத்தகசாலை வேண்டும்' என்ற கட்டுரையில்,

> நண்பர்களே! உங்கள் இல்லத்தில் புத்தகசாலை யொன்று வைக்கத் தொடங்குங்கள்... புத்தகம் பயிலா வீட்டில் பொலிவில்லை, பயனுமில்லை, சிறியதோ பெரியதோ ஒரு புத்தக சாலை வைத்துச் சேமியாதார் மனையின்கண் வேறென்ன இருப்பினும் அதற்கு மாண்பில்லை. பிள்ளைகள் நடமாடாத வீடு போலவே புத்தகம் நடமாடாத வீடும், கல்லும், மண்ணும், மரமும் நிறைந்திருப்பனவே யன்றிச் சொல்லும் எண்ணும் அறமும் அற்ற வெற்றிடங்களேயாகின்றன (முல்லை 4, பக். 26-30)

என்று குறிப்பிட்டுள்ளார். அரசின் கிளை நூலகங்கள் பெருகாத அக்காலத்தே நூலகத்தின் அவசியத்தை முல்லை இதழ் மக்களிடம் உணர்த்தியது என்பது பாராட்டுக்குரிய பணியாகும். மேலும், நாவலர் ச.சோ. பாரதியாரின், 'அறிவாட்சி' (முல்லை 6, பக். 4-5) எனும் கட்டுரை அறிவின் ஆளுமையை மக்கள் பெற அறிவுறுத்தியதாக அமைந்துள்ளது.

இவ்வாறு முல்லை இதழில் மக்களுக்குரிய அறிவார்ந்த இயற்றமிழ்ப் படைப்புக்கள் வெளிவந்தன. மேலும், சிறுகதைப் படைப்புக்கள் தனி நூலாக 'முல்லைக் கதைகள்' எனும் தொகுப்பாக வெளிவந்துள்ளமையான், ஈண்டு விரிப்பின் பெருகும் என்பதால் விடுத்தாம் என்க.

இசைத் தமிழ் நலம் மேவுதற்பொருட்டு முல்லை இதழில், திரு.வி.க. அவர்களின் 'இசைக்கலை' (முல்லை 1, பக். 4-5) என்னும் கட்டுரையில் இசைக் கூர்மை, இசைத் தொன்மை, கீர்த்தனைகளின் கேடு, இசை நோக்கம், தமிழ்ப் பயிற்றலில் தமிழிசையைக் கொண்டு

செல்ல வேண்டும் என்று தமிழாசிரியர்களுக்கு விடுக்கும் அறிவிப்பு ஆகியனவற்றைத் தெளிவுறுத்தியுள்ளார்.

மேலும், எம்.எம். தண்டபாணி தேசிகரின், 'இசை இன்பம்' (முல்லை 2, பக்.5-7) எனும் கட்டுரையில் இன்பமுடிவு இசை என்றும், உழைப்பில், மகளிர் விளையாட்டில் இசை, தமிழிசை நூற்கள் அறிமுகம் ஆகியன இடம்பெற்றுள்ளன.

இளையோர் இசையறிவை வளர்க்கும் வகையில் புரட்சிக் கவிஞர் இசைப்போட்டி என்னும் அறிவிப்பு (முல்லை 2, பக். 17-18) அமைந்துள்ளது. முல்லை இதழ் முத்தமிழ்ப் பரவலோடு மட்டுமின்றி, முத்தமிழ்ப் பயிற்சிக்கும் வாய்ப்பளித்து அருந்தொண்டாற்றியதை இத்தகு அறிவிப்பு வழி அறிய முடிகிறது.

நாடகத் தமிழ் வளர்ச்சியை வாசகர்கட்குக் கொடுக்கும் நோக்கில் மயிலேறு அவர்களின், 'நாடகக்கலை' (முல்லை 3, பக். 29-32) என்னும் கட்டுரை சிறப்பிடம் பெற்றுள்ளது. மேடையில் நடிப்பதற்கேற்ற வகையில் எஸ்.டி. சுந்தரம் அவர்களின், 'அழிந்த கோயில்' (முல்லை 7, பக். 13-22) அமைந்துள்ளது. மு. அரசிளங்கோவின், '1700 ஆண்டுகளுக்கு முன்' என்ற நாடகம் சிலப்பதிகாரத்தை மையமிட்டுக் கண்ணகிக்குக் கோட்டம் கண்டதைக் கருவாகக் கொண்டு தமிழ்நாட்டுப் பற்றுடன் படைக்கப்பட்டுள்ளது (முல்லை 8, பக். 35-42). சிலப்பதிகாரத்திற்கு முரணாக, இலங்கையர்கோன் என்பவரின் 'இளங்கோவடிகள் மறந்தது' (முல்லை 7, பக். 23-28) என்னும் நாடகமும் வெளிவந்துள்ளது. இவ்வாறு முத்தமிழ் சுமந்த இதழாக முல்லை வெளிவந்ததை அறியமுடிகிறது.

## முடிவுரை

இந்திய விடுதலை எழுச்சியோடு படைப்புக்கள் மக்களைச் சென்றடைந்த காலச் சூழலில், பிராமணரல்லாதார் உணர்வோட்டம் எழுந்த நிலையில், திராவிட இயக்கத்தவர் தமிழ், தமிழர் பற்றிய தன்னம்பிக்கையை மக்களிடம் ஊட்டத் தொடங்கினர். இந்நிலையில் முல்லை முத்தையா இயக்கச் சார்பின்றிப் பாவேந்தர் பாரதிதாசனை மையமாகக் கொண்டு 'முல்லை' இதழைத் தொடங்கினார்

அக்காலத்துப் பல்துறையிலும் வல்ல எழுத்தாளர் பலரையும் இடம்பெறச் செய்து, தற்சார்பின்றித் தமிழ்ச் சார்புடன் மக்கட்கு அறிவு வளம் சேர்த்த இதழாக முல்லை திகழ்ந்தது.

இதழின் பகுதியில் குறிப்பிடப் பெறுவது இதர இதழினுள் இல்லாமை, தொடர்கள் சில தொடராமை, கதையைக் கட்டுரை எனக் குறிப்பிடல் முதலிய சிற்சில குறைபாடுகள் காணப்படுகின்றன. தனியொருவர் இதழாக்கப் பணிகளில் ஈடுபடும்போது இக்குறைபாடுகள் நேரக்கூடும் என அமைதி காணலாம்.

சிறுகதை, வளர்கதை, பாடல், கட்டுரை, நாடகம், நேர்காணல், உரையாடல், மடல், களஞ்சிய வடிவில் படைப்பாளர் குலமுறை அறிமுகம், வாழ்க்கை வரலாறு, மொழிபெயர்ப்பு, உள்ளடக்கத்துடன் கூடிய ஓவியங்கள் எனப் பலவகைப் படைப்புகளைச் சுமந்து, பன்முகச் சுவையினதாகப் படிப்போருக்கு அரிய அறிவுக் கருவூலங்களைத் தந்த இதழ் என்ற சிறப்பினை 'முல்லை' பெற்றதெனலாம்.

## குறிப்புகள்

1. மா.ரா. இளங்கோவன், முற்காலத் தமிழ் இதழ்கள் ஓர் அறிமுகம், ப. 82
2. சோமலெ, தமிழ் இதழ்கள், பக். v-xlvll
3. செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு க, பரல் க
4. திருமதி வெ. கனகசுந்தரம், இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், செந்தமிழ்ச்செல்வி, ப. 257
5. நா. பார்த்தசாரதி, கடந்த கால் நூற்றாண்டுக் காலத்தில் தமிழ் இலக்கியப் பத்திரிக்கைகளின் தோற்றமும் வளர்ச்சியும், இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரை, ப. 11

# தமிழ் முரசு

## பெ.சு. மணி

மகாகவி சுப்பிரமணிய பாரதியார், தமிழ்த்தென்றல் திரு.வி.க. வழியில் மொழிப்பற்று, நாட்டுப்பற்றுடன் இந்திய தேசியத்தையும் தமிழ் தேசியத்தையும் இரு விழிகளாகக் கொண்டவர் ம.பொ.சி. இந்திய தேசிய விடுதலைப் போராட்டத்தில் காந்தியடிகளின் தலைமையை உயிரும் உயிர்ப்புமாக ஏற்று, இருபது ஆண்டுகாலம் பங்கேற்று, ஆறு முறை சிறைவாசம் ஏற்று, தமிழகத் தேசியத் தலைவர்களுள் உயர்வெய்தியவர் ம.பொ.சி. (1906-1995).

எல்லைக்காவலர், புதிய தமிழகச் சிற்பி, நாவீறு படைத்து மேடைத்தமிழ் வளர்த்தவர், அரசியல் இலக்கிய இயக்கங்களை இணைத்த முன்னோடி, தமிழரசுக் கழகத் தலைவர், பன்னூல் ஆசிரியர், தமிழின உரிமை எழுச்சியாளர், சமூக நீதியாளர், ஆன்மிகத் தென்றல் முதலான பல்வேறு பரிமாணங்களைக் கொண்ட சிலம்புச் செல்வரின் ஆளுமையில், அவர் சாதனை படைத்த ஓர் இதழாளர் என்பதும் அடங்கும்.

'கிராமணிகுலம்', 'தமிழ்முரசு', 'தமிழன் குரல்', 'செங்கோல்' எனும் இதழ்களின் ஆசிரியராக இருந்து தமிழ் இதழியல் வரலாற்றில் தமக்கென்று ஒரு சிறப்பிடத்தைப் பெற்றுள்ளார். இதழாளர் ம.பொ.சி. சுமார் ஐம்பதாண்டு காலம் இதழ்களை நடத்தியுள்ளார். இதில் 'செங்கோல்' எனும் வார இதழ் மட்டும் நாற்பத்தைந்து ஆண்டுகள் வெளிவந்தது; அவர் இதழாசிரியராக உயர்வெய்தியதற்கு அடித்தளமாக அமைந்தது. அவருடைய தொடக்ககாலப் பணி அச்சுக்கோக்கும் தொழிலாகும். 1926இல் சென்னையில் 'விநோதினி' எனும் தேசிய வார இதழிலும், பிறகு 1927இல் தேசபக்தர் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடுவின் 'தமிழ்நாடு' இதழிலும் அச்சுக்கோக்கும் தொழிலாளியாகப் பணியாற்றியது ஆகியன தம்மைப் பத்திரிகையாசிரியனாக வளர்வதற்குத் துணைபுரிந்தது என்று ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார்.[1]

'ம.பொ. சிவஞான கிராமணியார்' என்று பொதுவாழ்வில் புகுந்தவர் ம.பொ.சி. கிராமணி குல மகாஜன சங்கத்தின்

செயலாளராகவிருந்த காலத்தில் கிராமணிகுலப் பிரச்சினைகளை விவாதிப்பதற்கும் வழிகாட்டுவதற்கும் 1936 ஜூலை 20இல் சென்னையில் 'கிராமணிகுலம்' எனும் பெயரில் மாதமிருமுறை இதழைத் தொடங்கி, நிருவாக ஆசிரியரானார். இந்த இதழ் பத்து மாதங்கள் வரை வெளிவந்தது. காங்கிரஸ் இயக்கத்தில் கொண்ட தீவிர ஈடுபாட்டால் சாதி வழிப்பட்ட இயக்கத்தில் இருந்து தம்மை விடுவித்துக் கொண்டார்; கிராமணி குலச் சங்கம் பொறுப்பிலும் இருந்து விலகினார்.

"நான் எழுத்தாளனானதும் 'கிராமணிகுலம்' பத்திரிகையின் வாயிலாகத்தான்" என்று ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார்.[2]

## தமிழ் முரசு

'கிராமணிகுலம்' நிருவாக ஆசிரியர் என்பது ம.பொ.சி.யின் இதழியல் துறை வளர்ச்சியின் அரும்பு நிலையென்றால், அது மலர்ந்து மணம் வீசிய நிலையாக 'தமிழ்முரசு' அமைந்தது.

"நீங்களே தமிழ்முரசு - வேறு என்ன முரசு வேண்டும்" என்று ஒரு சமயம் ராஜாஜி அனுப்பிய வாழ்த்துச் செய்திக்கேற்ப[3] ம.பொ.சி. பொலிவுற்றதற்கு ஒரு காரணம், அவர் 'தமிழ்முரசு' இதழின் வாயிலாகப் படைத்த வரலாறும் ஆகும்.

தமிழ்முரசு பத்திரிகை என்ற பெயரால் முதன்முதலில் வராமல், 'புத்தகம்' எனும் பெயரால் வெளிவரவேண்டியதாயிற்று. ஏன் எனில் அக்காலத்தில் காகிதப் பஞ்சம் காரணமாக, புதிதாகப் பத்திரிகை தொடங்குவதற்குப் பிரிட்டிஷ் அரசு அனுமதிக்கவில்லை. 'மாதம் ஒரு புத்தகம்' எனும் பெயரில் பத்திரிகை பற்றிய அறிவிப்பும், 'நியூஸ் பிரிண்ட்' பேப்பரும் இல்லாமல் நடத்தும் ஒரு வழி பின்பற்றப்பட்டது.

முதல் புத்தகம் 1946 மே மாதம் வெளிவந்தது. இதன் அலுவலகம், 233 லிங்கி செட்டி தெருவில், சென்னை-1இல் அமைந்தது. 'அன்னை கஸ்தூரிபாய் வாலிபர் சங்கம்' அவ்விடத்தில் இயங்கியது. இந்த இல்லத்திற்குரியவர்களில் ஊ. சண்முகம், அவருடைய இளவல் ஊ. கோவிந்தன் இருவரும் தமிழ்முரசு தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உதவினார்கள். மார்க்சியம் பற்றுடைய தேசியவாதிகளான இவ்விரு சகோதரர்களுள் ஊ. சண்முகம் தமிழினக்

கழகம் தோன்றியபொழுது துணைச் செயலாளராகவிருந்தார். ஊ. கோவிந்தன் தமிழ்முரசு அலுவலக மேலாளராகவும் பத்திரிகை வெளியீட்டாளராகவும் இருந்தார்.[4]

முதல் புத்தகத்தில் பதிப்பாளராக, "ம.பொ. சிவஞான கிராமணியார்" என்று குறிப்பிடப்பெற்றது. மேலட்டைப் படம் தமிழ்முரசின் முழக்கங்களைக் குறிப்பிடுவதாக அமைந்தது. வாழ்க தமிழ்மொழி, வாழ்க தமிழ்க் கலை, ஓங்குக சமத்துவம், வாழ்க தமிழினம், தழைக்க தமிழரசு எனும் முழக்கங்கள் முரசொலியில் எழும்பின. முரசறைவோன் எளிய கோலம் பூண்டவனாகக் காட்சியளித்தார்.

புத்தகத்தின் அளவு 17.5X12 செ.மீ.; பக்கங்கள் 54; ஆண்டுக் கையொப்பம் ரூபாய் மூன்று; தனி இதழ் விலை ஆறணா. 'இரண்டாவது புத்தகத்திலிருந்து விலை நான்கணா' எனும் குறிப்பும் வெளியிடப் பெற்றது. விலை குறைப்பிற்கு ஏற்ப இரண்டாவது புத்தகத்தின் பக்கங்களும் 48 பக்கங்களாகக் குறைந்தன.

தமிழ்முரசு பதிப்பகத்தார் பெயரில் பின்வருமாறு பதிப்புரை, அறிவிப்பு, நோக்கம் எனும் எந்தத் தலைப்பும் இல்லாமல், அச்சிடப்பெற்றுள்ளது.

தமிழ்முரசு முதற் புத்தகத்தைத் தமிழ் மக்களுக்கு மகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்கிறோம். இதில் பல குறைபாடுகள் இருப்பினும் அதைப் பொறுத்து எங்களது முயற்சிக்குப் பேராதரவு தருமாறு தமிழினத்தவரைத் தாள் பணிந்து வேண்டுகிறோம்.

அடுத்த புத்தகம் இதைவிடச் சீரிய முறையில் வெளிவருமென்பது எங்கள் நம்பிக்கை. இதில் எவ்வித ஜாதி, மத, கட்சி வேற்றுமைகளுக்கும் இடமின்றித் தமிழ் வாழ, தமிழர் வாழ, தமிழகம் செழிக்கப் பாடுபடுவதே தமிழ்முரசு பதிப்பகத்தாரின் நோக்கமாகும்.

வாழ்க தமிழ் மொழி! வாழ்க தமிழினம்!

தமிழ்முரசு முதல் புத்தகம் தோன்றிய பொழுது இந்தியாவில் நிலவிய அரசியல் சூழல் நினைவு கூரத்தக்கது. பிரிட்டிஷ் காலனியாதிக்கம் மறையத்தொடங்கி சுதந்திர பாரதம் உதயமாவதற்கான அரசியல் சூழல் தீவிரமடைந்தது. சுதந்திர இந்தியாவின் அரசியல்

அமைப்பு, அதில் தமிழ்நாட்டின் உரிமைகள், கோரிக்கைகள் எவ்வாறு அமையவேண்டும் எனும் திட்டத்தை வெளியிட்டு விவாதிக்க பொறுப்புமிக்க அரசியல் சிந்தனைக்குத் தமிழ்முரசு ஆக்கம் தேடியது.

முதல் புத்தகத்தில் வெளிவந்த முதல் கட்டுரையான திரு.வி.க. வின் 'தமிழ்நாடு - சிற்றில் பேச்சு' எனும் கட்டுரையும், ம.பொ. சிவஞான கிராமணியாரின் 'தமிழகத்தில் தமிழரசு' எனும் கட்டுரையும் முற்கூறிய அரசியல் சிந்தனை ஆக்கத்தைத் தொடங்கி வைத்தன.

திரு.வி.க. கட்டுரையின் பின்வரும் கருத்துகள் குறிப்பிடத்தக்கன.

"தமிழ்நாடு மீண்டும் உயிர்பெற்றெழ என் செய்தல் வேண்டும்? 'தமிழன் முதலாவது தன்னைத தமிழன் என்று உணர்வது சிறப்பு - தமிழன் என்னும் உணர்வு, தமிழ்நாட்டு உணர்வாகப் பெருகும். தமிழன் வேறல்ல; அவனது நாடு வேறன்று. தானும் நாடும் ஒன்று என்று வீறுகொண்டு எழும் உள்ளம் தேவை. அவ்வுள்ளம் என் செய்யாது! கிளர்ச்சி செய்யும்; புரட்சி செய்யும்; புதிய தமிழகத்தைக் காணும்.

இக்காட்சிக்கு உரிய வாய்ப்பும் இப்பொழுது தோன்றியுள்ளது. அது பாரத நாட்டின் உரிமைக் காட்சியாகும். இங்கிலாந்தினின்றும் மூன்று அரசியல் அமைச்சர் இந்தியா போந்து உரிமை வழங்க முனைந்து நிற்றல் வெள்ளிடை மலை. தமிழன் முதலாவது தனக்கென்று ஓர் அரசியலைக் கோலிக் கொள்ளுதல் நலம். அவ்வரசியல் பாதை அரசியலுடன் கலப்புறல் சிறப்பு. அச்சிறப்பு, உலகுக்குரியதாய் அமைதல் மாண்பு."

திரு.வி.க. கட்டுரையின் அரசியல் முக்கியத்துவம் கருதி ம.பொ.சி. பிற்காலத்தில் எழுதிய 'புதிய தமிழகம் படைத்த வரலாறு' எனும் நூலில் கட்டுரையின் முற்கூறிய பகுதிகளுடன் மேலும் சில பகுதிகளை மேற்கோள்களாக எடுத்தாண்டுள்ளார். இது குறித்து அவர் எழுதியதாவது:

"தமிழ்த் தென்றல் திரு.வி.க. தாமே வலுவில் முன்வந்து, 'தமிழ் முரசு'க்குக் கட்டுரை எழுதிவழங்கி, தமிழகத்திற்குச் சுயாட்சி தேடும் எனது முயற்சிக்கு ஆதரவளித்தார்."[5]

முற்கூறிய திரு.வி.க. கட்டுரையில் குறிப்பிடப்பெற்ற 'புதிய தமிழகம்' எனும் அரசியல் சிந்தனை குறித்து ம.பொ.சி. இக்கட்டுரை

வெளிவந்ததற்கு ஓராண்டிற்கு முன்பே 1945 ஜூன் மாதம் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை மண்டபத்தில் நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை தலைமையில் நடைபெற்ற ஓர் இலக்கியக் கூட்டத்திலும் உரையாற்றினார் என்பது குறிப்பிடத்தக்கது.

"இலக்கியம் பேசுவதாகத் தொடங்கி எனது கற்பனையிலிருந்த புதிய தமிழகம் பற்றி விரித்துரைத்தேன்" என்று ம.பொ.சி. தமது சுயசரிதையான 'எனது போராட்டம்' எனும் நூலில் கூறியுள்ளார்.

11.11.1945இல் சென்னை மண்ணடிப் பகுதியில் லிங்கிச் செட்டித் தெரு கட்டிடத்தில், "புதிய தமிழகம்" என்ற தலைப்பிலேயே ஆறு சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார் ம.பொ.சி.[6]

ம.பொ.சி.யின் முதல் அரசியல் கட்டுரையான 'தமிழகத்தில் தமிழரசு' பதினாறு பக்கங்களில் (ப. 14 முதல் ப. 30 வரையில்) உண்மையிலேயே தமிழ்முரசாக முழங்கியது.

பண்டையத் தமிழகத்தின் அரசியல், சமூக, சமய, கலைகள், வாணிபம் முதலானவற்றின் சிறப்புகளை விதந்தோதி, பின்பு அவற்றின் வீழ்ச்சிகளையும் விளக்கி விட்டு, புதிய தமிழகத்திற்கான தோற்றத்தின் அவசியத்தை விரித்துவைத்துள்ளார், ம.பொ.சி.

1946லேயே 'புதிய தமிழகம்' எவ்வாறு அமைய வேண்டும் என்று கட்டுரையில் ம.பொ.சி. விளக்கியுள்ளது, காலத்தாலும், கருத்து வளத்தாலும் முதன்மையானது என்பது வரலாற்று உண்மையாகும். அக்காலத்தில் தமிழக அரசியல் கட்சி எதுவும் இத்தகைய ஒரு கொள்கைப் பிரகடனத்தை முன்வைக்கவில்லை என்பதும் நினைவில் நிறுத்தவேண்டியதொன்றாகும்.

தமிழ்முரசு இதழின் சாதனைகளுள் ஒன்றான தமிழரசு கொள்கைப் பிரகடனத்தின் சில செய்திகள் பின்வருவனவாகும்.

1. தமிழ் நாட்டைத் தாய் நாடாகவும், தமிழ் மொழியைத் தாய் மொழியாகவும் கொண்டு வாழும் தமிழ் நாட்டின் நிரந்தர குடிகள் அனைவரும் தமிழராகக் கொள்ளப்படுவர்.

2. தமிழர் எங்கெல்லாம் பெருவாரியாக வசிக்கிறார்களோ அந்தத் தொடர்ச்சியான பிரதேசங்கள் தமிழ் நாடாகக் கொள்ளப்படும்.

3. வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கூடித் தமிழகத்தில் சுதந்திரத் தமிழரசை அமைப்பர்.

அந்தப் புதிய தமிழரசு தனியரசுத் தத்துவத்தையே அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படும். என்றாலும் கடந்த கால சுதந்திரப் போராட்டத்தில் இந்திய தேசிய இனங்கள் அடைந்துள்ள ஒற்றுமையுணர்ச்சி, விஞ்ஞான வளர்ச்சி, சர்வதேச நிலை ஆகியவை காரணமாகத் தமிழரசு, தானே தனதிஷ்டத்தின்மீது ஏனைய இன அரசுகளடங்கிய இந்திய சமஷ்டியில் இணைய வேண்டும்.

4. அப்படி இணைவதானது பிற்காலத்தில் நன்மை பயக்காது தீமை பயப்பதாயின் பிரிந்து நிற்கும் உரிமையையும், தனது கலாச்சாரத்துடன் நெருங்கிய தொடர்புள்ள ஆந்திர, கேரள, கன்னட இன அரசுகளுடன் கூட்டுறவு கொண்டு உப சமஷ்டியை நிறுவிக் கொள்ளும் உரிமையையும் உடையதாயிருத்தப்பட வேண்டும்.

5. புதிய தமிழகத்தின் பொருளாதாரக் கொள்கை பொது உடமையேயன்றித் தனியுவுடமை அல்ல. இந்தப் பொதுவுடமை லட்சியமானது தமிழரது பண்பாட்டின்படியும் தற்கால விஞ்ஞான ரீதியாக வகுப்பட்ட முறைகளின்படியும் நிறைவேற்றப்படும்.

6. புதிய தமிழகத்தில் சகல துறைகளிலும் தமிழ்மொழியே ஆட்சி செலுத்தும். ஆயினும் தமிழ்மொழிக்குப் பாதகமற்ற முறையில் வேறு எந்த மொழியையும் யாரும் இஷ்டப்பட்டுக் கற்க உரிமையுண்டு.

7. மத விஷயங்களில் அரசாங்கம் பூரண நடுநிலைமை வகிக்கும்.

8. ஒடுக்கப்பட்ட மக்களை உயர்த்துவதிலேயே அரசாங்கம் தனது சக்தியை முதன்மையாகச் செலவழிக்கும். மனிதன் உயர்வு தாழ்வு கற்பிக்கும் பழக்கவழக்கங்கள் சட்டப்படி ஒடுக்கப்படும்

9. ஏற்றமும் இழிவும் இல்லாத சமத்துவ குணத்தை ஊட்டும் கல்வி முறையையே சர்க்கார் பின்பற்றும்.

10. சமயச் சார்பற்ற கலைகளை வளர்க்கும் பொறுப்பை அரசாங்கம் தானே மேற்கொள்ளும்.

தமிழ்முரசில் வெளிவந்த ம.பொ.சி.யின் முதல் இலக்கியக் கட்டுரையான 'வீரக் கண்ணகி' முதல் புத்தகத்திலேயே வெளிவந்தது. இக்கட்டுரையின் இறுதிப் பகுதி இலக்கியத்தை, அரசியல் நோக்கில் எவ்வாறு நோக்கியது என்பதைப் பின்வருமாறு சாற்றியது.

"மேற்சொன்னவற்றிலிருந்து சிலப்பதிகாரம் அநீதி வயப்பட்ட அரசை அழிக்கும் புரட்சி உணர்ச்சியை மக்களுக்கு, சிறப்பாகப்

பெண்களுக்கும் போதிப்பதற்காகவே எழுதப்பட்ட அரசியல் புரட்சி நூல் என்பதை எளிதில் உணரலாம். எனவே, அதில் நமக்குக் காட்சியளிப்பவர் மறக் கற்புடைய வீரக் கண்ணகியே யாவார் என்றுதான் சொல்லவேண்டும்."

தமிழறிஞர் மு. வரதராசனாரின் 'போராட்டம்' எனும் கட்டுரையும், கவிஞர் குயிலனின் 'முரசு கொட்டடா', க. தங்கவேலனின் 'தீ' எனும் கவிதைகள், ம.ரா.போ. குருசாமியின் 'முடிவல்ல தொடக்கம்' எனும் சிறுகதையும், சி. வேங்கடசாமியின் இலக்கியக் கட்டுரையும் தமிழ் முரசு முதல் புத்தகத்தின் பன்முகத் தன்மைக்கு எடுத்துக்காட்டுக்களாவன.

## இரண்டாம் புத்தகம் முதல் ஏழாவது புத்தகம் வரை

தமிழ்முரசு, மாதப் புத்தகமாக ஏழு மாதங்கள் வெளிவந்தது. 1946 ஜூன் முதல் 1946 நவம்பர் வரையில் வெளிவந்த தமிழ்முரசில் அக்காலப் புகழ்பூத்த பின்வரும் தமிழ் அறிஞர்கள் எழுதி வந்தார்கள்.

தெ.பொ.மீ., ரா.பி. சேதுப்பிள்ளை, நாமக்கல் கவிஞர், மு. வரதராசனார், இளவழகனார், மு. அருணாசலம், மு. கோவிந்தசாமி, திரு.வி.க., அன்பு கணபதி, ப. ஜீவானந்தம், பாரதிதாசன், கா. தங்கவேலன், குயிலன், தமிழ் ஒளி, கி.ஆ.பெ. விசுவநாதன், கவிஞர் குசா. கிருஷ்ணமூர்த்தி.

ம.பொ.சி.யின் அணுக்க அரசியல் தோழர்களான ம.ரா.போ. குருசாமி, கொ.மொ. ஜனார்த்தனம் ஆகியோர் எழுதிவந்தனர். ம.பொ.சி., 'ஞானம்', 'பாமரன்' என்ற புனைபெயர்களிலும் தொடர்ந்து அரசியல், இலக்கியக் கட்டுரைகளை எழுதிவந்தார்.

பதிப்பாசிரியர் பெயராக 'ம.பொ. சிவஞான கிராமணியார்' அச்சிடப்பெற்று வந்தாலும் நான்காவது புத்தகம் முதல், அவர் 'கிராமணியார்' எனும் பின்னொட்டை நீக்கிவிட்டார்.

தமிழ் முரசு இதழில் பதிப்பாசிரியர், கட்டுரையாளர் எனும் இடங்களில் சாதிப் பெயரை இணைத்துக் கொண்டதேன்? என்று ம.பொ.சி.யின் இதழியல் பணியை முதன்முதலில் விரிவாக ஆய்வுசெய்த ஆய்வாளர் மா.ரா. இளங்கோவன், ம.பொ.சி.யிடம் கேட்டபொழுது, கூறப்பட்ட பின்வரும் விளக்கம் தரப்பட்டது.

"தமிழ் முரசைத் தொடங்கியபோதும், நீங்கள் குறிப்பிடுகின்ற அந்தப் பத்தாண்டு கால இடைவெளியின் போதும், அதற்கு முன்னரும், 'கிராமணி' என்ற சாதிப் பெயரால்தான் நான் அதிகமாக அறிமுகமாகியிருந்தேன். அதனால்தான் பத்திரிகைக்கு விளம்பரம் தேடச் சாதிப் பெயரைப் போட்டேன். ஆனால் அந்தப் பெயர் நீங்கியது எப்படி தெரியுமா?

தமிழ் முரசு வாரப் பதிப்பு நடைபெற்றபோது அதன் துணையாசிரியராகத் தொண்டாற்றிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமி, தமிழ்முரசு மாதப் புத்தகமாக வெளிவந்தபோதும், அவ்வப்போது தம்மாலியன்ற அளவுக்கு இதழ்வளர்ச்சியில் துணையாயிருந்தார். அவர் ம.பொ. சிவஞான கிராமணியார் என்பதனை ம.பொ. சிவஞானம் என்று மாற்றினார். நானும் அப்படியே ஏற்றுக்கொண்டேன்."[7]

இந்தக் காலகட்டத்தில் தமிழ்முரசில் அரசியல் கட்டுரைகள் 19, இலக்கியக் கட்டுரைகள் 23, கவிதைகள் 7, சிறுகதைகள் 3 வெளிவந்தன. இவற்றுள் ம.பொ.சி.யின் அரசியல் கட்டுரைகள் 13, இலக்கியக் கட்டுரைகள் 4 ஆகும்.

சுதந்திர சோஷலிச சுயநிர்ணய புதிய தமிழகம் அமைய வேண்டும் என்பதற்கான கொள்கை விளக்கங்களைக் கொண்ட ம.பொ.சி.யின் அரசியல் கட்டுரைகள் தொடர்ந்தன.

1946 ஜூலையில் வெளிவந்த ம.பொ.சி.யின் 'போர் துவங்கி விட்டது' எனும் கட்டுரை இலங்கைத் தமிழர் பிரச்சினை தொடர்பானது என்பது குறிப்பிடத்தக்கது.

## இலங்கைத் தமிழருக்காக எழுப்பப்பெற்ற முதற்குரல்

'போர் துவங்கி விட்டது' எனும் கட்டுரை இலங்கைத் தமிழருக்காக எழுப்பப்பெற்ற முதற்குரல் என்று "புதிய தமிழகம் படைத்த வரலாறு" எனும் நூலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார், ம.பொ.சி.

"இலங்கை வாழ் தமிழருக்காக யான் பதிந்தெழுதியது - போர்க்குரல் எழுப்பியது - இற்றைக்கு முப்பத்தேழு ஆண்டுகட்கு முன்பாகும். அப்போது பாரதமும் இலங்கையும் விடுதலை பெறவில்லை. அங்கு ஈழத் தமிழர் எழுச்சி பெறாத காலம் அது.

அப்படிச் சொன்னால் போதாது; அவர்களும் சிங்களவர்களுடன் சேர்ந்துகொண்டு இந்தியத் தமிழர்களைத் தங்களுக்கு அன்னியராகக் கருதிச் செயல்பட்டு வந்த காலம் அது. இலங்கைத் தமிழர் என்ற பெயரால் யான் குறிப்பிட்டது, இன்று இந்திய வமிசாவழித் தமிழர் எனப்படுகிறார்களே, அவர்களை மட்டுமல்லாமல் அவர்களோடு ஈழத் தமிழர்களையும் சேர்த்துத்தான்."

இலங்கைத் தமிழர்கள் விடுதலைக்கு மட்டுமல்லாமல் தென் ஆப்பிரிக்கா தமிழர்கள் விடுதலைக்கும் இக்கட்டுரையில் ம.பொ.சி. குரல் கொடுத்தார்.

கட்டுரையின் இறுதியில், 'வெற்றி எட்டுத் திக்கு மெட்டக் கொட்டு முரசே' எனும் பாரதி பாடலை, ஒருசொல் மாற்றி ('வேதம்' என்பதற்குப் பதிலாக 'வீரர்') என்று பயன்படுத்தியுள்ளார். இப்பாடல் வரிகளே 1.1.1947 முதல் மாதமிருமுறையாக வெளிவந்த தமிழ் முரசில் குறிக்கோள் பிரகடனமாக அமைந்தது.

'தமிழர் எழுச்சி' (1946 ஆகஸ்டு) எனும் கட்டுரையில் தோழர் ப. ஜீவானந்தம் தமிழின எழுச்சிக்குத் தேசிய இயக்கம் காரணம் என்பதை விளக்கியுள்ளார்.

## பாரதிதாசன் கவிதைகள்

திராவிட இயக்கக் கவிஞர் பாரதிதாசனின் இரு கவிதைகள் தமிழ்முரசு நான்காம் புத்தகத்திலும் (1946 ஆகஸ்டு) ஆறாவது புத்தகத்திலும் (1946 அக்டோபர்) வெளிவந்துள்ளன. முதல் கவிதையின் தலைப்பு, 'தமிழ்த் தொண்டு'.

இக் கவிதைகளை வெளியிட்ட ம.பொ.சி., இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு 1971இல் நினைவுகூர்ந்து பின்வருமாறு எழுதினார்.

"அந்நாளில், தி.மு.க. தோன்றியிருக்கவில்லை. தி.க.வோ, விந்திய மலைக்குத் தெற்கே திராவிடத் தனி நாடு அமைய வேண்டுமென்று கோரி வந்தது. ஆரியர் - திராவிடர் என்னும் நிற அடிப்படையில் இனப் பிரிவினை பேசியது. மொழிவழியே தமிழ் பேசுவோர் மட்டுமே தனித் தேசிய இனத்தவர் என்ற தமிழரசுக் கழகத்தின் கொள்கையைத் தி.க.வின் பாசறைக் கவிஞராகத் திகழ்ந்த பாவேந்தர் தமிழ் முரசுவின் கொள்கையை ஆதரித்தார் என்பதனை இங்கு நினைவில் கொள்ளவேண்டும்."[8]

'தமிழர் அறிக்கை' எனும் கவிதை இருபத்து நான்கு வரிகளைக் கொண்டது. பாரதிதாசன் படத்துடன் வெளியிடப்பட்டது.

தமிழ்முரசுக்கு ஆதரவு தந்த வரிகள் பின்வருவன:

"தமிழ்நாட்டில் துறைதோறும் தமிழ ருக்கே
தலைமை இருந்திட வேண்டும். தமிழர் நாட்டில்
தமிழர்களாற் குழுவமைத்துச், சட்ட திட்டம்
தமக்கென முறையினிலே அமைக்கச் சொல்லி
அமைத்தபடி நிறைவேற்றி வைத்தல் வேண்டும்!
ஆள்வோர்க்குத் தமிழர்விடும் அறிக்கை இஃது!
தமிழ்முரசு கொட்டினோம் இணங்கா விட்டால்
சடசடவெனச் சரிந்துபடும் ஆட்சிக் கோட்டை!"

மேலே ம.பொ.சி., பாரதிதாசனின் ஆதரவைக் குறிப்பிட்டிருந்தாலும், 'திராவிடப் பாசறைக் கவிஞர்' பின்வருமாறு தொடர்ந்து பாடியுள்ளார்.

"திராவிடரின் பகைவர்க்கே அடிமை யானோர்
திராவிடர்க்கு நலம்புரிதல் குதிரைக் கொம்பே!
அரியதமிழ் நாட்டுரிமை வேண்டும்; அன்றே
அன்புள்ள தெலுங்கர்க்கும் கேர ளர்க்கும்
உரிமையினை நாட்டுவதும் தமிழர் வேலை!
ஒன்றுபட்டோம்; சாதியில்லை; சமய மில்லை;
குரல்கேட்க ஆள்வோரின் காதே! ஒப்பம்
கூறிடுவாயே இன்றேல் புரட்சி தோன்றும்"

மேலே, கன்னடர் நாட்டுரிமை குறிப்பிடப்படவில்லை. மொழிவழி நாட்டுரிமை, திராவிட நாட்டுரிமை இடையிலாகக் கோட்பாடு தெளிவுபடுத்தப் படவில்லை.

## மாதமிருமுறை

தமிழ்முரசு, மாதமிருமுறை இதழாக 1947 ஜனவரி 1 முதல் வெளிவரத் தொடங்கியது. 1948 மார்ச்சு மாதம் 1ஆம் தேதி இதழோடு நின்றது.

"புத்தக உலகம் என்னும் திரையை விலக்கிக் கொண்டு பத்திரிகை உலகத்தில் பவனிவருகின்றது" என்று குறிப்பிடப்பட்டது. இதற்கேற்ப தலையங்கம், துணைத்தலையங்கம், மதிப்புரை, செய்திகள்,

ஆசிரியருக்குக் கடிதம், அட்டைப்பட விளக்கம் முதலானவை இடம் பெற்றன.

'முரசொலி' எனும் தலைப்பில் அமைந்த தலையங்கத்தின் பின்வரும் பகுதி ம.பொ.சி.யின் 'எல்லைக் காவலர்' எனும் புதிய பரிமாணத்தை அறிமுகப்படுத்தியது.

"தமிழ் நிலம் - தமிழினத்தவரின் தாயகம் - பிற இனத்தவரால் முற்றுகையிடப்பட்டுள்ளது. தெற்கே திருவிதாங்கூரில்; வடக்கே திருப்பதியும் சென்னை நகர்மீதும் ஆதிக்கவாதிகளின் ஆசை அரும்பெடுத்திருக்கிறது. ஆகவே, தமிழ் நிலத்தின்மீது தமிழ் நாட்டின் வளத்தின்மீது, தமிழ் மொழியின்மீது போடப்பட்டுள்ள முற்றுகையை முறியடிக்க வேண்டுமென்று 'முரசு' கிளம்புகிறது."

1946 நவம்பர் 21இல் தமிழரசுக் கழகத்தைக் கட்சி அரசியல் பிரசாரத்திற்காக அல்லாமல் தமிழினத்தை ஒன்றுபடுத்த, பொது அரசியல் அமைப்பாகத் தமது தலைமையில் தோற்றுவித்தார் ம.பொ.சி. இதனால் 'தமிழ்முரசு', தமிழரசுக் கழகத்தின் முரசாகவும் ஒலிக்கத் தொடங்கியது. தமிழரசுக் கழகக் கொள்கைகளைப் பரப்புவதற்காக, தமிழ்முரசை மாதமிருமுறையாக மாற்றியதாக ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார். மாதமிருமுறை தமிழ்முரசின் வெளியீட்டு விழா லிங்கிச்செட்டித் தெருவில் உள்ள திருமணச் சத்திரத்தில் தமிழ்ப் பெரியார் திரு.வி.க. தலைமையில் நடைபெற்றது. முதல் இதழை வெளியிட்டு காங்கிரஸ் சார்பில் கு. காமராசர் வாழ்த்தினார் என்பது குறிப்பிடத்தக்கது. துணையாசிரியர் ம.ரா.போ. குருசாமி வரவேற்புரை நிகழ்த்தினார். டி.கே.சி., வேங்கடாச்சாரி, சு. செங்கல்வராயன், தெ.பொ.மீ. ஆகியோர் பேசினர்.

'புரட்சி முரசு' எனும் தலைப்பில் பின்வருமாறு திரு.வி.க.வின் வாழ்த்துச் செய்தி வெளியிடப்பட்டது.

"தமிழ்முரசு இதுகாறும் நூல் வடிவில் வெளிவந்தது. இனி அது செய்தித்தாள் வடிவில் வெளிவரும் என்று கேட்டு மகிழ்வெய்துகிறேன். தமிழ் முரசு சில திங்களில் அரும்பெரும் வினைகளை ஆற்றியது. அது தமிழ் வளத்துக்கும், தமிழ் நாட்டின் விடுதலைக்கும், குடியாட்சிக்கும், பண்டை எல்லைக்கும் போராட்டமும் புரட்சியும் நிகழ்த்தியது. இந்நிகழ்ச்சி 'முரசி'ல் தொடர்ந்து ஆக்கமுறும் என்று நம்புகிறேன். முரசு முழக்கம் நாடு முழுவதும் பெருகுவதாக! தமிழ்முரசின் ஆசிரியர் திரு. ம.பொ. சிவஞான கிராமணியார்

போராட்டத்துக்கும் - புரட்சிக்கும் உரியர் என்பதை யான் அனுபவத்தில் அறிவேன். அவர்தம் முயற்சி ஓங்கி வளர்வதாக. 'தமிழ் முரசு' வாழ்க! புரட்சி வெல்க!!"

கவிஞர் தேசிகவிநாயகம் பிள்ளையும், 'ரஸிகமணி' டி.கே.சி.யும் வாழ்த்தியுள்ளனர்.

தமிழ்முரசு மாதமிருமுறை இதழில் தமிழறிஞர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள் மேன்மேலும் பலர் எழுதினார்கள். இவர்களுள் கவியோகி சுத்தானந்த பாரதி, கவிஞர் 'குலோத்துங்கன்' வா.செ. குழந்தைசாமி, டி.கே.சி., கா.ம. காளிதாசன், அன்புகணபதி, அ. முத்துசிவன், ரா.பி. சேதுப்பிள்ளை, ச. ரகு நாயகன், ஜமதக்னி, மு. கோவிந்தசாமி, துரை அரங்கனார், சி. வேங்கடசாமி, ந. சஞ்சீவி, தி.க. சிவசங்கரன், பெ. தூரன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

ம.ரா.போ. குருசாமி, மு. வரதராசன், அ.ச. ஞானசம்பந்தம் அநேகமாக ஒவ்வொரு இதழிலும் எழுதி வந்தனர்.

ஒவ்வொரு இதழிலும் விதவிதமான அட்டைப் படம் வெளிவந்தது. தமிழ்முரசு அலுவலகம், ம.பொ.சி.யின் இருசப்ப கிராமணித் தெரு, திருவல்லிக்கேணியிலுள்ள வீட்டிற்கு மூன்றாம் இதழிலிருந்து மாற்றப்பட்டது.

48 பக்கங்களுடன் இடைவெளி இல்லாமல் இருபத்தொன்பது இதழ்கள் 1948 மார்ச் மாதம் முதல் நாள்வரை வெளிவந்தன.

### மதிப்புரை

மாதமிருமுறை தமிழ்முரசில் 'மதிப்புரை' பகுதியைப் பற்றி மிகச் சுருக்கமாக இவ் இதழ்கள் குறித்த ஆய்வை அற்புதமாகச் செய்துள்ள மா.ரா. இளங்கோவன் எழுதியதாவது:

"ஒன்பது இதழ்களில் மதிப்புரைப் பகுதி இல்லை. நாட்டின் போக்கிற்கேற்ப அவசியமான செய்திகளைக் கொண்ட கட்டுரைகள் மிகுந்திருந்தமையாலே அந்தந்த காலங்களில் இப்பகுதி தவிர்க்கப் பட்டிருக்கவேண்டும். இம்மதிப்புரைப் பகுதியில் நூல்கள் மட்டுமல்லாமல் அவ்வப்போது வெளிவந்த இதழ்களும் திறனாய்வு செய்யப்பட்டுள்ளன. இத்தொகுப்பில் 94 நூல்கள், மாத இதழ்கள் 34, மாதம் இருமுறை இதழ்கள் 15, வார இதழ்கள் 10 ஆக 59 இதழ்கள் திறனாய்வு செய்யப்பட்டுள்ளன."[9] மதிப்புரையாளர் பெயர் எங்கும்

குறிப்பிடப்படவில்லை. எனவே, அவர் ஆசிரியர் என்பது கொள்ளப்படுகின்றது.

சிலப்பதிகாரத்தை, காலத்தேவைக்கேற்ப அரசியல் கண்ணோட்டத்திலும் பயன்படுத்த வேண்டும் எனும் கொள்கை கொண்டவர் ம.பொ.சி. இந்தக் கண்ணோட்டத்தில் "சிலப்பதிகாரம் (புகார்க்காண்டம்)" எனும் நூல் மதிப்புரை செய்யப்பட்டுள்ளது.

இந்நூலின் உரையாசிரியர், சர். ஆர்.கே. சண்முகம் செட்டியார்; மதிப்புரையின் முக்கியப் பகுதி வருமாறு:

"சிறந்த அரசியல் அறிஞரான சர். ஆர்.கே. சண்முகம் அவர்கள் அரசியல் கண்ணோக்குடன் சிலப்பதிகாரத்தை ஆராய்ந்து இன்றைய அரசியல் உலகில் சிலப்பதிகாரத்தின் பயனை விளக்காதது ஏமாற்றத்தை அளிக்கின்றது. இனி வெளிவரவிருக்கும் இரண்டு காண்டங்களிலும் இக்குறை பூர்த்தி செய்யப்படுமென்று நம்புகின்றோம்."[10]

மதிப்புரைகள் யாவும் மிகச் சுருங்கிய அளவிலேயே எழுதப்பட்டன. 'திறனாய்வு' எனும் பொருள் விளக்கத்திற்கேற்ப எழுத வாய்ப்பில்லை என்பதும் கவனத்திற்குரியது. ஒரே ஒரு பக்கத்தில் சில புத்தங்களை மதிப்புரை செய்யவேண்டியிருந்தது.

### சிறுகதைகள்

நவீன தமிழ்ப் படைப்பிலக்கியங்களில் சிறுகதைகளுக்குரிய முக்கியத்துவத்தை உணர்ந்த வகையால் தமிழ்முரசு பெரும்பாலான இதழ்களில் சிறுகதைகளை வெளியிட்டுவந்தது. வல்லிக்கண்ணன், ம.ரா.போ. குருசாமி, எழில் (மு.வ.), ந. சஞ்சீவி, ஆர். சீனிவாசன் ஆகியோர் சிறுகதைகளுடன் 'பாமரன்' எனும் புனைப்பெயரில் ம.பொ.சி. எழுதிய இரு சிறுகதைகளும் வெளிவந்துள்ளன.

அரசியல், இலக்கியக் கட்டுரைகள் எழுதுவதற்கே நேரத்தையும், சிந்தனையையும் ஒதுக்கிய ம.பொ.சி. சிறுகதைகள் எழுத முன்வந்ததையும் ஒரு பரிசோதனை முயற்சியாகவே கொள்ளவேண்டும்.

அவர் எழுதிய 'வைகுந்தம் திறந்தது' எனும் சிறுகதை 'பாமரன்' எனும் புனைபெயரில் 15.1.1947 இதழில் பக்கங்கள் 42 முதல் 47 வரையில் வெளியிடப்பெற்றது.

'வைகுந்தம் திறந்தது' ஓர் எள்ளல் கதை. அரசியல்வாதிகள் போலித்தனமான விளம்பரங்களை வெளிச்சம் போட்டுக் காட்டி,

அவை பிரச்சனைகளைத் தீர்ப்பதில்லை என்பதை அம்பலப்படுத்துவது, இந்தச் சிறுகதை.

திருவரங்கம் வடமலை ஐயங்கார், அவருடைய பங்களாத் தோட்டத்துக் காவல்காரன் செங்கன், அவனுடைய மனைவி சிலம்பாயி ஆகியோர் கதைமாந்தர்கள். திருவரங்கக் கோயில் அரிஜன மக்கள் ஆலயப் பிரவேசம் நிகழ்த்தக்கோரி வடமலை ஐயங்கார் ஆரவாரமாகப் பேசினார். இப்பேச்சைக் கேட்டவர்களுள் செங்கனும் ஒருவர். இவர் வீடு திரும்பியதும், சமீபத்தில் பெய்த மழையால் கூரைக்குடிசை சிதறிப்போயிருந்தது. இடிபாடுகளில் சிக்கிய சிலம்பாயிக்கு சிகிச்சையளிக்க பங்களா டாக்டரை அனுப்பி உதவுமாறு எஜமானனிடம் வேண்டினார் செங்கன். "சீ, நாயே! எல்லாம் பொழுது விடிந்தால் முனிசிபல் ஆஸ்பத்திரி திறக்கும் போ" என்று செங்கனை இரவு நேரத்தில் விரட்டியடித்தார் எஜமானன். பங்களாவின் மதிற்புறத்துக் கதவின் சாவி, மாளிகை எஜமான் கையில் இருந்தது. வெளியில் செல்லமுடியாத செங்கன் குடிசைக்குள் திரும்பினான். சிலம்பாயி பிணமாகக் கிடந்தாள்.

'பாமரன்' சிறுகதையை எள்ளலும், நையாண்டியும் கலைநயமுடன் வெளிப்பட பின்வருமாறு முடித்தார்.

"ஆம். விடிந்தால் திருவரங்கப் பெருமானின் திருக்கோயில் கபாடம் திறக்கும், அவருடைய திருவருள் கிடைக்கும் என்றெல்லாம் எண்ணியிருந்த சிலம்பாயிக்குத் திருவரங்கமல்ல, வைகுந்தமே திறந்துவிட்டது! செங்கன், தனது இரண்டு வயது மகள் செல்லத்தை மடியில் வைத்துச் சிலம்பாயின் பிரேதத்தின் பக்கத்திலிருந்து பொழுது விடியும் நேரத்தை எதிர்பார்த்திருந்தான்.

அதிகாலை ஐந்து மணி, வடமலை ஐயங்கார் பங்களாவின் வாயிற்புறத்தே இருந்து எழுந்த ஜயகோஷம் செங்கனின் காதைத் துளைக்கிறது.

"தீண்டாமை ஒழிக, ஹரிஜன உத்தாயகர் வடமலை ஐயங்கார் வாழ்க! என்ற கோஷம்."

இரண்டாவது சிறுகதையான 'செல்வத்தைத் தேய்க்கும் படை' 15.4.1947 ஆம் இதழில் பக்கங்கள் 21 முதல் 27 வரையில் வெளிவந்தது.

கோயமுத்தூர் ஆலைத் தொழிலாளியின் வறுமையைச் சித்தரித்துக் காட்டியுள்ளது, இக்கதை. அந்தத் தொழிலாளி உயிர்விடும்பொழுது, தமது மனைவியிடம், "மரகதம்! இதோ உன்

மகன் சூரப்பன், அஞ்சாதே! பரம்பரை பரம்பரையாக ஏழைப் பாட்டாளி மக்களைப் பலிகொண்டுவரும் முதலாளித்துவ மிருகத்தை வேட்டையாடும் படை விரைவில் கிளம்பப்போகிறது" என்று கூறுகின்றான். அவன் மகன் கந்தசாமியின் மறைவிற்குப் பல ஆண்டுகளுக்குப்பிறகு புரட்சிக்காரனாக மாறுகின்றான். இவனை, செல்வத்தைத் தேய்க்கும் படையாகக் குறிப்பிட்டுள்ளார், பாமரன்.

தமிழ்முரசில் தொடர்கதையும் வெளிவர ம.பொ.சி. விரும்பினார். 15.1.1948இல் தமிழ்முரசில் மு.வ.வின் 'அந்த நாள்' எனும் தொடர்கதையை வெளியிட்டுப் பின்வரும் குறிப்பையும் எழுதினார், ம.பொ.சி.

"முரசில் தொடர்கதை இல்லை என்ற குறை இத்தனை நாளும் வாசகர்களுக்கு இருந்து வந்ததை நாமறிவோம். அந்தக் குறையைப் போக்கப் பேராசிரியர் மு. வரதராசனார் முன் வந்துள்ளார். 'அந்த நாள்' என்ற தலைப்புடன் இந்த இதழிலிருந்து கதை தொடர்ந்து வெளியாகும். பேராசிரியர் மு.வ. அவர்களின் எழுதும் திறன் தமிழகம் நன்கறிந்ததே. 'கி.பி. 2000', 'கள்ளோ? காவியமோ?' என்ற அவரது நூல்கள் புதிய தமிழகப் புரட்சிக்கு வித்துக்கள் போன்றவை. அத்தகைய பேரறிஞர் 'முரசு'க்குத் தொடர்கதை எழுத முன்வந்ததற்கு நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்."

இவ்வாறே, மு.வ.வின் 'அன்னைக்கு' எனும் கடிதத் தொடர் நீண்ட இடைவெளிக்குப் பிறகு பிப்ரவரி 15, 1948ஆம் ஆண்டு இதழில் வெளிவரத் தொடங்கிய பொழுது பின் வரும் குறிப்பை ம.பொ.சி. எழுதினார்.

"பேராசிரியர் மு. வரதராசனார் அவர்கள் 'அன்னைக்கு' என்ற தலைப்பில் தமிழ் முரசில் முன்பு தொடர்ந்து நான்கு கடிதங்கள் எழுதி வந்தார். பின்னர் அவகாசமின்மையால் எழுதாது விட்டுவிட்டார். 'முரசு' வாசகர்களின் வற்புறுத்தலுக்கிணங்க மீண்டும் தொடர்ந்து எழுதிவர இசைந்துள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவருக்கும் நன்றி."

## ம.பொ.சி.யின் அரசியல் கட்டுரைகள்

ம.பொ.சி.யின் அரசியல் கட்டுரைகள், தலையங்கங்கள் மொழிவழி மாநிலப் பிரிவு இந்திய ஐக்கியத்திற்கு எதிரானதாக அல்லாமல் சுயநிர்ணய சோஷலிசத் தமிழ்க்குடியரசை, வடக்கெல்லை,

தெற்கெல்லைகளை முறையே ஆந்திரர்களிடமிருந்தும், மலையாளி களிடமிருந்தும் மீட்டெடுத்து, சென்னையைப் புதிய தமிழகத்தின் தலைநகராக ஆக்கவேண்டும் எனும் கோரிக்கைகளைத் தொடர்ந்து வலியுறுத்தி வந்தன.

தேசிய இந்திய அரசியலில் சோஷலிசமும், குடியரசு தத்துவமும் இடம் பெறாத காலத்தில் ம.பொ.சி., 'சோஷலிசக்குடியரசு' கோட்பாட்டை வலியுறுத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது. காங்கிரஸ் இயக்கத்தில் இனவுணர்ச்சி போற்றப்படாததையும் ம.பொ.சி. தமிழ்முரசு இதழ்களில் கண்டித்து வந்தார். "இனவுணர்ச்சியற்ற இந்திய தேசியம் என்பது தற்கொலைக்கு ஒப்பான காரியம்" என்று 15.4.1947இல் எழுதிய 'போர் முரசு கொட்டுவோம்' எனும் தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளார்.

'தமிழ்முரசு' மாதமிருமுறையில், திராவிட இயக்கத்தினருடனான கருத்துமோதல்கள் புதிய போக்குகளாகப் பகிரங்கமாக விவாதிக்கப் பட்டன.

மொழிவழி மாநில அமைப்புக் கோரிக்கை, தமிழகத்தின் வடக்கெல்லை - தெற்கெல்லை மீட்புப் போராட்டம் முதலானவற்றில் தமிழரசு இயக்கம், திராவிடர் இயக்கத்தினிடையே கருத்து மோதல்கள் நிகழ்ந்தன. இவை தமிழ்முரசு தலையங்கங்களில் எதிரொலித்தன.

15.4.1947இல் தமிழ்முரசில் 'போர் முரசு கொட்டுவோம்' எனும் தலையங்கம் எழுதவேண்டியதின் காரணத்தைக் குறித்து ம.பொ.சி. எழுதியதாவது.

'தமிழினத்தை ஒற்றுமைப்படுத்த வேண்டுமென்ற குறிக்கோளுடன் நான் தி.க. வட்டாரத்தின் தாக்குதலைச் சில மாதங்கள் வரை சகித்துக் கொண்டுவந்தேன். தமிழ்முரசில் பதில் எழுதி விவாதம் நடத்துவதையும் தவிர்த்து வந்தேன். ஆனால், ஒரு கட்டத்திலே நான் பொறுமையிழந்து தி.க.வினருக்குப் பதிலளித்து தமிழ்முரசு 15.4.1947 இதழிலே 'போர் முரசு கொட்டுவோம்' என்னும் தலைப்பிட்டுத் தலையங்கம் எழுதினேன்."[11]

தமிழ்முரசு - திராவிட இயக்கத்தினிடையே நடந்த கருத்துப் போரிலே - தமிழ்முரசில் எழுதப் பெற்ற பிறிதொரு தலையங்கம் 'திரை விலக்கப்பட்டது' என்பதாகும். 1.5.1947இல் எழுதப்பெற்ற இந்தத் தலையங்கம் எழுதப்பட்டதற்குரிய சூழலை ம.பொ.சி. பின்வருமாறு கூறியுள்ளார்:

"பெரியாரும், 'விடுதலை'யும் என்னைத் தாக்கியதோடு நிற்காமல், என்பாலும் தமிழரசு இயக்கத்தின்பாலும் நல்லெண்ணங் காட்டிவந்த பாவத்திற்காக அண்ணாவையும் மறைமுகமாகத் தாக்கினராதலால், அண்ணா அவர்களும், பெரியார் இழந்துவிட்ட நம்பிக்கையைப் பெறும்வகையிலே திடீரென மனமாற்றம் அடைந்து, 'தமிழ்முரசி'ல் யான் எழுதியதற்குக் கடுமையான தாக்குதல் ரீதியில் பதில் எழுதினார். அதற்குப் பதிலளித்து 'தமிழ்முரசு' இதழில் 1.5.1947 இல் 'திரை விலக்கப்பட்டது' என்னுந் தலைப்பிட்டு, தலையங்கம் எழுதினேன்."

'திராவிட நாடு' இதழும், தமிழ்முரசு இதழும் 1947 ஆகஸ்டு 15ஆம் நாளைக் கொண்டாட வேண்டும் என்பதில் நட்புறவு பூண்டன.

1947 ஆகஸ்டு 15ஆம் நாளைப் பெரியார் சுதந்திர நாளாகக் கொண்டாட மறுத்து, 'துக்கநாள்' என்று அறிவித்தார். தமிழ்முரசில் 1.8.1947இல் 'ஆகஸ்டு-15' எனும் தலையங்கத்தைப் பெரியார் விடுத்த அறிக்கைக்கு மறுப்பாக எழுதினார். திராவிடர் கழகப் பொதுச் செயலாளராகவிருந்த அண்ணா, 'துக்கநாள்' அறிக்கையை ஏற்க இயலாமல், ஆகஸ்டு பதினைந்தை 'இன்பத் திருநாள்' என்று தலைப்பிட்டு 'திராவிட நாட்'டில் எழுதினார். அண்ணா, இவ்வாறு எழுதியதின் பின்புலத்தைப் பற்றி ம.பொ.சி., 'முரசு' பாதையில் 'திராவிட நாடு' எனும் தலைப்பில் அவருடைய சுயசரிதையான 'என் போராட்ட'த்தில் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

"சுதந்திர நாள் பற்றித் தமிழ்முரசில் நான் என்ன எழுதப் போகிறேன் என்பதை முன் கூட்டியே தெரிந்து கொள்வதற்காகத் தமது நெருங்கிய நண்பரான திரு. சி.வி.எம். அண்ணாமலை அவர்களை என்னிடம் அனுப்பினார், அண்ணா. அந்த நேரத்தில் 'ஆகஸ்டு 15' என்னும் தலைப்பிட்டுத் தமிழ்முரசு 1.8.1947 இதழிற்கு நான் எழுதியிருந்த தலையங்கம் அச்சுக் கோக்க அனுப்பப்பட்டிருந்தது. அச்சகத்திலிருந்து அதன் 'புரூப்' ஒன்றை வாங்கி திரு. சிவிஎம். அண்ணாமலை அவர்களிடம் கொடுத்தனுப்பினேன்.

தமிழ்முரசுத் தலையங்கத்தை ஆதரித்து விரிவான விமர்சனம் எழுதுவது போன்று, 'இன்பத் திருநாள்' என்னும் தலைப்பிட்டு, சுதந்திர நாளைத் தி.க.வினரும் கொண்டாடவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தித் தமது, 'திராவிட நாடு' இதழில் நீண்ட தலையங்க மொன்றை அண்ணா எழுதினார்."

## மார்க்சியத்தின் மீதும் பரிவு

தமிழ் முரசு மாதமிருமுறை இதழ்களில் மார்க்சியத்தைப் பரிவுடன் விளக்கியும் சில கட்டுரைகள் வெளிவந்தன. 'பாமரனுக்கும் மார்க்சியம்' எனும் தலைப்பில் ஜமதக்னி எழுதியுள்ளார். ம.பொ.சி.யும் 'வர்க்கப்புரட்சி' (15-3-1947) எனும் கட்டுரை எழுதியுள்ளார். தமிழரசுக் கழகச் செயலாளர் கொ.மோ. ஜனார்த்தனம், 'தமிழரசும் மார்க்ஸியமும்' எனும் கட்டுரையை (15-7-1947) எழுதினார்.

## புதிய பார்வையில் இலக்கியக் கட்டுரைகள்

'புதிய பார்வை'யில் தமிழ் இலக்கியத்தை ஆய்வு செய்வதும் தமிழ்முரசின் இலக்கியக் கொள்கையாக இருந்தது. 15.2.1947 தமிழ்முரசில் வெளிவந்த 'நந்தன்-விவசாயி' எனும் ம.பொ.சி.யின் கட்டுரை 'புதிய பார்வை' எனும் குறிப்புடன் வெளியிடப்பெற்றது. நந்தன் பற்றிய 'புதிய பார்வை'யை ம.பொ.சி. பின்வருமாறு விளக்கினார்:

"நந்தன் கதையை அறியாதவர்கள் இல்லை. ஆனால், புராண முறைப்படி அறிந்திருக்கிறோமே ஒழிய, பொருளாதார முறைப்படி அறிந்தோமில்லை. நந்தனார் சரித்திரக் கீர்த்தனையைப் பொருளாதாரக் கண்கொண்டு நுணுகி ஆராய்வோருக்குத் தீண்டாமை தோன்றியதன் காரணமும் அதன் விளைவாகப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே நிலப்பிரபுக்களின் காலின்கீழ் வீரத் தமிழர்களான தீண்டாத மக்கள் எப்படி நசுக்கப்பட்டார்கள் என்பதும் நன்கு விளங்கும்."

சிலப்பதிகாரத்தைத் தேசியக் காப்பியம் என்று பிரகடனப்படுத்தி, பிரிட்டிஷ் ஏகாதிபத்ய எதிர்ப்புப் போரில் புதிய பார்வையுடன் மபொசி. எழுதிய கட்டுரைகள் விரிவான ஆய்விற்குரியன.

1948 மார்ச்சு முதல் தேதி இதழோடு தமிழ்முரசு மாதமிருமுறை, நின்று போனதற்குத் தமது 'நிருவாகத் திறமையின்மை'யும் ஒரு காரணம் என்று பிற்காலத்தில் (1976) ம.பொ.சி. குறிப்பிட்டுள்ளார்.

மாதமிருமுறை வெளியீடு தடைபட்டுப் போனாலும், மூன்று மாதங்களுக்குப் பிறகு தமிழ் முரசு வார இதழாக வெளிவரத் தொடங்கியது.

## தமிழ் முரசு - வார இதழ்

### (1-8-1948 முதல் 14-1-1949 வரை)

வார இதழ் ஞாயிற்றுக் கிழமைதோறும் வெளிவந்தது. கலைஞர் டி.கே. சண்முகமும், தொழிலதிபர் ஜி.டி. நாயுடுவும் வார இதழிற்கு நிதியுதவி அளித்தனர். கவிஞர் கு.மா. பாலசுப்பிரமணியம் துணையாசிரியராகப் பணியாற்றினார். வார இதழில் புகுத்தப்பட்ட மாறுதல்களில் 'கார்ட்டூன்கள்' வெளியிடப்பட்டதொன்றாகும். இவைகூட ஐந்து இதழ்களில் மட்டுமே வெளிவந்தன.

1-8-1948 முதல் வெளிவரத்தொடங்கிய முதல் இதழ் பதினாறு பக்கங்களுடன், நான்கு பக்கங்கள் 'இந்தி எதிர்ப்புமலர்' எனும் பெயரில் இணைக்கப்பட்டிருந்தன. இந்த மலரில் பெரியார், திரு.வி.க. சொற்பொழிவுகளுடன் ம.பொ.சி.யின் கட்டுரையும் வெளிவந்தன.

முதல் இதழில் ஒவ்வொரு தமிழனும் எடுத்துக்கொள்ள வேண்டிய உறுதிமொழிகள் பற்றி "**தமிழன் உறுதிப்பாடு**" எனும் தலைப்பில் பின்வருமாறு வெளியிடப்பட்டது.

| | | |
|---|---|---|
| எனது தாய்மொழி | - | தமிழ் |
| எனது தாய்நாடு | - | தமிழ்நாடு |
| எனது இனப்பெயர் | - | தமிழன் |
| எனது கோரிக்கை | - | தமிழரசு |
| எனது கொள்கை | - | சோஷியலிசம் |
| எனது குடும்பம் | - | இந்திய சமுதாயம் |
| எனது சமரச நெறி | - | சர்வதேச சகோதரத்துவம் |

திருவள்ளுவராண்டு குறிக்கும் முறையினை வார இதழ் பின்பற்றியது என்பதும் குறிப்பிடத்தக்கது.

நாடகங்களும், சிறுகதைகளும் வெளியிடப்பட்டன. ம.பொ.சி.யின் 'வேறுவழி' எனும் சிறுகதை 'தமிழன்' எனும் புனைபெயரில் 3-10-1948இல் வெளிவந்துள்ளது. இந்தக் காலகட்டத்தில் நான்கு நாடகங்கள், பத்தொன்பது சிறுகதைகள், இருபத்திரண்டு கவிதைகள் வெளியிடப்பெற்றன. கு. ராஜவேலு, ம.ரா.போ. குருசாமி, கு.மா.பா, எம். லட்சுமிபதி, ச. திருநாவுக்கரசு, ராஜம் நரசிம்மன், ஜெகசிற்பியன், நா. ரங்கன், டி.ர.ர. ராசு, வழுதி, வை. சுப்பிரமணியன் முதலானோர் சிறுகதைகளும் வெளிவந்தன.

"பத்திரிகைத் தொழில் பொதுச்சேவையா? சொந்தத் தொழிலா?" எனும் தலைப்பில் திருச்சி வானொலியில் ம.பொ.சி., சி.என். அண்ணாதுரை ஆகியோரிடையே நடைபெற்ற விவாதம் முழுமையாக இரு இதழ்களில் (12-9-1948, 19-9-1948) வெளியிடப்பட்டது.

## தேசியகீதம் பற்றி

12.9.1948இல் எழுதப்பெற்ற 'தமிழில் தேசிய கீதம்' எனும் தலையங்கம் புதுமையாகவும், புரட்சிகரமானதாகவும் அமைந்தது. இதன் ஒரு பகுதி வருமாறு:

"இந்தியாவின் தேசீய கீதமாக்கப்பட்டுள்ள 'ஜனகணமன' பாடலை எல்லா இனங்களையும் சம நோக்குடன் குறிப்பிடும் வகையில் திருத்தியமைக்கவேண்டும். இல்லையென்றால், வேறொரு புதிய பாடலை இயற்றும்படி செய்யவேண்டும். இது முடியாத காரியமல்ல. ஆந்திரர், அசாமியர் ஆகியோரின் எதிர்ப்புக்குப் பின்னரேனும் மேலிடத்தார் இதைச் செய்வார்கள் என்று நம்புகிறோம்.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் எந்தப் பாடல் தேசிய கீதமாவதானாலும், அதைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடச் செய்ய வேண்டும். அப்போதுதான், பாட்டின் கருத்தை, மக்கள் புரிந்து கொள்ளமுடியும். புரிந்துகொள்ளமுடியாத ஒரு மொழியில் தேசிய கீதத்தை உருப்போட்டு ஒப்புவிக்கச் செய்வதால், யாருக்கும் தேசபக்தி வந்துவிடாது. சென்னை அரசாங்கத்தார் இதைப் பற்றிச் சிந்தித்து ஆவன செய்வார்கள் என்று நம்புகிறோம்."

வீரபாண்டியக் கட்டபொம்மன் புகழ் பரப்பும் இயக்கத்தை இக்காலத்தில் வீறுபெற நடத்தத் தொடங்கிய ம.பொ.சி., அம்மாவீரனைப் பற்றிப் பத்துக் கட்டுரைகள் எழுதினார் என்பது குறிப்பிடத்தக்கது. பிற கட்டுரைகள் இருபதாகும்.

தலையங்கப் பக்கத்தின் தொடக்கப் பகுதியில் தமிழரசுக் கழகக் கொடியான வில், புலி, கயல் சின்னங்கள் பொறிக்கப்பட்ட படம் இடம் பெற்றிருந்தது.

வார இதழில் 'வண்டு' எனும் புதிய புனைபெயரில் ம.பொ.சி. எழுதத் தொடங்கினார்.

ஐந்து மாதங்கள், இரு வாரங்களுக்குப் பிறகு தமிழரசு வார இதழ் நிறுத்தப்பட்டது. காரணம் போதிய பணபலமின்மையே.

பதினைந்து மாதங்களுக்குப்பிறகு 1950 முதல் 'தமிழ்முரசு' மாத இதழாக வெளிவரத் தொடங்கியது.

## தமிழ்முரசு – மாத இதழ்

### (1950 மே முதல் 1951 செப்டம்பர் வரை)

இக்கால கட்டம் பதினேழு மாதங்களாயினும் வெளிவந்த இதழ்களின் எண்ணிக்கை பன்னிரண்டு ஆகும். இதழின் அளவு முன்பு போலல்லாமல் சற்று மாறியது. அகலம் 13 செ.மீ.; உயரம் 20 செ.மீ. இதழில் பக்கங்கள் 40, 48, 56, 64 என்று அந்தந்த மாத நிலைகளுக்கு ஏற்ப அமைந்தன.

இந்தக் காலகட்டத் தொகுப்பில் ம.பொ.சி.யின் அரசியல் - இலக்கியக் கட்டுரைகளின் எண்ணிக்கை முப்பதாகும். இவற்றுள் இலக்கியக் கட்டுரைகளின் எண்ணிக்கை பன்னிரண்டாகும். 'தேசியவாதி' எனும் புதிய புனைபெயரிலும் எழுதினார்.

தமிழரசுக் கழக முன்னணி வீரர்களான தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், கவி. கா.மு. ஷெரீப், கவிஞர் கு. சா.கி., கவிஞர் சி. வேங்கடசாமி, கவிதை நேசன் மற்றும் பல தமிழறிஞர்கள் எழுதிவந்தனர். பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் 'உபநிஷதங்களும் மொத்த நூல்களும்' எனும் கட்டுரை 1951 ஜனவரி இதழில் வெளிவந்தது.

முன்பு 'அன்னைக்கு' எனும் கடிதத்தொடர் வெளிவந்தது போன்று டாக்டர் மு. வரதராசனாரின் 'தம்பிக்கு' என்னும் கடிதத் தொடர் 1950 மே மாத இதழில் ஆரம்பமாகியது. இத்துடன், 'தமிழை மறந்து தமிழ் நாட்டில் வாழலாமா?', 'உயர்நிலைப்பள்ளியில் மொழிக் கல்வி', 'வாழ வழிகாட்டும் இலக்கியம்' எனும் கட்டுரைகளையும் தமிழ்ப் பேராசிரியர் மு.வ. எழுதியுள்ளார்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் 'பிரிவதுதான் வாழ்விற்கு வழி' எனும் கட்டுரையை எழுதியுள்ளார். தெற்கெல்லை மீட்புப் போராட்டத்தில் ம.பொ.சி.க்கு ஆதரவு தெரிவித்துள்ளார் கவிமணி. தமிழ்முரசில் கவிமணியின் படத்தைப் போட்டு கௌரவப் படுத்தியுள்ளார், ம.பொ.சி.

1950 செப்டம்பர், 1951 செப்டம்பர் மாதங்களில் தமிழ்முரசை, பாரதி மலர்களாக வெளியிட்டுள்ளார், ம.பொ.சி.

## இலங்கைத் தமிழர் பிரச்சினை

தமிழ்முரசு இலங்கைத் தமிழர் பிரச்சினையில், தமிழர் கோரிக்கைகளுக்கு ஆதரவு காட்டிவந்தது. திருகோணமலையில் நடைபெற்ற இலங்கைத் தமிழரசுக் கட்சி மாநாட்டில் தலைவர் செல்வநாயகம் நிகழ்த்திய உரையின் சுருக்கத்தை - 'இலங்கையிலும் தமிழரசுப் போர்' எனும் தலைப்பில் செல்வநாயகத்தின் பெயருடன் 1951இல் தமிழ்முரசில் வெளியிட்டார், ம.பொ.சி. இந்தக் கட்டுரைக்காகப் பின்வரும் ஆசிரியர் குறிப்பையும் எழுதினார், ம.பொ.சி.

"திரு. செல்வநாயகம், இலங்கையில் ஒரு தலைசிறந்த வழக்கறிஞர். இலங்கைத் தமிழரசுக் கட்சியின் தலைவரும் அவரே. இலங்கையில் சிங்கள மாகாணமென்றும், தமிழ் மாகாணமென்றும் இரண்டாகப் பிரித்து இரண்டு மாகாணங்களிலும் சுயாட்சியுள்ள தனித்தனி அரசுகளை அமைத்த அவ்வரசுகள் கொண்ட இலங்கை சமஷ்டி ஒன்றை நிறுவ வேண்டுமென்பது இலங்கை தமிழரசுக் கட்சியின் குறிக்கோள். 'முரசு' வாசகர்கள் இலங்கை தமிழரசுக் கட்சியின் கொள்கையைப் புரிந்து கொள்வதற்காக அண்மையில் திருகோணமலையில் நடைபெற்ற இலங்கைத் தமிழரசுக் கட்சி மாநாட்டில் திரு. செல்வநாயகம் நிகழ்த்திய தலைமையுரையின் சுருக்கத்தைத் தருகிறோம்."

## திரிபுவாதத்திற்கு எதிர்ப்பு

பண்டையத் தமிழ் இலக்கியங்கள் சிலவற்றின்மீது வெறுப்புணர்வுடன் திரிபுவாதங்களைப் பிரசாரம் செய்தவர்களைக் கண்டிப்பதும் தமிழ் முரசின் இலக்கியக் கொள்கைகளுள் ஒன்றாக இருந்தது.

சிலப்பதிகார இயக்கத்தைப் பரப்பி வந்த ம.பொ.சி., அரசியல் மாநாட்டுடன் சிலப்பதிகார மாநாட்டையும் இணைத்து நடத்தி வந்தார். அந்தச் செய்திகள் எல்லாம் தமிழ் முரசில் வெளிவந்தவை.

30.3.1951இல் காங்கேயத்தில் திராவிடக் கழகத் தலைவர் பெரியார் சிலப்பதிகாரத்தைத் தாக்கிப் பேசினார். "சிலப்பதிகாரமென்பது ஆரியத்தைப் பரப்புகிற ஒரு நூலென்பது அல்லாமல் வேறு என்ன? ஆரம்பம் முதல் இறுதி வரையில் ஒரே

ஆரியந்தானே காட்சியளிக்கிறது?" என்பது பெரியாரின் தாக்குதல்களில் ஒன்றாகும்.

பெரியாரின் தாக்குதல் பிரசாரத்திற்குப் பதிலளித்து ம.பொ.சி., 1951 ஏப்ரல் மாத தமிழ்முரசு இதழில் "கண்ணகியைப் பழிக்கும் கருஞ்சட்டைத் தலைவர்" எனும் தலையங்கத்தை எழுதினார். இதில் ஒரு பகுதி, வருமாறு:

"கொடுங்கோலனை எதிர்த்துப் போராடும் கண்ணகியின் புரட்சி, 'ஆரியம்'; அறியாது செய்த பிழைக்கு, தனது உயிரையே அர்ப்பணிக்கும் நெடுஞ்செழியனின் தியாகம் - 'ஆரியம்!'; அரசர் உயிர் நீத்த அக்கணமே தானும் உயிர்நீத்த கோப்பெருந்தேவியின் அன்புநிறைந்த காதல், 'ஆரியம்!'; வாய்கொழுத்துப் பேசிய வடவேந்தருடன் போரிட்டு தமிழரின் ஆற்றலைப் புலப்படுத்திய செங்குட்டுவன் செயல், 'ஆரியம்!'; மூன்றாகப் பிளவு பட்டுக் கிடந்த தமிழகத்தை ஒன்றாகப் பிணைத்துக் காட்டிய இளங்கோவின் சித்திரம், 'ஆரியம்!'; விலைமகளுக்குப் பிறந்தும் ஒருவனையே காதலித்து வாழ்ந்து அவன் இறந்த பிறகு வாழ்விற்குரிய இன்பங்கள் அனைத்தையும் இழந்துவிட்ட மாதவியின் மனப்பண்பு, 'ஆரியம்!'; பார்ப்பனத் தோழியின் கருத்துவழி காமன் கோயில் என்று வழி பட மறுக்கும் கண்ணகியின் செயல், 'ஆரியம்!'.

ம.பொ.சி.யின் தலையங்க இலக்கியங்களை முதன் முதலில் ஆழமாக ஆய்ந்த திறனாய்வாளர் மா.ரா. இளங்கோவன் இந்தத் தலையங்கத்தைப் பின்வருமாறு நயந்து வியந்து பாராட்டியுள்ளார்.

"மிகச் சிறந்த இலக்கிய நயம் கொண்ட தலையங்கம் இது. இது போன்ற தலையங்கங்களை இதழுலகம் காண்பது அரிது."[12]

பிற்காலத்தில் ம.பொ.சி.க்கு நடந்த பாராட்டு விழாவில் முதலமைச்சராகவிருந்த அறிஞர் அண்ணா பேசியபொழுது, சிலப்பதிகாரக் காப்பியத்தை நாம் போற்ற வேண்டும் என்று பெரியாரிடம் வேண்டுகோள் விடுத்ததாகக் குறிப்பிட்டார்.

தமிழ்முரசு மாத இதழின் இறுதியில் "வாசகர்களுக்கு" என்று தலைப்பிட்டு எழுதியதில், தமிழ்முரசு மாத இதழ் நிறுத்தப்பட்டு, வார இதழாக நவம்பர் முதல் வெளிவர முயற்சி நடைபெறுகின்றது என்று அறிவிக்கப்பட்டிருந்தாலும், அந்த முயற்சி கைகூடவில்லை.

தமிழ்முரசு தமிழக அரசியல் வரலாற்றில் ஒரு யுக சந்தியில் தோன்றியது. இந்திய தேசியமும் தமிழ்த் தேசியமும் ஒன்றுக்கொன்று ஆதாரமாக இருக்க வேண்டியதற்கான கொள்கை விளக்கங்களையும், செல் நெறிகளையும் ஓயாது பிரசாரம் செய்தது தமிழ்முரசு. தமிழ் இதழியல் வரலாற்றில் தமது வரலாற்றுப் பாத்திரத்தை நிறுவிக்காட்டியது, தமிழ்முரசு.

1951 ஜனவரி இதழில் 'முரசு வாசகர்களுக்கு' எனும் தலைப்பில் பின்வருமாறு கூறப்பெற்ற செய்திகளைத் தமிழ்முரசின் சாதனைகளாகக் கொள்ளலாம்.

'முரசு' தோன்றும் முன்பு தமிழகத்தின் வடக்கு - தெற்கு எல்லைகளில் வாழும் தமிழர்களிடையே இன உணர்ச்சி இன்றியிருந்தது. இன்றோ எல்லைப் பகுதிகளில் உணர்ச்சி வளர்ந்து வருவது மட்டுமல்ல; தாய்த் தமிழகத்தோடு இணைந்தே தீரவேண்டு மென்ற எழுச்சியும் கிளர்ச்சியும் வலுத்து வருகின்றது.

'மதராஸ் மனதே' என்று ஆந்திரர் கூக்குரலிட்ட பொழுது, அவர்களது மண்டையிலடிப்பது போன்று கணத்துக்குக்கணம் பதில்கொடுத்துவந்த பத்திரிகை 'முரசு' ஒன்றேயாகும். "தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்" என்று முரசு செய்த முழக்கம் நம்மை எதிர்ப்பவர்களின் இதயங்களிலும் கூட பசுமரத்தாணி போல் பதிந்து கிடப்பதாகும்.

'தமிழர்' என்போர் வெறும் ஜனக்கும்பல் அல்ல; மொழியாலும் பண்பாலும், பழக்கவழக்கங்களாலும் மூன்று கோடி இதயங்களும் ஒன்றுபட்ட ஒரு தேசிய இனமாகும் என்பதை அறிவுக்கும் பொருந்தும் வகையில் நிரூபித்திருக்கிறது 'முரசு'. அது மட்டுமல்ல, அரசுரிமை பெற்று விட்ட தேசியவாதிகள் ஒன்றுபட்ட இந்தியா என்ற கோஷத்திலே, தமிழ் இனத்தின் உரிமைகளைப் பற்றிப் பேசுகின்றார்களில்லை. ஆங்கிலேயன் ஆதிக்கத்திற்கு அடிவருடிய கூட்டத்தார் வடவரின் தொடர்பிலிருந்து தென்னாட்டைத் துண்டாடக் கனவு காண்கின்றனர். இந்நிலையில், சர்வதேச ரீதியில் - இந்திய தேசிய ஒற்றுமைக்குக் கேடற்ற வகையில் 'தமிழருக்கும் சுயநிர்ணயம்' என்று கோஷமிட்டது, தமிழ்முரசு ஒன்றேயாகும்.

காவியத் துறையிலும் ஒரு புரட்சிகரமான கண்ணோட்டத்துடன் பணி புரிந்திருக்கிறது 'முரசு'. வள்ளுவர் குறளையும், இளங்கோவின்

சிலம்பையும் அரசியல் கண்ணோட்டத்தோடு மக்களுக்கு அறிமுகப்படுத்தும் பணியைத் துவக்கி வைத்தது - 'முரசே' யாகும்.

தமிழ்முரசுவைத் தொடர்ந்து ம.பொ.சி. 'தமிழன் குரல்', 'செங்கோல்' இதழ்கள் வாயிலாக இதழியல் துறையில் மேலும் பல சாதனைகளைப் புரிந்தார்.

## குறிப்புகள்

1. "பத்திரிகைத் தொழிலில் யான் பெற்ற அனுபவங்கள்", ம.பொ.சி. கட்டுரை, 'செங்கோல்' வெள்ளிவிழா மலர், 1976
2. மேலது
3. 12-1-1947இல் ம.பொ.சி.க்கு அனுப்பிய 'தமிழர் திருநாள்' விழாவிற்கான வாழ்த்துச்செய்தி; எனது போராட்டம், ம.பொ.சி.யின் சுயசரிதை, ப. 390
4. எழுத்தாளர் அமரர் குயிலன் இக்கட்டுரையாளருக்கு 11-12-1999இல் எழுதிய கடிதம்
5. புதிய தமிழகம் படைத்த வரலாறு, ம.பொ. சிவஞானம், பூங்கொடி பதிப்பகம், 1986, ப. 32
6. எனது போராட்டம், ம.பொ. சிவஞானம், இன்ப நிலையம், 1974, ப. 350
7. சிலம்புச் செல்வரின் தலையங்க இலக்கியம், மா.ரா. இளங்கோவன், சேகர் பதிப்பகம், 1980, பக். 61-62
8. "பாவேந்தரும் தமிழரசுக் கழகமும்", 'செங்கோல்' தமிழரசுக் கழக வெள்ளி விழா மலர், 1971, ப. 39
9. மா.ரா. இளங்கோவனின் முற்கூறிய நூல், பக். 96-97
10. தமிழ்முரசு, 1-1-1947 - மதிப்புரை, ப. 48
11. புதிய தமிழகம் படைத்த வரலாறு, ப. 108
12. மா.ரா. இளங்கோவனின் முற்கூறிய நூல், ப. 205

# மஞ்சரி

## பு. பிரகாசம்

தமிழ்ப் பத்திரிகை உலகில் தரமான ஒரு பத்திரிகை 51ஆவது ஆண்டாகத் தொடர்ந்து வெற்றிகரமாக வெளிவருவது என்பது வெறும் சாதனை அன்று; இமாலய சாதனை என்பதில் மாற்றுக்கருத்தே கிடையாது எனலாம். விலையேற்றம், கவர்ச்சிப் படங்கள், போட்டிகள், பரிசுகள் போன்ற தடைகளை எல்லாம் 'மஞ்சரி' கடந்து ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருப்பது மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் தரும் செய்தியாகும். இம் மஞ்சரியின் தோற்றம், ஆசிரியர்குழு மற்றும் பல சுவையான செய்திகளை மஞ்சரியின் பொன்விழா ஆண்டில் அதன் ஆசிரியர் குழுவில் பணியாற்றிய ஆர். வேங்கட்ராமன் அவர்கள் ஒரு கட்டுரை வடிவில் அழகுறத் தொகுத்துள்ளார். மஞ்சரி பொன்விழா தீபாவளி மலரில் இக்கட்டுரை வெளியாகி உள்ளது. அக்கட்டுரையின் சாராம்சமே மஞ்சரியின் தோற்ற வரலாறு அகும்.

கலைமகள் பத்திரிகையைச் சிறப்போடு நடத்தி வந்த அதன் உரிமையாளர் திரு. என். ராமரத்தினம் அவர்களுக்கு வெகுநாட்களாகவே 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' மாதிரி தமிழில் ஒரு பத்திரிகை வெளியிட வேண்டும் என்ற வேட்கை இருந்தது. கதம்ப மலர்ச்சரம் மணம் வீசுவது போலத் தமிழில் வெளியாகும் டைஜஸ்ட் இலக்கிய மணம் கமழ, தமிழ் வாசர்களை மகிழ்விக்க வேண்டும் என்று தம் கனவு இதழ் பற்றித் தம் குடும்பத்தாரிடம் அடிக்கடி கூறுவார்.

அமெரிக்க நாட்டிலிருந்து வெளி வரும் 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' பல நாடுகள், பல மொழிகளில் வெளியாகும் பத்திரிகைகளில் உள்ள அரிய செய்திகளைக் கலை-இலக்கியப் படைப்புக்களை, மனித நேய மாண்பு நிகழ்ச்சிகளைத் தேடித் தேர்ந்தெடுத்துச் சுவை குன்றாமல் சுருக்கி உலக மொழியாகத் திகழும் ஆங்கிலத்தில் தருகிறது. அப்படி ஒரு பத்திரிகை தமிழில் வரவேண்டும் என்பதே திரு. ராமரத்தினம் அவர்களின் கனவாகும். அந்தக் கனவுப் பத்திரிகைக்கு அழகான பொருள் பொதிந்த பெயரும் சூட்டியிருந்தார்கள். மஞ்சரி என்ற பெயரை அவருடைய சிறிய தாயாரும், பிரபல எழுத்தாளருமான திருமதி கி. சாவித்திரி அம்மாள் அவர்கள் தேர்ந்தெடுத்துத் தந்தார்கள்.

படிப்பதற்கு முன்பேயே பெயர் சூட்டிக் கொண்ட மஞ்சரி வெளிவரத் தயாரானது. மஞ்சரியின் ஆசிரியர் யார்? என்ற ஆராய்ச்சி தொடங்கியது. கலைமகளில் துணை ஆசிரியராக இருந்த கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவர்கள் திரு. தி.ஜ. ரங்கநாதன் பெயரைச் சிபாரிசு செய்தார். தி.ஜ.ர. பழுத்த அநுபவமிக்க இலக்கியவாதி. பிரபல பதிப்பாசிரியர் வை. கோவிந்தன் நடத்தி வந்த, 'சக்தி' பத்திரிகையின் ஆசிரியராக இருந்து வந்தவர். மொழிபெயர்ப்பதில் முன் மாதிரியாக எடுத்துக் காட்டக்கூடிய தகுதி படைத்தவர். பாரதியாரின் புகழ் பரப்பிய அமரர் வ.ரா. அவர்களின் சீடர். அதிகம் படிக்காதவர்; ஆனால் ஆழ்ந்த புலமை உடையவர். அற்புதமான எளிய இனிய நடையின் கரடுமுரடான அரிய பெரிய ஆங்கிலக் கட்டுரைகள், கதைகளை எல்லாம் எளிதாக மொழிபெயர்க்கும் ஆற்றல் இவருக்குண்டு. இவரே மஞ்சரியின் ஆசிரியராக நியமிக்கப்பட்டார்.

மஞ்சரியின் முதல் இதழில் அதன் நிர்வாக ஆசிரியரான அமரர் தி.ஐ. ரங்கநாதன் தமிழக மக்களுக்குத் தமது இதழைப் பின்வருமாறு அறிமுகப்படுத்துகின்றார்:

"உங்கள் சுவை எதுவானாலும் அதற்கு ஏற்ற பொருள் மஞ்சரியில் இருக்கிறது. உங்களுக்கு என்ன பிடிக்கும்? பெண்களைப் பற்றிப் படிக்க வேண்டுமா? 9ஆம் பக்கத்தைப் பாருங்கள். ஒவ்வொரு தாயும் தந்தையும் 28, 29ஆம் பக்கங்களைப் படிக்க விரும்புவீர்கள். இந்தியாவுக்கு உயிரான' காந்தி மகானின் வாழ்வையும் வாக்கையும் 40,41ஆம் பக்கங்களில் காண்பீர்கள். சிறுகதையில் ருசியா? 74ஆவது பக்கத்தைப் பிரியுங்கள். நீங்களும் எழுத விரும்பலாமே. அப்படியானால் 65ஆவது பக்கத்தைத் திருப்புங்கள்...." என்று அவர் தமது இதழை அறிமுகப்படுத்தியுள்ள நயம் சிறப்பிற்குரியதாகும். தி.ஐ. ரங்கநாதன் முதல் இதழின் மூன்றாம் அட்டையில் 'எங்கள் நோக்கம்' என்ற தலைப்பில் மஞ்சரியின் குறிக்கோளை வெளியிட்டுள்ளார்.

"மஞ்சரி புதியது. புதுமையான முயற்சி. ஆனால் அது ஒரு புதிய பத்திரிகை அல்ல. பல பத்திரிகையின் திரட்டு ஆகும். சகல பத்திரிகைகளிலும் வெளிவரும் மிகச் சிறந்த விஷயங்களைச் சாரமாகத் திரட்டிக் கொடுத்தால் அதைப் படிக்க யாரும் விரும்புவது இயல்பு. தமிழ்நாட்டில் அந்தப் பொறுப்பை மஞ்சரி ஏற்றுக் கொண்டுள்ளது. மொத்தத்தில் சுருக்கமான அறிவுக்களஞ்சியமாக மஞ்சரி விளங்க வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். இதற்கு

உதவியாகத் தங்கள் பத்திரிகை விஷயங்களைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதித்த 60க்கும் மேற்பட்ட பத்திரிகாசிரியர்களுக்கு எங்கள் நன்றி" என்று அவர் தமது அறிவிப்பில் நிறுவனரின் லட்சியங்களை நேர்த்தியாக வெளிப்படுத்தியுள்ளார். மஞ்சரியின் தனிச் சிறப்பு இதில் காணப்படும் கட்டுரைகள் மொழிபெயர்ப்பு என்று உணர இயலாத அளவுக்குத் தமிழ் மணம் வீசும் வண்ணம் எழுதப்பட்டன. முதல் இதழின் இரண்டாம் அட்டைப் படத்தில் ஆசிரியர் குழுவினர் பெயர் இடம் பெற்றுள்ளது. ஆசிரியர் குழுவினர் பாஷை ஆசிரியர்கள் என்று குறிப்பிடப் பட்டுள்ளனர்.

ஆசிரியர், பதிப்பாளர் : என் ராமரத்தினம்

நிர்வாக ஆசிரியர் : தி.ஜ. ரங்கநாதன்

பாஷை ஆசிரியர்கள்

| | |
|---|---|
| கி.வா. ஜகந்நாதன் | கா.ஸ்ரீ.ஸ்ரீ. |
| த.நா. குமாரஸ்வாமி | குமுதினி |
| வி.எச். சுப்பிரமணிய சாஸ்திரி | கி. சாவித்திரி அம்மாள் |
| சீதா தேவி | ஆர்.வி. |
| கௌரி அம்மாள் | டி.வி. பரமேஸ்வரன் |

மோ.ஸ்ரீ. செல்வம்

ஓவியர்கள்

ஸாமி, சங்கர், மகான்

பாஷை ஆசிரியர்கள் கதை, கட்டுரைகளைத் தேர்ந்தெடுக்கவும் மொழிபெயர்த்துக் கொடுக்கவும் நியமிக்கப்பட்டனர்.

கலைமகள் ஆசிரியர் கி.வா.ஜ. அவர்கள் தமிழில் வெளிவரும் தரமான விஷயங்களை மஞ்சரிக்காக அளித்துதவ முன்வந்தார். திருமதி. கி. சாவித்திரி அம்மாள் மஞ்சரிக்குப் பெயர் சூட்டியவர். தாகூர் நாவலை மொழிபெயர்த்தவர். கா.ஸ்ரீ.ஸ்ரீ. ஆசிரியர் குழுவில் முக்கியமானவர். சமஸ்கிருதம், இந்தி, மராட்டி, குஜராத்தி மொழிகளை நன்கு கற்றவர். மராட்டி எழுத்தாளர் வி.ஸ. காண்டேகரின் நாவல்களைத் தமிழில் மொழிபெயர்த்துத் தந்தவர். அதற்காகக்

காண்டேகரின் பாராட்டைப் பெற்றவர். சென்னைச் சமஸ்கிருதக் கல்லூரியின் முதல்வராக இருந்தவர். வி.எச். சுப்பிரமணிய சாஸ்திரி அவர்கள் மலையாளப் பத்திரிகைகளில் வெளியாகும் சிறந்த செய்திகளை மஞ்சரியில் மொழிபெயர்த்து எழுதிவந்தார். அடுத்தவர் மோ.ஸ்ரீ. செல்வம். அவர் உ.வே.சா. அவர்களின் மாணவர். இவரது மனைவி திருமதி சீதா தேவி தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளில் புலமைபெற்றவர். அந்தந்த மொழிகளில் சிறந்தவற்றை மொழிபெயர்த்துத் தந்தவர். திருமதி குமுதினி, திருமதி கௌரி அம்மாள் ஆகியோரும் பாஷை ஆசிரியர்குழுவில் இருந்தனர். குமுதினி சமஸ்கிருதத்திலும், ஆங்கிலத்திலும் புலமை மிக்கவர். கௌரி அம்மாள் குடும்பப் பாங்கான நாவல்கள் எழுதுவதில் கைதேர்ந்தவர். கௌரி அம்மாள் காஞ்சி சங்கராச்சாரியாரிடமும், ரமண மகரிஷியிடமும் உரையாடிப் பெற்ற வினா-விடைகளை மஞ்சரி வாசர்களுக்கு வழங்கியவர்.

மஞ்சரிக்காக ஏராளமான வெளிநாட்டு உள்நாட்டுப் பத்திரிகைகளை வாங்கிக் குவித்து அதன் உரிமையாளர் திரு. ராமரத்தினம் வலுவான களம் அமைத்துக் கொடுத்திருந்தார். ஒவ்வோர் இதழிலும் கலை, இலக்கியம், வரலாறு, சமூகம், மருத்துவம், மனதத்துவம், விஞ்ஞானம், பொருளாதாரம் போன்ற பல தரப்பட்ட கட்டுரைகளுடன் உலகப் புகழ் பெற்ற நாவல்கள், சுய சரிதங்கள், புத்தகச் சுருக்கங்கள் ஆகியவை அடங்கியிருக்கும். நாடு விடுதலை பெற்ற 1947ஆம் ஆண்டில் நவம்பர் மாதம் முதல் இதழ் வெளியானது. முதல் இதழ் வெளியானதும் பத்திரிகை உலகமே மஞ்சரியின் உள்ளடக்கத்தையும், அமைப்பையும், சிறப்பையும் வரவேற்றுப் பாராட்டியது. பத்திரிகையின் பெருமையையும் அருமையையும் அறிஞர்கள் பாராட்டினர். நாட்டுமக்கள் அனைவரும் வாங்கக் கூடியவாறு அதன்விலை ஆறணாவாக நிர்ணயிக்கப்பட்டது.

51 ஆண்டுகளைக் கடந்தபின்னரும் தன் ஆரம்பகாலக் கொள்கையிலிருந்து அடிபிறழாமல் தனது வெற்றிப் பயணத்தைத் தொடரும் மஞ்சரி இதழின் பொறுப்பாளர்கள் பாராட்டுக்குரியவர்கள். கலைமகளும், மஞ்சரியும் ஒரு கொடியில் பூத்த இரு மலர்கள்; இலக்கிய வானில் ஒளிவிடும் இரு துருவ நட்சத்திரங்கள். விடுதலைக்குப் பின் தமிழ் இதழியலில் தலைநிமிர்க்கும் இரண்டு கலைக்கோபுரங்கள். இக்கட்டுரை மஞ்சரியின் முதலாண்டு இதழ்களை ஆராயும் நோக்கில் அமைந்துள்ளது.

1947ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தொடங்கப்பட்ட மஞ்சரி இதழ், கைத்தேர்ந்த சிற்பிகளால் வடிக்கப்பட்ட கலைக்கோயிலாக மிளிரத் தொடங்கியது.

ஆசிரியர் தமது கொள்கை பற்றிக் குறிப்பிட்டதைப் போலச் சுமார் 60க்கும் மேற்பட்ட இந்திய, ஆங்கில மொழிப் பத்திரிகைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள், சுவை குன்றாமல் மொழிபெயர்க்கப்பட்டு மஞ்சரியில் வெளியிடப்பட்டன. ஒவ்வொரு கட்டுரையும் அதை எழுதியவர் பெயரிலேயே அமைந்திருந்தன. கீழே அக்கட்டுரை வெளிவந்த பத்திரிகை பெயர், மொழி, இடம், காலம் ஆகியவை காப்புரிமையிட்டுக் குறிக்கப்பட்டுள்ளன. சான்றாக,

"கரும்பொன் தொழிலாளி"
டாக்டர் ரஞ்ஜீ-ஜி. சாஹனி

காப்பிரைட் : ராயல்ஸ் வீக்லி - ஆங்கிலம் (9-11-1947)
புதுடில்லி.

மஞ்சரியில் வெளிவரும் ஒவ்வொரு கட்டுரையிலும், மேற்கண்டவாறு கட்டுரைத் தலைப்பு, ஆசிரியர் மற்ற விவரங்கள் குறிப்பிடப்பட்டிருக்கும்.

இந்தி, மராட்டி, வங்காளம், குஜராத்தி, மலையாளம், தெலுங்கு, சமஸ்கிருதம் போன்ற இந்திய மொழிகளோடு ஆங்கில மொழியில் வெளிவந்த பத்திரிகைகளிலிருந்து கட்டுரைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு மஞ்சரியில் வெளியிடப்பட்டன. ஒவ்வொரு இதழிலும் மிகச் சிறந்த சிறுகதை ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. மிகச்சிறந்த உலகப் புகழ்பெற்ற இலக்கியங்களிலிருந்து ஒரு காட்சி கட்டுரை வடிவில் ஒவ்வொரு இதழிலும் வெளியிடப்பட்டுள்ளது.

மஞ்சரி வெளியீட்டுக்காகத் தேர்ந்தெடுத்த பத்திரிகைகள் வருமாறு:

**இந்தி** : ஹம்ஸ், விசுவவாணி, விசால பாரத் நவயுக், ஸரஸ்வதி.

**குஜராத்தி** : ஊர்மி, நவரசனா, பகினி

**மராட்டி** : வஸந்த், மனோகர், கிர்லோஸ்கர்

**வங்காளம்** : பிரபாஸி

**தெலுங்கு** : ஸ்திரி, பாரதி, கிருகலட்சுமி, ஆந்திரப் பத்திரிகை, ஆனந்த வாணி

**மலையாளம்** : மாத்ருபூமி, ஜயகேரளம், கைரளி

**கன்னடம்** : பிரஜாமதம், கர்மவீர, புஸ்தகப் பிரபஞ்சம், விச்வ கர்நாடகவீக்லி, குறவஞ்சி

**ஆங்கிலம்** : யூனிடி ஆப் இந்தியா, ஸவுண்ட், ஸ்வதந்த்ரா, ராயல்ஸ் வீக்லி, பம்பாய் கிராணிக்கிற் வீக்லி, சோஷல் வெல்பேர், இந்தியன் ரிவ்யூ, கரன்ட் ஸயின்ஸ், பீப்பிள்ஸ் ஹெல்த், பிலிமிண்டியா, அஸ்ட்ராஜிகல் மகஸீன், திரிவேணி, பாப்புலர் ஸயின்ஸ், ஓரியண்ட் ஆன்வார்டு, மார்டன் ரிவ்யூ, காரவான், பேரன்ட்ஸ் மகஸீன், அமிர்த பஜார், கரண்ட் ஸயின்ஸ், நுட்ரீஷன், இந்தியா, பிக்சர் போஸ்ட், ஸயின்ஸ் டைஜட்ஸ், நியு டெமொகிராட், ஸ்பேர்ட்ஸ் அண்டு பாஸ்டைம், மையிண்டியா, கேங் அண்டு கமென்ட், பிரி இண்டியா, லீடர், பிளிட்ஸ், இந்தியா டைஜட்ஸ், சங்கர்ஸ் வீக்லி.

## இதழின் அட்டை

ஆரம்பகாலத்தில் மஞ்சரியின் அட்டைப் படங்கள் அவற்றின் தனித்தன்மைகளை விளக்குவதைப் போல அமைந்திருந்தன. அட்டைப்பட விளக்கங்கள் அட்டைகளின் இரண்டாம் பக்கம் வெளியிடப்பட்டுள்ளன. இதழின் சிறப்புக்கள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன. எஞ்சிய பகுதியில் ஆசிரியர் - பதிப்பாளர் பெயர்கள் வெளியிடப்பட்டுள்ளன. அட்டையின் மூன்றாம் பக்கத்தில் வாசகர் கடிதங்கள், அவ்வப்போது ஏற்படும் இன்றியமையா நாட்டு நடப்புப் பற்றிய ஆசிரியரின் கட்டுரைகள் இடம் பெறும். முதல் இதழில் (நவ.47) 'எங்கள் நோக்கம்', 'அமரவாழ்வு' (பிப்.48), 'காந்தி ஜயந்தி' (அக்.48), 'ஓர் ஆண்டு நிறைவு' (நவ.48) போன்ற தலைப்புக்களில் ஆசிரியர் தமது கருத்துக்களை மூன்றாம் அட்டையில் வெளியிட்டுள்ளார். நான்காம் அட்டையில் பெரும்பாலும் பொருளடக்கம் இடம் பெற்றுள்ளது. முன்னால் காந்தியடிகள் இறந்த பொழுது 3ஆம் பக்கக் கட்டுரையான அமரவாழ்வு 4ஆம் பக்கமும் தொடர்ந்துள்ளது.

## அட்டைப் படங்கள்

அட்டைப் படங்கள் அனைத்தும் குறிப்பாக, மஞ்சரியின் தரம், தன்மை ஆகியவற்றை வெளிப்படுத்தும் வண்ணம் அமைந்துள்ளன.

அட்டைப் படங்களுக்குப் பொருத்தமான தலைப்பிட்டு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளமை மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது. கவர்ச்சிக்காக அட்டைப்படம் என்ற இன்றைய நிலையிலிருந்து மாறுபட்டுக் கருத்துள்ள அட்டைப் படங்களை மஞ்சரி தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது. அனைத்துத் தரப்பு வாசகர்களின் கருத்தைக் கவரும் வகையில் மஞ்சரியில் கட்டுரைகள் அமைந்துள்ளன. 90 பக்கங்கள் கொண்டதாக மஞ்சரி தொடக்ககாலத்தில் வெளியிடப்பட்டுள்ளது. கட்டுரைகளுக்கு ஊடாகப் படங்கள், சிறப்புச் செய்திகளாகத் துணுக்குகள், நகைச் சித்திரம், வாசகர்கள் அறிவுக்குச் சோதனையாகப் போட்டிகள், வாசகர்களின் எழுத்தாற்றலை ஊக்குவிக்கும் போட்டிகள் எனப் பல்சுவை விருந்தாக மஞ்சரி உருவாக்கப்பட்டுள்ளது. சுருங்கச் சொன்னால் பல்வேறு இடங்களிலிருந்து பல்வேறு பொருள்களை ஒரே இடத்தில் கொண்டுவந்து வழங்கும் பல்பொருள் அங்காடியை மஞ்சரியுடன் ஒப்பிடலாம்.

இனி, முதல் பன்னிரண்டு இதழ்களில் வெளி வந்துள்ள செய்திகளைப் பல்வேறு தலைப்புக்களில் தொகுத்துக் காண்போம்.

## இலக்கியப் பகுதி

மஞ்சரி பல்சுவை இதழாக உருவாக்கம் பெற்றுள்ளது. இலக்கியம் வாழ்வியலைக் காட்டுவது. மிகச்சிறந்த இலக்கியக் காட்சிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு மஞ்சரியில் வெளியிடப்பட்டுள்ளன.

'யஜுர்' வேதத்திலிருந்து ஒரு பகுதி 'அன்ன தேவதை பேசுகிறாள்' என்று கட்டுரையாக்கப்பட்டுள்ளது (நவ. 47). 'மிருச்ச கடிகம்' நாடகத்தில் வரும் ஒரு காட்சித் 'திருட்டுக்கலை' என்ற கட்டுரையாகக் கலையழகு மிளிர உருவாக்கப்பட்டுள்ளது (முல்லை.48). அமரர் திரு.வி.க. எழுதிய 'நல்லுரைக் கோவை' என்ற உரைநடை நூலிலிருந்து 'பிச்சைப் பாட்டு' என்ற கட்டுரை எழுதப்பட்டுள்ளது (மார்ச்சு 48). 'புத்த சரிதம்' நூலிலிருந்து சிறப்புப் பகுதிகளின் சுருக்கமாகச் 'சித்தார்த்தன் துறவு' என்ற கட்டுரை அமைந்துள்ளது (மே 48). காளிதாசனின் 'குமார சம்பவம்' காவியத்திலிருந்து காவியச் சுவை மிகுந்த 'காம தகனம்' என்ற பகுதி சுவைபட எழுதப்பட்டுள்ளது (ஜூன் 48). 'தர்மத்தின் தீர்மானம்' என்ற கட்டுரை சமஸ்கிருதக் கவி பாரவியின் எழுத்தாற்றலை விளக்குகிறது (ஜூலை 48). மகாகவி பாண பட்டரின் 'ஹர்ஷ சரிதம்' நூலிலிருந்து ஒரு காட்சி 'வீரனின் துறவு' என்ற

கட்டுரையாக இடம்பெற்றுள்ளது (அக். 48). காளிதாசனின், 'ரகுவம்சம்', ஹர்ஷச் சக்ரவர்த்தி இயற்றிய 'நாகானந்தம்' (பிப். 48), 'குந்தமாலை' என்ற சம்ஸ்கிருத நாடகத்திலிருந்து ஒரு காட்சி ஆகியன கட்டுரையாக்கங்களைப் பெற்றுள்ளன.

நாட்டுப்புறப் பாடல்களையும் மஞ்சரி தமது வாசகர்களுக்கு விருந்தாக்கியுள்ளது. 'பீஹார் நாடோடிப் பாடல்கள்', 'ஆயி நாம்' என்ற பெயரில் எழுதப்பட்ட அஸ்ஸாம் பாடல் ஆகியன கட்டுரைகளாக எழுதப்பட்டுள்ளன. இவை தவிர, 'இலக்கியத்தில் பெண்கள்' (டிச. 47, ஜன. 48), உஷா (நவ. 47), என் விமர்சகர்கள் (ஆக. 48), எது நல்ல நடை (நவ. 47), கதை எழுதும் அபாயம் (செப். 48), கதை சொல்லும் குளங்கள் (மார்ச்சு 46), பாதுஷாவின் விகடகவி (ஜூலை 48), இலக்கியத்தில் ரகஸ்யவாதம் (மே 48), ராஜாஜியின் மணி மொழிகள் (ஆகஸ்டு 48) போன்ற இலக்கியத் தொடர்பான கட்டுரைகளும் மஞ்சரியின் முதல் பன்னிரண்டு இதழ்களில் வெளிவந்துள்ளன.

இனி இக்கட்டுரைகளிலிருந்து சில சுவையான பகுதிகளைத் காண்போம்.

சீதை மீண்டும் இராமனால் காட்டுக்கு அனுப்பப்பட்ட கதையைத் 'திங்நாகன்' என்பவர் 'மீண்டும் வனம் புகுந்த தேவி' என்ற பெயரில் கட்டுரையாக எழுதியுள்ளார் (அக். 48). தசரதன் சாபம் பெற்றதை 'ரகுவம்சம்' ஒன்பதாம் சர்க்கத்திலிருந்து எடுத்துக் கூறுவது 'தசரதன் பெற்ற சாபம்' என்ற கட்டுரை (நவ. 48).

'இலக்கியத்தில் பெண்கள்' என்ற கட்டுரையில் கே. பாஸ்கரன் நாயர் என்பவர் கேரளப் பெண்களைப் பற்றி எழுதியுள்ளார். அக்கட்டுரையிலிருந்து ஒரு பகுதி வருமாறு.

> "எங்கள் மார்புக்கு மறைப்புமில்லை
> வாளுக்கு உறையுமில்லை"

என்று கேரளப் பெண்கள் கூறுவதாகக் கட்டுரை ஆசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார் (டிசம். 47, ஜன. 48). 'என் விமர்சகர்கள்' என்ற தலைப்பில் தன் விமர்சகர்களைப் பற்றிக் காண்டேகர் எழுதியுள்ள கட்டுரை சுவையானதாகும். மனம் திறந்து தன்னுடைய விமர்சகர்களைப் பற்றிக் கூறியுள்ளார். அவற்றுள் சில வருமாறு.

"என் விமர்சனக் கட்டுரைகள், என் சிறுகதைகளைவிட உயர்ந்தவை என்பது 'சாட்சின்' என்பவருடைய அபிப்பிராயம்

...உலகப் பிரசித்தி பெற்ற ருசிய நாவலாசிரியர்களான துர்கனேவ், டால்ஸ்டாய் ஆகியவர்களோடு என்னை (காண்டேகர்) ஒப்பிட்டு அவர்களுக்கு முன்னால் நான் ஒரு துக்கடா என அவர் விளக்கியிருக்கிறார்'' என மாடகோல்கர் தம்மைக் கூறியதைக் காண்டேகர் கட்டுரையில் படம்பிடித்துக் காட்டுகின்றார் (ஆக. 48). இலக்கிய நடைகளை ஒப்பிட்டு 'எது நல்ல நடை' என்று தூமகேது ஆராய்ந்து எழுதியுள்ள கட்டுரை 'நவரசனா' என்ற குஜராத்திப் பத்திரிகையிலிருந்து தரப்பட்டுள்ளது (நவ. 47).

நாட்டுப்புறக் கலைகளை மஞ்சரி திரட்டித் தரும் விதத்தைக் காண்போம். 'பீஹார் நாடோடிப் பாட்டுக்கள்' என்று ஒரு கட்டுரை (மே 48) வெளியிடப்பட்டுள்ளது. இக்கட்டுரையில் திருமணக் காட்சியும், பிள்ளைப்பேறும் சுவையுற நாட்டுப்புறப் பாடல்களில் விளக்கப்பட்டுள்ளன. மணப்பந்தலில் மணமக்கள் இருக்க, இக்காட்சியைப் பீஹார் நாடோடிப் பாடல் விளக்குகின்றது.

"மருகனும் பந்தலின்கீழ் வந்துதான் அமர்ந்தவுடன்
அருமையான கன்னிதனை அலங்காரம் செய்தங்கே
விருப்புடன் அழைத்துவந்து வீற்றிருக்கச் செய்தனரே
பருவமகள் நெற்றிதனில் பொட்டிட்டுப் பார்த்தனரே . . ."

இவ்வாறு மணப்பந்தல் நிகழ்ச்சிகள் தொடர்கின்றன. மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையே நடக்கும் வாக்குவாதம் நகைச்சுவையும், நையாண்டியும் மிக்கதாகும்.

"மருமகளே மருமகளே மோசக்கார மருமகளே
கருப்ப வதியான தெப்போ? குழந்தை தந்த திருடனெதோ?
மாமியாரே மாமியாரே வலை ஒன்று பின்னித் தாரும்
நாமினிமேல் கள்வன் தன்னை நடுங்காமல் பிடித்திடலாம்
பிள்ளைதந்து சென்றவனைப் பிடித்துவிட்டேன் மாமியாரே
கள்ளத்தனம் செய்தபயல் கையதனில் சிக்கிவிட்டான்"

எல்லா இடங்களிலும் மாமியார்-மருமகள் உறவு ஒரேமாதிரிதான் என்பதை இப்பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. இந்தக் கட்டுரை வழங்கியவர் 'மாயா குப்த' என்பவராவார். 'பிரபாஸி' என்ற வங்காள இதழில் வந்த இக்கட்டுரை (மே 48) மஞ்சரியில் இடம் பெற்றுள்ளது.

தாய்மையைப் போற்றுவதில் தரணி எங்கும் மாற்றமில்லை. பெண் தெய்வ வழிபாடு இந்திய மண்ணின் பண்பாடு எனலாம்.

நாட்டை, நதியை, மொழியைத் தாயாக வழிபடுவது இம்மண்ணின் மரபாகும். அஸ்ஸாம் மாநிலத்தில் வழங்கும் 'ஆயிநாம்' பற்றிய கட்டுரை இக்கருத்தை வலியுறுத்துகின்றது. ஒரு காலகட்டத்தில் பெரியம்மை நோய் உயிர்க்கொல்லியாக இருந்தது. அந்நோய் கண்டவர்கள் பிழைப்பது அரிது. கிராமப் பகுதிகளில் அம்மை நோய் கண்டவர்களைச் சுற்றி அமர்ந்து கொண்டு அம்மன் தாலாட்டுப் பாடுவது இன்றும் காணப்படும் காட்சியாகும். அதிலும் பெரியம்மை கொடுமையானது. ஆயி என்றுதான் அங்கும் மகமாயியை அழைக்கின்றனர். இப்பாடலின் சில பகுதிகளைக் காண்போம்.

"ஆயி இங்கு வாராளே ஆயி இங்கு வாராளே
அவளோடு வாராரே ஆறேழு தங்கைமார்
ஏழுமலை தான்கடந்து எல்லோரும் வாராரே
வழியெங்கும் கண்டவர்கள் வணங்கி அடிபணிந்தார்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
ஏன்அழறே என்மகளே என்று சொல்லி எம்ஆயி
புன்சிரிப்புப் பூத்திடுவாள் புகழ்ந்திடுவோம் அவள்பெருமை'!

மேலும் இக்கட்டுரையில், "அம்மக்கள் பெரியம்மை வார்த்துப் பிழைத்த குழந்தையை விசேஷ அதிர்ஷ்டமுள்ளதாகத் தாய்மார்கள் எண்ணுகின்றனர்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. காசி, ஜெயிந்தியாவில் உள்ள 'ஸின்பெங்ஸ்' மக்கள் பெரியம்மை தொற்ற வேண்டி முயற்சியும் செய்கின்றனர் என்று இக்கட்டுரை மேலும் குறிப்பிடுகின்றது.

இவை தவிரத் தொடர்களாக வரும் எது சரி? சொல் பொருந்துமா? போன்றவற்றில் இலக்கிய - இலக்கணத் தொடர்கள் இடம் பெற்றுள்ளன.

ஒரே மாதிரி பொருள்தரக்கூடிய சொற்களை வெளியிட்டு, பொருந்தும் சொல்லைத் தொடரில் பொருத்தும் போட்டி, 'சொல் பொருந்துமா?' என்பதாகும். எல்லா இதழ்களிலும் இப்போட்டி இடம் பெற்றுள்ளது. சான்றாக ஜூன் 48 மாத மஞ்சரியில் சொல் பொருந்துமாவில் இடம் பெற்ற சொற்கள் வருமாறு:

| கரை | பழக்கம் | அருவருப்பு | குற்றம் | பகை |
|---|---|---|---|---|
| கறை | வழக்கம் | வெறுப்பு | குறை | தீங்கு |

இச்சொற்களைப் பொருத்தமாகத் தொடரில் இணைக்க வேண்டும் என்பதே போட்டி.

துணுக்குகள் விசேஷச் செய்திகள் என மஞ்சரியில் குறிப்பிடப்படுகின்றன. மஞ்சரி (பிப். 48) இதழில் புறநானூற்றுக் கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன.

> "ஈ என்று இரத்தல் இழிவானது
> அதற்கெதிரே இல்லை என்பது அதனினும்
> இழிவானது. கொள் என்று கொடுத்தல்
> உயர்ந்தது. கொடுத்த போது வேண்டா
> மென்பது அதனினும் உயர்ந்தது"

என்று 'புறப்பாடல் கருத்து' அழகுற இடம்பெற்றுள்ளது.

ஓராண்டு இதழ்களில் இடம் பெற்ற சிறப்பான சில இலக்கியச் செய்திகள் இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

### அரசியல் மற்றும் வரலாற்றுச் செய்திகள்

மஞ்சரியில் பிறமொழிகளில் வெளிவந்த மிகச் சிறந்த அரசியல், வரலாற்றுச் செய்திகள் கொண்ட கட்டுரைகள் அதிக அளவில் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

மஞ்சரியின் முதல் இதழில் 'சுதந்திரக் கோயில்' என்ற கட்டுரையை ஜதுநாத் சர்க்கார் எழுதியுள்ளார். பெற்ற சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்வது பற்றிய எச்சரிக்கையாக அக்கட்டுரை அமைந்துள்ளது. "சுதந்திரம் என்பது பிறன் தர வரும் பரிசு அல்ல, என்பதை மறவாதீர். அதைச் சம்பாதிக்க, விடா உழைப்பு வேண்டும். அதைக் காப்பாற்றிக்கொள்ள நேரிய சிந்தனையும், ஓயாத தன்னலமற்ற தொண்டும் வேண்டும். சுதந்திரத்தின் விலை, என்றும் கண் கொட்டாத விழிப்பாகும்" இவ்வாறு அக்கட்டுரை சுதந்திரம் பற்றி விளக்குகின்றது (நவ. 47).

'நமது தேசிய கீதம்' என்ற தலைப்பில் தௌலத்ராம் பரசுராம் என்பவர் தமது கட்டுரையில் நமது தேசிய கீதம் பற்றி ஆராய்கின்றார். தற்போது மூன்று பாடல்கள் உள்ளன. 1. வந்தே மாதரம் - பங்கிம் சந்திரசட்டர்ஜி, 2. ஜனகணமன - ரவீந்திரநாத் தாகூர், 3. ஸாரே ஜஹான்ஸே அச்சா - கவி இக்பால் இம்மூன்று பாடல்களிலும்

உள்ள பண்புகளை உள்ளடக்கிய ஒரு தேசிய கீதம் உருவாக்குவது நல்லது என்ற கருத்தைக் கட்டுரையில் வலியுறுத்தியுள்ளார் (ஜுலை 48).

'கொடியின் கௌரவம்' என்ற கட்டுரையில் 'சினிமாக் கொட்டகையில் தேசியக் கொடியைக் காட்டாமல் இருப்பதே நல்லது' என்ற கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது (நவ. 47).

'இந்தியாவின் தற்காப்பு' என்ற கட்டுரையில் நாட்டின் தற்காப்பிற்கான அவசியத்தை அக்கட்டுரை ஆசிரியர் சிவராம சாஸ்திரி வலியுறுத்துகின்றார். "எல்லைகளைக் காக்க, ஒவ்வொரு குடியானவனுக்கும், தொழிலாளிக்கும், மாணவனுக்கும் ராணுவக்கல்வி போதிக்க வேண்டும்" என்று யோசனை கூறுகின்றார் (ஜுலை 48).

'தற்காப்பே முதல் வேலை' என்ற கட்டுரை ஆசிரியரால் எழுதப்பட்டுள்ளது. தற்போது தலையங்கம் என்று ஆசிரியரால் பெரும்பாலான பத்திரிகைகளில் அன்றாடச் செய்திகள் எழுதப்படுகின்றன. இக்கட்டுரையும் இவ்வகையைச் சார்ந்தது எனலாம். விடுதலைக்குப்பின் ஓராண்டில் எழுதப்பட்டுள்ள இக்கட்டுரை நாட்டின் பாதுகாப்பில் உள்ள கவலையை வெளிப்படுத்துகின்றது.

"இப்படிப் பாதுகாப்பற்ற இந்த எல்லைக்கு அருகில் பாகிஸ்தான் தனிநாடாக விளங்குகிறது. இந்தியாவை எதிர்ப்பதும், தாக்குவதுமே இதுவரைக்கும் பாகிஸ்தானின் போக்கு . . . . ஒவ்வோர் அண்டை நாடும் நமக்கு எதிரியாக வரக்கூடும் என்ற ராணுவ நோக்கத் தோடுதான் நம் பாதுகாப்புப் பிரச்சனையை நாம் ஆராய வேண்டும்" என்று அக்கட்டுரை குறிப்பிடுகின்றது. 50 ஆண்டுகளுக்கு முன்பே நாட்டின் எல்லைப் பாதுகாப்புப் பற்றியும், அண்டை நாடான பாக்கிஸ்தானின் இயல்பு பற்றியும் கட்டுரை மிகத்தெளிவாக விளக்கியுள்ளது.

இந்தியா விடுதலை அடைந்ததும் நாட்டில் இருந்த பல்வேறு சமஸ்தானங்கள் அதனுடன் இணைந்தன. ஒருசில, அரசின் கட்டுப்பாட்டுக்குள் ஆட்சி நடத்தின. இவற்றை ஒழுங்குபடுத்தியவர் சர்தார் வல்லபாய் படேல் ஆவார். இத்தகைய சமஸ்தானங்கள் பற்றிச் சில கட்டுரைகள் மஞ்சரியில் வெளிவந்துள்ளன. ஹைதராபாத் நிஜாம்களின் ஆட்சியில் நடைபெற்றது. 'நிஜாம் பரம்பரை' என்ற கட்டுரை மஞ்சரியில் (செப். 48) வெளிவந்துள்ளது. இக்கட்டுரை நிஜாம் ஆட்சியின் அவந்தரை (அலங்கோலம்) பற்றி விளக்குகிறது.

யதுநாத சர்க்கார் என்பவர் இக்கட்டுரையின் ஆசிரியர். "நிஜாமின் அரசு வெறும் பொம்மை ராஜாங்கம். இப்போதிருக்கிற நிஜாம் பிரம்மஹத்தி பிடித்தவரைப் போல இருக்கிறார்" என்று தாம்ஸ்ஸன் என்பவர் 1810ஆம் வருஷ நிலைபற்றித் தமது 'மெட்காம்' புத்தகத்தில் எழுதியுள்ளார் (செப். 48).

ஆங்கில இதழான போரம் 'பரோடா விவகாரம்' குறித்து ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தது. அதன் தமிழாக்கம் அக்டோபர் 48 மஞ்சரியில் இடம் பெற்றிருந்தது. அதன் சாராம்சம் வருமாறு. பரோடா சமஸ்தானத்தின் மன்னர் உல்லாசப் பேர்வழியாக இருந்தார். குதிரைப் பந்தயப் பைத்தியமாக விளங்கினார். இரண்டாம் மனைவியுடன் உல்லாசமாக அரசைக் கவனிக்காமல் அரண்மனையே கதியென்று இருந்தார். ஒருமுறை அரசுப்பணம் 3¼ கோடி ரூபாயை எடுத்துத் தன் சொந்த செலவுக்குப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டார். அங்கு திவானாக இருந்தவர் ஜிவராஜ் மேத்தா என்பவர், மகாராஜாவைப் பணியவைக்க 'அரசர் பதவி துறக்கவேண்டித் தீர்மானம்' நிறைவேற்றி மத்திய அரசுக்கு அனுப்பிவைத்தார். மத்திய அரசும் அதை ஏற்றுக்கொண்டது. ஆனால் அதற்குள் மனம்மாறிய அரசர் 3¼ கோடி ரூபாயைத் திரும்பச் செலுத்திவிட்டார்.

பி.வி. ராய், 'ஓரியன்ட்' இதழில் எழுதிய கட்டுரையான 'மீர் ஜாபரின் நஷ்ட ஈடு' பிரிட்டிஷாரின் கொடுங்கோல் தன்மையை எடுத்துக்காட்டும் வண்ணம் அமைந்துள்ளது. நவாப்பிடம் நஷ்ட ஈடு கேட்டு பிரிட்டிஷார் எப்படிக் கசக்கிப் பிழிந்தனர் என்பது பற்றி இக்கட்டுரை விளக்குகின்றது (நவ. 47).

வெளிநாட்டு அரசியல் செய்திகள் குறித்த கட்டுரைகள் மஞ்சரியில் அவ்வவ்போது இடம் பெறுவது உண்டு. அமெரிக்கத் தேர்தல் (நவ. 48), ஐநா.வில் கம்யூனிஸ்ட் (ஏப். 48), புலியும் கள்ள மார்க்கெட்டும் (நவ. 48), பெர்லின் பரிதாபம் (செப். 48), ருஷியரின் இரும்புத்திரை (ஏப். 48) போன்ற கட்டுரைகள் வெளிநாட்டு அரசியலை உள்ளடக்கியவை.

'பெர்லின் பரிதாபம்' என்ற கட்டுரை "யுத்தத்தில் தோற்ற ஜெர்மனியின் தலைநகரம் சீரழிந்து கிடக்கிறது. அதைப் பங்கு போட்டுக் கொள்வதில் நாலு வல்லரசுகளுக்கும் தகராறு" என்று கூறுகிறது. இங்கே குறிப்பிடப்படும் நான்கு வல்லரசுகள் ஆங்கிலேயர், அமெரிக்கர், ருசியர், பிரெஞ்சுக்காரர் ஆகியோராவர்.

'ஐ.நா.வில் கம்யூனிஸ்ட்', "இந்தியாவில் இந்திய சர்க்காரும், மாகாண சர்க்கார்களும் கம்யூனிஸ்டுகளின் தொல்லை பொறுக்க முடியாமல் நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள். ஐ.நா. ஸ்தாபனத்திலும் கம்யூனிஸ்ட்டுக்கள் முட்டுக்கட்டையே போடுகிறார்கள். இந்தக் கம்யூனிட்டுக்களின் தொல்லையை ஒழித்து ஐ.நா. ஸ்தாபனத்தைப் பலப்படுத்த என்ன வழி என்று இக்கட்டுரை கூறுகின்றது" என இக்கட்டுரையின் முன்னுரை கூறுகின்றது.

'ருஷ்யரின் இரும்புத்திரை' என்ற கட்டுரை ரே.பாக் என்பவரால் எழுதப்பட்டது. ஒரு நிருபரின் அனுபவங்களைக் குறிப்பிடுகின்றது. ருஷ்யாவில் நடக்கும் நிகழ்ச்சிகள் இதில் குறிப்பிடப்பட்டுகின்றன. நிருபரால் எந்த ஒரு செய்தியையும் அறிய முடியவில்லை. "நான் கடல் கடந்து போகும் முன் நீங்கள் எனக்கு ஒரு பத்திரிகை நிருபர் பாஸ் கொடுத்தீர்கள் அல்லவா? அதன் சக்தி எல்லாம் இந்த இரும்புத் திரைக்கு முன்னே சிறிதும் பலிக்கவில்லை." என்று தமது கட்டுரையில் குறிப்பிடுகின்றார். ருஷ்யாவில் யாரும் எந்த உண்மையையும் பெற இயலாது என்பது கட்டுரை ஆசிரியர் கருத்து.

'பசுவைக் காத்த மொகலாயர்' என்ற கட்டுரை மஞ்சரி (பிப். 48) இதழில் வெளிவந்துள்ளது. இக்கட்டுரையை எழுதியவர் ஆஞ்ஜலோ மோஸஸ் என்பவராவார்.

வரலாற்றைப் பின்னோக்கிப் பார்க்கும் பொழுது, 'ஹிந்து மதத்தை மதித்து நடந்தார்கள் முஸ்லீம் மன்னர்கள். இன்றைய இந்திய முஸ்லீம் மக்கள் அந்த உதாரணத்தைப் பின்பற்றுவார்களா? என்று இக்கட்டுரையின் முன்னுரை குறிப்பிடுகின்றது. முஸ்லீம் மன்னர்கள் செய்கைக்கு ஒரு சான்றாக, பாபரைப் பற்றிய செய்தியைக் கட்டுரையிலிருந்து காண்போம்.

பாபர் தன் மகன் ஹுமாயூனிடம், "முக்கியமாகப் பசுவதையை நிறுத்திவிடு. பசுவதை நடந்தால் இந்திய மக்களை நீ வசப்படுத்த முடியாது" என்று அறிவுறுத்தினாராம். அக்பர் ஆட்சியில் சட்ட ரீதியாகப் பசுக்களுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டது என்று இக்கட்டுரை மேலும் குறிப்பிடுகின்றது (பிப். 48).

'முஸ்லீம் காளி பக்தர்' என்ற கட்டுரை வங்காள மொழிப் பத்திரிகையான பிரபாஸியில் வெளிவந்தது. தினேச் சந்திர பாட்டாச்சாரியா என்பவர் இக்கட்டுரையை எழுதியிருந்தார்.

வங்காளத்தில் முஸ்லீம்களும் இந்துக்களைப் போலவே காளி பக்தராக விளங்குகின்றனர் என்று இக்கட்டுரை கூறுகின்றது (ஜூன் 48).

'வெல்டன் ஜேம்ஸ்' என்பவர் 'காரியர்ஸ்' என்ற ஆங்கில இதழில் எழுதிய கட்டுரை, 'இந்தியாவின் வேதனை' என்ற பெயரில் (பிப். 48) மஞ்சரி இதழில் வெளியாகி உள்ளது. இக்கட்டுரை இந்து-முஸ்லீம் கலவரம் பற்றிய வரலாற்றை விளக்குகின்றது.

அரசு அதிகாரிகள் பற்றியும் மஞ்சரியில் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. 'அதிகாரிகள் உயர வழி' என்ற கட்டுரையை வி. எச். கட்க்கர் என்பவர் எழுதியுள்ளார். அதிகாரிகள் திறமையானவர்களாக இருக்க வேண்டும்; அவர்கள் நிலை உயரவேண்டும் என்று இக்கட்டுரை வலியுறுத்துகின்றது. சர்க்கார் அதிகாரிகளை இரு விதமாகப் பிரிக்கலாம். 1) அரசியலை அமல் நடத்துபவர்கள் 2) அரசியலை அமைதியாக நடத்த ஆபிஸிலே உட்கார்ந்து, அமல் நடத்தும் அதிகாரிகளுக்கு வழிகாட்டி, செயல் நீதியை வகுப்பவர்கள். இவர்களுக்கும் பொதுமக்களுக்கும் நேரான தொடர்பு இல்லை" என்று அதிகாரிகளைப் பகுத்து ஆராய்கிறது இக்கட்டுரை. முதல் வகைக்கு ரெவின்யூ, போலீஸ், வருமான வரி அதிகாரிகளும், இரண்டாம் வகைக்கு அக்கௌண்ட், ஆடிட், ஸெக்ரடேரியட் அதிகாரிகளும் பிரித்துக்காட்டப்படுகின்றனர் (டிச. 47, ஜன. 48).

அரசு அலுவலர்களிடையே காணப்படும் லஞ்சம் பற்றி ஒரு கட்டுரை விவரமாகப் பேசுகின்றது. 'லஞ்சமும் இனாமும்' என்ற இக்கட்டுரையை 'ஸ்ரீவத்ஸன்' என்பவர் எழுதியுள்ளார்.

## மொழிப் பிரச்சினை

மொழிப் பிரச்சினை பற்றியும் ஒருசில கட்டுரைகள் மஞ்சரியில் வெளிவந்துள்ளன. 'ஒரே பாஷை' என்ற கட்டுரையை 'ஸ்வதந்ரா' இதழில் 'அடெல்தா பீடெர்ஸன்' என்பவர் எழுதிய கட்டுரை மஞ்சரியில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. அக்கட்டுரையில் காணப்படும் கருத்துக்கள் வருமாறு:

1. சுலபமாக உச்சரிக்கக் கூடியதாக, காதுக்கு இனிமையாய் இருக்க வேண்டும்.

2. வாக்கிய அமைப்பு சுலபமாய் இருக்க வேண்டும்.

3. எல்லோருக்கும் ஒரேவித மரியாதை செலுத்தும் முறையில் ஒருமை, பன்மை முதலிய இலக்கண உருவங்களை வைத்துக் கொள்ள வேண்டும்.

4. அதன் லிபி படிக்கவும், எழுதவும் சுலபமாகவும், ஒவ்வொரு சப்தத்தையும் தனியே குறிக்கும் குறியீடுகளை உடையதாகவும் அமைய வேண்டும்.

போன்ற இன்றியமையாக் கருத்துக்களைச் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் இக்கட்டுரை அமைந்துள்ளது (ஆக. 48).

'எது தேசிய பாஷை?' என்ற கட்டுரை (பிப். 48) மஞ்சரியில் இடம்பெற்றுள்ளது. "தேசத்தின் ஐக்கியத்தைப் பலப்படுத்தி வளர்க்க ஒரு தேசிய பாஷை வேண்டும். அது எது? என்பது பற்றி மூன்று பிரமுகர்கள் மூன்று வித அபிப்பிராயம் தருகிறார்கள்" என்ற முன்னுரையுடன் இக்கட்டுரை வழங்கப்பட்டுள்ளது. 'ஹிந்தி' மொழிபற்றி கே.எம். முன்ஷி, 'சம்ஸ்கிருதம்' பற்றி டாக்டர் கே.என். காட்ஜு (முன்னாள் ஒரிசா கவர்னர்), 'ரோமன் ஹிந்துஸ்தானி' பற்றி ஏ.ஏ.ஏ. பைஜி (இஸ்லாமிய சட்ட நிபுணர்) ஆகியோர் தத்தமது வாதத்தை முன் வைத்துள்ளனர். இக்கட்டுரைகளிலிருந்து, கே.எம். முன்ஷி அவர்கள் இந்தி மொழி பற்றி எழுதிய சில செய்திகள் வருமாறு.

"இந்தியாவில் இப்போது நூற்றுக்கு 69 பேர் சம்ஸ்கிருதம் சம்பந்தமான பாஷைகள் பேசுவோர்கள். அவர்களில் 45 பேர் ஹிந்தியும், 24 பேர் சம்ஸ்கிருதத் தொடர்பு கொண்ட இந்தோ ஆர்ய பாஷைகளும் பேசுவோர்கள். நூற்றுக்கு 52 இந்தியர் நாகர எழுத்தை உபயோகிக்கிறார்கள். இன்னும் 17 பேருடைய எழுத்துக்கள் பெரிதும் நாகரத்தைப் போலவே இருக்கின்றன. மீதி 31 பேரில் 24 பேர் வேறுவித அமைப்புள்ள திராவிடப் பாஷைகளைப் பேசுவார்கள். அவர்களிலும் 16 பேர் சம்ஸ்கிருதச் சொற்களைக் கொண்ட பாஷைகளைப் பேசுகிறார்கள். 8 பேர் ஓரளவு சம்ஸ்கிருதச் சொற்கள் கலந்த பாஷைகளைப் பேசுகிறார்கள் ஆகையால் குறைந்த பட்சம் நூற்றுக்குத் தொண்ணூறு இந்தியரின் மனோபாவம், பழக்கவழக்கம், இலக்கிய ஐதிகம் ஆகியவற்றை ஹிந்தி பிரதிபலிக்கின்றது. 1917இல் காந்தி ஹிந்தியைச் தேசிய பாஷையாக அங்கீகரித்தார்".

"ஹிந்தியின் முன்னேற்றத்தைத் தடுக்க முடியாது. தேசீய ஐக்கியத்தை உத்தேசித்து 'தேசீய பாஷை' என்று அதிகாரபூர்வமாக

ஹிந்தியை உடனே அங்கீகரிப்பது அவசியம்'' என்று அவர் வாதிடுகின்றார். ஏனைய இருவரும் இவ்விதமே வாதம் செய்துள்ளனர். இன்றளவும் இப்பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு ஏற்படவில்லை (பிப். 48).

## கல்வி

கல்வியைப் பற்றிய கட்டுரைகள் மஞ்சரியில் இடம் பெற்றுள்ளன.

'சர்வ ஜனக்கல்வி' என்ற கட்டுரையை 'ஸலில் ஸேன் குப்த' என்பவர் அமிர்தபஜார் இதழில் எழுதியுள்ளார் (டிச. 47, ஜன. 48). அனைவருக்கும் கல்வி வழங்குவதைப் பற்றி இக்கட்டுரை விளக்குகின்றது. சில கருத்துகள் வருமாறு.

1. சுதேச பாஷையில் சமாசாரப் பத்திரிகை படிக்கும் திறமை அடைய வேண்டும்.
2. கூட்டல், கழித்தல் முதலிய லேசான கணக்குகளைச் செய்யும் திறமை வேண்டும்.
3. தேச சரித்திரமும், பூகோளமும் ஓரளவு தெரிந்து கொள்ள வேண்டும்.
4. விவசாயம், குடிசைத் தொழில், வியாபாரம் இந்த ஏதாவது ஒன்றில் தொழிற்பயிற்சி அடைய வேண்டும்.

'படிப்புக்காக உத்தியோகம்' என்ற கட்டுரை படிப்பிற்காக வேலை செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகிறது (ஜூலை 48).

## தொழில்துறை

உலகம் தொழிற்புரட்சியில் ஒன்றுபட்டு ஈடுபடும் காலகட்டத்தில் தொடங்கப்பட்ட மஞ்சரி இதழில் தொழிற்துறைக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இந்தியாவின் முக்கியமான தொழில்களுள் ஒன்றான சணல் தொழிலைப் பற்றிய விளக்கமான கட்டுரை (பிப். 48) மஞ்சரியில் வெளிவந்துள்ளது. 'முதல் சணல் ஆலை' என்ற இக்கட்டுரையை அமிர்த பஜார் என்ற ஆங்கில இதழில் முகில்குப்தா என்பவர் எழுதியுள்ளார். புள்ளி விவரங்களுடன் கூடிய விளக்கமான கட்டுரை இதுவாகும்.

"சணல் விளைவு பாகிஸ்தானில், ஆலைகள் இந்தியாவில். இப்படி ஒரு சிக்கல் இந்தியாவைப் பிரித்ததால் ஏற்பட்டிருக்கிறது. சணல் தொழில் வங்காளத்தின் ஒரு பெருந் தொழில். அது எத்தனை பாடுபட்டு இந்த நாட்டில் உதயமாயிற்று என்ற வரலாற்றை இங்கே காணலாம்" என்று இக்கட்டுரையின் முன்னுரை கூறுகிறது.

'இன்சூரன்ஸ் ஜாக்கிரதை' என்ற கட்டுரையை ரா.கே. ரானடே என்பவர் எழுதியுள்ளார். இன்சூரன்ஸ் தொகை பெறுவதில் உள்ள நடைமுறைச் சிக்கல்களைச் சான்றுகளுடன் இக்கட்டுரை விவாதிக்கின்றது. இறுதியாக, "பேராசை வேண்டாம். போட்ட பணமாவது திரும்ப வேண்டாமா? எச்சரிக்கை. இல்லாவிட்டால் அதுவும் போய்விடும். கதை அல்ல அப்படி ஒரு கேஸே நடந்திருக்கிறது" என்று ஒரு வழக்கை ஆதாரமாக இக் கட்டுரை எடுத்துக்காட்டுகிறது (நவ. 47).

'பல உருவெடுக்கும் சரக்கு' என்ற கட்டுரையை எழுதியவர் பி. சத்தியபாமா என்பவர் ஆவார். 'ப்ளாஸ்டிக்' தொழில் பற்றியது இக்கட்டுரை. "எத்தைச் சொன்னாலும் கேட்கும் நத்தைச் சூரி போல எந்தப் பண்டம் செய்யவும் உதவும் ப்ளாஸ்டிக்" என்று இக்கட்டுரையின் முன்னுரை கூறுகின்றது (செப். 48). 'கரும்பொன் தொழிலாளி' என்ற கட்டுரையில் பிரிட்டனின் நிலக்கரிச் சுரங்கத் தொழில் பற்றியும் தொழிலாளி பற்றியும் டாக்டர் ரஞ்ஜீ-ஜி. சாஹனி விரிவாகக் குறிப்பிடுகின்றார் (நவ. 47).

கப்பலோட்டிய தமிழன் வ.உ.சியின் கப்பல் கம்பெனி பற்றிய கட்டுரை மஞ்சரியின் ஏப்ரல் 48 இதழில் வெளியாகியுள்ளது. ஒவ்வொரு தமிழனும் பெருமையுடன் தலைநிமிர்ந்து நிற்கச் செய்தவர் வ.உ. சிதம்பரம் பிள்ளை. வ.உ.சி.யின் கப்பல் கம்பெனியின் இந்த ஷரத்துக்கள் பாரதியாரின் 'இந்தியா' பத்திரிகையில் 3-11-1906இல் வெளியானவை. மூலதனம், அக்கிரசனர், டைரக்டர்கள், காரியதரிசிகள், பொக்கிஷதாரர்கள், ரிஜிஸ்டர் ஆபீஸ், நோக்கங்கள் போன்றவை இக்கட்டுரையில் விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தியாவின் முதல் கப்பலான 'ஜல உஷா'வின் வரலாறு, 'இந்தியக்கப்பல்' என்ற கட்டுரையாக எழுதப்பட்டுள்ளது (ஏப்ரல் 48).

'மைபோடாத பேனா' என்ற கட்டுரை பந்துமுனைப் பேனாக்களைப் பற்றிய ஆய்வாக அமைந்துள்ளது. இப்பேனாக்களைப் பயன்படுத்துவதில் ஓர் எச்சரிக்கை வேண்டும் என்று அமெரிக்கப்

பத்திரிகையான, 'அமெரிக்கன் பார் அசோசியேஷன் ஜர்னல்' குறிப்பிடுகின்றது (செப். 48).

பத்திரிகைத் தொழிலின் முதுகெலும்பாகத் திகழ்பவர் பத்திரிகை ஆசிரியர். இவரைப் பற்றி 'யார் பத்திரிகாசிரியர்' என்ற கட்டுரையை T.K. ராம மேனோன் என்பவர் ஜயகேரளம் என்ற மலையாளப் பத்திரிகையில் எழுதியுள்ளார்.

"பத்திரிகாசிரியர் பகைவர் இல்லாத அஜாதசத்ரு என்று நினைக்க வேண்டாம். அவருக்குப் பகைவர் பல்லாயிரம் பேர் உண்டு. ஆனால் அந்தப் பகைவருக்கு அவரை அணுகத் தைரியம் உண்டாவதில்லை" என்று இக்கட்டுரைப் பத்திரிகை ஆசிரியர் நிலையை விளக்குகிறது (பிப். 48).

'வாழை-ஒரு கற்பகம்' என்ற கட்டுரை வாழை சாகுபடி பற்றியதாகும். இக்கட்டுரையின் ஆசிரியர் முராரிப் பிரஸாத் குஹா என்பவராவார். "வாழை உஷ்ணப் பிரதேசங்களில் தானே வளரும் மரங்களுள் ஒன்று. 40 வகைகள் உண்டு. 40 வகைகளும் சாகுபடி செய்யும்போது ஏற்படும் பேதங்களே என்று கருதுகிறார்கள்" என்று கட்டுரை குறிப்பிடுகின்றது (ஜூன் 48). இவ்வாறு தொழில்கள் பற்றிய கட்டுரைகளும் அவ்வப்போது மஞ்சரியில் இடம்பெற்றுள்ளன.

## சிறப்புமிக்க சுற்றுலாத் தலங்கள்

நம் நாட்டின் புகழ்பெற்ற சுற்றுலாத் தலங்களைப் பற்றியும், ஏனைய வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களைப் பற்றியும் அறிந்து கொள்ளும் வகையில் கட்டுரைகள் மஞ்சரியில் இடம் பெற்றுள்ளன. சனி குலுங்கும் சிம்மாசலம் (மே 48), காஷ்மீர் அற்புதம் (நவ. 47), சிம்லா வளங்களிலே (மார்ச்சு 48), சிருங்கேரி யாத்திரை (ஆக. 48), மகிமையுள்ள மந்திராலயம் (ஜூன் 48), மலையரசன் (டிச. 47, ஜன. 48) மூன்று தலை லிங்கம் (செப். 48) ஆகிய கட்டுரைகள் இத்தகு இடங்களில் சிறப்பை விளக்கி எழுதப்பட்டுள்ளன. இவற்றுள் ஒரு சில கட்டுரைப் பகுதிகளைக் காண்போம்.

மஞ்சரியின் முதல் இதழில் (நவ. 47) பண்டித ஜவஹர்லால் நேருவின் 'காஷ்மீர அற்புதம்' என்ற கட்டுரை வெளிவந்துள்ளது. காஷ்மீரின் சிறப்புக்கள் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன. 'மலையரசன்' என்ற கட்டுரையை எழுதியவர் காகா காலேல்கர். காந்தியடிகளுக்கு மொழி பற்றியோ, இலக்கியம் பற்றியோ சந்தேகம்

வந்தால் இவரிடம்தான் கேட்பாராம். அவர் எழுதிய 'ஹிமாலய யாத்திரை' என்ற குஜராத்தி நூலிலிருந்து எடுக்கப்பட்டது இக்கட்டுரை.

'சிம்லா வனங்களிலே' என்ற கட்டுரையை ராமகுமார் என்பவர் விசாலபாரத் என்ற ஹிந்திப் பத்திரிகையில் எழுதியுள்ளார். இதில் சிம்லாவின் இயற்கைக் காட்சிகளும், அங்கு வாழும் மக்களின் வாழ்வியலும் அழகுற விளக்கப்பட்டுள்ளன (மார்ச்சு 48).

'மகிமையுள்ள மந்திராலயம்' கட்டுரையை எழுதியவர் வை. விட்டல் ராவ் என்பவர். 'ஆனந்த வாணி' என்ற தெலுங்கு இதழில் வந்த கட்டுரை மஞ்சரி (ஜூன் 48) இதழில் வெளிவந்துள்ளது. "மந்திராலயம் என்ற கிராமத்தின் பழைய பெயர் மஞ்சாலி. இது துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்துள்ளது. மந்திராலயம் மாத்வ மதத்தினருக்குப் புண்ணிய க்ஷேத்திரம்" என இக்கட்டுரை மந்திராலயத்தின் பெருமையை விளக்கிச் சொல்கிறது.

'மூன்று தலை லிங்கம்' என்ற கட்டுரையைக் கன்னட இதழான பிரஜாமதம் வெளியிட்டுள்ளது. சோமேசுரர் கோயில் பற்றிய அரிய செய்திகளை இக்கட்டுரையில் காணலாம். எழுதியவர் ஆர்.வி. ரங்கண்ணா என்பவர் (செப். 48) இக்கட்டுரையைத் தமிழாக்கம் செய்துள்ளார்.

வெளிநாட்டு இடங்களைப் பற்றியும் செய்திகள் வெளிவந்துள்ளன. 'நாகரிக பிரான்ஸ்' (டிச. 47, ஜன. 48) என்ற கட்டுரையை எழுதியவர் மதன கோபால் என்பவராவார். "சுகவாழ்வுக்கும் நாகரிகத்திற்கும் பேர் போனது பிரான்ஸ் தேசம். யுத்தத்திலே பிரான்ஸ் சடசட வென்று தோற்றதற்குக் காரணம் அதன் கேளிக்கை வாழ்வுதான் என்று கூடச் சொல்வதுண்டு."

அடிக்கடி மாறுதல் இல்லை என்றால் "அவர்களுக்கு நிம்மதி இருக்காது" என்று இக்கட்டுரையில் பிரான்ஸையும் அந்நாட்டு மக்களையும் படம் பிடித்துக்காட்டியுள்ளார் (டிச. 47, ஜன. 48). 'துயரத்தில் தோன்றிய மாளிகை' என்ற கட்டுரை 'தாஜ்மஹால்' பற்றியதாகும். என். லட்சுமண ராவ் என்பவர் ஓரியண்ட் என்ற ஆங்கில இதழில் எழுதிய கட்டுரையின் மொழியாக்கம் (ஏப்ரல் 48) மஞ்சரியில் வெளியாகியுள்ளது. "20 கோடி ரூபாய் செலவில், 20,000 ஆட்கள் 22 வருடம் கட்டிய எழில் வடிவமே தாஜ்மஹால்" என்ற செய்தியை இக்கட்டுரை வெளிப்படுத்தியுள்ளது.

இவ்வாறு மிகச் சிறந்த இடங்களைத் தமது வாசகர்களுக்கு மஞ்சரி அறிமுகப்படுத்தி அரிய சேவை புரிந்துள்ளது.

## தலைவர் வரலாறு

நம் நாட்டுத் தலைவர்களின் வரலாறுகளையும், அவர்தம் வாழ்க்கையில் நடைபெற்ற சுவையான செய்திகளையும் ஒவ்வொரு இதழிலும் மஞ்சரி வெளிப்படுத்தியுள்ளது. மகாத்மா காந்தியடிகள் வாழ்வுக்கும் வாக்குக்கும் முதன்மை கொடுத்துச் சிறப்பித்துள் ளமையைக் காணமுடிகிறது. 'காந்தி வாழ்வும் வாக்கும்' என்ற பகுதி தொடராக வெளிவந்துள்ளது. முதல் இதழில் இத்தொடரின் முன்னுரையில் "நினைப்பதைச் சொல்லுவார், சொல்வதைச் செய்கையில் காட்டுவார், காந்திஜி. அவர் வாழ்வு நமக்கு வழிகாட்டி. அவர் சொல் நமக்கு அமுதம்" (நவ. 47) என்று ஆசிரியர் விளக்கியுள்ளார். புகழ்பெற்ற தலைவர்கள் அண்ணல் காந்தியடிகளைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்கள் இப்பகுதியில் தொடர்ந்து இடம் பெற்று வந்துள்ளன.

'மறைந்த ஜோதி' என்ற தலைப்பில் காந்தியடிகளுக்கு நினைவாஞ்சலி செய்யப்பட்டுள்ளது. 'உலகத்தின் கண்ணீர்' என்ற தலைப்பில் உலகத் தலைவர்களின் அனுதாபச் செய்திகள் இடம் பெற்றள்ளன. பிரிட்டிஷ் மன்னர், அமெரிக்க ஜனாதிபதி, மவுண்ட்பாட்டன், ராஜாஜி, நிஜாம் பிரதமர், ஐ.நா. கவுன்சில் தலைவர் ஆகியோரது செய்திகள் வெளியிடப்பட்டுள்ளன (மார்ச்சு 48).

'காந்தியும் அரவிந்தரும்' என்ற கட்டுரையை கே. பாஸ்கர மேனன் மாத்ருபூமி இதழில் எழுதியுள்ளார். இக்கட்டுரை மஞ்சரியில் (ஏப். 48) வெளியாகியுள்ளது. இரு பெருந்தலைவர்களையும் ஒப்பாய்வு செய்துள்ளார் இக்கட்டுரை ஆசிரியர். "வாழ்வு, எழுத்து, கருத்து இவற்றிலெல்லாம் வேறுபட்ட இந்த இருவருக்குமிடையே ஒரு லட்சிய ஒற்றுமையும் இருக்கிறது. . . முன்னேற்றத்துக்காகக் காத்து நிற்கும் மக்களுக்கு இருவரும் அபயம் அளித்தார்கள். இது உலகறிந்த விஷயம்" என்று கூறுகின்றது இக்கட்டுரை (ஏப். 48).

இனி மற்ற தலைவர்களைப் பற்றி மஞ்சரியில் வெளிவந்த செய்திகளைக் காண்போம். அல்லும் பகலும் உழைக்கும் நேரு (பிப். 48), இந்தியாவின் பிஸ்மார்க் (ஏப். 48), ஏடு தேடிய கிழவர் (டிச. 47, ஜன. 48), ஞானி ராஜாஜி (ஜூன் 48), பெஸன்டின் பெருந்தன்மை (நவ. 47), மகாகவி பாரதியார் (செப். 48), ராஜாஜி (டிச. 47, ஜன. 48), சுவாமி

ராமானந்தர் (நவ. 48), நாகராணி (டிச. 47, ஜன. 48), வழிகாட்டிய வீரேசலிங்கம் (மே 48) ஆகிய கட்டுரைகள் மக்களுக்காகப் பாடுபட்ட தலைவர்களைப் பற்றியதாகும்.

'பெஸண்ட்டின் பெருந்தன்மை' என்ற கட்டுரையை எழுதியவர் ஜி.ஏ. நடேசன் என்பவராவார். அன்னி பெஸண்ட்டின் அருங்குணங்களை இக் கட்டுரையில் எழிலுற விளக்கியுள்ளார். அடையார் ஆல்காட் பஞ்சமர் பள்ளிக்கூடத்தில் நடந்த நிகழ்ச்சி அம்மையாரின் அருங்குணத்திற்கு எடுத்துக்காட்டாகும். பஞ்சமர் (ஹரிஜன்) என்ற சொல்லை முதலில் பயன்படுத்தியவர் அன்னி பெஸண்ட்தான். ஒருமுறை பஞ்சமர் ஊழியர்களுக்குத் தரவேண்டிய காசைக் குமாஸ்தா வீசி எறிந்தார். அம்மையார் இதைக் கண்டு மனம் பதைத்தார். ஆனால் குமாஸ்தாவைக் கோபிக்கவில்லை; வேறுவழியில் பரிகாரம் தேடிவிட்டார். அடுத்த மாதம் ஊதியத்தைப் பொட்டலமாகக் கட்டி அம்மையாரே ஊழியர்களுக்கு வழங்கினார். அன்று முதல் ஹிந்துக்கள் பஞ்சமரிடம் அநுதாபத்துடன் நடந்து கொண்டனர் என்று இக்கட்டுரை எடுத்துக்காட்டுகின்றது (நவ. 47).

'மகாகவி பாரதியார்' என்ற வ.ரா.வின் புத்தகத்திலிருந்து ஒருபகுதி மஞ்சரியில் வெளியாகி உள்ளது. இக்கட்டுரையின் முன்னுரை வருமாறு. வ.ரா.வைக் கௌரவிப்பது தமிழ் மறுமலர்ச்சியைக் கௌரவிப்பதைப் போல. அதற்கு அவர் செய்துள்ள சேவை இணையற்றது. நிதிக்குப் பணம் அனுப்புவோர், டி. சதாசிவம், கல்கி, சென்னை என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும்" என்று ஒரே நேரத்தில் பாரதியாரைப் பற்றியும், அவரைப் போற்றிய வ.ரா.வைப் பற்றியும் எழுதிப் பெருமைப்படுத்தியுள்ளது (செப். 48).

'ஞானி ராஜாஜி' என்ற கட்டுரை ஆசிரியரால் எழுதப்பட்டதாகும். ராஜாஜியின் சிறப்பியல்புகளை இக்கட்டுரை எடுத்துக்காட்டுகிறது (ஜூன் 48).

'வழிகாட்டிய வீரேசலிங்கம்' என்ற கட்டுரை, நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்ட சமூக சீர்த்திருத்தவாதியைப் பற்றியதாகும். விதவை மணத்தை ஆதரித்தவர். 'வீரேசலிங்கம் பந்தலு' என்ற இவரைப் பற்றிப் பாரதியாரும் தம்முடைய 'சந்திரிகை'யில் வெகுவாகப் பாராட்டி எழுதியுள்ளார் என்று கட்டுரை ஆசிரியர் தரிசி சு. பத்திரம்ம சாரு குறிப்பிடுகிறார் (மே 48).

'நாகராணி' - சுதந்திரப் பலிபீடத்தில் தன்னைத் தியாகம் செய்து கொண்ட நாகப் பெண்மணி. இவர் பெயர் ராணி கிடாலோ என்பதாகும். மலைஜாதியைச் சேர்ந்த வீரமகளின் வாழ்க்கை ஒரு கவிதையாகும் என்று கட்டுரை ஆசிரியர் பிரபுல்ல தத்த கோஸ்வாமி பாராட்டுகின்றார் (டிச. 47, ஜன. 48). 'மறக்க முடியாத வீரர்' என்ற கட்டுரை மாவீரன் பகத்சிங் பற்றியதாகும். பிராணநாத் மேத்தா என்பவர் பகத்சிங்குடன் தனக்குள்ள நட்பின் அடிப்படையில் எழுதியுள்ளார்.

## அறிவியல் செய்திகள்

விஞ்ஞானம் என்ற பெயரில் அறிவியல் செய்திகள் மஞ்சரியில் இடம் பெற்றுள்ளன. 'நெருங்கி வரும் செவ்வாய்' (நவ. 48), பாக்கெட் ரேடியோ (மே 48), புயல் ஹேஷ்யம் (நவ. 47), மூக்கின் மகத்துவம் (ஆகஸ்டு 48), வால் நட்சத்திர அற்புதம் (ஜூன் 48), விஞ்ஞானம் வளர்ந்த கதை (டிச. 47, ஜன. 48), வேதத்தில் வானசாஸ்திரம் (நவ. 47), வேர்க்கடலையின் வருங்காலம் (நவ. 48) போன்ற தலைப்புக்களில் அறிவியல் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

'வேதத்தில் வான சாஸ்திரம்' என்ற கட்டுரை (நவ. 47) மஞ்சரியின் முதல் இதழில் வெளியாகியுள்ளது. அக்கட்டுரையின் முன்னுரை வருமாறு. "புதிது புதிதாக வான சாஸ்திரிகள் கண்டு பிடிக்கும் உண்மையெல்லாம் அநாதியான நம் வேதங்களில் அற்புத சித்ரங்களாகக் காணப்படுவது ஆச்சர்யம்" என்று வியக்கிறது (நவ. 47).

'விஞ்ஞான அதிசயம்' என்ற தலைப்பில் மிகப்பெரிய அணுகுண்டு, குப்பையிலிருந்து பெட்ரோல், புதிய புதிய உணவுப் பயிர்கள் சிருஷ்டி, பூமியின் சீதோஷணத்தையே மாற்றலாம், பத்து லட்சம் விதங்களாய் மாறும் பூட்டு, இரண்டு வாசல் எலிப்பொறி ஆகியவற்றை விளக்கும் செய்திகள் (நவ. 47) மஞ்சரியில் வெளியிடப் பட்டுள்ளன. 'புயல் ஹேஷ்யம்' வானிலை அறிக்கை பற்றிய கட்டுரை (நவ. 47) முதல் இதழில் வெளியாகியுள்ளது.

## மருத்துவப் பகுதி

உடல்நலம் பேணும் மருத்துவப் பகுதி மஞ்சரியில் இடம் பெற்றுள்ளது. பல்வேறு துறைச் செய்திகள் இப்பகுதியில் வெளியிடப்பட்டுள்ளன.

'அரிசியே மருந்து' (மே 48), 'உடம்பின் கவசம்' (ஜூலை 48), 'உடம்பு பருத்தால்' (அக். 48), 'இஷ்டமும் சிகிச்சையும்' (ஆகஸ்டு 48),

'சிக்கலுக்கு வைத்தியம்' (ஜூலை 48), 'பரவிவரும் க்ஷயம்' (நவ. 48), 'மயக்க மருந்து' (பிப். 48), 'முறைத்தலைவலி' (மே 48), 'விஷமே மருந்து' (ஜூன் 48), 'மலரே மருந்து' (ஆகஸ்டு 48), 'வைத்தியருக்குச் சம்மானம்' (மார்ச்சு 48) ஆகிய தலைப்புக்களில் மருத்துவச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

'உடம்பின் கவசம்' என்ற கட்டுரையை எஸ். தம்பையா எழுதியுள்ளார். தோல் மருத்துவம் தொடர்பான கட்டுரை மஞ்சரியின் ஜூலை 48 இதழில் வெளிவந்துள்ளது. "மனித உடம்பைப் போர்த்திருக்கும் இயற்கைக் கவசம் அதுதான் எத்தனை அலுவல்களைப் புரிகிறது" என்று முன்னுரை வியப்பை வெளிப்படுத்துகிறது (ஜூலை 48).

'மயக்க மருந்து' என்ற கட்டுரையை என்.என். டே எழுதியுள்ளார். இக்கட்டுரை மஞ்சரி (பிப். 48) இதழில் வெளியாகியுள்ளது. ஆபரேஷன் போது தரப்படும் மயக்க மருந்துத் துறையின் வளர்ச்சியை இக்கட்டுரை விளக்குகிறது.

'உடம்பு பருத்தால்' என்ற கட்டுரை ஆங்கில இதழான, 'வுமன் அண்ட் ப்யூட்டி'யிலிருந்து மொழிமாற்றம் செய்யப்பட்டுள்ளது. உடல் பருமனுக்கான காரணங்களை விளக்கும் போது, ". . . ஆனால் வேறு எந்தக் காரணம் சரியாக இருந்தாலும் சரி, தவறாக இருந்தாலும் சரி அதிகமாய்ச் சாப்பிடுவது மட்டும் நிச்சயமாக அதிக பருமனுக்குக் காரணம் என்பதை எல்லா டாக்டர்களும் ஒப்புக் கொள்வார்கள்" என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (அக். 48).

## மனோதத்துவம்

உளவியல் தொடர்பான சில கட்டுரைகள் மஞ்சரியில் இடம் பெற்றுள்ளன. 'ஆசை தீர்க்கும் கனவு' (செப். 48), 'இந்தப் பெண்கள்' (செப். 48), 'பிசாசு ஓட்டிய பட்டர்' (பிப். 48), 'மன நோயின் குறிகள்' (மார்ச்சு 48), 'மனம் குழம்புவது ஏன்' (மே 48) ஆகிய கட்டுரைகள் உளவியலைச் சார்ந்தனவாகும். 'இந்தப் பெண்கள்' என்ற கட்டுரையில், "பெண்கள் பூனைகள். அவர்களுக்குச் செல்லம் கொடுக்கக் கொடுக்க மேலும் மேலும் அவர்கள் சண்டித்தனம் செய்கிறார்கள். சரியான சமயத்தில் சிறிது கண்டிப்பாய் நடந்து கொண்டால் போதும். அவர்களைக் கொண்டு அற்புதங்களை நிகழ்த்தி விடலாம். . . . அவர்களோடு வாக்குவாதம் மாத்திரம் செய்யாதீர்கள். அதனால் உங்கள் நேரம்தான் வீணாகும். தவிர அவர்களுக்கு எரிச்சலும் மூளும்" என்று ஆசிரியர் ரஞ்ஜி ஜி. சாஹனி குறிப்பிடுகின்றார் (செப். 48).

## திருவிழாக்கள்

இந்தியாவில் கொண்டாடப்படும் மூன்று திருவிழாக்களைப் பற்றிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. 'ஓணத்தின் உட்கருத்து' (அக். 48), 'நாகபஞ்சமி' (ஏப். 48), 'மார்தட்டும் பண்டிகை' (மார்ச்சு 48) என்ற விழாக்களைப் பற்றிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன. கேரளாவில் நடைபெறும் ஓண விழா பற்றிய கட்டுரை மலையாள இதழான மாத்ருபூமியிலிருந்து எடுத்து மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'மார்தட்டும் பண்டிகை' முஸ்லீம் பண்டிகையான 'மொகரம்' பற்றி விளக்குகின்றது. 'நாகபஞ்சமி' நாக வணக்கத்தைக் குறிக்கும் நாளாகும்.

## சிறுகதை

தேர்ந்தெடுக்கப்பட்ட மிகச் சிறந்த சிறுகதை மஞ்சரியின் ஒவ்வொரு இதழிலும் வெளியிடப்பட்டுள்ளது. மஞ்சரியில் இடம் பெற்றுள்ள சிறுகதைகள் பற்றிய விவரம் வருமாறு:

| இதழ் | சிறுகதைகள் | எழுதியவர் |
|---|---|---|
| நவம்பர் 47 | கைதியின் பேட்டி | முல்க்ராஜ் ஆனந்த் மொழிபெயர்த்தவர்: இலங்கை எழுத்தாளர் கே. கணேஷ் |
| டிசம். ஜன. 48 | புதுநாவல் | லக்ஷ்மணராவ் ஸர்தேசாயி |
| பிப். 48 | விருந்தாளி | ஜணமஞ்சி ராமகிருஷ்ணா |
| மார்ச்சு 48 | ரத்த சமர்ப்பணம் | ஸோபன் |
| ஏப்ரல் 48 | முயல் | ரஜத் ஸேன் |
| மே 48 | சிட்டுக்குருவிகள் | கே.ஏ. அப்பாஸ் |
| ஜூன் 48 | உடைந்த பொம்மை | வி. பைரப்பா |
| ஜூலை 48 | தேவகன்னிகை | ராவி |
| ஆகஸ்டு 48 | நாஸ்திகன் | வித்தியாபதி |
| செப். 48 | ஏற்றிய விளக்கு | மஞ்சேரி ஈஸ்வரன் |
| அக். 48 | நெ.1 | ரவீந்திரநாத் டாகுர் |
| நவ. 48 | ராஜாவின் துணிப்பித்து | ஆண்டெர்ஸன் |

ஒவ்வொரு கதையும் அந்த மண்ணின் மனங்கமழும் வண்ணம் சிறப்புற அமைந்துள்ளன.

## கலை, சிற்பம் முதலியன

கலைப் பகுதியும் மஞ்சரியில் உண்டு. ஆடற்கலைக்குச் சிறப்பிடம் கொடுத்து மூன்று கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன. 'நாட்டியக் கலை' (ஜூன் 48), 'பரத நாட்டியம்' (நவ. 48), 'ஆந்திர பரத நாட்டியம்' (அக். 48) ஆகிய மூன்று கட்டுரைகளும் நாட்டியத்தின் சிறப்பை உணர்த்துகின்றன. 'அலங்காரப் பொருள்கள்' (ஏப்ரல் 48), 'பழங்காலத்து நகைகள்' (ஜூலை 48), 'கலைகளின் மூல தர்மம்' (மார்ச்சு 48) போன்ற கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. 'விநோதப் படங்கள்' என்ற கட்டுரை கார்ட்டூன் படங்கள் வரைவதைப் பற்றி விளக்குகின்றது (அக். 48).

'கண்டெடுத்த விக்கிரகங்கள்' (ஏப். 48), 'கலைக்கோயில் லேபாக்ஷி' (நவ. 48) ஆகிய கட்டுரைகள் சிற்பக்கலையின் சிறப்பை உணர்த்துவனவாகும். 'கண்டெடுத்த விக்கிரகங்கள்' கட்டுரையை எழுதியவர் விரஜ நாத கடக் என்பவர்.

விலங்குகளைப் பற்றிய கட்டுரைகளும் துணுக்குச் செய்திகளும் இடம்பெற்றுள்ளன. 'மலையாளத்து யானை' என்ற கட்டுரை கேரளாவில் புகழ் பெற்ற யானையான கோபாலனைப் பற்றியதாகும் (மே 48). 'வாலின் கதை' என்ற கட்டுரை விலங்குகளின் வால்களைப் பற்றிய செய்திகளை ஆராய்கின்றது (செப். 48). 'பசுவும் எருமையும்' என்ற கட்டுரை பசு வளர்ப்பது நல்லதா எருமை வளர்ப்பது நல்லதா? என்பது பற்றி விளக்குகிறது (ஏப். 48).

விளையாட்டுக்களைப் பற்றிய கட்டுரைகள் ஒரு சில இடம் பெற்றுள்ளன. 'கிரிக்கெட் இந்தியாவுக்கு வந்தது', 'ரேஸ் குதிரை', 'வேட்டைக்காரியின் அனுபவம்' ஆகிய கட்டுரைகள் இவ்வகையைச் சார்ந்தன. தபால்தலை சேகரிப்போர் பற்றிய கட்டுரை மஞ்சரி (செப். 48) இதழில் வெளிவந்துள்ளது.

## பெண்கள் - குழந்தைகள்

மஞ்சரியை அறிமுகப்படுத்தும் பொழுது ஆசிரியர் குறிப்பிட்டது ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும். "உங்கள் சுவை எதுவானாலும் அதற்கு ஏற்ற பொருள் 'மஞ்சரி'யில் இருக்கிறது. உங்களுக்கு என்ன பிடிக்கும்? பெண்களைப் பற்றிப் பிடிக்குமா? 9ஆம் பக்கத்தைப் பாருங்கள். ஒவ்வொரு தாய் தந்தையும் 28,29ஆம் பக்கங்களைப் படிக்க விரும்புவீர்கள். . . ." (நவ. 49). முதல் இதழிலே

பெண்களுக்குச் சிறப்புக் கொடுத்த இதழ் மஞ்சரியாகும். அதோடு நிற்காமல் ஆசிரியர் குழுவில், குமுதினி, கி. சாவித்திரி அம்மாள், சீதாதேவி, கௌரி அம்மாள் ஆகிய மிகச் சிறந்த பெண்மணிகள் இடம் பெற்றிருந்தமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

'பெண்ணே உன் அழகு' (நவ. 47), 'பெண்ணுக்கு எதிரி பெண்ணே' (பிப். 48), 'பெண்களின் முன்னணி' (ஜூலை 48), 'ஜப்பானில் பெண்கள் விழிப்பு' (அக். 48), 'சுகப்பிரசவம்' (ஏப். 48), 'பால் கொடுக்கும் தாய்' (ஜூலை 48) ஆகிய கட்டுரைகள் பெண்களின் பல்வேறு பரிணாமங்களை விளக்குகின்றன. இவை தவிர 'குழந்தைகள் குறும்பு' என்ற தொடர் ஒவ்வொரு இதழிலும் உண்டு. இதில் வாசகர்கள் தங்கள் கருத்துக்களை விருந்தாக்கி வந்துள்ளனர். பல்வேறு குழந்தைகள், பல்வேறு பெற்றோர், அவர்களுடைய பல்வேறு அனுபவங்கள் என இப்பகுதி மிக்க சுவையாகத் திகழ்ந்துள்ளது. 'பெண்ணே உன் அழகு' என்ற கட்டுரையை சுவாமி வித்யானந்தர் என்பவர் எழுதியுள்ளார்.

'பெண்ணுக்கு எதிரி பெண்ணே' என்ற கட்டுரையை எழுதியவர் வஸுந்தரா என்பவர். இக்கட்டுரையின் முன்னுரை, பெண்கள் எப்படி முன்னேறுவது? ஆண்கள்தாம் அதற்குத் தடையா? இல்லை என்கிறார் இந்தப் பெண்மணி.. பெண்கள் முன்னேறச் சில யோசனைகளையும் கூறியுள்ளார். 'பெண்களின் முன்னணி' என்ற கட்டுரையை ஸரலா பாடண்கர் என்பவர் எழுதியுள்ளார். "எத்தனை இயக்கங்கள் நடந்தாலும் இன்னமும் பெண்கள் வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடக்கிறார்கள். இந்த நிலை மாற என்ன வழி?" என்ற தம் கவலையை அவர் இக்கட்டுரையில் வெளிப்படுத்தியுள்ளார்.

'சுகப் பிரசவம்' என்ற கட்டுரையில் ஒரு தாய் தன் அநுபவத்தை எழுதியுள்ளார். அதில் அவர் பிரசவம் பற்றிய வீணான கவலைகள் தேவையற்றவை என்று தெளிவுபடுத்தியுள்ளார். 'பால் கொடுக்கும் தாய்' என்ற கட்டுரையை எழுதியவர் ஜின் டூப்ளே ஆவார். இளந்தாய்மார்கள் பின்பற்ற வேண்டிய அறிவுரைகள் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன.

'குழந்தையின் பழக்கம்' என்ற கட்டுரையை டொராதி ஸ்டில்லிங்ஸ் என்பவர் 'பேரண்ட்ஸ் மகஸின்' என்ற ஆங்கில இதழில் எழுதியுள்ளார். குழந்தைகளின் பழக்கங்கள் பற்றியும், அவற்றுள் உள்ள கோளாறுகளை நீக்குவது பற்றியும் இக்கட்டுரை

விவரிக்கின்றது. "குழந்தையிடம் அன்பு மட்டும் உண்மையாகவும், ஒரேமாதிரியாகவும் இருக்கட்டும். தானே குழந்தை சரியாகி விடும். கோளாறெல்லாம் பறந்து விடும்" என்று முத்தாய்ப்பாகக் கூறி முடிக்கிறது இக்கட்டுரை (மார்ச்சு 48). "குழந்தைகளில் நமக்கு அளவற்ற அன்பு. என்றாலும் வளர்க்கத் தெரியாமல் கெடுக்கிறோம். சரியாக வளர்க்கும் வழி எது?" என்ற முன்னுரையுடன், 'குழந்தையைக் கெடுக்காதீர்கள்' என்று கட்டுரை தொடங்குகிறது.

'குழந்தைகள்-குறும்பு' என்ற தொடர் சுவையானது. பல பெற்றோர் தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கின்றனர். இத்தொடரை அறிமுகப்படுத்திய ஆசிரியர் கூறும் விளக்கம் வருமாறு. "குழந்தைகளின் ரசமான பேச்சு, செயல்களை இங்கே உதாரணம் தந்திருக்கிறோம். இவை போன்ற துணுக்குகளைத் தாங்கள் கண்டு, கேட்ட அனுபவங்களிலிருந்து யாரும் நமக்கு அனுப்பலாம். பிரசுரிக்க அங்கீகரித்த ஒவ்வொரு துணுக்கும் 2 ரூபாய் சன்மானம் அளிக்கப்படும். பிரசுரிக்கப்படாதவை திருப்பி அனுப்பப் படமாட்டா. அவை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது" என்று அறிவித்துள்ளார். மஞ்சரியில் வாசகர்கள் பங்கேற்க அறிவிக்கப் பட்ட முதல் அறிவிப்பு இதுதான்.

இறுதியாக ஒரு சுவைமிக்க கட்டுரையைக் காண்போம். 'பெண்களின் மாளாத பேச்சு' என்ற கட்டுரையை என்.என். ஸேட் என்பவர் 'ஆன்வர்டு' இதழில் எழுதியுள்ளார். இக்கட்டுரைக்கான முன்னுரை எச்சரிக்கையாக அமைந்துள்ளது. "இது வீண் பழியா? அல்லது உண்மையா? இதைச் சொல்வது அபாயம்-படிக்க ரசமாயிருக்கிறது. படிக்க வேண்டும் பெண்களும்கூட" என்று கூறுகிறது முன்னுரை. கட்டுரையின் ஒருபகுதி வருமாறு. "அதாவது எந்த விஷயம் பற்றியும் சில புருஷர்கள் மணிக்கணக்காய்ப் பேசுவார்கள். ஆனால் ஒரு விஷயமும் இல்லாமலே சகல பெண்களும் மணிக்கணக்காய்ப் பேசுவார்கள். இது பெண்களின் விசேஷம். . ." எனவே பெண்களின் மாளாத பேச்சுக்கு அவர்களின் மனத்துக்குள்ளே தாங்கள் தாழ்ந்தவர்கள் என்ற மனோவியாதி பிடித்திருப்பதே காரணமாக இருக்குமோ" என்கிறார் இக்கட்டுரை ஆசிரியர்.

## நாடும் மக்களும்

இப்பகுப்பில் நாட்டு மக்களிடையே காணப்படும் மாறுபட்ட பண்பாடுகள், பழக்க வழக்கங்கள் குறித்து வெளியிடப்பட்ட கட்டுரைகள் பற்றிக் காண்போம்.

'அமெரிக்கப் பொதுஜனம்' என்று கட்டுரை, அமெரிக்க மக்களின் வாழ்க்கையை எடுத்துக்காட்டுவதாகும். இக்கட்டுரை ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த அமெரிக்கர்களையும் அவர்களுடைய குண நலன்களையும் இன்றைக்கு உள்ளவர்களோடு ஒப்பிட மிகவும் துணை செய்யும். அக்கட்டுரையிலிருந்து சில பகுதிகள். "அமெரிக்காவில் ஆணும் சரி பெண்ணும் சரி 10இல் 6 பேர் சிகரெட் புகைக்கிறார்கள். மதுபானம் செய்கிறார்கள். ஆனாலும் தாங்கள் ஆரோக்கியமாயிருப்பதாகவே சொல்லுகிறார்கள். . . . 100இல் 96 பேர் கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள். 100இல் 76 பேர் மரணத்திற்குப் பின் வாழ்வு உண்டு என்று நம்புகிறார்கள். . . 10இல் 6 பேர் சற்றுக் கறுத்த பெண்களை விரும்புகிறார்கள். 10இல் 3 பேர் தாம் செம்பட்டை நிறப் பெண்களை விரும்புகிறார்கள். பாதி பேர் சிவப்பான பெண்களையே விரும்புகிறார்கள்" என்று இக்கட்டுரை அமெரிக்கப் பொதுஜனம் பற்றிப் பறைசாற்றுகிறது (நவ. 47). மஞ்சரியின் முதல் இதழில் வெளிவந்த இக்கட்டுரையை ஒட்டி வாசகர்களுக்கு ஒரு போட்டி அறிவிக்கப்பட்டது. 'தமிழ் நாட்டுப் பொதுஜனம்' என்ற தலைப்பில் கட்டுரை எழுதி அனுப்புமாறு அறிவிப்புச் செய்தனர். பரிசு ரூ.25 எனவும் அறிவித்திருந்தனர். மஞ்சரியின் ஜூலை மாத இதழில் போட்டி முடிவுகள் அறிவிக்கப்பட்டன.

போட்டி முடிவுகள் பின்வருமாறு அறிவிக்கப்பட்டிருந்தன. "மஞ்சரி முதல் இதழில் வெளியிட்டிருந்த கட்டுரைப் போட்டிக்கு வந்த கட்டுரைகளில் எதுவும் முழுப் பரிசுக்கு உரியது அல்ல என்பது ஆசிரியர்கள் முடிவு. ஆனால் போட்டிக்கு வந்த ஐந்து கட்டுரைகளில் உள்ள சில வாசகங்கள் மட்டும் ரசமாயிருக்கின்றன. அவற்றைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறோம். அந்த ஐந்து கட்டுரையாளர் களுக்கும் பரிசுத்தொகையைச் சமமாகப் பகிர்ந்து ஆளுக்கு ஐந்து ரூபாய் வீதம் சன்மானம் அனுப்ப முடிவு செய்துள்ளோம் - ஆசிரியர்" என்று நீண்ட முன்னுரையுடன் பரிசுக்குரியோர் பெயர்களும், அவர்கள் எழுதிய வாசகங்களும் வெளியிடப்பட்டுள்ளன.

### திருமணங்கள் பலவிதம்

நம் நாட்டு அயல்நாட்டு மணங்கள் தொடர்பான சில கட்டுரைகள் வெளிவந்துள்ளன. 'கல்யாண வேடிக்கைகள்' என்ற கட்டுரையைச் சீதம்மகாரு எழுதியுள்ளார். மலைஜாதியாரின் திருமண

முறை இக்கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது. திருமணத்தின் முன்பு நடனம் ஆடுவார்கள். ஆண் பெண்ணை அழைத்துக் கொண்டு ஓடிவிடுவதும் உண்டு. பின்னர் பெற்றோர் திருமணம் செய்துவைப்பார்கள். ஆணுக்குச் சுயம்வரம் உண்டு.

'வால்மீகிகள்' என்ற பிரிவினரிடையே மணமகன் மணமகளைக் காலால் எட்டியுதைப்பான். ஒருபிரிவினரிடையே நடைபெறும் விநோத நிகழ்ச்சி வருமாறு: "மணமகளின் தாயின் விரலைத் தட்டானை விட்டு வெட்டி எடுப்பார்கள். பெண்ணுக்குத் தாய் இல்லாவிட்டால் ஆணின் தாய் மாட்டுவாள்". இக்கட்டுரை மஞ்சரி (ஏப்ரல் 48) இதழில் வெளிவந்துள்ளது. அடுத்து ஒரு வெளிநாட்டுத் திருமணத்தைக் காண்போம். 'மணமாகாதவர் தொல்லை' என்ற கட்டுரையை எழுதியவர் ஆர்.டி. ஸாஹனி ஆவார். இக்கட்டுரையில் திருமணமாகாத பெண்பற்றிக் கூறுகையில், "வயதாகியும் கன்னிகையாக இருக்கும் பெண்ணை ஒரு நாட்டினர் தபாலில் போடாத கடுதாசிக்கு ஒப்பிடுகிறார்கள்". ருஷ்யாவில் பிரம்மச்சாரியைக் "குளிர்காலத்தில் குல்லா இல்லாமல் திரிபவனுக்கு ஒப்பிடுகிறார்கள்" (நவ. 48). 'விசித்திரக் கலியாணம்' என்ற கட்டுரை ஜெர்மானியர்களின் திருமண முறையை விளக்குகின்றது. "ஷாம் பெர் லிப்பி என்னுமிடத்தில் மணப்பெண்ணின் வண்டியில் பேய் பிசாசுகளை விரட்ட நிலைக்கண்ணாடிகள் பதித்திருப்பார்கள். பல பிரதேசங்களில் அந்த வண்டியில் ஒரு விளக்குமாற்றையும் செருகியிருப்பார்கள்" என்கிறார் இக்கட்டுரை ஆசிரியர் (டிச-ஜன. 48).

'நூறாண்டு வாழ வழி' என்ற கட்டுரை மனிதனின் ஆயுள் பற்றிய புள்ளி விவரத்தைத் தருகிறது. ஜெனிவாவில் மக்களின் சராசரி வயது வருமாறு:

16ஆம் நூற்றாண்டில் சராசரி வயது 21

17ஆம் நூற்றாண்டில் சராசரி வயது 26

18ஆம் நூற்றாண்டில் சராசரி வயது 34

அமெரிக்காவில் சராசரி வயது வருமாறு:

| | |
|---|---|
| 1879இல் 35 | 1897இல் 45 |
| 1890இல் 43 | 1938இல் 61 |

என்ற இப்புள்ளி விவரக் கணக்கு பிப்ரவரி 48 இதழில் வெளியானது.

## தொடர்கள்

மஞ்சரியில் சில பகுதிகள் முதல் இதழிலிருந்தே தொடர்களாக வருகின்றன. 'காந்தி வாழ்வும் வாக்கும்' என்ற தலைப்பில் காந்திஜி பற்றிய செய்திகள் தொடராக வந்துள்ளன. 'எது சரி'? என்ற தொடர் வாசகரின் தமிழறிவை வளர்ப்பதாக உள்ளது. சொல் பொருந்துமா? என்ற தொடரும் வாசகருக்கான புதிர்தான். 'குழந்தைகளின் குறும்பு' வாசர்களின் பங்களிப்போடு தொடராக வெளியிடப்பட்டுள்ளது. 'நகைச்சித்திரம்' பிற மொழிகளில் வெளியான நகைச்சுவைப் படங்கள் எல்லா இதழ்களிலும் தொடர்ந்து வெளிவந்துள்ளது. 'பொய் நம்பாதீர்' என்ற தலைப்பில் சமுதாயத்தில் தவறாக நம்பப்படும் செய்திகள் பொய்யானவை என்பதற்கான ஆதாரங்களுடன் இப்பகுதி சுவாரஸ்யமானதாக விளங்குவதாகும். சான்றாக, 'யானைகளின் வயசு நூறு' என்பது நம்பிக்கை. அது பொய். யானையின் சராசரி வயது 60 முதல் 65 வருஷங்களே. 'பாம்புகள் சங்கீதத்தை அனுபவிக்கும்' என்பது நம்பிக்கை. பாம்புகளுக்குக் காதே கேட்பதில்லை. இது போன்ற செய்திகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன (நவ. 47). 'பாபுராவ் பதில் சொல்கிறார்?' பகுதி கேள்வி பதில் முறையில் உள்ளது. வாசகர்கள் கேள்விக்குப் பாபுராவ் பதிலளிக்கிறார். ஃபிலிமிண்டியா என்ற சினிமாப் பத்திரிகையின் ஆசிரியரான இவர் எல்லாவிதமான கேள்விகளுக்கும் பதில் அளித்துள்ளார். இவை தவிர விசேஷப் பகுதிகள் என்ற பெயரில் ஒவ்வொரு இதழிலும் துணுக்குச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவை பலதரப்பட்ட செய்திகளாக அமைந்துள்ளன. இவ்வாறு மஞ்சரி அனைத்துத் தரப்பு வாசகர்களையும் தன் பக்கம் ஈர்க்கும் வண்ணம் பொலிவுடன் வெளிவந்துள்ளது.

ஆசிரியர் தி.ஜ. ரங்கநாதன் அவர்களும், அவருடன் பணியாற்றிய ஆசிரியர் குழுவும் பெரிதும் பாராட்டிற்குரியோராவர். அவர்களது பன்மொழி ஆற்றலால் தமிழர் பெரிதும் பயன் பெற்றனர். அவர்கள் அமைத்துத் தந்த அடித்தளத்தின் மேல் மஞ்சரி என்ற கோபுரம் 50 ஆண்டுகளைக் கடந்து சிரஞ்சீவியாக வளர்ந்து வருகின்றது. இதற்குப் பின்னர் இதே முறையில் தோன்றிய பல பத்திரிகைகள் காணாமல் போயின. தன்னந்தனியாக வெற்றி உலா வரும் மஞ்சரியின் வெற்றிக்கு அதன் கொள்கைப் பிடிப்பே காரணம் எனலாம். அண்ணல் காந்தியடிகள் காலமானபோது அதுகுறித்துக் கட்டுரை எழுதியும், அவரது வாழ்க்கையைத் தொடராகத்

தொகுத்தளித்தும் தன் பக்தியைக் காட்டிய மஞ்சரி, அட்டைப் படத்தில் அவர் படத்தை அப்போதும் அதற்குப் பின் வந்த இதழ்களிலும் போடவில்லை. மஞ்சரியின் கொள்கையை விளக்கும் அட்டைப் படங்களே தொடர்ந்து வெளியாயின. இது மஞ்சரியின் கொள்கைப் பிடிப்புக்கு ஒரு சான்றாகும். ஓராண்டு இதழ்களில் உள்ள செய்திகள் அனைத்தும் சுவையானவை.

## குறிப்புகள்

1. மஞ்சரி, நவ.47-அக். 48 வரையிலான பன்னிரண்டு இதழ்கள்
2. மஞ்சரி, ஜூன் 1997

   மஞ்சரியின் முதல் இதழ், நவம்பர் 47, இலங்கை மானா
3. மஞ்சரி, பொன்விழா - தீபாவளி மலர் 1997; ஆர். வேங்கடராமன்
4. மஞ்சரி, ஜனவரி 1998; '50ஆம் ஆண்டிலும் வாடாமலர்கள்'; மஞ்சரியின் இரண்டாம் இதழில் கொய்தவர்: இலங்கை மானா

# அமுதசுரபி

## ஆ. கந்தசாமி

பண்டிதர்க்கு மட்டுமே விளங்கும்படியாக இருந்த இலக்கியங்களைப் பாமரர்களுக்கும் எடுத்துக்கொடுத்த பெருமை இலக்கிய இதழ்களையே சாரும்.

இலக்கியக் கட்டுரைகளையும் இலக்கணங்களையும் தாங்கிவந்த இதழ்கள் இலக்கிய இதழ்கள் எனப்பட்டன. பிற்காலத்தில் இலக்கிய இதழ்களில் சிறுகதை, தொடர்நாவல், நாடகம், கவிதை போன்றவையும் வெளிவரலாயின. இத்தகைய முக்கிய முயற்சியை முதன்முதலில் செய்த பெருமை மணிக்கொடியையே சாரும். இலக்கிய இதழ்களை இந்திய விடுதலைக்குமுன் முகிழ்த்தவை; விடுதலைக்குப் பின் தோன்றியவை என இரு வகையாகப் பிரிக்கலாம்.

### விடுதலைக்கு முன்னர்த் தோன்றிய இதழ்கள்

1902இல் மதுரைத் தமிழ்ச்சங்கம் 'செந்தமிழ்', 1923இல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் - 'செந்தமிழ்ச் செல்வி', 1925இல் கரந்தைத் தமிழ்ச்சங்கம் - 'தமிழ்ப் பொழில்', 1933இல் 'மணிக்கொடி', 1934இல் 'சூறாவளி', 1939இல் 'சக்தி', 1943இல் 'கிராம ஊழியன்', 1945இல் 'காலமோகினி' முதலிய இதழ்கள் தோன்றின.

தனித்தமிழ் இயக்க இதழ்களாக அறிவுக்கடல், தென்மொழி, தமிழ்ச்சிட்டு, முதன்மொழி, மாணாக்கன், கைகாட்டி, அறிவு, தமிழ்ப்பணி முதலிய இதழ்களும் தோன்றியுள்ளன.

### விடுதலைக்குப் பின்னர் முகிழ்த்தவை

சிந்தனை (1947), அமுதசுரபி (1948), தேனி (1948), கலைமகள், காதம்பரி (1949), சரஸ்வதி (1948), புலமை, ஆராய்ச்சி போன்ற இதழ்கள் விடுதலைக்குப் பின்னர்த் தோன்றி இலக்கியப் பணியாற்றின. புதுக்கவிதைக்கும் விமர்சனத்திற்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்து 1959இல் எழுத்து தொடங்கியது.

## புதுக்கவிதைக்கெனத் தோன்றியன

நோக்கு (1964), கவிஞன் (1969), வானம்பாடி (1972), வண்ணங்கள் (1972), பனித்துளிகள் (1973), 'ஐ' (1973), தெருக்கூத்து (1974) முதலியன புதுக்கவிதை வளர்ச்சிக்கெனத் தோன்றியன.

## ஆய்வுப்பகுதி

இவற்றுள் இலக்கிய இதழ்கள் என்ற வகையில் 'அமுதசுரபி'யைப் பற்றி ஆய்வது இக்கட்டுரையின் நோக்கம். 1954, 1955, 1956 ஆக மூன்றாண்டுகளில் வெளிவந்த அமுதசுரபி இதழ்களும் தீபாவளி மலர்களும் ஆய்வுக்கு உரியனவாக அமைகின்றன. இவற்றுள் 1956 ஜனவரி முதல் ஜூன் வரை உள்ள ஆறு இதழ்கள் கிடைக்கவில்லை. எஞ்சியனவே இக்கட்டுரைக்குப் பயன்பட்டுள்ளன.

## அமுதசுரபி

அமுதசுரபி இதழை ஆனந்தபோதினி ஆசிரியர் முனுசாமி முதலியார் தம் மகளுக்காகத் தோற்றுவித்து, சென்னை இராஜன் எலெக்ட்ரிக் பிரஸ்சில் வெளியிட்டு நடத்தினார் என மா.சு. சம்பந்தம் தம் இதழியல் வரலாறு என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.

அமுதசுரபி என்ற பெயரைச் சூட்டியவர் பேராசிரியர் சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப் பிள்ளை ஆவார். மணிமேகலை என்று பெயர் வைப்பதா? அமுதசுரபி என்று பெயர் வைப்பதா? என்ற நீண்ட விவாதத்துக்குப் பிறகே அமுதசுரபி என்று பெயர் வைத்தனர். அப்போது அதன் விலை 0.8.0 (எட்டணா). இவ் இதழ் 1948 இல் அவர்கள் கையிலிருந்து வித்துவான் வே. லட்சுமணன் அவர்கள் கைக்கு மாறியது. 1948 இல் திரு. விக்கிரமன் (வேம்பு) நிருவாகப் பொறுப்பில் சேர்கிறார். பின்னர் ஆசிரியராகிறார். 1950 இல் தனி அச்சகம் தொடங்கப்படுகிறது.

தற்போது அமுதசுரபி ஸ்ரீராம் நிதி நிறுவனத்தின் பொறுப்பில் உள்ளது. இந்நிதி நிறுவனம் தம் வாடிக்கையாளர்கள் அனைவரையும் சந்தாதாரராகச் சேர்த்துள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். கடந்த ஐம்பதாண்டுகளாக இலக்கியத் தொண்டாற்றிவரும் பெருமை அமுதசுரபிக்கு உண்டு.

1956 ஜனவரி இதழில் பிரசுரிப்பவர் பி.எஸ். சுவாமிநாதன், ஆசிரியர் சு. வேம்பு, 20, சுங்குராமச் செட்டி தெரு, சென்னை-1 என்ற

குறிப்பு காணப்படுகிறது. எழுத்தாளர்களுக்குப் பணம் கொடுக்கும் இதழ்களுள் இதுவும் ஒன்று என ஆசிரியர் விக்கிரமன் குறிப்பிடுகிறார்.

## ஆசிரியர் விக்கிரமன்

சரித்திரம்பாடுங் காவிரிக்கரையில் அமைந்த திருச்சியில் 19.3.1928 அன்று சுப்பராய ஐயருக்கும் அவரின் மூன்றாவது மனைவி இலெட்சுமி அம்மையாருக்கும் ஐந்தாவது மகனாகப் பிறந்தவர் 'வேம்பு' என்ற விக்கிரமன். தந்தை இரயில்வே துறையிலும், பின்னர்ப் பாரதியாருடன் மூன்று திங்கள் சுதேசமித்திரன் பத்திரிகையிலும் பணியாற்றியவர். தந்தையின் தாக்கத்தால் பாரதியிடத்தும், பத்திரிகையிடத்தும் ஈடுபாடு இவருக்கு இளம் வயதிலேயே ஏற்பட்டது.

திருச்சியில் பிறந்தாலும், இவர் கல்வி பயின்றது சென்னையில்தான். பள்ளி இறுதி வகுப்புவரையே முறையாகப் படித்தார். அதற்குமேல் படிக்கக் குடும்பச் சூழல் இடந்தரவில்லை.

இவர் எட்டாம் வகுப்பு படிக்கும்போதே 'தமிழ்ச்சுடர்' என்ற கையெழுத்து ஏட்டினை நடத்தி ஆசிரியர், மாணவர் பாராட்டினைப் பெற்றார்.

இவர் பதினாறு வயதில் செங்கல்பட்டிலிருந்து மாமல்லபுரத்துக்குக் கட்டுச் சோற்றுடன் கால்நடையாகவே சென்று சிற்பங்களைக் கண்டு மகிழ்ந்த கலையார்வம் மிக்கவர். இவர் பள்ளியில் படிக்கும்போதே கல்கியின் பார்த்திபன் கனவைப் படித்து அதில் வரும் விக்கிரமச் சோழன் என்ற பாத்திரத்தால் பாதிக்கப்பெற்றுத் தன் பெயரை 'விக்கிரமன்' என வைத்துக் கொண்டார்.

இவர் குடும்பத்தைக் காப்பாற்ற சென்னை ஸ்பென்சர் கம்பெனியில் பணியேற்றார். எழுத்தின்பால் இவருக்கிருந்த ஆர்வத்தை அறிந்து இவருடன் பணியாற்றிய நண்பர் ஒருவர், சின்ன அண்ணாமலையிடம் அழைத்துச் சென்றார். சின்ன அண்ணாமலை சாவியிடம் அழைத்துச் சென்றார். 'சாவி' அவர்கள் அப்போது 'கல்கி'யிலிருந்து விலகி 'வெள்ளிமணி' என்ற வார இதழை நடத்தி வந்தார். அதில் சேர்ந்து வேம்பு தம் படைப்புகளை வெளியிட்டார். கருத்து வேறுபாடு காரணமாக அங்கிருந்து விலகி, தமிழ்ப்பண்ணை புத்தக வெளியீட்டுக் கழகத்தில் பணியேற்றார்.

இவர் ஸ்பென்சரில் பணியாற்றும்போதே தம் பதினாறு வயதில் **நண்பா மறந்துவிட்டாயா?** என்ற சிறுகதை எழுதினார்.

அது 'மாலதி' என்ற இதழில் வெளியானது. 1948இல் வித்துவான் வே. லட்சுமணன் இவரை அழைத்துக் கொண்டார். அமுதசுரபியில் கடன்பட்டும் கடமைப்பட்டும் நிருவாக உதவிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். பின்னர்ப் படிப்படியாக உழைத்து ஆசிரியரானார்.

வரலாற்று அறிவு, இதழியல் அனுபவம், நாவல், சிறுகதை, நாடகம் படைத்தல், நிருவாகத் திறமை, தொடர்ந்து ஒரே பத்திரிகையில் ஐம்பது ஆண்டுகள் பணியாற்றும் பொறுமை முதலிய சிறப்புகளை உடையவர் திரு. விக்கிரமன் ஆவார்.

இவர் கல்கியை மானசீகக் குருவாகக் கொண்டவர். அவர் எழுதிய பொன்னியின் செல்வனைப் பல முறை படித்து அவர் விட்ட இடத்தைத் தொட்டு 'நந்திபுரத்து நாயகி' என்ற வரலாற்று நாவலை வடித்துத் தந்தார். 52 நாவல்களும், 8 சிறுகதைத் தொகுதிகளும் படைத்தவர். கல்கியைப் போன்றே எழுத்தாளர் சங்கத் தலைவர் ஆனவர். எழுத்தாளர் நலநிதி ஏற்படுத்தி அறக்கட்டளை உருவாக்கியவர். சமுதாயத் தொண்டில் நாட்டங் கொண்டவர்.

கலைமாமணி விக்கிரமன் அவர்கள் வாழும் எழுத்தாளர்களில் 'கல்கியின் வாரிசாக' விளங்குபவர்; இலக்கிய பீடம் என்ற இதழைக் கண்டவர்; ஸ்ரீராம் நிறுவனத்தின் பொறுப்பில் அமுதசுரபியைப் பல்லாண்டுகளாக வெளியிட்டு வருகின்றவர்.

## தமிழ்ப்பற்று – தமிழ் மாநாடு பற்றிய செய்தி

அமுதசுரபி இதழ் தமிழ்ப்பற்று மிக்கதாக உள்ளது. தமிழ் மாநாடு பற்றிய செய்திகளையும் அது வெளியிட்டு வந்துள்ளமையை அறிய முடிகிறது. ஏப்ரல் 1954 இதழில் பாரதி வாக்கு என்ற தலைப்பில், 1916ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 3ஆம் தேதி சுதேசமித்திரன் பத்திரிகையில் வெளியான 'தமிழ்' என்ற பாரதியாரின் கட்டுரையின் ஒருபகுதியை எடுத்து வெளியிட்டுள்ளனர். அப்பகுதி இதோ:

"இந்த நிமிஷத்திலே தமிழ் ஜாதியின் அறிவு கீர்த்தி வெளியுலகத்திலே பரவாமல் இருப்பதை நான்அறிவேன். போன நிமிஷம் தமிழ் ஜாதியின் அறிவொளி சற்றே மங்கி இருந்ததையும் நான் அறிவேன். ஆனால் போன நிமிஷம் போய்த் தொலைந்தது. இந்த நிமிஷம் சத்யம் இல்லை. நாளை வரப்போவது சத்யம்; மிகவும் விரைவிலே தமிழின் ஒளி உலகம் முழுதும் பரவாவிட்டால் என் பெயரை மாற்றி அழையுங்கள்".

இப்பகுதியை எடுத்துக்காட்டி, பாரதி வாக்குப்படி தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவிவரும் உண்மையை நாம் கண்கூடாகக் கண்டு மகிழ்ந்து வருகிறோம் எனப் பரலி சு. நெல்லையப்பர் எழுதுகிறார் (ஏப்ரல் 1954, ப. 78).

## தில்லையில் எழுத்தாளர் மாநாடு

"உலக வியாபகம் வாய்ந்ததான பி.ஈ.என். (P.E.N.) ஸ்தாபனத்தின் சார்பில் அதன் இணைச்சங்கமாகிய இந்திய பேனா சங்கத்தின் ஆதரவில் மூன்றாவது அகில இந்திய எழுத்தாளர்கள் மாநாடு ஏப்ரல் மாதம் 16, 17, 18 தேதிகளில் சிதம்பரம் அண்ணாமலை நகரில் சிறப்பாக நடைபெற்றது.

மாநாட்டைத் துவக்கி வைத்து நேரு பேசுகையில் பல்வேறு இந்திய மொழிகளுக்கிடையே தொடர்பு ஏற்படவேண்டியதின் அவசியத்தை வற்புறுத்தினார். இந்தியாவின் மாபெரும் மொழிகளுள் ஒன்றான தமிழுக்குத் தன் வணக்கத்தைச் செலுத்த விரும்புவதாகவும், தமிழ் நாட்டுக்கு மட்டுமேயன்றித் தமிழ்மொழி இந்தியாவிற்கே ஜீவாதாரமான முக்கியத்துவம் வாய்ந்ததென்பது தனது நம்பிக்கை என்றுங் கூறினார். தமிழ் எழுத்தாளர் ஒவ்வொருவரும் மேடை மீது வந்து தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து கொண்டனர். இந்நிகழ்ச்சிக்கு ஸ்ரீ.ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்புற நடத்தி வைத்தார் (1954 ஏப்ரல் - பக். 23,24) என்ற செய்தி காணப்படுகின்றது.

## ஐந்தாவது தமிழ் மாநாடு

முதல் மூன்று வருடங்கள் 'பாரதி மாநாடு' என்று கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தாராலும், சென்ற ஆண்டு பம்பாய் தமிழ்ச் சங்கத்தாரால் 'தமிழ் மாநாடு' என்றும் நடத்தப்பட்டு வந்த இலக்கியத் திருவிழா ஐந்தாவது மாநாடு என்று இவ்வருஷம் ஜாம்ஷெட்பூரில் கொண்டாடப்பட்டது. இங்குள்ள தமிழ்ச் சங்கங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து இதை நடத்தியது குறிப்பிடத்தக்கது (1954 டிசம்பர் - ப. 79).

### மாநாட்டுத் தீர்மானங்கள்

1. தமிழ்ப் பெருமக்களான பண்டிதமணி ஸ்ரீ மு. கதிரேசன் செட்டியார், இரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார், ஸ்ரீ முத்து சிவன், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை ஆகியோரின் மறைவு

குறித்து அன்னார்களுடைய குடும்பத்தார்களுக்கு ஆழ்ந்த இரங்கலை இம்மாநாடு தெரிவித்துக்கொள்கிறது.

2. தென்னாட்டுப் பல்கலைக்கழகங்கள் வடஇந்திய மொழிகளில் ஏதேனும் ஒன்றையும், வடநாட்டுப் பல்கலைக்கழகங்கள் தென்னாட்டு மொழிகளில் ஏதேனும் ஒன்றையும் தங்கள் பாடத்திட்டத்தில் உப பாடமாகச் சேர்ப்பது மக்களிடையே கலாச்சாரக் கல்வித்துறைகளில் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்துவதற்குத் துணைபுரியும் என்று கருதுவதால் துரிதமான ஏற்பாடுகளைச் செய்யுமாறு சம்பந்தப்பட்ட பல்கலைக்கழகங்களை இம்மாநாடு வேண்டிக் கொள்கிறது (1954 - டிசம்பர்-ப. 80) என்பன போன்ற தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## கலைநிகழ்ச்சி (16.10.59)

மாலை 6 மணியுடன் பேச்சுக்கள் முடிவடைந்தன. சரியாக 7 மணிக்குக் கல்கத்தாவிலிருந்து வந்திருந்த ஸ்ரீமான் ப.நா. தியாகராஜன் கோஸ்டியார் 'பாரதியார் வில்லுப்பாட்டு' நடத்தினர். அதன்பின் ஜாம்ஷெட்பூர் வாலிபர்கள் பாஞ்சாலி சபதம் என்ற நாடகத்தைத் திறம்பட நடித்தனர். நாடகம் இரவு 11 மணிக்கு முடிந்தது (டிசம்பர் 1959, ப. 80).

## எழுத்தாளர் இரண்டாவது மாநாடு

எழுத்தாளர்கள் எல்லோரும் நெல்லிக்காய் மூட்டைகள் என்று சிலர் கூறுவார்கள். ஒன்றாகச் சேரமாட்டார்கள்; காய்ச்சல், பொறாமை அதிகம் என்ற எண்ணமே அவர்களுக்குண்டு. ஆனால் சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் அதைப் பொய் என்று நிரூபித்துவிட்டது. அதன் தலைவரான ஸ்ரீ கல்கியும் செயலர் டி. கோதண்டராமனும், வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ பாஷ்யமும் (சாண்டில்யன்) எழுத்தாளர்களை ஒன்றாகக் கூட்டித் தங்கள் ஒற்றுமையை நாடறியச் செய்தார்கள்.

சென்ற இரண்டாண்டுகளாக, தினே தினே வளர்ந்துவரும் எழுத்தாளர் சங்கத்தின் இரண்டாவது மாநாடு முதல்நாள் சென்னை செயின்ட் மேரீஸ் மண்டபத்திலும் மறுநாள் மஹாஜன சபைக் கட்டடத்திலும் நடைபெற்றது. மாநாட்டைத் துவக்கி வைத்து முதலமைச்சர் ராஜாஜி தமக்கே உரித்தான ஹாஸ்யமும் பொருட்குவியலும் கலந்த பேச்சின் மூலம் எழுத்தாளர்களைக் களிக்க வைத்தார். மொழிச் சீர்திருத்தம் பிரசங்கத்தில் த்வனித்தது . . .

முதலமைச்சரின், பிரசுதாரர்கள் ஐநூறு பிரதிகளுக்குமேல் போடவேண்டாம் என்ற எச்சரிக்கையும் சிந்தனைக்கு ஏற்றது. மகாநாட்டுக்குத் தலைமை தாங்குமாறு ஸ்ரீ கல்கி பிரேரிக்கப்பட பிரசண்டவிகடன் ஆசிரியர் ஸ்ரீ நாரணதுரைக்கண்ணனும் குமுதம் ஆசிரியர் ஸ்ரீ எஸ்.ஏ.பி. அண்ணாமலையும் ஆதரித்தனர். ஸ்ரீ கல்கி தம் நீண்ட பிரசங்கத்தைப் படிக்கவில்லையென்றாலும் சபையோர்களைக் குலுங்க குலுங்க சிரிக்கவைத்தார்; புதிய கருத்துக்களை அள்ளி வீசினார். அவர் எழுத்து மன்னர் மட்டுமல்ல; பேச்சாளர் என்பதையும் புரிந்து கொண்டிருப்பர்.

ஸ்ரீ கோதண்டராமன் மகாநாட்டுக்கு வந்த ஆசிச்செய்திகளைப் படித்தார். 'திராவிடக் கழக'த் தலைவர் திரு. இராமசாமிப் பெரியார் வாழ்த்தனுப்பியவர்களுள் குறிப்பிடத்தக்கவர்.

அன்று பேராசிரியர் ரா.பி. சேதுப் பிள்ளைக்கும் அறிஞர் வெ. சாமிநாத சர்மாவுக்கும் அவர்களின் தமிழ்ச்சேவைக்காக வெள்ளிக்கேடயங்கள் பரிசாக வழங்கப்பட்டன (1954, ஏப்.-மார்ச்சு -ப. 80) என்ற செய்திகள் காணப்படுகின்றன.

மேலும், "அ. சீனிவாசராகவன் . . . சிறுகதையை மின்னலுக்கும் நாவலை வெயிலுக்கும் ஒப்பிட்டுப் பேசிய விதம் அழகாக இருந்தது. . . . . ஸ்ரீஅகிலன் நாவல் இலக்கியத்தைப் பற்றிப் பேசினார். அவரைக் கவர்ந்த நாவல்களைப் பற்றி வரிசைக்கிரமமாகக் குறிப்பிட்டு. . . . தான் படித்த சிறந்த நாவல் எனக் கல்கி அவர்களின் கள்வனின் காதலியைக் குறிப்பிடும்போது அனைவரும் கரவொலி செய்தனர்" (1954, ஏப்.-மார்ச்சு இதழ் ப. 80) என்ற குறிப்புகள் காணப்படுகின்றன.

மேலும் **தமிழ் விழா** எனத் தலைப்பிட்டு பிப்ரவரி 1955 இதழில் (ப. 88) கடைப்பக்கத்தில் வந்துள்ள செய்தி இது:

"பம்பாய் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வருடாவருடம் நடக்கும் பெரிய விழாவான தமிழ் விழா டிசம்பர் மாதம் 24, 25, 26 தேதிகளில் மாதுங்காவில் பிரமாதமாகக் கொண்டாடப்பட்டது. தமிழ் விழாவில் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றுவதற்காகத் திருச்சியிலிருந்து தமிழறிஞர் கி.ஆ.பெ. விசுவநாதம் அழைக்கப்பெற்றிருந்தார். இந்த மூன்று நாட்களும் பம்பாய் முழுவதும் தமிழ் மணம் வீசியது" என்று

குறிப்பிட்டார். பம்பாய் தமிழ்ச்சங்கத்தின் தமிழ்த் தொண்டும் கி.ஆ.பெ. நூற்றாண்டு விழா கொண்டாடும் இந்நாளில் அவர் தமிழ்த்தொண்டும் நினைக்கத்தக்கது.

மூன்றாவது எழுத்தாளர் மாநாடு பற்றிய செய்தி 1955 மார்ச்சு இதழில் பக்கம் 83இல் காணப்படுகிறது.

"தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மூன்றாவது மகாநாடு பிப்ரவரி மாதம் 12,13 தேதிகளில் நடைபெற்றது. முதல் நாள் பாட்டுக் கச்சேரியுடன் மகாநாடு மயிலை ரசிக ரஞ்சனிசபை மண்டபத்தில் ஆரம்பமாகியது. சங்கத் தலைவர் ஸ்ரீ சிவஞான கிராமணியார் தலைமை வகித்தார். கவர்னர் ஸ்ரீபிரகாசா மாநாட்டைத் துவக்கி வைத்தார். ரஷ்யாவிலிருந்து வந்திருந்த கலைஞர்கள் குழுவினர் மகாநாட்டினருக்கு அறிமுகம் செய்விக்கப்பட்டனர். தமிழுக்கு நீண்ட காலமாகத் தொண்டாற்றிவரும் ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை, ஸ்ரீ மு. இராகவ அய்யங்கார் இருவரையும் கௌரவித்து கவர்னர் கேடயங்களை வழங்கினார். வரவேற்புக் குழுத்தலைவர் ஸ்ரீ எஸ்.ஏ.பி. அண்ணாமலை எல்லோரையும் வரவேற்றுப் பேசினார். தமிழ்ப் பற்று மிக்கத் தலைவர் தமது உரையில் எழுத்தாளர்களது முன்னேற்றம் குறித்து முழங்கினார்.

. . . இரண்டாவது நாள் காலை 7.30 மணிக்கு மஹாஜன சபைக் கூடத்தில் சிற்றுண்டியுடன் மாநாடு தொடங்கியது. பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரம் தலைமை வகித்தார். தமிழை அரசாங்க மொழியாக்க ஒரு திட்டம் என்பது குறித்த விவாதத்தை ஸ்ரீ. ஏ.ஜி வெங்கடாச்சாரியார் தொடங்கி வைத்தார். உருப்படியான திட்டமொன்றையும் விவாதத்தில் கலந்து கொண்டோர் கூறாவிடினும் தமிழ் அரசாங்க மொழி ஆக வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தியது ஒன்றே போதுமானது.

"விவாதத்தை முடிவுக்குக் கொண்டு வந்து ஸ்ரீ. ம.பொ.சி. பேசியது சிறந்து விளங்கியது" போன்ற குறிப்புகளால் தமிழ் விழா எங்கெல்லாம் நடைபெற்றதோ அவற்றையெல்லாம் தேடி எடுத்து வெளியிடுவது அமுதசுரபியின் நோக்கமாக இருந்தமையை அறிய முடிகிறது. கல்கியின் மறைவுக்குப் பிறகு எழுத்தாளர் சங்கத் தலைவர் பொறுப்பைத் திரு. ம.பொ.சி. அவர்கள் ஏற்றமையும் தமிழ் ஆட்சி மொழி ஆக வேண்டுமென்ற ஆர்வமும் காணப்படுகிறது.

## கல்கியின் தாக்கம்

அமுதசுரபியின் ஆசிரியர் திரு. விக்கிரமனுக்குப் பாரதியாரிடம் இருந்த பற்று போலவே, கல்கியிடமும் இருந்துள்ளது. கல்கியின் தாக்கம் இவரிடமும் அமுதசுரபியிலும் காணப்படுகின்றது.

கல்கியைப் போன்றே தலையங்கம் எழுதும் போக்கு இவ்விதழில் காணப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, எட்டுத்திக்கு என்ற தலைப்பிட்டு 1954 டிசம்பர் அமுதசுரபி இதழில் (ப. 67) "புதுவையையும் காரைக்காலையும் தனி மாகாணமாக்குவதைவிட உடனே சென்னை ராஜ்யத்துடன் சேர்ப்பதே மேலானது. நிர்வாகச் சிரமம் பல இருந்தாலும் கொள்கை அளவில் ஒப்புக்கொண்டு அதற்கான முயற்சிகளைச் செய்வதே நல்லது. அந்நிய ஆட்சியெனும் பெருந்தடைதான் தாயகத்திலிருந்து மேற்படி நகரங்களைப் பிரித்ததே யொழிய, பண்பாடோ நாகரிகமோ அல்ல. இதை மனதிலே பாரத அரசாங்கம் கொண்டு உடனே புதுவை, காரைக்காலையும் அதைப் போன்ற பிரெஞ்சுப் பிடியிலிருந்து விடுதலையான நகரங்களையும் தாயகத்துடன் சேர்க்கவேண்டும்" என்ற செய்தி வெளியாகியுள்ளமை கவனிக்கத்தக்கது.

1955 ஜனவரி அமுதசுரபி இதழில் (ப. 10) சு. வேம்பு அவர்கள் (விக்கிரமன்) கல்கி மறைவையொட்டி **எப்போ வருவார்?** என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில், "பேராசிரியர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களும், தமிழ்த்தாத்தா சாமிநாத ஐயர் அவர்களும் தமிழ்ப்பெரியார் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களும் மகாகவி பாரதியாரும் தோன்றி வளர்த்த தமிழைச் சிறந்த பீடமேற்றி மக்கள் மனங்கவரும் வகையில் விந்தைகள் பல செய்துவிடலாம் என்று கூறிச் செய்து காட்டினார் கல்கி அவர்கள். அவர் மறைந்து போனார் என்ற செய்தியை நம்ப முடியவில்லை" என எழுதியிருந்தார்.

இப்பகுதியில் கல்கியிடத்துக் கொண்டிருந்த ஈடுபாடு தெரிகிறது. பீடம் என்ற சொல்லை இவர் கையாண்டுள்ளார். பின்னால் **இலக்கியப்பீடம்** என்ற இதழ் தொடங்கியதும் நினைக்கத்தக்கது. மேலும் கல்கியால் தான் உருவாக்கப்பெற்ற செய்தியை, "அவர் (கல்கி) தூவிய விதையினின்று விளைந்தெழுந்த செடி என்ற முறையிலே - குருவை ஞாபகப்படுத்திக் கொள்ளும் வகையிலே சிறிது எழுதத் தோன்றுகிறது. ஆனால் நெஞ்சடைக்கிறது. சலியாது எழுதும் பேனாவும் குலுங்கி அழுகிறது" எனக் குறிப்பிடுகின்றார்.

"பத்திரிகைகள் தமிழ் வளர்ச்சியில் ஈடுபடுகின்றன. பத்திரிகைகளுக்கு நாட்டில் மதிப்பு உயர, குடும்பத்தில் ஒரு நண்பனாகப் பத்திரிகைகளை மாறும்படி செய்த பெருமை ஸ்ரீ கல்கி அவர்களையே சாரும். எப்படி அந்த வித்தையைக் கற்றார்?" என அதே கட்டுரையில் குறிப்பிடுவதும் காணத்தக்கது. எனவே கல்கியின் தாக்கம் எழுத்தாளர் விக்கிரமனிடம் இருந்ததும் அதன் வெளிப்பாடால் அமுதசுரபியின் நோக்கும் போக்கும் அமைந்ததும் அறியமுடிகிறது.

## குறித்த காலத்தில் வெளியிடல்

விக்கிரமன் அவர்கள் அமுதசுரபி இதழை உதவி ஆசிரியர் இல்லாமல் பல ஆண்டுகள் தாமே தனித்துச் செயல்பட்டு வெளியிட்டுள்ளார். திங்கள்தோறும் வெளிவந்த இதழ் 1954ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வெளிவரவில்லை; எனவே, இவ்விதழ் பிப்ரவரி - மார்ச்சு இரண்டையும் சேர்த்து மார்ச்சில் ஒரே இதழாக வெளிவந்துள்ளது. இப்படி ஏற்பட்ட தடையை எண்ணி ஆசிரியர் மிகவும் கவலைப்படுகிறார். இனி அத்தகைய தவறு நடைபெறாமல் இருக்க ஏற்ற முயற்சிகளை எடுத்துள்ளமையை அறியமுடிகிறது.

1954 மே திங்கள் இதழில் - இந்த இதழில் - என்ற தலைப்பில் (ப. 5) "ஏழாவது ஆண்டின் முதல் இதழ் உங்கள் முன் திகழ்கிறது. ஆறு ஆண்டுகளில் அறுபத்தொன்பது இதழ்களை ஒருமுறை இப்பொழுது திரும்பவும் பார்க்கும்போது உழைப்பின் முத்திரையும் இன்னும் உழைக்கவேண்டிய அவசியத்தின் அறிவிப்பும் புலப்படாமல் இல்லை" எனக் குறிப்பிடுகின்றார். இதனால் இவரிடம் கடந்த காலத்தைப் பார்த்து இனி, எதிர்காலத்தில் என்ன செய்யவேண்டும் என்று திட்டமிடும் போக்கும் காணமுடிகிறது.

மேலும், "ஏழாவது ஆண்டில் இதழ் (அமுதசுரபி) தாமதமின்றி வெளியாகும் எனும் திட நம்பிக்கை எமக்கிருக்கிறது. வாசகர்களின் ஆதரவு இருப்பின் நடக்காததொன்றுமில்லை. அமுதசுரபியில் இன்னும் என்னென்ன புது அம்சங்கள் சேர்க்க வேண்டுமென்று வாசகர்கள் கருதுகிறார்களோ அதைத் தெரியப்படுத்தினால் ஆவன செய்ய சௌகரியமாயிருக்கும்" (1954 - மே இதழ் - ப. 5). இவற்றால், தாமதமின்றி இதழ் வெளிவர வேண்டுமென்ற தவிப்பு புலனாகின்றது. இத்தவிப்பால் சிறு தவறும் நடந்துள்ளதைக் கீழ்க்கண்ட பகுதியால் அறியலாம்.

'சென்ற இதழில் கேதாரியின் கவிதையைக் காணவில்லையே!', 'இந்த இதழில் (ஜனவரி 54) குறிப்பிட்டிருந்தீர்களே!' எனப் பல கடிதங்கள் குறையைச் சுட்டிக்காட்டி வந்துள்ளன.

"முதல் பதினாறு பக்கங்கள் முன்கூட்டியே அச்சாகி விட்டன. சென்ற இதழிலேயே எட்டுப் பக்கங்கள் கூட்ட எண்ணி ஒரு பிரயாணக் கட்டுரை, ஒரு கதை, ஒரு கவிதை ஆக மூன்றையும் சேர்க்க எண்ணினோம். கடைசி நிமிடத்தில் சேர்க்க முடியாது போனதால் 'இந்த இதழில்' குறிப்பிட்டிருந்தபடி கேதாரி அவர்கள் கவிதை சேர்க்கப் படவில்லை. இம்மாத இதழில் வெளியாகியுள்ளது" (1954 - பிப்ரவரி - மார்ச்சு - ப. 4).

இந்தக் குழப்பத்திற்குக் காரணம் முன்பகுதி பதினாறு பக்கங்களை முன்னரே அச்சிட்டுவிட்டனர். அதில் (ஜனவரி 54, ப. 5) இந்த இதழ் கேதாரியின் கவிதையுடன் துவங்குகிறது எனக் குறிப்பிட்டிருந்தது. ஆனால் கவிதை இடம்பெறாமல் இதழ் வெளிவந்து விட்டது. 1954 பிப்ரவரி மாத இதழ் வெளிவரவில்லை. மார்ச்சு மாதம் வந்த இதழில் மேற்கண்ட விளக்கம் காணப்படுகிறது.

## புத்தாண்டில் திட்டமிடல்

### இலக்கியத் தொண்டு

பண்டைத் தமிழர்களின் வாழ்க்கையைப் பளிங்குபோல் எடுத்துக்காட்டுவன சங்க இலக்கியங்கள். சங்க இலக்கியத் தொகை நூல்களேயல்லாமல் அவ்வாறு மட்டும் இன்று நமக்குக் கிடைத்துள்ள தனி நூல்களில் திருக்குறள் தலைசிறந்த இலக்கியமாகும். தொல்காப்பியம் ஒப்பற்ற இலக்கணம் என்று சொல்லலாம். வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்த பெருமை தொல்காப்பியருக்கு உண்டு. தொல்காப்பியர் கூறும் மக்கள் வாழ்க்கை இம் மாநிலத்தின் பெருவிருந்து. வாழ்க்கையின் வளமார்ந்த விருந்தைப் பாமர மக்களும் புரிந்து கொள்ளுமாறு எளிய இனிய முறையில் படைத்துக் காட்டுகின்றார் பலதுறை அறிஞர் நண்பர் ந. சுப்புரெட்டியார். தொல்காப்பியப் பொருளதிகாரம் பண்டைத் தமிழர்களுடைய நல்வாழ்வின் தெவிட்டாத தேனமுதம். இத்தகைய அரும்பெரும் முயற்சியிலே ஊறிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடுத்த இதழ் முதல் (1955 ஜனவரி முதல்) அமுதசுரபி இதழ்களிலே தொடர்ந்து வெளிவரும்" (1954 டிசம்பர் - ப. 7) என 1954 டிசம்பர் இதழில்

எழுதுகிறார் ஆசிரியர். இதனால் ஆசிரியருக்கு இலக்கிய இலக்கணத்தின்பால் கொண்டுள்ள ஈடுபாடும், திட்டமிடலும், இதழின் நோக்கும் புலப்படுகின்றது. இத்தகு அறிஞர்களைத் தேடிப்பிடித்து எழுதச் செய்து வெளியிட்ட பெருமை திரு. விக்கிரமனையே சாரும்.

எழுத்தாளர்பால் அமுதசுரபி இதழ், பெரும் அக்கறை கொண்டு அவர்கள் நலனில் ஆர்வம் காட்டியமையும் கல்கியின் அடிப்படையில் நின்று ஓவியர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தமையும் அறியமுடிகிறது.

## எழுத்தாளர்பால் அக்கறை

1954 ஜனவரி இதழில் எட்டுத்திக்கு என்ற தலைப்பில் (ப. 6), "**பரலிக்கு உதவுங்கள்.** மகாகவி பாரதியாருடன் நெருங்கிப் பழகியவரும் அவருடைய புத்தகத்தை மிகுந்த அபாயமான சமயத்திலும் அச்சில் கொண்டுவந்தவரும் 'லோபோகாரி' பத்திரிகைக்குப் பல காலம் தொண்டு செய்தவரும் சிறந்த தேசபக்தரும் எழுத்தாளருமான திரு பரலி சு. நெல்லையப்பர் மிகவும் கஷ்ட நிலையில் இருக்கிறார். முதிர்ந்த பிராயத்தில் வறுமை அவரை வாட்டுகிறது. . . . பொருளுதவியை எழுத்தாளர் சங்கக் காரியதரிசி சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை-2 என்ற விலாசத்துக்கு அனுப்பவும்" என்ற குறிப்பு காணப்படுகிறது. கல்கியைப் பின்பற்றி இப்போது எழுத்தாளர் சங்கத் தலைவராக விளங்கும் விக்கிரமன் எழுத்தாளர் நலநிதி ஏற்படுத்தி அறக்கட்டளை அமைத்து உதவி வருகின்றார்.

மேலும், "இந்த இதழில் பிரபல கதாசிரியர் ஸ்ரீ த.நா. குமாரஸ்வாமி எழுதும் புதிய தொடர்கதை 'கானல்நீர்' ஆரம்பமாகிறது. ஸ்ரீ த.நா. குமாரஸ்வாமி அவர்களைத் தமிழகத்திற்குப் புதிதாக அறிமுகப்படுத்த வேண்டியதில்லை. வங்கச் சிற்பிகள் பக்கிம் சந்திரரையும், ரவீந்தரரையும் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்தி அவர்களது கலைச் செல்வங்களைக் கொணர்ந்திங்கு சேர்த்தவர்கள். மொழிபெயர்ப்பில்லாத அவரது கற்பனை நாவல்களும் புதுமைக் கருத்துகள் நிறைந்தவை" (1955 ஜனவரி - ப. 6) என்ற பகுதியால், எழுத்தாளர்களின் படைப்பினைப் பாராட்டுவதும், ஊக்கமூட்டுவதும் அமுதசுரபியின் நோக்கமாக இருந்ததை அறியமுடிகிறது.

மேலும், அமுதசுரபியில் வெளிவந்தவை நூல்களாக வந்தபோதும் அவை பரிசு பெற்றபோதும் பாராட்டி மகிழும் பண்பாட்டை விக்கிரமனிடம் காணமுடிகிறது.

"அமுதசுரபியில் அறிஞர் ப. கோதண்டராமன் எழுதிய விவசாய விஞ்ஞானத்திற்கும் கதாசிரியர் எஸ்.கே. ராமன் (மாயாவி) எழுதிய - வாடாமலருக்கும் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் பரிசளித்துப் பாராட்டி இருக்கிறார்கள். மற்றும் கதாசிரியர் சாண்டில்யன் எழுதிய ஜீவபூமி புத்தகமாக வந்ததோடன்றி நாடகமாகவும் நடிக்கப்பெற்றுப் பாராட்டுதலைப் பெற்றது. கதாசிரியர் ஜி.எஸ். மணியின் போராட்டம் நாவலும் புத்தக வடிவில் வந்துள்ளது'' எனக் குறிப்பிட்டு, "அமுதசுரபியில் வந்துள்ள கதை கட்டுரை நாவல்கள் முதலியன தொகுத்து வெளியிட ஏராளமாக உள்ளன. பதிப்பாசிரியர்கள் பயன்படுத்தி ஊக்குவிக்காமலா இருக்கப்போகிறார்கள்?'' என முடிப்பது பிறர் படைப்புகள் நூலாக வரவேண்டுமென்ற ஆர்வத்தை வெளிப்படுத்து கின்றது.

மேலும், "தமிழ்மக்களின் இல்லத்தில் அழியா இடம்பெற்று விட்ட கதாசிரியர் சாண்டில்யன் கடந்த இரண்டரை ஆண்டுகளாக எழுதிவந்த 'மலைவாசல்' இந்த இதழுடன் முடிவடைகிறது. **அமுதசுரபி பதிப்பகத்தின்** முதல் வெளியீடாக மலைவாசல் விரைவில் வெளியிட ஆவன செய்து வருகின்றோம். எட்டாவது ஆண்டின் முதல்சாதனையாக அந்த அற்புத நாவல் விளங்கும்" (1955 மார்ச்சு - ப. 4) என்ற குறிப்பால், அமுதசுரபிக்கெனத் தனிப்பதிப்பகம் அமைத்தமையும் அதில் முதல் நூலாக ஆசிரியர் தன் நூலை வெளியிடாது மற்றவர் நூலை வெளியிடும் பெருந்தன்மையும் அறியமுடிகிறது (1955 ஜூன் திங்கள் இதழில் ப. 6). "ஜலமோகினி முதல் இதழிலேயே எல்லோரையும் கவர்ந்துவிட்டது என்பதை நாம் சொல்லவில்லை. நீங்கள் சொல்கிறீர்கள். இதென்ன வார்த்தை சர்க்கரை இனிக்கிறது என்பது போல். சாண்டில்யன் கதை சிறந்திராமல் வேறு எப்படி இருக்கமுடியும் என்று நீங்கள் கடிதம் எழுதாமலா இருக்கப் போகிறீர்கள்?" என்ற பகுதியும் காணத்தக்கது.

இதழுக்கு ஓவியம் இன்றியமையாதது. தரமான படைப்புக்குத் தரமான ஓவியங்கள் தேவையென அறிந்து இதழில் வெளியிட்ட பெருமை அமுதசுரபிக்கு உண்டு. எழுத்தாளர் நலன் போன்றே

ஓவியரிடத்திலும் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருந்தமை கீழ்க்கண்ட பகுதியால் விளங்கும்:

"ஓவியர் சந்திரா ஜூலை 22 காலை காலமானார். சித்திரத்துக்கு மதிப்பு ஏற்படும் படியும், பத்திரிகை வளர்ச்சிக்கு இன்றியமையாத அம்சம் சித்திரம் எனும் படியும் செய்த பெருமை மாலி, மார்க்கன், ராஜீ காலமான பிறகு கலைக்கு ஏற்பட்ட நஷ்டம் இலேசானதன்று. சந்திராவும் இப்போது அவர்களுடன் சேர்ந்துவிட்டார். கல்கி வாரப் பத்திரிகையில் அவரது கைவண்ணம் கண்டு மகிழாத தமிழ் வாசகர்களே இருக்கமுடியாது.

"வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு உருவங்கொடுத்து, தமிழ் நாடெங்கும் முதல் முழக்கம் செய்த வீரன் உருவம் திகழச் செய்த பெருமை சந்திராவையே சேரும். அமரர் கல்கியின் அலை ஓசைக்கு, சந்திரா வரைந்த ஓவியங்களும் ஏராளமான புத்தகங்களின் கவர்ச்சிகரமான மேலட்டைகளும் தமிழ் நாட்டில் அமரத்வம் பெற்றுத்திகழும்" (1955 ஜூலை - எட்டுத்திக்கு - ப. 7) என ஓவியர் சந்திரா மறைந்தபோது எழுதிய செய்தியால் ஓவியத்தின் இன்றியமையாமையை அமுதசுரபி அறிந்திருந்தது.

## பிறமொழி இலக்கியம் - மொழிபெயர்ப்பு

அமுதசுரபி பிறமொழி இலக்கியங்களையும் மொழிபெயர்த்துக் கொடுத்துள்ளது. "பாணபட்டரின் 'காதம்பரி' வடமொழியில் சிறந்த சுவைச் சுரங்கம். கதையம்சம் நிறைந்த வர்ணனைச் சித்திரங்கள் பல கொண்ட அக்காதையின் சுவையை மூலநயம் குன்றாது தமிழாக்கித் தர ஸ்ரீஅம்ருதானந்த யோகியார் முன்வந்துள்ளார்" (1954 ஜூன் - ப. 4) என்ற குறிப்பால் காணலாம். அதன் மொழிபெயர்ப்புக்குக் காதம்பரியிலிருந்து ஒரு சான்று தரப்படுகிறது.

"பின்னர்க் கீழிறங்கி மரக்கிளையில் குதிரையைக் கட்டினான். முக்கட் கடவுளை நெருங்கி அன்புடன் வணங்கிவிட்டு, அந்தத் தெய்வப் பெண்ணையே இமைத்தலின்றிய கண்கள் கொண்டு கூர்ந்து நோக்கினான். (விழிகள்) குறிக்கோளில் அசைவற்றுக் கட்டுண்டன. அவளது எழிற்செல்வத்தால், ஒளியால், ஓங்கிய அமைதியால் ஆச்சர்யமடைந்தான்" (1954 - ஜூன் - ப. 69). 1954 ஆகஸ்டு திங்கள் இதழ் 'சுதந்திர இதழ்' ஆக வெளிவந்துள்ளது. அதில், 'அன்போன்ஸ் தோதே' என்னும் பிரெஞ்சு எழுத்தாளரையும் அவரது சிறுகதையையும் பி. கோதண்டராமன் ஒரு கட்டுரையில் அறிமுகப்படுத்தியுள்ளார் (ப. 79)

## கவிதை

அமுதசுரபி கவிதைக்கு முக்கிய இடம் கொடுத்து வந்துள்ளது. பாரதி பரம்பரை என்ற ஒரு பகுதியில் கவிஞர்களையும் அறிமுகப்படுத்தி வந்துள்ளது. கவிமணி 26.9.54இல் மறைந்தபோது, 'கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை 26.9.54 பகல் காலமானார் எனும்செய்தியை அறிந்தபோது திடுக்கிட்டோம் .... அமுதசுரபியிடம் கவிஞர் அன்பு கொண்டிருந்தார்' (1954 அக். - ப. 7) எனக் குறிப்பிட்டு, இதழ் தொடங்கியபோது அவர் எழுதிய கவிதையை வெளியிட்டுள்ளது. அக்கவிதை,

"பண்டிதர் பாமரர் பல்சமயத்தினர்
சிறியர் பெரியர் செல்வர் வறிஞர்
எவர்க்கு மினிய இலக்கிய நல்விருந்
தளிக்கும் இந்த 'அமுதசுரபி'
தேவ தேவன் திருவரு ளாலே
செந்தமிழ் நாடு சிறக்க
வந்துநீ டூழி வாழ்க வாழ்கவே"

என்பதாகும். பெரும்பாலும் இதழ்கள், தீபாவளி மலர்கள் கவிதையோடு தொடங்குவதைக் காணமுடிகிறது.

1954 ஜனவரி இதழில் கொத்தமங்கலம் சுப்பு எழுதிய,

"......
ஆதிரை அன்பேதான் - பின்னாடி
அமுதசுரபி யென்றார்
அமுதசுரபி யென்றால் - அதன்பேர்
அன்பு சுரப்பதுதான்
'அமுதசுரபி' யென்றால் இதயத்தில்
அன்பில் பிறப்பதுதான்" (ப. 7)

என்ற கவிதை காணப்படுகிறது.

1956 நவம்பர் தீபாவளி மலரில் சுத்தானந்த பாரதி எழுதிய 'வழிகாட்டு கண்ணா',

"........
கருணைப் புதுயுகம் சூழ - மனக்
கவலையில் லாத சுதந்திரம் வாழ

அருண வசந்தம்போல் வாராய் - கண்ணா
ஆனந்தம் பொங்கும் அமைதியைத் தாராய்

என்ற கவிதையோடு மலர் தொடங்கப்படுகிறது.

முன்னர் எழுதப்பட்ட கவிதைகளையும் தேவைப்படும் போது எடுத்தாளும் போக்கும் காணப்படுகிறது. 1927இல் பாரதி நண்பர் பரலி சு. நெல்லையப்பர் எழுதிய 'திருக்காட்சி' என்ற கவிதை 1954 ஜூன் இதழில் (ப. 43) வெளியிடப்பட்டுள்ளது. அக்கவிதை,

"அழகுடைய மகளிடம் நின்னைக் கண்டேன்
அறிவுடைய மாந்தரிடம் நின்னைக் கண்டேன்
மழலையெழில் சிறுவரிடம் நின்னைக் கண்டேன்
மாதேவன் கோயிலிலே நின்னைக் கண்டேன்
அழகெங்கே அறிவெங்கே அறங்கள் எங்கே
அன்பெங்கே அங்கெல்லாம் நின்னைக் கண்டேன்"

கவிஞரின் மரபினைத் தேடிப்பிடித்து அவர்களின் கவிதையையும் ஆசிரியர் வெளியிட்டுள்ளார்.

## வள்ளல் பாதம் பணிகுவாம்

'ஆசியாவின் ஜோதி தன்னை அன்னை நாட்டுக் களித்தவர்
தேசிக விநாயகத்தைத் தெய்வமாகப் போற்றுவோம்.'

எனக் கொத்தமங்கலம் சுப்புவின் பெயரன் கொத்தமங்கலம் விஸ்வநாதன் எழுதிய பாடல் (1954 டிசம்பர் - ப. 79) இடம்பெற்றுள்ளது.

## சிறுகதை

தரமான சிறுகதைகள் வரவேண்டும் என எண்ணி வெளியிட்ட போக்கும் அமுதசுரபியில் காணமுடிகிறது. ஆசிரியர், "பலவித ரசமுள்ள சிறுகதைகள் வாழ்க்கையின் பல கோணங்களைக் காட்டி, சிறு அம்சங்களையும் பூதக்கண்ணாடியில் காண்பதுபோல் கதையம்சத்துடன் விரிவுபடுத்தி ரசித்துப் படிக்க வைக்கும் ஏழு கதைகளை நீங்கள் இந்த இதழில் காணலாம்" (1954 ஏப்ரல் - ப. 4) என்கிறார். 'இந்தப் பக்கம்' என்ற இப்பகுதி, சிறுகதையின் இலக்கணத்தைக் கூறுவதோடு ஒரே இதழில் ஏழு சிறுகதைகள் இடம்பெற்றுள்ளமையும் அறியத் துணை செய்கிறது.

இதழில் வெளியாகும் சிறுகதைகளைப் பற்றிய குறிப்பினை 'இந்த இதழ்' என்ற முன்னுரையில் எழுதிச் சிறுகதைக்குப் பெருமைசேர்த்த தன்மையும் காணமுடிகின்றது.

சான்றாக, "தாமன் அவர்களது 'மழையும் மணமும்' சிறுகதையும் சந்திரா ராமனாதனின் 'விடிவு' சிறுகதையும் இந்த இதழின் கதையம்சம் சிறக்க வழிசெய்கின்றன" போன்ற பகுதியைக் காணலாம் (1954, மே - ப. 5). புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தும் போக்கும் காணமுடிகிறது.

> அறிமுகப்படுத்தப்படும் எழுத்தாளர் 'கல்பனா' அவர்களின் 'நிருபாவின் சாகஸம்' வளரும் எழுத்தாளருக்கு நம்பிக்கையை ஊட்டுகிறது (1954 மே - ப. 5)

என்ற பகுதியும் காணத்தக்கது.

## சிறுகதையின் நடை

"போட்டிக் கதை வரிசையில் இரண்டாவது எதிரொலி இந்த இதழில் வெளியாகியிருக்கிறது. . . . ஆசிரியரின் எளிய நடை படிப்பவர்களின் மதிப்பைச் சுலபத்தில் பெற்றுவிடும் என்பதில் ஐயமில்லை" (1954 மே - ப. 53) என்ற பகுதியில் எளிய நடையில் சிறுகதை அமைய வேண்டும் என்ற நோக்கைக் காணமுடிகிறது.

## சிறுகதைப் போட்டி

சிறுகதைப் போட்டிகள் வைத்து அவற்றுள் கிடைத்தவற்றைத் தேர்ந்தெடுத்து வெளியிடும் போக்கும் காணமுடிகிறது. தரமான சிறுகதை கிடைக்கவில்லையே என்ற ஆதங்கமும் வெளிப்படுகிறது.

சான்றாகக் கீழ்க்காணும் பகுதியைக் காட்டலாம். "சிறுகதைப் போட்டியை வெளியிட்டுப் பல மாதங்களுக்குப் பின்னர் இந்த இதழில் ஒருவாறாக முடிவை வெளியிட முடிகிறது.

முன்னூறுக்கும் மேற்பட்ட கதைகள் கிடைத்தன. கதைகள் எல்லாவற்றையும் படித்தபிறகு 'சிறுகதை வளர்ச்சி - வளர்ச்சி என்று பிரமாதமாக முரசடிக்கும் இக்காலத்து, அந்த இலக்கணத்துக்கேற்ற, பரிசுக்குகந்த கதைகள் ஒன்றுகூடக் கிடைக்கவில்லையே என வருந்தினேன்.

பஞ்சாயத்தார்களைக் கலந்தாலோசித்தேன். திருப்தியற்ற முறையில் எந்தக் கதைக்கு முதற்பரிசு இரண்டாம் பரிசு எனத் தரம்

வகுக்க முடியாது. வந்த கதைகளுள் பிரசுரத்துக்குத் தகுதியான 10 கதைகளுக்கு மொத்தப் பரிசைப் பங்கிட்டுத் தந்துவிடுங்கள் எனப் பஞ்சாயத்தார் கூறியதால் கீழ்க்கண்ட கதைகளை அமுதசுரபியில் வெளியிட்டுப் பரிசைப் பகிர்ந்தளிக்க முடிவு செய்தோம். இம்முறையும் உற்சாகம் அளிக்கக் கூடுமல்லவா?" (1954 ஜனவரி - ப. 4).

மேலும், "இந்த இதழில் கதைப்போட்டியில் பரிசுபெற்ற கதைகளுள் ஒன்றான 'இரண்டாம் கணவன்' சிறுகதை பிரசுரமாகிறது" (1954 பிப். - மார்ச்சு - ப. 4). போட்டிக் கதைகளை வெளியிட்ட குறிப்பும் காணமுடிகிறது.

## கட்டுரை

அமுதசுரபியில் இலக்கியக் கட்டுரைகள், அதிக அளவில் இடம் பெற்றுள்ளன. அறிவியல் கட்டுரைகள், பயணக் கட்டுரைகள் பொதுக் கட்டுரைகள், கோயில்கள் பற்றிய கட்டுரைகள், சிற்பக்கலை பற்றிய கட்டுரைகள் எனப் பல வரிசைக் கட்டுரைகள் காணப்படுகின்றன. கீழ்க்கண்ட பகுதிகளைக் காணவும்.

"பேரா. அ.மு. பரமசிவானந்தம் அவர்கள் திறமையோடு எழுதி வந்த சீவகன் கதை அடுத்த இதழில் முடிகிறது. சீவகன் கதையில் விமலையாரிலம்பகத்தினின்று ஒரு காட்சி மேலட்டையை அலங்கரிக்கிறது" (1954 ஆகஸ்டு ப. 6).

"அமுப. அமுதசுரபியில் சீவகன் கதையை இரண்டாண்டுகளாக எழுதி வந்தார்கள். இந்த இதழில் சீவகன் கதை முடிகிறது" (1954 செப்டம்பர் ப. 4).

மேலும், "அறிஞர் கௌண்டின்ய அவர்களின் திருநாவுக்கரசர் பற்றிய கட்டுரையின் முதல்பகுதி இந்த இதழில் வெளியாகியுள்ளது. நாவுக்கரசரின் வரலாறும் அவரது பாடல் சிறப்பும் இக்கட்டுரையினின்று நாம் அறிய முடிகிறது" (1954 ஆகஸ்டு ப. 6).

இது போன்று திருஞானசம்பந்தர் பற்றிய கட்டுரையையும் திரு. 'கௌண்டின்ய' எழுதியுள்ளார். தொடர்ந்து இலக்கியக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. படிக்க மட்டுமல்ல; இசை நாடகங்களாகவும் நடிக்க ஏற்ற குறவஞ்சிப் பாடல்களைப் பண்டித நா. பார்த்தசாரதி ஆராய்ந்து அரிய கட்டுரைகளை எழுதியுள்ளார். குற்றாலக் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி ஆகிய இரண்டின் நயத்தையும் ஆசிரியர் விளக்கிச் சிறந்த முறையில் தந்துள்ளார் (54

டிசம்பர் ப. 6). அதிக பக்கங்கள் இக்கட்டுரைக்கு ஒதுக்கியதால் எதிர்ப்பு ஏற்பட்டதாகவும், இலக்கிய இதழ் என்பதால் இலக்கியக் கட்டுரைக்கு அதிக இடம் ஒதுக்கியதாகவும் ஆசிரியர் விக்கிரமன் குறிப்பிடுகின்றார்.

## அறிவியல் கட்டுரை

"தமிழில் விஞ்ஞானத்தைக் கூறமுடியாது என்னுங் காலமிருந்தது; இப்பொழுதும் இருக்கிறது. 'அதெல்லாம் ஆங்கிலத்தில்தான் படிக்கவேண்டும் என்பார் சிலர். கணிதம் ஆங்கிலத்தில்தான் வேண்டும், விஞ்ஞானம் ஆங்கிலத்தில் என்றால், கவிதையும் பழைய புராணங்களும் மட்டும் தமிழில் கூறுவதால் தமிழ் வளருமா? இந்தப் பிரச்சனை அவசரமாகக் கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். விஞ்ஞான அறிவை மெள்ள மெள்ள வளர்க்க வேண்டும் எனும் எண்ண விளைவாக அவ்வப்போது அமுதசுரபி அறிவியல் கட்டுரைகளை வெளியிடுவதுண்டு" (1954 ஜூலை ப. 6) என்ற பகுதியால் அறிவியல் கட்டுரைகள் பற்றிய அமுதசுரபியின் நோக்கும் போக்கும் புலனாகின்றது. 'வெளுக்கும் வாயு' என்ற தலைப்பில் மகாலிங்கம் என்பவர் எழுதிய கட்டுரை அதே இதழில் (ப. 37) வெளிவந்துள்ளது.

## கட்டுரைப் போட்டி

'உங்கள் தமிழாசிரியர்' என்ற தலைப்பிற்குக் கட்டுரைப் போட்டி நடத்திய செய்தியும் அறியமுடிகிறது. "தமிழாசிரியர்களின் சிறந்த புலமையும், அவர்களது திறமையான எழுத்தும் உள்ளத்தைக் கவரும் சொற்பொழிவும் இளைஞருலகத்தை, மாணவருலகத்தைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன. தமிழாசிரியர்களின் எழுத்தில், பேச்சில் மோகங்கொண்டு இளைஞர்களும் மாணவர்களும் அவர்களை இலக்கிய வழிகாட்டிகளாகக் கொண்டிருக்கிறார்கள்" எனக் குறிப்பிட்டு மாணவர் கட்டுரைப் போட்டி பரிசு ரூ.200 என்றும் கீழ்வரும் தமிழாசிரியர்கள் பெயரும் கொடுக்கப்பெற்றுள்ளன.

1. பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை
2. டாக்டர் மு. வரதராசனார்
3. திரு. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்
4. திரு. இளவழகனார்
5. டாக்டர் மா. இராசமாணிக்கனார்
6. டாக்டர் அ. சிதம்பரநாத செட்டியார்

7. பேராசிரியர் அ. சீனிவாசராகவன்
8. திரு. சோமசுந்தர பாரதியார்
9. திரு. க.பொ. ரத்தினம் (இலங்கை)
10. திரு. மு. இராகவ ஐயங்கார்

கட்டுரை அளவு ஐந்து பக்கங்கள். முதற்பரிசு ரூ.100. நான்கு இரண்டாம் பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ.25 (1956 ஆகஸ்டு இதழ்).

## நாவல்

அமுதசுரபி இதழில் தொடர்நாவல்களும், குறுநாவல்களும் வெளிவந்துள்ளன. இவை வாசகர் மத்தியில் பெரும் பாராட்டைப் பெற்றுள்ளன. சாண்டில்யன் எழுதிய மலைவாசல், ஜலமோகினி, ஆர்.எஸ். மணி எழுதிய நீலமாளிகை, த.நா. குமாரஸ்வாமி எழுதிய கானல்நீர் முதலிய தொடர்நாவல்களும் விக்கிரமன் எழுதிய இன்பக் கண்ணீர் என்ற குறுநாவலும் வெளிவந்துள்ளன.

## பல்வேறு பகுதிகள்

திரையும் மேடையும், பாரதி பரம்பரை, சங்கப்பலகை, தேதியும் செய்தியும், குயிலின் குரல், பாலர் பகுதி, மகளிர் பகுதி, திரைப்பட விமர்சனம், பாரதி வாக்கு, கடிதமும் கருத்தும், எட்டுத்திக்கு போன்ற பகுதிகள் இடம்பெற்றுள்ளன.

பாரதி பரம்பரை' என்ற தலைப்பில் 1956 ஜூலை இதழில் படத்துடன் கவிஞர் தமிழழகன் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளார். 'சங்கப்பலகை' என்ற பகுதியில் புத்தகங்கள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. **பாரதி நினைவுகள்** ஆசிரியை யதுகிரி அம்மாள், வெளியிட்டோர் அமுத நிலையம் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை-18 விலை ரூ.1-10-0 ஒரு மகாகவியுடன் வாழும் பாக்கியம் பெற்ற இவ்வம்மையாரின் நடையில் பாரதியை நாம் காண்கின்றோம். ஒன்றிப் பழகும் அவர் பேசுவதை நாம் கேட்கிறோம். அவர் கம்பீரமாகப் பாடும் குரல்கூட நம் செவியில் விழுகிறது (1955 பெப்ரவரி ப. 55).

'நாடக விழா மலர்' தமிழ்ச்சங்கம் - பம்பாய். "தமிழ் நாட்டினின்று வெளிவரும் விசேஷமலர்களைத் தோற்கடிக்கும் வகையிலே வருடம் (ஆண்டுக்கு) ஒருமுறை நாடக விழாவைப் பயன்படுத்திக் கொண்டு, பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார் அழகிய மலரைத் தயாரித்துவிடுகிறார்கள். இந்த ஆண்டு நவாப் ஸ்ரீ ராஜ

மாணிக்கத்தின் நாடக நிகழ்ச்சிகளை ஒட்டி வெளியான மலரிலே கட்டுரைகளும் கவிதைகளும் மூவர்ண ஓவியமும் போட்டோக்களும் ஹாஸ்யச் சித்திரங்களும் நிறைந்திருக்கின்றன" (1955 ஜூலை ப. 55).

## தேதியும் செய்தியும்

டிசம்பர் 1954 (ப. 8)

3. தமிழகத்து வடஎல்லை குறித்த பிரச்சினைகளைத் தீர்க்க எல்லைக் கமிஷன் நியமிக்கக் கோரக்கூடும் என்று நிதி மந்திரி தெரிவித்தார்.

4. ஸ்ரீ தெ.பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை சிந்தாதிரிப் பேட்டை கல்லூரிக்கு ஆற்றிய 25-ஆண்டு, தொண்டைப் பாராட்டி விழா ஒன்று நடைபெற்றது.

காலை 4.45 மணிக்கு 'கல்கி' ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி காலமானார்.

11. தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக ஸ்ரீ ம.பொ.சி. தேர்ந்தெடுக்கப்பட்டார்.

13. விவாக வயது ஆணுக்கு 18 பெண்ணுக்கு 15 என ராஜ்யசபை முடிவு செய்தது.

போன்ற செய்திகள் தியதி வாரியாக இடம் பெற்றுள்ளன.

குயிலின் குரல் (1955 மார்ச்சு - ப. 84) திரைப்பட விமர்சனம் 'வள்ளியின் கணவன்' என்ற படம்பற்றி வந்துள்ளது.

## மாணவர் பகுதி

திரு. விக்கிரமன் 'மாணவர் அண்ணா' என்ற புனைபெயரில் எழுதியுள்ளார். 'பூ' என்ற புனைபெயரிலும் எழுதியுள்ளார்.

## திரைப்பட விளம்பரம்

1955 ஜனவரி இதழின் முதல் பக்கத்தில் திரைப்பட விளம்பரம் வெளிவந்துள்ளது. அதில், ஜெமினியின் ஔவையார் மீண்டும் உங்களை மகிழ்விக்க ஜனவரி 14 முதல் சென்னை வெலிங்டன், பிரபாத், சரஸ்வதி மூன்று தியேட்டர்களிலும் மற்றும் தமிழ் நாடெங்கும்.

"காலமெனும் மண்மீது அடிச்சுவட்டைக் கண்டு
கடவுள்தந்த சடலமிதைப் பயன்படுத்திக் கொண்டு
ஞாலமிசை நல்லவராய் வாழ்ந்திடவே பண்டு
ஞான முனிவோர்கள் எல்லாம் செய்தார்கள் தொண்டு"

என்ற பகுதி காணப்படுகிறது.

## பாரதி வாக்கு

'பாரதி வாக்கு' இன்று பலிப்பதை ஒரு சிறு குறிப்பு மூலமாய்ப் புலப்படுத்துகிறார் நெல்லையப்பர். ஒவ்வொரு இதழிலும் பாரதி வாக்கு வெளியாகும் (1954 மே - ப. 5) என்று ஆசிரியர் குறிப்பிடுவதைக் காணலாம்.

## கடிதமும் கருத்தும்

"நான் மலரில் ஒன்றே ஒன்று குறைவதை உணர்கின்றேன். ஆம் அது உங்கள் கதைதான். மலரின் பொருளடக்கத்தில் 'வேம்பு'வின் பெயரில்லாமல் இருப்பது மலருக்கே நிறைவைக் கொடுக்க வில்லையே" உங்கள் வே. ரங்கராஜன், விழுப்புரம் என்ற பகுதியில் ஆசிரியர் விக்கிரமன் இதழிலும் வாசகர் மத்தியிலும் தனக்கென ஒரு இடத்தைத் தக்கவைத்துக் கொண்டிருந்தமை புலனாகின்றது.

## தீபாவளி மலர்

அமுதசுரபியின் சிறப்புகளுள் ஒன்று தீபாவளி மலர். நவம்பரில் 1954 முதல் 1956 முடிய தீபாவளி மலர்கள் வெளிவந்துள்ளன. கவிதை, சிறுகதை, கட்டுரை, சிற்பம், ஓவியம் முதலியன சிறப்புகளுடன் விளங்குகின்றன. ஆசிரியர் விக்கிரமனின் உழைப்பும் இவற்றால் புலனாகின்றன.

## நோக்குப் போக்கும்

தீபாவளி மலர் கொண்டு வருவதில் அமுதசுரபி சிறப்பாகச் செயல்பட்டது. ஆசிரியர், "தீபாவளி நெருங்குகிறது. அமுதசுரபி தீபாவளி மலர் தயாராகிறது. நவம்பர் மாத அமுதசுரபி இதழ் தீபாவளி மலராகத் தீபாவளியன்று கிடைக்கும். இந்த ஆண்டு ஏராளமான படங்கள் கதை கட்டுரைகளுடன் சிறந்த பரிசாகத் திகழவேண்டும் எனும் நோக்கத்துடன் திட்டமிட்டுத் தயாரித்து வருகின்றோம். இன்னும் மலர்பற்றி அடுத்த இதழில்தான் அதிகம் கூறமுடியும்" (1954

செப்டம்பர் ப. 6) என்றும், "அடுத்த இதழ் தீபாவளி மலர் குறைந்த விலையில் எவ்வளவுக் கெவ்வளவு சிறந்த அம்சங்களுடன் கூடிய விருந்தளிக்க முடியுமோ அதை அளிக்கப் பாடுபடுகிறோம். தொடர்கதைகள் மலரில் வெளிவரும். தமிழகத்து உங்கள் அன்புக்குப் பாத்திரமான எழுத்தாளர்கள் பலர் எழுதுகிறார்கள். மலரிலே சிற்ப ஓவிய அற்புதங்களுக்குக் குறைவே இல்லை. இதற்குமேல் நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. மலரைப் பாருங்களேன்" (1954 அக். - ப. 6) என்றும் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு, திட்டமிட்டுத் தயாரித்த தீபாவளி மலர் 1954 நவம்பரில் (ஜய, ஐப்பசி) ஹரியா அவர்கள் வரைந்த திருமகள் - கலைமகள் அட்டைப்படத்துடன் 176 பக்கங்களில் (விலை ரூ.1½) வெளிவந்துள்ளது. அதில் **சமர்ப்பணம்** என்ற பகுதியில், "உதய ஞாயிறுடன் பொற்கிரணங்கள் பூரித்து எழ, சோலைக் குயில்கள் பூபாளம் பாட, புதுமலர்கள் இளந்தளிருடன் மகிழ்ச்சித் தென்றலில் ஆட தீபாவளி நாளாம் கலைவிழாத் திருநாள் பிறக்கிறது. . . . வாணியாம் தமிழ்த்தாயின் திருவடிகளில் அருளாசி பெற இம்மலரைக் காணிக்கையாக்குகிறோம். . . . . கலைமகளையும் அலைமகளையும் மேலட்டையில் தாங்கி, வீரத்திருவிழிப் பார்வையில் புதுச்சக்தியூட்டும் முருகனை முகப்பு ஓவியமாகக் கொண்டு தமிழகத்து அறிஞர்கள் பலரின் கதை, கட்டுரை, கவிதைகளுடனும், பல போட்டோக்களுடனும் திகழும் இம்மலரைத் தமிழ்வாணியின் ஆசியுடன் நன்னாளில் தமிழ்ப் பெருமக்களுக்கு, இதுகாறும் அணைத்து வளர்த்து வந்ததுபோல் இனியும் ஆதரவுக்கரத்தின் அணைப்பில் அமுதசுரபி திகழ அன்புப் பரிசாக அளிக்கிறோம். - ஆசிரியர்" என்று விக்கிரமன் எழுதுவதைப் பார்க்கலாம்.

அம்மலரில், ம.பொ.சி. அவர்கள் 'தொழிலரசு' என்ற தலைப்பில் ஔவையாரின் பாடலை ஒட்டிக் கட்டுரை எழுதியுள்ளார். அதில், "தொழிலாளி உழைத்து உண்பவன், பிறர் உழைப்பில் உண்ணும் சோம்பேறியல்ல, ஆதலால் தொழிலாளி வர்க்கம் ஆட்சிபுரியும் நாட்டில் உற்பத்தி பெருகும், உற்பத்தியான பொருளைத் திறமைக்கும் தேவைக்கும் தக்கபடி பகிர்ந்தளிக்க முடியும். இப்படி மக்கள் எல்லோரும் சாதி மத பேதங்களை யெல்லாம் கடந்து வாழவேண்டுமானால், மனித உணவை மனிதர் பறிக்கும் மடமை ஒழிய வேண்டுமானால், மனிதனை மனிதன் கொன்று குவிக்கும் மண்ணாசை அழிய வேண்டுமானால் தொழிலாளர் அரசு ஏற்பட

வேண்டும்" எனக் குறிப்பிடும் பகுதி சிறப்பாக உள்ளது. அந்த ஔவையார் பாடல் இதோ!

"நூலெனிலோ கோல்சாயும் (அந்தணர்)
நுந்தமரேல் வெஞ்சமராம் (அரசர்)
கோலெனிலோ ஆங்கே (வணிகர்)
குடி சாயும் நாலாவான் (உழவர்)
மந்திரியும் ஆவான்
வழிக்குத் துணையாவான்
அந்த அரசே அரசு."

கி.வா. ஜெகந்நாதன் அவர்கள் 'நகை செய்யும் நங்கை' என்ற தலைப்பில் குமரகுருபரரின் பாடலுக்கு விளக்கமாகக் கட்டுரை எழுதியுள்ளார்.

## மலருக்குப் பாராட்டு

'பலர் கடிதம் மூலமாகவும் நேரிடையாகவும் தெரிவித்துள்ளனர். மலரின் ஒவ்வோர் அம்சத்தையும் ஒவ்வொருவர் வெகுவாகப் பாராட்டி எழுதியிருக்கின்றனர். ஸ்ரீ கல்கி போன்ற பிரபல ஆசிரியர்களின் நன்மதிப்பைப் பெற்ற இந்த மலர் போன்று பல மலர்கள் தயாரிக்கும் ஆற்றலை அளிக்கும் சக்தி வாசகர் பெருமக்களிடமே இருக்கிறது' (1954 டிசம்பர் - ப. 6).

## கல்கியின் பாராட்டு

"குறைந்த வசதிகளுடன் சிறந்த மலர் தயாரித்ததற்குப் பாராட்டினார். நண்பர்கள் வாயிலாக இதை அறிந்த நான் இதை ஊர்ஜிதம் செய்துகொள்ளும் பொருட்டு 'அமுதசுரபி பிரசுரகர்த்தர் ஸ்ரீ சுவாமிநாத ஐயருடனும், எழுத்தாளர் ஸ்ரீ நா. இராமச்சந்திரனுடனும் அவர் இல்லம் சென்றோம். மிகவும் மெலிந்து படுத்த படுக்கையாய் இருந்த அவர் எழுந்து உட்கார்ந்து 'பேஷ்! பேஷ்! மலரை ரொம்ப நன்றாகக் கொண்டு வந்திருக்கிறீர்கள் ..... மலரை விட எவ்வளவோ நன்றாக இருக்கிறது' என்று கூறி மற்றும் அமுதசுரபி நிலைமையை ஆவலுடன் விசாரித்தார் (1955 ஜனவரி எப்போ வருவார் கட்டுரை).

## தீபாவளி மலர் – 1955

தேவர்களும், கின்னரரும், கிம்புருடர்களும் வந்தனர். . . . . தமிழ்த் தாய்க்குச் சூட்டப்படும் இலக்கிய மலர்களின் மணத்தை நுகரத்தான் - மலரிலே வர்ண விசித்திரமாகத் திகழும் ஓவிய

அற்புதங்களைக் காணத்தான் - ஆசிரியர் (1955 நவம்பர் - தீபாவளி மலர் - ப. 8) என்ற ஆசிரியரின் கற்பனை குழைத்த தலையங்கம் காணத்தக்கது.

மேலும், 'திருக்குறளுக்கு இது பொருந்துமா?' என்ற தலைப்பில் திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரையை முதன்முதலாக அமுதசுரபிக்கு நாமக்கல் கவிஞர் எழுதியிருக்கின்றார். கி.வா. ஜகந்நாதன் எழுதிய அரிசியும் ஆணையும், அகிலன் எழுதிய வெடித்த பட்டாசு (சிறுகதை), யோகி சுத்தானந்த பாரதி எழுதிய கருணைக் கண்ணீர், அழ. வள்ளியப்பர் எழுதிய தோட்டம் (கவிதை), விக்கிரமன் எழுதிய ஆலங்காட்டிலே அதிசயக் கூத்து போன்றன மலரின் சிறப்பான கூறுகளாகும்.

## இதழ் வளர்ச்சிக்கு வாசகர்களின் ஆதரவு

மலரின் மணம் என்ற அதே பகுதியில், "வானத்திலிருந்து அருள்நோக்கு புரியும் இந்திராதி தேவர்கள் மலர் வெற்றிக்குத் தாங்களே காரணம் என்று கூறுவது எம் காதில் விழுகிறது. தமிழைப் பெற்றெடுத்த ஆதிசிவனும், தமிழ்க் கடவுள் முருகனும், புத்தபிரானும் நாங்கள் நாங்கள் என்று குரலெழுப்புவதும் காதில் விழாமலில்லை. எல்லோருக்கும் நீங்களே நீங்களே என்று கூறிவிட்டு நாம் தமிழ்ப் பெருமக்களாகிய உங்கள் பக்கம் திரும்பி அன்பர்களே மலர் நன்றாக அமைந்திருக்கிறது என்று நீங்கள் எண்ணினால் அதன் முழுபொறுப்புக்கும் நீங்கள்தான் காரணம் என்று பெரும்பழியை உங்கள்மீதே சுமத்துகிறேன். ஏற்று விட்டீர்களா? வணக்கம் -ஆசிரியர்". (1955, தீபாவளி மலர் - ப. 14) என முடிக்கிறார். இதில் வாசகர்களின் பங்கு இதழ் வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்ற உணர்வு வெளிப்படுகிறது.

## தீபாவளி மலர் - 1956

32 தலைப்புகளில் 170 பக்கங்களுக்குமேல் 1956ஆம் ஆண்டு தீபாவளி மலர் வழக்கம்போல் சிறப்பான முறையில் வெளிவந்துள்ளது. சுத்தானந்த பாரதியின் 'வழிகாட்டு கண்ணா' என்ற கவிதையோடு மலர் தொடங்குகின்றது.

இதில், கி.வா.ஜ.வின் 'கால்பிடிக்க தாதியுண்டு', விக்கிரமனின் 'அரச குமாரனின் அற்புத சிருஷ்டி', மாயாவியின் 'ஒளியும் இருளும்' ராஜம் கிருஷ்ணனின் 'சாபம்', ஜெகசிற்பியனின் 'மனித சுபாவம்', எல்லார்வியின் 'கண்கண்ட தெய்வம்', விந்தனின் 'அன்பு அலறுகிறது' போன்ற படைப்புகள் சிறப்பான கூறுகளாகும்.

கருணைப் புதுயுகம் சூழ - மனக்
கவலையில் லாத சுதந்தரம் வாழ
அருண வசந்தம்போல் வாராய் - கண்ணா
ஆனந்தம் பொங்கும் அமைதியைத் தாராய்!

என்பது சுத்தானந்த பாரதியின் முகப்புக் கவிதை.

## அட்டைப்படம்

அமுதசுரபியின் அட்டையில் இலக்கியக் காட்சிகளே பெரும்பாலும் இடம்பெற்றுள்ளன. மாறாக, 1955 ஜனவரி இதழில் உழவனையும் அவன் மனைவியையும், பிப்ரவரி இதழில் குமண்பாண்டத் தொழிலாளியையும் அவன் மனைவியையும் அட்டைப் படம் சித்தரிக்கிறது.

1955 ஜனவரி இதழில், "கலையிழந்த நாட்டிற்கு ஒளி கொடுக்கக் களிபடைத்த மொழியினோடு புத்தாண்டு பிறக்கிறது. பிறக்கும் ஒவ்வொரு ஆண்டையும் இன்முகத்தோடே நம்பிக்கை ஒளி இதயத்தே வீசிட வரவேற்கிறோம். தைத்திங்கள் உழவர் களிப்புடன் விழாக் கொண்டாடும் நாள்; மழையும் மழைக்குக் காரணமான கதிரவனும் அருள் சுரக்காவிடில் உழவர் குதூகலப்படுவது எங்ஙனம்? உழவர் இல்லையேல் உலகம் வாழ்வதேது.

சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை

என்று திருக்குறள் கூறுவது போன்று உழவுத் தொழிலில் எவ்வளவு துன்பம் ஏற்பட்டாலும் அந்தத் தொழிலே சிறந்தது.

புதுநெல், புத்தாடை, எல்லோர்க்கும் புத்தாடை; கைத்தறியினாலான ஆடையை வாங்கிவந்து தன் இல்லக் கிழத்திக்குக் கொடுப்பதிலே அவனுக்கு எவ்வளவோ பெருமை. அவன் அகக் களிப்பு முகத்திலே விளங்குகிறது. அந்த எதிரொலி அந்தத் திருமகளின் முகத்திலும் பிரதிபலிப்பதைக் காணலாம்" (ப. 5) எனக் குறளோடு இணைத்துக் காட்டப்படுகிறது.

## வாசகர்கள் எழுத வாய்ப்பு

"புத்தாண்டில் இளம் எழுத்தாளர்களுக்கும் போட்டோ கிராபர்களுக்கும் இன்னும் அதிக இடம்கொடுக்க எண்ணம்.

வாசகர்களும், எழுத்தாளர்களாக மாற நல்லதொரு சந்தர்ப்பம் ஏற்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்." (1955 டிசம்பர் - ப. 6) என அட்டைப்படம் கொடுத்து அதற்கேற்ற கதையை எழுதச் செய்யும் உத்தியும் காணப்படுகிறது.

1956 டிசம்பர் இதழில் பரிசு அட்டைப்படக் கதை பற்றிய குறிப்பும் கவிதையை 20.12.56க்குள் அனுப்பவேண்டும் என்ற குறிப்பும் காணப்படுகிறது.

எந்தப் பத்திரிகை சமுதாயத்திற்கும் இலக்கியத்திற்கும் ஒற்றுமையை ஏற்படுத்துகிறதோ அதுவே நல்ல இலக்கியப் பத்திரிகையாகும்.

குறுகிய நோக்கோடு முற்போக்கு பிற்போக்கு அம்சங்களைக் கணித்து ஒதுங்கிப் போகாமல், மனித வளர்ச்சிக்குப் பாடுபடும் சகல சக்திகளையும் பேணுவது அமுதசுரபியின் இலட்சியமாகக் காணமுடிகிறது.

அமுதசுரபி வேறு - ஆசிரியர் விக்கிரமன் வேறு என்று பிரித்துப் பார்க்கமுடியாதபடி, ஆனந்த போதினி ஆசிரியர் முனுசாமி முதலியாரால் தோற்றுவிக்கப்பெற்ற இவ்விதழைக் கடந்த ஐம்பதாண்டுகளாகக் கட்டிக்காத்த பெருமை திரு. விக்கிரமன் அவர்களையே சாரும்.

# தென்றல்

## ப. புகழேந்தி

உலகெங்கும் இலக்கியத் திருடர்கள்;
திருடித்தான் புகழ்பெற்றான் ஷேக்ஸ்பியர்

என்ற வரிகளோடு 22.6.1954இல் தொடங்கியது 'தென்றல்' வார இதழ். வெளியீட்டகம்: 2, சண்முக முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை-14. டெம்மி சைஸில் 12 பக்கங்கள் கொண்ட இதழின் விலை இரண்டணா. செவ்வாய்க்கிழமை அதன் வெளியீட்டு நாள். ஒரு வேடிக்கை முதல் இதழின் முகப்பில் விலையே போடப்படவில்லை. மறந்து விட்டார்களா, அல்லது அந்த சைஸில் அதே பக்கங்களுடன் வரும் பத்திரிகைகள் எல்லாமே (முரசொலி உட்பட) அப்போது அதே விலையில் இருந்ததால் விட்டுவிட்டார்களோ தெரியவில்லை. ஆனால் இரண்டாம் இதழ் முதல் விலையை முகப்பிலேயே போடத் தொடங்கிவிட்டார்கள்.

'மன்னர்கள் எதிர்த்தாலும், மத குருக்கள் எதிர்த்தாலும் உலகத்து வாள் முனைகள் அத்தனையும் கூடி எதிர்த்தாலும் நான் அஞ்சமாட்டேன்; காரணம் அதைவிடக் கூர்மையான பேனா முனை இதோ என் கையிலிருக்கிறது' என்ற வால்டேரின் பொன்மொழியை வலப்புறத்திலும், 'சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க, சொல்லிற் பயனிலாச் சொல்' என்ற திருக்குறளைத் தலைப்பிலும் கொண்டதாகத் திகழ்கிறது தென்றல்.

தென்றல் ஆசிரியரான கவிஞர் கண்ணதாசன் அதைத் தொடங்கியபோது, திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசியல் கருத்துகளைப் பரப்புகிற ஒரு முழுமையான வார இதழாகவே தொடங்கினார் என்பதே உண்மை; எனினும் அது அரசியலை விடவும் இலக்கிய ரீதியான இதழ் என்ற முறையிலேயே வரவேற்கப்பட்டது என்பது நிதர்சனமான உண்மை.

முதல் பக்கக் கட்டுரையே ஓர் இலக்கிய விமர்சனக் கட்டுரை என்பதன் மூலமும் நாம் அதனை உணரமுடியும். பத்திரிகை தொடங்க வேண்டும் என்ற பல நாள் கனவைச் செயல்படுத்தும்போது, ஒரு உண்மையான எழுத்தாளனுக்குத் தான் படித்த பல விஷயங்களையும்

தனது பத்திரிகையில் தன் நோக்கில் எழுதிக் குவிக்க வேண்டும் என்றே தோன்றும். கண்ணதாசனும் அதற்கு விலக்கல்ல. கட்டுரைகள், துணுக்குகள், கவிதைகள் என இதழ் முழுதும் அவரே எழுதிக் குவித்துள்ளார். பார்வதிநாதன் என்ற புனைபெயராலும் எழுதத் தவறவில்லை அவர் (அவரது மனைவியாரின் பெயர் பார்வதி; அதனால் அந்தப் பெயரையும் வைத்துக் கொண்டார்).

முதல் இதழிலேயே அவருடைய கவிதைத் தொண்டு தொடங்குகிறது. 'நமது குடும்பம்' என்ற தலைப்பில்,

நாமெல்லாம் ஒரு குடும்பம் - ஆகா அந்த
நயமிகுந்த வார்த்தையில்தான் என்ன இன்பம்

எனத் தொடங்கும் அந்தக் கவிதை அறிஞர் அண்ணா, நாவலர் நெடுஞ்செழியன், கலைஞர் கருணாநிதி, ஈ.வெ.கி. சம்பத், என்.வி. நடராசன் எனும் கழகக் குடும்பத்தவர்கள் பற்றிய அழகிய எண்ணங்களை வெளிப்படுத்துகிறது. 'கூட்டுக்குரல்', 'இலக்கியத்தில் காதல்', 'இவனன்றோ கவிஞன்' எனப் பல தலைப்புகளில் இலக்கியக் கட்டுரைகளைக் கவிஞர் எழுதியுள்ளார். பார்வதிநாதனோடு காரை முத்துப்புலவர், காரைக்குடி நாராயணக் கவி என்றெல்லாம் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார். அப்போது வெளிவந்த 'விளையாட்டுப் பொம்மை', 'புதுயுகம்' ஆகிய திரைப்படங்களைப் பற்றிய அவரது விமர்சனங்கள் வேடிக்கையாகவும் வித்தியாசமாகவும் வெளியிடப் பட்டிருக்கின்றன.

மகாலிங்கத்தின் 'விளையாட்டுப் பொம்மை' கோபப்பட்டு தியேட்டரை விட்டு ஓடிவிட்டதாம்! 'ஒரு முதலாளி தமது தொழிலாளர்கள் அனைவரையும் 'புதுயுகம்' திரைப்படத்தைப் பார்க்க அனுப்பிவைத்தாராம். படம் பார்த்துவிட்டு வந்த அவர்கள் படம் பார்த்த மூன்று மணி நேரத்துக்கு 'ஓவர்டைம்' கூலி கேட்டார்களாம். அதாவது படம் அவ்வளவு மோசமாம் - இவை 'விளையாட்டுப் பொம்மை', 'புதுயுகம்' படங்களுக்கு விமர்சனங்கள்.

மகாகவி தாகூரின் 'குழந்தை விளையாட்டு' என்ற மொழி பெயர்ப்புக் கவிதையும், நேசன் என்பவர் எழுதிய 'தழுவ வாராய்' என்ற கவிதையும், அண்ணா அன்பனின் 'மலரமலர' மற்றும் ரா.சு.கி.யின் 'கஷ்டமே கிடையாது' என்ற கட்டுரைகளும் சேர்ந்தாலும் கூட முதல் இதழில் வந்துள்ள சேதிகள் அனைத்துமே 'தென்றல்'

அரசியல் பத்திரிகை அல்ல - இலக்கியப் பத்திரிகையே என்று சாதிக்கின்றன.

ஆசிரியப் பகுதியை 'எண்ணம்' என்ற தலைப்பிட்டு எழுதும் கவிஞர் கண்ணதாசன் முதல் இதழில் தாம் பத்திரிகை தொடங்கியிருப்பதன் நோக்கத்தை வெளிப்படுத்துவதுடன், 'திருக்குறள் படித்தால் புலவனாகலாம்; திராவிட நாடு படித்தால் தமிழனாகலாம்' என்ற சிலம்புச் செல்வர் ம.பொ.சி.யின் கருத்தையும், 'அண்ணாதுரை பத்திரிகையை வரிவிடாமல் படி; உனக்கு நல்ல நடை வரும்' என்ற அறிஞர் வ.ரா.(மசாமி) வலியுறுத்தியதையும் சிறப்பான செய்தியாக வெளியிடுகிறார்.

தென்றலின் இரண்டாவது இதழ்தான் அதனுடைய லச்சினையான (தன்கருத்தான) 'போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித் தூற்றுபவர் தூற்றட்டும் ஏற்றதொரு கருத்தை என(து)உள்ளம் என்றால் எடுத்துரைப்பேன்; எவர் வரினும் நில்லேன் அஞ்சேன்' என்பதனைப் பிரகடனப்படுத்தியது.

முதல் இதழில் வால்டேரின் வரிகளைப் படித்த அதே இடத்தில் இதனை வெளியிட்டு தனது அஞ்சாமையை வெளிப்படுத்திக் கொள்கிறது 'தென்றல்'.

'சொல்லுக சொல்லிற்' குறள் வழக்கமான இடத்தில் தொடர்கிறது. இந்த இதழிலும் கண்ணதாசனின் கவிதையான 'சுற்றுப் பயணம்' மற்றும் யூஜின் வீல்டு பாடிய 'கண்ணும் பொன்னும்' எனும் மொழிபெயர்ப்புக் கவிதை இவற்றோடு டால்ஸ்டாய் பற்றிய கட்டுரை, 'நாடு தேடிய வீரர்' என்ற கட்டுரை, 'கோட்டைகளின் கதை' என்ற தலைப்பில் சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டை பற்றிய வரலாறு மற்றும் வழக்கமான 'இலக்கியத்தில் காதல்' தொடர்கிறது. 'இலக்கியத்தில் காதல்' என்ற பகுதி ஒரு சிறப்பான பகுதியாகும். சங்க இலக்கியங்கள், திருக்குறள் முதலிய பழந்தமிழ் இலக்கியங்களின் அகத்துறைப் பகுதிகள் அனைத்தும் அவற்றில் மிகச்சிறப்பாக விளக்கப்படுகின்றன.

அரசியல் பத்திரிகை என நம்மை நம்பவைப்பதற்காக 'கம்யூனிஸ்ட் கட்சி கூறுவதேன்?' சூ.என்.லாய் பற்றிய கட்டுரை மற்றும் ம.பொ.சி.யை நையாண்டி செய்யும் கட்டுரை ஆகியவை வெளியிடப் பட்டுள்ளன.

மூன்றாம் இதழ் முதல் பக்கத்திலேயே 'கிண்டலா? தாக்குதலா?' என்ற கண்ணதாசனின் கட்டுரையுடன் தொடங்குகிறது. கருத்துகளைத் திறம்பட எடுத்துச் சொல்வதற்குக் கையாளவேண்டிய நடை பற்றிய தெளிவான கட்டுரை அது. இரண்டு வாரம் வந்த முந்தைய 'தென்றல்' இதழ்களின் விமர்சனம் என்றுகூட அந்தக் கட்டுரையைச் சொல்லலாம்.

'புரவி கயிறுருவிப் போச்சே' என்ற கவி காளமேகம் மற்றும் ஔவையார் எழுதிய பாடல்களுக்கான விளக்கங்கள் இவை இதழை அலங்கரிக்கின்றன.

நான்காவது இதழ் 17.7.1954இல் வெளியிடப்பட்டது. அதுமுதல் செவ்வாய்கிழமைக்குப் பதில் சனிக்கிழமைக்கு மாறி இனி இதழ் வெளிவரும் நாள் பிரதி சனிக்கிழமை என்று தெளிவுபடுத்துகிறது. இந்தச் சனிக்கிழமை, மாறாமல் தொடர்ந்து கடைசிவரை இடம் பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கது.

இந்த இதழில்தான் முதன் முதலாக 'தென்றல்' என்ற சிறுகதை வெளியிடப்பட்டது. சிந்தனைச் செல்வன் எழுதிய 'ஏழையின் இரத்தம்', 'பலிபீடத்தில்' என்ற அண்ணா அன்பனின் நாடகம், 'இவனன்றோ கவிஞன்' இவை தொடர்கின்றன.

பெயருக்கு ஒன்றிரண்டு அரசியல் கட்டுரைகள் வந்துள்ளன. எப்பொழுதும் போல எண்ணம் (ஆசிரியர் தலைப்பில்லை) அரசியலைத் தொட்டே செல்கிறது.

தென்றலின் ஐந்தாம் இதழுக்குச் சிறப்பு அதிகம் என்றே சொல்லவேண்டும். 24.7.1954 தேதி இட்ட இதழில்தான் அண்ணா அவர்கள் பற்றிய கண்ணதாசன் எழுதிய காவியம் 'பெரும்பயணம்' தொடங்குகிறது.

> தமிழே!
> பிறப்பறியேன்; பெற்றெடுத்தார் பேரறியேன்; ஆயினும் உன்
> சிறப்பறிவேன் அன்னைச் செழுந்தமிழே - குறிப்பறியார்
> தூற்றின ரென்றாலும் துயர் கொள்ளான் நற்புகழைப்
> போற்றிட வென்மன்றிற் பொலி!

என்று தொடங்கும் அந்தக் காவியத்தின் முன்னுரையில் ஆழாக்கு, கடலை அளந்துவிட முயற்சிக்கிறது. முழுவதும் அளந்து கொட்ட

முடியாது என்றாலும் அந்த 'ஆழாக்கு'க்கு ஒரு பெருமைதானே!' என்று அண்ணாவைக் கடலாகவும், தன்னை ஆழாக்காகவும் எழுதும் கண்ணதாசனின் பாங்கு நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது.

'இல்லற ஜோதி' திரைப்படத்திற்கு வசனம் எழுதியவர் கண்ணதாசன். அவருடைய நடை அழகும் எளிமையும் மிக்க கவிதை நடை. ஆனால் அந்தப் படத்தில் வரும் 'அனார்க்கலி' என்ற ஓரங்க நாடகம் அதற்கு மாறுபட்ட வீரமிக்க, அழுத்தம் நிறைந்த எழுச்சி மிகு நடையாக இருந்தது. அதனை எழுதியவர் கலைஞர் கருணாநிதி அவர்களே! ஆனால் அவருடைய பெயர் திரைப்படத்தில் காட்டப்படவில்லை. இதை எழுதியவர் யார்? கண்ணதாசன் ஏன் எழுதவில்லை? அவரால் அதை எழுத இயலாதா? என்ற சர்ச்சை தமிழ்ப் பத்திரிகைகள் பலவற்றிலும் வந்துகொண்டிருந்த நேரம் அது. அதனைத் தெளிவுபடுத்துவதற்காகத் தான் எழுதிய 'அனார்க்கலி' ஓரங்க நாடகத்தை அந்த இதழில் வெளியிட்டிருந்தார் கண்ணதாசன். அதன் மூலம் திரைப்படத்தில் வந்த உரையாடல் கலைஞர் எழுதியது என்பது நிச்சியமானதுடன் அந்த சர்ச்சைக்கும் முற்றுப்புள்ளியாக அது அமைந்தது. இரண்டு இதழ்களில் தொடர்ந்தது 'அனார்க்கலி'.

இந்த இதழிலிருந்து மற்றொரு புதுமையையும் 'தென்றல்' வெளிப்படுத்தியது. கண்ணதாசன் மட்டுமல்லாமல் வேறு யார் கட்டுரைகள் எழுதியிருந்தாலும் அவற்றின் தலைப்புகள் கவிதைகளாகவே வெளிவந்தன. உதாரணங்கள் : அன்பன் என்பவரின் கட்டுரைத் தலைப்பாக 'சிங்களத்தீவினிலே மாடாய் உழைத்தோம்? திரும்பி வருவதற்கா பாலம் அமைத்தோம்?', 'தலைவன் திருநகர் வாரீரோ! தாயகம் மீட்டிடச் சேரீரோ! புலமைக் காஞ்சியைப் பாரீரோ! புதுமைக் கருத்துரை தாரீரோ' (14.8.54 இதழ்), 'தமிழினத்தின் உடன்பிறந்தார் அவர்களன்றோ, சதிகார வடவர் அதை அறிவதேது? (28.8.54 இதழ்), 'மாளிகையை விட்டான், மண்குடியைத் தொட்டான்'. 'இருயுகங்கள் மோதும் எல்லையிலே நின்றான்', எல்லார்க்கும் கொடுவளத்தை; இல்லையேல் அழி சகத்தை!' (11.9.54).

### நூல் நயம்

31.7.1954 இதழ் தென்றல் மற்றொரு புதுமையை வெளியிட்டது. 'நூல் நயம்' என்ற புத்தக மதிப்புரைப் பகுதியையும் 'கேள்விப்பெட்டி' என்ற வினா விடைப் பகுதியுமே அவை.

பொதுவாழ்விற் பணியாற்றி இலக்கி யத்துப்
பொன்வீட்டில் இளைப்பாறப் புகுந்த காலை
மதுக்கோப்பை கரத்தேந்திக் குடியன் காணும்
மாறாத கனவுலகம் காட்சி யாகும்.
சதுராடும் மங்கையரின் பாதத் தோடும்
சரியாகச் சேர்ந்தாடும் சிலம்பின் ஓசை
கதகதப்பை வாலிபரின் உளத்தி லேற்றிக்
கலக்குதல்போல் இலக்கியமும் கலக்கும் நெஞ்சை!

என்ற கண்ணதாசனின் அறிமுகத்துடன் நூல்நயம் தொடங்கப் பட்டதுடன், முதல்நூலாக, கவிஞர் வாணிதாசனின் 'எழிலோவியம்' நூல் மதிப்புரைக்கப்பட்டுள்ளது. தானே ஒரு கவிஞராக இருந்தும் சிறிதுகூடக் காழ்ப்புணர்ச்சியில்லாமல் வாணிதாசனின் நூலை மிகச் சிறப்பாகப் பாராட்டிய கவிஞர் அடியில் தன் பெயரையும் போடத் தவறவில்லை.

தென்றலில் இந்த இதழ் முதல் தொடர்ந்த 'கேள்விப்பெட்டி' சாதாரண வினா விடையல்ல. தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் தொடர்ந்து தமிழிலக்கியம் பற்றிய எல்லாவிதமான ஐயங்களையும் தெளிவுபடுத்தும் அரிய கலைப்பொக்கிஷமாகும். அதிலே கேட்கப்படாத கேள்விகளே இல்லை; விளக்கப்படாத செய்திகளே கிடையாது என்று தெளிந்து கூறலாம். இந்தப் பகுதியில் கண்ணதாசன் அல்லாமல் பின்னாளில் விடையளித்தவர் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் என்பதே அந்தக் கேள்விப்பெட்டியின் சிறப்பையும் பெருமையையும் சொல்லும். கேள்விப் பெட்டி பின்னாளில் 'ஐயம் அகற்று' (இதழ் முதல்) என்ற தலைப்பிலும் தொடர்ந்தது.

இந்த இதழின் மற்றொரு சிறப்பு கண்ணதாசன் எழுதிய 'உதவி ஆசிரியர்' என்ற சிறுகதை. கண்ணதாசனின் இந்தச் சிறுகதை முயற்சி அடுத்த இதழிலும் தொடர்கிறது. 'காவேரி' என்பது கதையின் தலைப்பு.

கலைஞர் கருணாநிதி, கவிஞர் கண்ணதாசன் இருவரும் மிகச்சிறந்த எழுத்தாளர்கள். திராவிட முன்னேற்றக் கழகம் என்ற மாபெரும் அரசியல் கட்சியின் இலக்கியப் பகுதிக்கு அண்ணாவின் அணுக்கத்தொண்டர்களாகப் பணியாற்றியவர்கள். துரதிர்ஷ்டவசமாக

அவர்களுள் 'சுகம் எங்கே?' என்ற திரைப்படம் தொடர்பாகப் பிணக்கு ஏற்பட்டுவிட்ட மாதிரியான ஒரு தோற்றம் உருவாக்கப்பட்டிருந்த அந்த நேரத்தில் அண்ணா தலையிட்டு தமது அறிவுரைகளை எடுத்துரைத்தார். அவற்றை ஏற்ற கண்ணதாசன் 'நடந்தவைகள் அழிந்தவைகளாக இருக்கட்டும்! இனி நடப்பவைகள் நல்லவைகளாக மலரட்டும்' என்ற உருவகக் கட்டுரை (கதை) ஒன்றை அந்த இதழில் எழுதியிருந்தார். தீமையிலும் நன்மை என்பது போலப் பிணக்குக்கு முடிவு கூறவந்த அந்த எழுத்தோவியம் இன்றளவும் தன் பெருமையைச் சொல்லிக்கொண்டிருக்கிறது (நடையழகில்).

'இலக்கியத்தில் காதல்', 'இவனன்றோ கவிஞன்' போன்றவை தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

## பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை

பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையாரைத் தமது ஆசிரியராகப் பெருமைபடக் கூறுவார் கண்ணதாசன். இலக்கியச் சுரங்கமான அப்பாத்துரையார் தென்றலில் அறிமுகமாகும் முதல் கட்டுரை இலக்கியக் கட்டுரையல்ல - 'மாஸ்கோவா காஞ்சிபுரமா?' என்ற அரசியல் கட்டுரைதான். இந்த இதழில் தொடங்கிய அப்பாத்துரையார் - தென்றல் தொடர்பு பல ஆண்டுகள் நிலைத்தது என்பது குறிப்பிடத்தக்கது.

பத்தாவது இதழிலிருந்து 'வள்ளுவன் மூத்தோன்' என்ற சிறிய விளக்கக் கட்டுரை தொடர்கிறது. கம்பன் முதலிய மற்றைய புலவர்களைவிடச் சிறந்தவன் வள்ளுவன் என்பதைப் பல்வேறு கவிதைகள் மூலம் உணர்த்துவது இதன் நோக்கம்.

'இலக்கியத்தில் காதல்', 'இவனன்றோ கவிஞன்' என்பனவற்றைப் போல 'வள்ளுவன் மூத்தோன்' என்ற பகுதியும் இலக்கியச் சுவைஞர்களால் பாராட்டப்பட்டது என்பதற்குப் பின் இதழ்களில் வந்த வாசகர் கடிதங்கள் சான்று பகர்கின்றன.

## பாரதி மலர்

தென்றலின் பதினோராவது இதழ் பாரதி மலராக வெளிவந்துள்ளது. தென்றலின் முகவரியும் 13, நல்லண்ண முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை-14 என மாறுகிறது.

மகாகவி பாரதிக்கு மலர் எடுத்த முதல் இதழ் - ஏன் ஒரே திராவிட இயக்க இதழ் என்ற பெருமை 'தென்ற'லுக்கே உண்டு என்பது ஒரு சிறப்பான செய்தியாகும்.

பாரதி பற்றிய அண்ணாவின் பார்வை (மக்கள் கவிஞன்) மற்றும் கண்ணதாசனின் 'காணி நிலம் வேண்டும்,' சாமி. பழனியப்பனின் கட்டுரைகள், த. கோவேந்தனின் கவிதை இவற்றோடு 'பாரதியின் கொள்கைக் குழப்பம் ஏன்?' என்ற கண்ணதாசனின் அரிய கட்டுரையும் இதழில் இடம் பெற்றுள்ளன.

சிறையிருக்கும் காதலர்க்குக் காதலி எழுதுவது போன்றதொரு கண்ணதாசன் கடிதமும் இந்த இதழைச் சிறப்பிக்கிறது. வழக்கமான 'இவனன்றோ கவிஞன்' மற்றும் 'கட்டபொம்மன்' நாடகம் இவையும் உண்டு.

பன்னிரண்டாவது இதழ் முதல் இதுவரை வந்து கொண்டிருந்த 'சொல்லு சொல்லை' என்ற குறளைத் தவிர்த்து விட்டுத் தனது 'போற்றுபவர் போற்றட்டும்' கவிதையை மட்டுமே வெளியிடத் தொடங்கியுள்ளது தென்றல். 'காதலிக்கு' என்ற த. கோவேந்தனின் கவிதை, மற்றும் காரை முத்துப் புலவரின் 'இலக்கியத்தில் காதல்', 'பெரும்பயணம்,' இவற்றோடு ஈ.வெ.கி. சம்பத்தின் பிரெஞ்சுப் புரட்சி பற்றிய கட்டுரையும் இந்த இதழில் இடம் பெற்றுள்ளன.

பதின்மூன்றாவது இதழில் 'இலக்கியத்தில் காதல்', கேள்விப்பெட்டி, கோவேந்தனின் கவிதை இவற்றோடு 'கட்டபொம்மன்' நாடகமும் தொடர்கின்றன. புதிதாக இந்த இதழில் 'காதலோ காதல்' என்ற மொழிபெயர்ப்பு நாவல் ஒன்றும் தொடராக வெளிவரத் தொடங்கியுள்ளது.

பதினான்காம் இதழ் (2.10.1954) 'கவிமணி மறைந்த சோகச் செய்தியைச் சொல்லிவிட்டு கோவேந்தன் கவிதையோடு 'பெரும்பயணம்', 'கட்டபொம்மன்', 'காதலோ காதல்' இவற்றையும் வழக்கம் போலத் தொடர்கிறது.

பதினாறாம் இதழில் வழக்கமான அம்சங்களோடு 'அண்ணாதுரை அறிஞரா?' என்ற வினாவுக்கு விடையாகக் கண்ணதாசனின் அருமையான கவிதையொன்று இதழுக்குச் சிறப்புச் சேர்க்கிறது. அறிஞர் அண்ணா பற்றிய கவிதை பதினேழாம்

இதழிலிருந்து துணையாசிரியராகப் பணியாற்றிய ஏ.கே. வில்வத்தின் சிறுகதைகள் வரத் தொடங்குகின்றன.

பதினெட்டாம் இதழில் (30.10.1954) தென்றல் மகத்தானதொரு இலக்கிய சர்ச்சையைத் துவக்கி வைக்கிறது. தமிழறிஞர்களிடையே கல்லூரிகளிலும், மேடைகளிலும் அலசப்பட்ட அதன் தலைப்பு 'பண்டைத் தமிழர் திருமணத்தில் தாலி கட்டும் வழக்கம் இருந்ததா?' என்பதாகும்.

தாலி கட்டும் வழக்கம் இருந்தது என்றார் ம.பொ. சிவஞானம். இந்த சர்ச்சையில் / விவாதத்தில் விவரம் தெரிந்த அனைத்துத் தமிழறிஞர்களும் கலந்து கொண்டு தமது கருத்துகளை எடுத்துரைத்திருந்தனர். சங்க நூற்களிலிருந்தும் தொல்காப்பியத்தி லிருந்தும் அவர்கள் எடுத்துக்காட்டிய சான்றுகள் வியக்க வைத்தன. அவற்றின் முடிந்த முடிவாகத் 'தமிழ்ச் சாதியில் தாலிகட்டும் வழக்கம் இருந்ததில்லை' என்ற தமது ஆணித்தரமான ஆய்வுச் சான்றுகள் மூலம் வெளிப்படுத்தினார் டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள் (13.11.1954 தென்றல் இதழ்).

20.11.1954 தென்றல் இதழ் ஓர் அரிய சாதனையைச் செய்தது. பாரதி, பாரதிதாசன் வரிசையில் சிறந்து விளங்கிய மிகச் சிறந்த கவிஞர்களில் ஒருவரான, தமிழகத்து வேர்ட்ஸ்வொர்த் எனத் தகும் கவிஞர் வாணிதாசன் பற்றிய கட்டுரையொன்று வெளியிடப்பட்டது. எழுதியவர் நா. அறிவழகன். அதைத் தொடர்ந்து கவிஞர் முடியரசன் பற்றிய கட்டுரை தமிழண்ணலால் எழுதப்பட்டு வெளிவந்தது (4.12.1954).

ஒரு கவிஞர் தன்னொத்த கவிஞர்களின் சிறப்பை வெளியிடுவதென்பது அரிது. கண்ணதாசனின் இந்த மனப்பாங்கு பலராலும் பாராட்டப்பட்டதுடன் இலக்கிய வளர்ச்சிக்கு 'தென்றல்' ஆற்றிய பங்கும் சிறப்பிக்கத் தக்கதாகும் என்பது வெளிப்படை

## தொடர்கதை

தமிழ் இதழ்த்துறையில் தொடர்கதைகள் எழுதப்படுவது சிறப்பானதாகக் கருதப்படுகிறது. இதற்குச் சிறப்பான இடத்தை அளித்தவர் 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி. எல்லா இதழ்களும் இதழாளர்களும் இதனைத் தொடர்ந்ததில் வியப்பில்லை. தென்றலும் இதில் தன்னை இணைத்துக் கொள்ளத் தவறவில்லை.

கண்ணதாசனின் 'ஆயிரம் தீவு அங்கயற்கண்ணி' தொடர்கதை 27.11.1954 (இதழ் 22)லிருந்து ஆரம்பமாகிறது. வரலாற்றுக் கதைப் பாணியில் எழுதப்பட்ட கதை அது.

எழுத்தாளர் கல்கி இயற்கை எய்தினார். இது குறித்துத் தனது இரங்கலை வெளிப்படுத்தத் தென்றல் தன் தலையங்கப் பகுதியைக் காலியாக விட்டுப் புரட்சி செய்து (11.12.54) தீவிர திராவிட இயக்கத்தினரால் கண்டிக்கவும் பட்டது (18.12.54). அந்தக் காலத்தில் அந்தச் செயல் ஒரு வித்தியாசமானது என்பதில் ஐயமில்லை.

அந்த இதழில் 'கழகக் கொடி வணக்கம்' என்ற பாடலுடன், 'கவிஞனும் தத்துவமும்' என்ற சிறப்பான கட்டுரையையும் எழுதியிருந்தவர் கண்ணதாசன்.

8.1.1955லிருந்து (அதாவது தனது இருபத்தெட்டாம் இதழிலிருந்து) இராயப்பேட்டையிலிருந்த தனது அலுவலகத்தை '2/127 மௌண்ட்ரோடு, சென்னை-6' என்ற முகவரிக்கு மாற்றிக் கொண்ட தென்றல் இலக்கியப் பரிசுப் போட்டியை விளம்பரப் படுத்தியது. இதழ் நிற்பதுவரை இந்த முகவரியே தொடர்ந்தது.

## வெண்பாப் போட்டி

இந்த இதழிலேதான் தமிழ்க் கவிதை வரலாற்றில் என்றென்றும் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தகும் 'வெண்பாப் போட்டி'யை அறிமுகப் படுத்தியது தென்றல்.

தமிழ்க் கவிதையின் எதிர்காலம் செத்துவிட்டது என்று சிலர், க.நா.சு., சி.சு. செல்லப்பா, ந. பிச்சமூர்த்தி - வாயாடிக் கொண்டிருந்த காலம் அது. புதுக்கவிதை என்ற பெயரில் 'வசன கவிதை' தொடங்கிய அந்த வேளையில் மரபுக் கவிதையின் மாண்பை விளக்க, மரபுக் கவிதையில் சொல்ல முடியாததை வேறு எந்தக் கவிதை முறையிலும் சொல்ல இயலாது என்பதைப் படம்பிடித்துக் காட்டிய அற்புதமான வெண்பாக்களை, சிறந்த கவிஞர்களை உருவாக்கி, வெளிப்படுத்தியது தென்றல். அந்த ஒரு இலக்கியப் பணிக்காகவே கூட தென்றலை உளமாரப் பாராட்டி மகிழலாம் என்பது நிச்சயம்.

வெண்பாவின் இறுதி அடி (ஈற்றடி) ஒன்று தரப்படும். மீதியுள்ள மூன்ற அடிகளையும் போட்டியாளர்கள் எழுதவேண்டும்.

ஒரு குறிப்பிட்ட நாளுக்குள் வெண்பா அலுவலகத்துக்கு வந்து விடவேண்டும். இந்த அறிவிப்பு, மங்கியிருந்த தமிழர்களின் கவிதை உணர்வைக் கிளர்ந்தெழச் செய்தது. மகத்தான கருத்துப் புரட்சியே உருவாயிற்று. தமிழகப் பள்ளி, கல்லூரி மாணவர்கள், ஆசிரியர்கள், புலவர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள் எல்லோருமே போட்டியில் பங்கேற்றனர்.

ஒவ்வொரு போட்டியிலும் பல வெண்பாக்கள் தென்றல் அலுவலகத்தை முற்றுகையிட்டன. அவற்றில் மிகச் சிறந்த வெண்பாக்கள் இதழ்தோறும் வெளியிடப்பட்டன.

வெண்பாப் போட்டிக்குத் தரப்பட்ட ஈற்றடிகளில் சில:

'பூக்காமற் போகுமோ பூ'

'என்றும் இளமை இவர்க்கு'

'கொண்டுவந்து போட்டுக் கொளுத்து'

'பகுத்தறிவால் ஆராய்ந்து பார்'

'கொய்யாமற் கொய்தணைத்துக் கொள்'

'அத்தான்கை வஞ்ச மடி'

'பூவைமேல் எத்தனைப் பூ'

'தொட்டாலும் தோன்றும் சுகம்'

'நாதத்தில் இல்லை நயம்'

'இலையோ வெங்கட் கிடம்'

'நெஞ்சிலே இட்ட நெருப்பு'

'தென்றலே ஏன்வந்தாய் செப்பு'

'வாள்கொண்டு தாக்குவோம் வா!'

வெண்பாப் போட்டியில் முதல் இரண்டு அடிகள் தரப்பட்டு அடுத்த இரு அடிகள் எழுதத் தூண்டும் இரட்டைப் புலவர் முறைப் போட்டியும் வெளியிடப்பட்டது. உதாரணம் :

'கற்பழித்துப் போன கடவுளெலாம் உங்களிடம்
இப்பொழுது வந்துஇடம் கேட்டால்'

ஒரு சொல்லை (கலை) முதலாவதாகவும் மற்றொரு சொல்லை (தலை) முடிவாகவும் வைத்து வெண்பா எழுதும் போட்டி. இப்படிப் பலப்பல போட்டிகள். அனைத்திலும் ஆர்வமுள்ள பலர் கலந்து கொண்டு தத்தம் கற்பனைகளை வியத்தகு முறையில் வெளிப்படுத்தினர்.

'பூக்காமற் போகுமோ பூ' என்ற ஈற்றடிக்கு வந்துள்ள இரண்டு வெண்பாக்களைக் கொண்டு அவர்தம் கற்பனைச் சிறப்பைக் காணலாம்.

> பெற்றிருக்கும் செல்வம் பிறர்க்குக் கொடுப்பதனால்
> வற்றுமென வள்ளல் வழங்கானோ - பொற்றொடியே
> ஈக்களெலாம் தேனை எடுத்தேகும் என்றஞ்சிப்
> பூக்காமல் போகுமோ பூ!

(செங்கற்பட்டு கே. சீனுவாசன்)

ஓர் ஈற்றடி எவ்வளவு பெரிய புரட்சியை உருவாக்குகிறது பாருங்கள்.

இனி, 'பூவைமேல் எத்தனைப் பூ'

> கண்குவளை பல்முல்லை கைகாந்தள் மார்கோங்கு
> ஒண்முக்கெள் பூவிதழோ வாம்பல் - முண்டகந்தாள்
> கோவைப்பூக் கன்னம் குழலில்பூ அப்பப்பா
> பூவைமேல் எத்தனைப் பூ!

(திருக்கழுக்குன்றம் எம்.எஸ். மணி)

இனி வழக்கமான சிந்தனைகள். ஒருவர் வித்தியாசமாக, புரட்சிகரமாகச் சிந்திக்கிறார் பாருங்கள். இராங்கியம் எழில் என்பாரின் வெண்பா இது:

> எண்ணெயிலை, ஏற்றபூச் சூடவகை யேதுமிலை
> பெண்கூந்தல் இந்நிலையில் பேன்பிடிக்க - மண்மீதில்
> சாவை அவளண்டி சாய்ந்துவிட்டாள்; பின்னந்தப்
> பூவைமே லெத்தனைப் பூ!

இரட்டைப் புலவர் முறை இது:

கொடுத்த முதலிரு அடிகள்,

'கற்பழித்துப் போன கடவுளெலாம் உங்களிடம்
இப்பொழுது வந்துஇடம் கேட்டால்'. . .

நாங்குநேரி 'பாபன்' இப்படி முடிக்கிறார் அதை :
- தப்பவிடேன்

ஈரோட்டுப் போர்வாளை எம்காஞ்சிச் சாணையிலே
கூராக்கித் துண்டிப்பேன் கொன்று.

'மக்கள் குரல்கேளார் மண்டும் துயர்நோக்கார்
மக்கள் மொழிக்கேதும் வாய்திறவார்'

என்ற முதலடிகளுக்கு வேலூர் இரா. சிவஞான வள்ளல் இப்படி ஈற்றடிகள் வழங்குகிறார்.

-அக்கொடியோர்
பொய்மை அரசியலைப் போக்கப் புகும்படையில்
மெய்சிலிர்க்கச் சேர்ந்துமகிழ் வேன்.

'கலை' எனத் தொடங்கி 'தலை' என முடித்தலைக் குடந்தை ஆ. கோவிந்தராசன் இவ்வாறு வெண்பா ஆக்குகிறார்.

கலையின் அரசியே! கன்னித் தமிழே!
அலைகடல் உண்டும் அருகாய் - நிலைபெற்றே
ஆல்போன்றாய்; உன்னை அழிக்க முனைவோருள்
தாள்பணிய வைத்தல் தலை.

சிலேடை வெண்பா ஒன்று. பெண்ணிற்கும் ஏதேனும் ஒரு பொருளுக்கும் சிலேடை.

மிக்கபொறை உள்ளமையால் மேற்பாரந் தாங்குமால்
மிக்கபுகழ் நன்மணியை ஈனுமால் - மக்களினம்
நண்ணும் துயர்நீக்கி நல்லின்பம் சேர்க்குமால்
பெண்ணும் புவியும் நிகர்.

(சௌ. ஜோதிராம், மதுரை)

பூவனத்துல் பூவாப்பூ பொன்முகத்துக் கன்னிப்பூ
தூமனத்துக் கற்பு துலங்கும்பூ! நீமணந்தால்
உய்வாள் மறத்தலைவ! உய்யாள் உரைமறுத்தால்
கொய்யாமல் கொய்தணைத்துக் கொள்!

(கலிப்பகை, சேலம்)

தொடர்ந்து வெண்பாப் போட்டியில் பலர் பங்கேற்றனர்.

**'கண்' எனும் சொல் மும்முறை வருதல்**

*எண்ணும் கலைமலிந்த எந்தமிழர்க் கிந்திமொழி*
*புண்ணடா புண்ணடா புண்ணாகும் - உண்ணுதற்காம்*
*தண்ணமுதம் அன்னதொரு செந்தமிழ்தான் செந்தமிழர்*
*கண்ணடா கண்ணடா கண்.*

(தமிழ் நெஞ்சன், கரந்தை)

1945இல் குமரன் இதழில் வெண்பாப் போட்டியை முதலில் தொடங்கியவர் முருகு. சுப்பிரமணியம். இப்படி மரபுக் கவிதையிலே வெண்பாவிலே மகத்தான கருத்துப் புரட்சியை உருவாக்கி வழிவகுத்த 'தென்றல்'லின் இலக்கியப் பணி மிகச் சிறந்த ஒன்றாகும்.

வெண்பாப் போட்டியில் பங்கேற்ற பலர் பின்னாளில் சிறந்த எழுத்தாளர்களாக, கவிஞர்களாக, பேராசிரியர்களாக உருவாகியுள்ளனர்.

வாசகர்களின் இலக்கிய அறிவுப்பசிக்குத் தீனி தருவதையும் தன் கடமையாகக் கொண்டிருந்தது தென்றல். வாசகர்கள் வினா எழுப்பி ஆசிரியரிடம் விடை கேட்பது வாடிக்கை. ஆனால் இங்கே தென்றல் வாசகரை நோக்கித் தன் வினாவை எழுப்பியது. 'நாங்கள் கேட்கிறோம், நீங்கள் சொல்லுங்கள்' என்று கேள்வி! 'இடுக்கண்' என்ற வார்த்தை திருக்குறளில் எத்தனை இடங்களில் வந்துள்ளது? (22.11.1955).

உதாரணத்துக்கு மற்றொன்று : கி.பி.1077இல் சீனப் பேரரசனுக்கு அரசியல் தூதரை (Ambassader) அனுப்பிய தமிழ்நாட்டு மன்னர் யார்? பாண்டியனா? சோழனா? பெயர் என்ன?

வாசகர்களில் பலர் இந்த வினாக்களுக்குச் சரியான விடைகளை எழுதிக் குவித்தனர். முதல் கேள்விக்கான விடையை 'இடுக்கண்' ஆறு குறட்பாக்களில் ஏழு இடங்களில் வந்துள்ளது என்ற விடையை எழுதியோர் நூற்றுக்கணக்கானோர் (12.2.1955). இரண்டாம் கேள்விக்கு விடை: முதலாம் குலோத்துங்க சோழன் (26.3.1955). இப்படி படிப்போரின் இலக்கிய அறிவுக்குப் பரீட்சை வைத்தது தென்றல்.

19.2.1955 இதழிலிருந்து நான்கு இதழ்களில் தொடர்ச்சியாக 'இட்லரின் கடைசி நாட்கள்' க. நாராயணனால் கதையாக எழுதப்பட்டு வெளிவந்தது.

19.3.1955இல் 'தத்துவம்' என்ற காரை முத்துப்புலவரின் அருமையான கட்டுரை இடம்பெற்றுள்ளது. இதழ்தோறும் இலக்கியத்தில் புதிய புதிய சர்ச்சைகள். 'இராமன் வணங்கத்தக்கவனா?' (ப. நெடுமாறன் மதுரை) 5.3.55 & 26.3.55) போன்ற கட்டுரைகள். 'கூளப்பநாய்க்கன் காதல்' விளக்கம் தொடர்ச்சியாக வந்தது.

## மனோன்மணியம் சுந்தரனார் மலர்

15.4.1955இல் தென்றல் வேறு எந்த இலக்கிய இதழும் செய்யாத மாபெரும் சாதனை யொன்றைச் செய்தது. தமிழக அரசின் 'தமிழ்த்தாய் வாழ்த்'தின் ஆசிரியர் மனோன்மணியம் ஆசிரியர், பேராசிரியர் சுந்தரம் பிள்ளைக்குப் புகழாரம் சூட்டும் விதமாகப் 'பேராசிரியர் மலர்' என்ற கருத்தாழமிக்க மலர் ஒன்றை வெளியிட்டது (இதற்குமுன் சுந்தரனாருக்கு வேறு எந்த இதழும் இவ்வாறு மலர் வெளியிட்டதாகத் தெரியவில்லை).

மலரின் விலை எட்டணா. 'வாணியின் காதல்' என்ற டாக்டர் மா. இராசமாணிக்கனார் எழுதிய மனோன்மணியம் பற்றிய சிறந்த கட்டுரையுடன், அவருடைய திருக்குமாரர் மா.ரா. இளங்கோவன் எழுதிய 'பேராசிரியர் கண்ட பெண்கள்' பற்றிய மனோன்மணியக் கட்டுரையும் அதே மலரில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. அவற்றோடு 'புதிய தமிழகத்தின் மூதாதை' (கா. அப்பாத்துரை), 'காலம் கடந்து வாழும் கருத்துக்கள்' (டாக்டர் மு.வ.), 'மனோன்மணியம்' (அ.மு. பரமசிவானந்தம்), 'சுந்தரம் கண்ட திராவிடம்' (திராவிடப்பித்தன்), 'பிடிசாம்பல் பேசினால்' (சந்தனத்தேவன்), 'இலக்கியம் கண்ட பேராசிரியர் (அ. சுகுமாரன்) ஆகியோரின் பேராசிரியர் சுந்தரனார் புகழ்பாடும் கட்டுரைகள் மலரையும், படிப்போர் மனத்தையும் அலங்கரிக்கின்றன. 'கோலொடு நின்றான்' என்ற கி.ஆ.பெ. விசுவநாதத்தின் திருக்குறள் கட்டுரையும் அந்த மலரைச் சிறப்பிக்கிறது.

23.4.1955 இதழ் முதல் சிலப்பதிகாரச் சிறப்பைக் கூறும் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையின் 'சிலம்பு வழங்கும் செல்வம்' கட்டுரை தொடர்கிறது. இது பல இதழ்களில் வந்தது.

30.4.55 இதழில் அப்போது தி.மு.கழகப் பொதுச் செயலாளராகப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாவலர்

இரா. நெடுஞ்செழியன் பற்றி 'புதுச்செயலாளர் - பொதுச்செயலாளர்' என்ற கண்ணதாசனின் சிறப்பான கவிதை வெளிவந்துள்ளது.

7.5.55 இதழில் 'இலக்கியத்தில் காத'லை எழுதியவர் மா.ரா. இளங்கோவன். குறுந்தொகைப் பாடலை விளக்கியிருக்கிறார் அவர்.

14.5.55 இதழில் தென்றல் நடத்தும் இலக்கியப் போட்டியின் நடுவர்கள் நியமன அறிவிப்பு வெளிவந்துள்ளது. தமிழகத்தின் மிகச் சிறந்த கவிஞர்கள், எழுத்தாளர்கள், நாடக ஆசிரியர்களான பாரதிதாசன், கா. அப்பாத்துரை, வாணிதாசன், நா. பாண்டுரங்கன், ஈ.வெ.கி. சம்பத், ப. நீலகண்டன், சக்தி கிருஷ்ணசாமி ஆகியோரும் மற்றும் சிலரும் இடம் பெற்றிருந்தனர்.

'கம்பன் புளுகும் வான்மீகி வாய்மையும்' என்ற கம்பராமாயண ஆய்வுக்கட்டுரை கண்ணதாசனால் எழுதப்பட்டுள்ளது. அவரின் 'சிறைமீண்ட காதலர்க்கு' (1.6.55) என்ற கடிதக் கட்டுரையுடன், 'துயரங்களில் அங்கையர்க்கண்ணி' தொடர் முடிய தென்றலில் முதலாண்டு முற்றுப் பெறுகிறது.

## இரண்டாம் ஆண்டு

இயக்கம் சார்ந்திருந்தாலும் சிறந்த இலக்கிய இதழ் என்ற பெருமையைப் பெற்றுவிட்ட தென்றல் 18.6.55இல் தனது இரண்டாவது ஆண்டை மகிழ்வுடன் தொடங்கியது. அந்த இதழில் கண்ணதாசனின் 'ராஜதண்டனை' என்ற அம்பிகாபதி - அமராவதி காதல் நாடகம் தொடங்கியது. டாக்டர் மா. இராசமாணிக்கனாரின் 'கல்வெட்டுக்கள்' என்ற ஆய்வுக்கட்டுரை இதழின் சிறப்புப் பகுதி.

இந்த இதழிலே வந்துள்ள ஒரு கவிதை பின்னாளில் வேறு பிறப்பெடுத்த கண்ணதாசனின் அந்தநாள் முகத்தை அம்பலப் படுத்துகிறது. முதலிரு வரிகள் யாரோ பாடியவை. அதுகொண்டு மற்றது புனைந்தேன் எனும் காரைமுத்துப் புலவரின் (கண்ணதாசனின்) முன்னுரையுடன் வரும் கவிதை அடிகளில் சில இதோ:

சீரங்க நாதனையும் தில்லை நடராசரையும்
பீரங்கி கொண்டு பிளப்பதுவும் எக்காலம்?
பெண்கேட்டுச் சேய்கேட்டுப் பித்தான சாமிகளை
மண்போட்டு மூடி மறைப்பதுவும் எக்காலம்?

கிருஷ்ணார்ப்பணம்!

இரண்டாம் ஆண்டுத் தொடக்கத்திலிருந்து பின்னாளில் சிறந்த படைப்புகளைத் தந்த தென்றலின் துணையாசிரியர் எஸ்.எஸ். தென்னரசின் சிறுகதைகள் வெளிவரத் தொடங்கின. கண்ணதாசனின் கதைகளும் அவ்வப்போது (குமாரி கோமளம் 9.7.55) வந்தன. 9.7.55 இதழின் 9ஆம் பக்கத்தில் அடுத்த இதழிலிருந்து 'இந்தப் பக்கம் புயல்வீசும்' என்பதற்கேற்ப 16.7.55முதல் ம.பொ.சி.க்கு எதிரான அரசியல் கட்டுரையும் வெளிவந்துள்ளது.

16.7.55 இதழில் சிறப்பு கவிஞர் முடியரசனின் 'வளரக் கெடும்' என்ற கவிதை, 23.7.55 இதழில் (மலர் 2 இதழ் 6) கண்ணதாசனின் 'கல்லக்குடி மாகாவியம்' என்ற காவியம் ஆகியன தொடர்கின்றன. அதே இதழில் 'உலகியற்றியான் யார்? ஆண்டவனா, அரசனா?' என்ற கண்ணதாசனின் சிறந்த ஆய்வுக்கட்டுரையும் வெளிவந்துள்ளது.

6.8.55 இதழில் வந்துள்ள ஆய்வுக்கட்டுரை, 'திருஞான சம்பந்தர் தேவாரம் பாடினாரா?'; எழுதியவர் டாக்டர் தமிழண்ணல்.

27.8.55 இதழில் கடற்கரைக் கூட்டத்தில் அண்ணா சொற்பொழிவாற்றியது குறித்துக் கண்ணதாசன் 'கடற்கரையில் அண்ணா' என்ற கவிதையை எழுதுகிறார். இந்த இதழின் மற்றொரு சிறப்பு 'கவிஞருக்கும் கவிஞர்' எனப் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் பற்றி வி.ஆர்.எம். செட்டியார் எழுதிய கட்டுரை.

புரட்சிக் கவிஞரின் 'ரஷ்புடீன்' நாடகத்தோடு வந்துள்ளது 17.9.55 தென்றல் திராவிட நாடு பிரிவினை மலர். பாரதிதாசன் படம் முகப்பை அலங்கரிக்கிறது.

1.10.55 இதழில் கண்ணதாசனின் மற்றொரு தொடர்கதையான 'வேலங்குடித் திருவிழா' தொடர்கிறது. இலக்கியப் போட்டியின் முடிவுகள் அறிவிக்கப்படுகின்றன. பெருங்கதைப் போட்டி: முதற்பரிசு: (1) 'கல்லக்குடி'- எழுதியவர் இசையமுது (2) தென்பாண்டிவீரன் - எழுதியவர் ப. நெடுமாறன். இரண்டாம் பரிசு: (1) நிலாவொளியில் - இரா. விசுவநாதன் (2) கருகிய மலர்கள் - கடலூர் புதுமதியன். காவியப்போட்டி : முதற்பரிசு : (1) பூங்குழலி - இ. கண்ணப்பன் (2) கொடிமின்னல் - கொ.பெ. நாராயணசாமி. இரண்டாம் பரிசு: (1) பாரிமுல்லை - அ. வேதாசலம் (2) காதல் துறவி - உடுமலை தி. பாஸ்கர். பிரசுரத்திற்குத் தகுதி பெற்ற நாடகங்கள் : (1) எதிர்க்கட்சி - நாகன் (2) ஆயிரம் ரூபாய் - வி. பாலசுப்பிரமணியன்.

8.10.55 (இதழ் 17) இதழில் வந்த ஆய்வுக்கட்டுரைத் தலைப்பு 'மோதி உடையும் சீதையின் கற்பு', இமயவரம்பன் எழுதியது.

15.10.55 இதழில் கண்ணதாசன் எழுதிய கம்பராமாயண மறுப்புக் கட்டுரை 'கம்பானந்தரின் வம்பானந்தம்' - கதை 'பூப்பல்லக்கு'.

5.11.55 இதழில் புரட்சிக்கவிஞரின் திருக்குறள் புதுஉரை வெளிவந்துள்ளது. 'ஆ பயன்குன்றும்' எனத் தொடங்கும் குறளுக்குப் புதுமை உரை எழுதியுள்ளார் பாரதிதாசன்.

19.11.55 இதழின் சிறப்பு முடியரசன் கவிதை. தலைப்பு 'பாரதியும் கவிதையும்'.

3.12.55 இதழில் கண்ணதாசனின் இலங்கைப் பயணம் பற்றிய 'ஈழநாட்டில் ஈராறு நாட்கள்' பயணக் கட்டுரையுடன் 'சீவகன் காதல்' என்ற அவரது நாடகமும் வெளிவந்துள்ளன. 'மட்டக்களப்பில் நாடோடி இலக்கியம்', 'பெற்றதாயும் பிறந்த பொன்னாடும்' (செ. ராசதுரை) கட்டுரைகள்.

10.12.55 இதழ் ஈழத்துக் கவிஞர்களான நீலாவாணன், நவாலியூர் சோமசுந்தரப் புலவர், மஹாகவி ஆகியோரின் கவிதைகளை வெளியிட்டுச் சிறப்பித்துள்ளது. 20.12.55 இதழில் 'அகத்தியன் என்பவன் யார்?', 27.12.55 இதழில் வந்துள்ள அ.கி. பரந்தாமனார் எழுதிய 'தமிழ் இலக்கியம் உலகின் துவக்கம்', 24.1.1956 இதழின் சிறப்பு ஈரோட்டான் எழுதிய 'ஜானகி' எனும் இராமாயண ஆய்வுக்கட்டுரை, இரா. இளஞ்சேரனின் 'எழுத்தாளன் காதலி' என்ற சிறுகதை. கண்ணதாசன் நாடோடிப் பாடல்கள் பற்றி எழுதிய 'எங்கள் தாய் வீட்டுச் சொத்து' (11.1.56), ராஜபாரதி எனும் ஈழக் கவிதை 'பனிமண்டலத்துப் பாரதிதாசன்' எனும் ரஷ்யக் கவிஞன் புஷ்கின் பற்றிய ப. புகழேந்தியின் கட்டுரை ஆகியன குறிப்பிடத்தக்கன.

'கணவர்க்கு' என்று ஒருவரும் 'மனைவிக்கு' என்று மற்றொருவருமாக வெவ்வேறு எழுத்தாளர் எழுதும் புதிய முறைத் தொடர் இந்த இதழில் தொடங்கி, பல இதழ்களில் தொடர்கிறது.

14.1.56இல் வந்துள்ள 'இராவணன்' எனும் ஆய்வுக் கட்டுரை, 21.2.56 இதழில் ப. புகழேந்தியின் வால்ட் விட்மன் பற்றிய கட்டுரையான 'சாகாத எண்ணங்கள்,' தமிழண்ணலின் 'துறவியர்'

எனும் கவிதை, ஈரோட்டானின் 'மாதவி' (28.2.56), வேலை எஸ். எழிலின் ஒப்பு நோக்குக் கட்டுரையான (13.3.56) 'காஞ்சி இளைஞனும் மிதிலை முரடனும்', ஈரோட்டானின் 'பண்புகெட்ட பாத்திரங்கள்', ஈழத்துக் கவிஞர் சோ. சண்முகபாரதியின் கவிதை (20.3.56), 'தென்னை மரம் - பனை மரம் - பாக்கு மரம்' எனும் கண்ணதாசனின் கட்டுரை (30.4.56), 'உற்பத்திக்கு உற்சாகம் எளிய பாடல்கள்' என்ற அவரின் வானொலிப் பேச்சும் 'தென்ற'லின் இலக்கியத் தரத்தை உயர்த்தின.

## மூன்றாம் ஆண்டு

முந்தைய ஆண்டுகளை விடச் சிறப்பாகப் பணியாற்ற விழைந்த தென்றலின் மூன்றாம் ஆண்டுத் தொடக்க இதழில் (23.6.56) தென்னரசின் 'அரளிக் கோட்டை' சிறுகதை, 'வாங்க அத்தான்'! (துரை மாணிக்கத்தின்) கவிதை, 'இடம் பொருள் அறியாக் கம்பன்' என்ற வையையார் கோமானின் இலக்கியக் கட்டுரை, 'இவர்' என்ற புதிய பகுதி, இவற்றோடு கண்ணதாசனின் 'பாண்டிமாதேவி' (காவியம்), 'மனம் போல வாழ்வு' தொடர்களுடன், 'எட்டுத் திசையிலும் நாம்' என்ற சிறப்புக் கவிதை (கண்ணதாசன்) ஆகியன வந்துள்ளன.

தொடர்ந்து 'ஏகவாசகன் குலோத்துங்க சோழ வாணகோ வரையன்', 'நல்லியக்கோடன்', 'ஈழங்கொண்ட இராசாதிராசன் (30.6.56, 7.7.56, 14.7.56) ஆகிய கண்ணதாசனின் வரலாற்றுக் கதைகளுடன் பேராசிரியர் நா. பாண்டுரங்கனின் 'அழுகையும் சிரிப்பும்', 'மேகங்கள்', 'மானும் மயிலும்', தென்றலைச் சிறப்பிக்கின்றன.

கொள்கைமறவன் கே.வி.கே. சாமியின் மறைவுக்கு அஞ்சலியாக 'எங்கே'? என்ற வசன கவிதையையும், 'கே.வி.கே. சாமிதனைக் கொன்றார்; தமைக் கொன்றார்' என்ற கவிதையும் கண்ணதாசனின் எழுத்துச் சிறப்பால் படிப்போர் இதயத்தைப் புண்ணாக்குகின்றன. 'தேர்தல் வருகிறது தெரிந்துகொள்ளுங்கள்' என்ற தலைப்பில் காமராசர் பற்றிக் கண்ணதாசன் எழுதுகிறார். அவரது வரலாற்றுக் கதைகளைத் தொடர்ந்து 'மாறன் காரி' என்ற வையையார் கோமானின் கதை வந்துள்ளது (6.10.56).

'கோழை' என்ற சிறந்த தத்துவக் கட்டுரை, பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார் மொழி பெயர்த்த 'லாஸ்கியின் பொதுவுடைமை' (6.10.56 முதல்), 'ஈழங்கொண்ட இராசாதிராசன்', 'குற்றமும் தண்டனையும்' போன்றனவும் சிறந்த பதிவுகளாகும்.

27.10.56 இதழில் கவிஞர்கள் புஷ்கின், வால்ட் விட்மன் வரிசையில் கீட்ஸ் பற்றி 'சோக காவியம்' என்ற தலைப்பில் இரா. இளஞ்சேரன் கட்டுரை எழுதியுள்ளார். 'இவர்' வரிசையில் கவிஞரால் கவிதைவழி அறிமுகப்படுத்தப்படுபவர் எஸ்.எஸ். ராமசாமி (படையாட்சி).

ஆசிரியருக்கு மட்டுமல்லாமல் பணிபுரிகின்ற மற்றவர்க்கும் உரிய இடமளிக்கும் கண்ணதாசனின் பாங்கு பாராட்டத்தக்க ஒன்றாகும். தன்னைப் போலவே அவர்களுக்கும் இதழில் தொடர்கதை எழுதும் வாய்ப்பை நல்கியுள்ளார் அவர். அந்த வரிசையில் தென்னரசு எழுதிய 'தைமூரின் காதலி' என்ற வரலாற்றுத் தொடர்கதை 3.11.56 இதழில் தொடங்குகிறது.

8.12.56 இதழில் 'எழுத்து வந்த கதை' என்ற அருமையான ஆய்வுக்கட்டுரை, பின்னாளில் சிறந்த சிறுகதை, நாவலாசிரியராக உருவெடுத்த ஆ. மாதவனின் (முதல்) சிறுகதை 'தாலிகட்டியவன்', நாதசுவரச்சக்கரவர்த்தி டிஎன். இராசரத்தினம் அவர்களின் மறைவுக்கு அஞ்சலியாக எழுதப்பட்ட 'அருவி ஓய்ந்தது' முதலியனவும் குறிப்பிடத்தக்கன.

1957 பொங்கலுக்குப் பிறகு இதழின் போக்கு இலக்கியத்திலிருந்து அரசியல் அரங்குக்கு மாறுகிறது. அப்போது நாட்டின் பொதுத்தேர்தல் நடைபெறவிருப்பதாலும், அதிலே ஆசிரியர் கண்ணதாசனே சட்டசபைத் தேர்தல் வேட்பாளராகப் போட்டியிட்டதாலும் அரசியல் கட்டுரைகளே அதிக இடத்தைப் பிடித்துக் கொள்கின்றன.

19.1.57 முதல் இதழின் பக்கங்களும் 8ஆகக் குறைக்கப்பட்டு விலை இரண்டு அணாவாக அறிவிக்கப்படுகிறது.

அரசியல் கட்டுரைகளுக்கு மத்தியில் 23.2.57 இதழில் கவிஞர் முடியரசனின் கவிதை 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என முழங்குகிறது.

தேர்தல் சந்தடிகள் ஓய்ந்தபின் தென்றல் தன் பழைய நிலைக்குக் கொஞ்சம்கொஞ்சமாக மாறத் தொடங்குகிறது. பாவாணனின் 'பரிசுப் புடவை' நான்கு வாரத் தொடர்கதை 30.3.57இல் தொடங்குகிறது.

மறைந்த வள்ளல் அழகப்பாவுக்கு இரங்கல் கவிதை கண்ணதாசனால் சிறப்பாக எழுதப்பட்டது. 20.4.57 முதல் 18.5.57 வரை 5 இதழ்களில் 'கவிஞனும் காதலும்' என்ற கண்ணதாசனின் சிறந்த கட்டுரை வெளிவந்துள்ளது.

ஆண்டு இறுதியில் வந்த இதழ்களில் அ.மு. சரவண முதலியார் எழுதி (இரண்டு வாரங்கள்) 'இருந்தமிழே உன்னால் இருந்தேன்' என்ற கட்டுரை குறிப்பிடத்தக்கதாகத் திகழ்கிறது.

## நான்காம் ஆண்டு

நான்காம் ஆண்டு தொடக்கமான 29.6.57 இதழில் (விலை 13 காசு) 'உறுதி' என்ற கவிதை எழுதியிருக்கிறார் கண்ணதாசன்.

6.7.57 இதழில் அவருடைய 'எஸ்.ஏ.பி.' என்ற (போலீஸ்காரர் பற்றிய) கதை, கவிதை 'இலங்கையில் வாழும் என் தமிழ்த் தோழி' குறிப்பிடத்தக்கன.

27.7.57 இதழில் வந்த கட்டுரை கா. அப்பாத்துரை எழுதிய 'வாழும் மொழியில் வாழா மொழி', இக்கட்டுரை சில வாரங்கள் தொடர்ச்சியாக வெளிவந்துள்ளது. டாக்டர் (வரதராசுலு) நாயுடு மறைவுக்கு வருந்தும் கண்ணதாசனின் கவிதையும் இவ் இதழிலேயே வந்துள்ளது.

3.8.57 முதல் இதழின் முகப்பில் சிறுமாற்றம் செய்யப்பட்டு (அளவில் அல்ல) மீண்டும் 12 பக்கங்களாக உயர்ந்து, விலையும் 16 காசாக நிர்ணயிக்கப்படுகிறது. அந்த இதழில் புதுமைப்பித்தனின் கவிதை முயற்சிக்குக் கண்ணதாசனின் மறுப்பும் கட்டுரையும், 'மெல்லத் தமிழினிச் சாகும்' எனும் கவிதையும் வெளிவந்துள்ளன.

10.8.57இல் கண்ணதாசனின் சுயசரிதையில் ஒரு (சிறு) பகுதித் தொடர் 'நான் எழுத்தாளன் ஆனேன்' ஆரம்பமாகிறது. இந்தக் காலங்களில் 'எண்ணம்' தலையங்கப் பகுதிகள் பெரும்பாலும் கவிஞரால் (அவரது பெயர் போடப்பட்டு) கவிதைகளாகவே எழுதப்பட்டுள்ளன. சில காலம் இந்த முயற்சி தொடர்கிறது.

கவிஞர் கண்ணதாசனின் அன்னையாரின் மறைவு 31.8.57 இதழில் அருமையான வசன கவிதையாக உருப்பெறுகிறது 'அன்னை

என்ற தலைப்பில். 'சிறந்த கவிஞனின் உரையாடலும் கவிதையே' என்ற ஷெல்லியின் கருத்தை மெய்ப்பிப்பது போல அமைந்துள்ளது அது.

அன்னை! கருவிலும் சுமந்தாள் - சிறு
உருவயையும் சுமந்தாள்

என்று தொடங்கும் அந்த வசன கவிதை இப்படி முடிகிறது :

'பெருங்கதை' முடிகிறது
சிறுகதைகள் தேம்புகின்றன.

'சரிதா' என்ற இந்தி இதழ் புராணக் கருத்துகளை - கதைகளை எதிர்த்துப் புரட்சிகரமான சில கருத்துகளைக் கவிதைகளாக வெளியிட்டன. அவற்றை மொழிபெயர்த்து, துறையூர் ந. அலி என்பவர் தமிழ்க்கவிதைகளாக எழுதியுள்ளார். அவை தென்றலில் வெளிவந்தன.

கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் இயற்கை எய்தினார். அதற்காக 7.9.57 இதழில் 'எண்ணம்' (ஆசிரியர்) பகுதி காலியாக விடப்பட்டு கலைவாணர் படமும் அதன்கீழே 'மாபெருங் கலைஞன் மறைவினுக் கிரங்கல்' என்று எழுதப்பட்டுள்ளது. அதே இதழில் வந்த முடியரசனின் (கலைவாணர் பற்றிய) கவிதைத் தலைப்பு 'அடங்காத் துயரம்'. கண்ணதாசனின் கவிதை 'கலை(யா) வாணன்'. 'நான் சுயமரியாதைக் கட்சி' என்ற கலைவாணரின் சிறப்புக் க்ட்டுரை அந்த இதழை மேலும் சிறக்க வைக்கிறது. அந்த இதழில் வெண்பாப் போட்டிக்குத் தரப்பட்ட ஈற்றடி 'கலைவாணர் இல்லாக் கலை'.

21.9.57 இதழில் மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களின் 'நன்னூல் நன்னூலா?' என்ற ஆய்வுக் கட்டுரை வெளியாகியது. 'தென்ற'லின் பதிப்பாளர் அதாவது உரிமையாளர் இதுவரை கண்ணதாசனே ஆவார். அது 28.9.57 இதழ் முதல் மாற்றப்பட்டு அந்த இடத்தில் சுப. அருணாசலம் என்று பெயர் பொறிக்கப்படுகிறது. இந்த இதழில் 'இதுதான் திராவிட நாடு' என்ற அப்பாத்துரையாரின் தொடர்கட்டுரை இடம் பெற்றதுடன், ப. புகழேந்தியின் 'காகமும் கோழியும்' எனற உருவகக் கதையும் இடம் பெற்றுள்ளது.

12.10.57 'எண்ணம்' கவிதை 'முதுகுளத்தூர்க் கடிதம்', முடியரசனின் 'விந்தையடா விந்தை' கவிதையுடன் ப. புகழேந்தியின்

'மூன்று மேகங்கள்' உருவகம், மற்றும் திருமதி வைரவ பிள்ளை என்பாரின் 'ஆங்கிலேயர்களும் தமிழும்' என்ற சிறப்புக் கட்டுரையும் இதழை மணக்கச் செய்கின்றன.

'நன்னூல் நன்னூலா?' என்று வினா எழுப்பிய பாவாணருக்கு மறுப்பாக 'நன்னூல் நன்னூலே!' எனப் பதிலளிக்கிறார் எம்.பி. ஜம்பு நயினார். புகழேந்தியின் உருவகம், கண்ணதாசனின் 'எண்ணம்' கவிதை இவையும் இதழில் உள்ளன. 'நன்னூலல்ல' எனும் கா. அப்பாத்துரையாரின் ஆணித்தரமான கட்டுரை, 'இன்னுமா தமிழா?' எனும் 'எண்ணம்' கவிதை இவற்றுடன், கேள்விப் பெட்டி மற்றும் வழக்கமான பகுதிகளுடன் வந்துள்ளது 26.10.57 இதழ். அப்பாத்துரையாரின் 'நன்னூலல்ல' கட்டுரை முடிவுடன் கண்ணதாசன் 'எண்ணம்' கவிதையுடன் வால்மீகியின் 'இலக்குவனா?' என்ற மொழிபெயர்ப்புக் கவிதையோடு 2.11.57 இதழ் வருகிறது.

தமிழறிஞர் ஆ. கார்மேகக் கோனாரின் மறைவு குறித்து 'எண்ணம்' பகுதியில் 'பொழிந்த மேகம் 'பொக்'கென நின்றதே' என்ற கண்ணதாசனின் கவிதையுடன், 'நன்னூலல்ல' என்று தொடர்கிறார் அப்பாத்துரை. இந்த இதழில் (9.11.57) பேராசிரியர் மா.கி. தசரதன் எழுதும் 'அந்தப் பழம்' எனும் தொடர்கதை ஆரம்பமாகியுள்ளது. 'நன்னூல் நன்னூலல்ல' என அழுத்தமாகக் கூறித் தமது கருத்தை வலியுறுத்தித் தொடங்கிய விவாதத்தை முடித்துவைக்கிறார் பாவாணர் (16.11.57).

23.11.57 இதழின் சிறப்பு டாக்டர் மா. இராசமாணிக்கனாரின் 'கருஞ்சட்டை' கட்டுரை. 22.2.58 இதழிலிருந்து நாவல்களில் பாத்திரப்படைப்பு பற்றிய கண்ணதாசனின் சிறந்த கட்டுரைத் தொடர் தொடங்குகிறது. அனேகமாகத் தமிழில் இதுவே முதல் முயற்சி என்று தோன்றுகிறது. முதல் கட்டுரை சரத்சந்திரரின் 'சரயூ'.

இந்த இதழில் குறிப்பிடத்தக்க மற்றொரு கட்டுரை டாக்டர் மா. இராசமாணிக்கனாரின் 'தமிழ் வளர்ந்த முறை'. தென்னரசின் புதிய தொடர்கதையான 'குஞ்சரத்தின் கதை'யும் இந்த இதழிலேயே தொடங்குகிறது.

தமிழ் எழுத்தாளர்களில் / பத்திரிகையாளர்களில் குறிப்பிடத் தகுந்தவர் முருகு. சுப்பிரமணியம். மலேசிய வானொலியில் நிகழ்த்திய அவரின் இலக்கியப் பேச்சுக்கள் 'கல்லின்மேல் எழுத்து' என்ற

தலைப்பில் இந்த இதழ் முதல் தொடர்ந்து கட்டுரை வடிவமாக வரத் தொடங்கியுள்ளது.

ஏ.வி. ராமனின் 'தமிழை வளர்ப்பது எப்படி?' என்பது மூன்று வாரங்கள் வந்துள்ளது. 12.4.58 இதழில் 'இது ஒரு அதிசயப் பிராணி' என்ற தலைப்பில் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் அசுண நன்மா எனும் பிராணி பற்றிய விளக்கக் கட்டுரையொன்று இடம்பெற்றது.

10.5.58 இதழில் வெளியாகியுள்ள அரிமழம் கதிரவனின் 'அசையழுத்தம்', 17.5.58 இதழில் வந்துள்ள 'அறநெறி முதற்றே அரசின் குற்றம்' (அறவாணன்) ஆகிய கட்டுரைகள், 'மனோன்மணியமும் நாடக அமைப்பும்' (அரிமழம் கதிரவன்), 'நந்திக் கலம்பகத்'தில் (தெசிணி) ஆகிய கட்டுரைகளையும் இவற்றோடு இணைத்துக் கொள்ளலாம்.

## ஐந்தாம் ஆண்டு

தென்றலின் ஐந்தாம் ஆண்டு முந்தைய ஆண்டுகளைப் போல் முழுமையான இலக்கிய ஆண்டாக இல்லை. சரிபாதி அரசியல் கட்டுரைகளுக்கும் அது இடம் கொடுத்துள்ளது. ஆசிரியர் கண்ணதாசனுக்கு அந்த நேரத்தில் ஏற்பட்டிருந்த கம்யூனிச எதிர்ப்புணர்வும் அதற்கு முக்கிய காரணம்.

ஆண்டு முழுதும் கம்யூனிஸ்ட்டுகளுக்கு எதிரான கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. (மதுரை) கூடலரசன் என்பார் அதிலே பெரும் பங்கு வகிக்கிறார். செக்கோஸ்லேவேகியாவில் அப்போது ரஷ்யாவுக்கு எதிராகக் கிளர்ச்சி நடைபெற்றதும், அதனை முரட்டுத்தனமாக அடக்கிய சோவியத் ரஷ்யா செக்கின் பெருந்தலைவர் நாகி உட்படப் பலரைக் கொன்று தீர்த்ததும் கண்ணதாசனைப் பாதித்த காரணத்தால் அவரே அந்தப் பணியைத் தொடர்ந்துள்ளதை அவரது கட்டுரைகள் மற்றும் கவிதைகள் மூலம் அறியமுடிகிறது. 'விடுதலை வீரன் நாகி' என்ற தலைப்பில் அவர் எழுதிய கவிதையில்,

> பிறக்கும் எம் குழந்தைக்கெல்லாம்
> பெயரிட நினைக்கும்போது
> மறப்பனோ நின் பேர் நாகி . . . .

என்னும் வரிகள் நினைக்கத்தக்கன.

'தமிழ் நாட்டில் செட்டிநாடு' என்ற கண்ணதாசனின் கட்டுரையும், 'மானம் காத்த மங்கை' என்ற ப.உ. சண்முகத்தின் சிறுகதையும் அந்தத் தொடக்க இதழின் சிறப்பை நிறைவு செய்கின்றன. கல்லெழுத்தில் பல சொற்கள் (2.5.58), கண்ணகி கற்பு, சீதை கற்பு (30.5.59) கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

ச.சி. இராசியண்ணன் என்பவர் சில பாராட்டத்தக்க இலக்கியக் கட்டுரைகளை எழுதுகிறார். நாடோடி இலக்கியம் பற்றிக் கூறும் கட்டுரையோடு, வழக்கம் போல வெண்பாப் போட்டியும், 'அத்திப்பழம்' தொடர்கதையும் தொடர்கின்றன. சிவம் B.Sc. என்பவர் எழுதும் சில சிந்தனைக் கட்டுரைகளும் அவ்வப்போது தொடர்கின்றன.

நா. ஜெகந்நாதனின் 'ஐதரும் குதிரையும்' (26.7.58), 'அன்னி மிஞ்ஜிலி' (6.9.58), 'வேதநாயகர் விகடம்' (9.8.58), 'முசோலினி பாடும் முகாரி' (30.5.59) முதலிய கட்டுரைகள், கதைகள் வெளிவந்தன.

இராம. இராமநாதனின் இலக்கியக் கட்டுரைகள், நாரா. நாச்சியப்பனின் கவிதை கட்டுரைகள், பேராசிரியர் மா.கி. தசரதனின் இரண்டு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. தமிழ்ப்பித்தன் பல கவிதைகள், சில கதைகள் எழுதியுள்ளார். துறையூர் ந. கலியின் (இந்தியிலிருந்து) மொழிபெயர்ப்புக் கவிதைகளும் பல இதழ்களில் வந்துள்ளன.

16.8.58 இதழில் கதிரவன் என்பவரின் 'கோவலன்', 'மாதவி' கட்டுரைகள் வருகின்றன. பிற, 'கவிதையில் மறுமலர்ச்சி' (13.9.58) 'இலக்கிய ஊஞ்சல்' (2.8.58), 'கவிஞன் தனிச்சாதி' (22.11.58), 'தமிழர் பண்பாடு' (8.11.58), 'தமிழுக்கு இழுக்கு' (26.7.58).

இந்த ஆண்டு முழுவதும் சிறந்த சிறுகதைகள் சில இடம் பெற்றுள்ளன. ப. புகழேந்தியின் 'சிவகாமி' (4.10.58), 'அபரஞ்சி' (15.11.58), ஆ. மாதவனின் 'இழந்த சொர்க்கம்' (27.9.58), 'பருவம்' (1.11.58), 'மழை' (31.1.59), 'பஞ்சமி' (11.4.59), 'தென்னரசின் சேவகி' (28.3.59) ஆகியவை சிறந்த சிறுகதைகள்.

தமிழ்த் திரைப்படத்தில் இலட்சியவாதிகளாகத் திகழ்ந்த கலைஞர்கள் (நடிகர்கள்) பற்றிய எழுத்துகள் சில இதழ்களில் இடம் பெற்றுள்ளன. 'புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர்.' என்று இளஞ்சேரனும்

(6.9.58), சிவாஜிகணேசன் பற்றிக் கவிதையாகக் கண்ணதாசனும் (20.9.58), இலட்சியநடிகர் எஸ்.எஸ்.ஆர். பற்றி ஓ.பா. சரவணன் என்பவரும் (27.9.58), நடிப்பிசைப் புலவர் கே.ஆர்.ஆர். பற்றி மு. சண்முகமும் (11.10.58) சிறப்பாக எழுதியுள்ளனர்.

கண்ணதாசனின் கவிதைகள் 'பாரதியைக் கண்டேன்' (13.9.58), 'பதறுகின்ற பண்டாவே கேள்!' (4.10.58), 'கலைவாணர் என்.எஸ்.கே.' (6.12.58), 'அழுகல் வரி' (28.3.59), 'சங்கர ராணுவம்' (15.11.58), 'தமிழ், ஆங்கிலம், இந்தி' (31.1.59), 'திபேத்தில் சரிவுடமை' (4.4.59). கவியரங்கங்களில் படிக்கப்பட்ட பல கவிதைகள் இந்த ஆண்டு முழுதும் பிரசுரிக்கப்பட்டுள்ளன. கவிஞர் கண்ணதாசன் தலைமையில் நடைபெற்ற பல அரங்கங்களில் படிக்கப்பட்ட கவிதைகளை எழுதியோர் கண்ணதாசன், ரவி, துறையூர் அலி, பெரி. சிவனடியான், முடியரசன், சாமி. பழனியப்பன், அ. சண்முகக்கனி.

கலைவாணர் எழுதிய பாடல் ஒன்றும் 13.12.58 இதழில் வெளிவந்தது. கண்ணதாசன் எழுதிய கட்டுரைகள் : 'தமிழ் நாட்டில் செட்டிநாடு' (21.6.58), 'எட்டயபுரம் கூத்து' (20.9.58), 'எனக்கென ஓர் வீடு' (27.9.58) (8.11.58), 'செங்கோலுக்கேனோ சினம்?' (11.10.58). 'திருக்குறள் அரசியல்' (அகி. பரந்தாமனார்), 'சிங்கள இலக்கியங்களில் தமிழ்' இரண்டு கட்டுரைகளும் 31.1.59 இதழில் வெளிவந்தவை.

இதுவரை இலக்கிய வினாக்களுக்கு விடையளித்து வந்த தென்றல் இந்த ஆண்டில் அரசியல் வினாக்களுக்கே விடையளித்தது (கூடலரசன்).

இந்த ஆண்டு மூன்று தொடர்களைத் தென்றல் வழங்கியது. அவை இரண்டு நெடுங்கதை அல்லது புதினங்கள், ஒரு ஆய்வுக் கட்டுரை. தென்னரசு எழுதிய தொடர்கதையின் பெயர் 'மயிலாடும் பாறை' (26.7.58 முதல்). கண்ணதாசன் எழுதியது 'ஊமையன் கோட்டை' (18.10.58 முதல்). அப்போது பரபரப்பாகப் பேசப்பட்ட, ம.பொ. சிவஞானத்தின் 'செங்கோல்' இதழில் அவராலேயே விமர்சிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரைத் தொடர் 'புலித்தேவனா, கட்டபொம்மனா?'. ப. புகழேந்தி எழுதிய இக்கட்டுரைத் தொடர் 27.12.58 இதழில் தொடங்குகிறது. திரு. ம.பொ.சி. அவர்களது கருத்துகளுக்கு எதிராக எழுதப்பட்ட இத்தொடர் அரசியல் மற்றும் இலக்கிய வட்டாரத்தில் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியது. ஆண்டு

இறுதியில் தென்றல் வெண்பாப் போட்டியோடு சதகப் போட்டியையும் அறிமுகப்படுத்தியது.

## ஆறாம் ஆண்டு

*20.6.59 தென்றலின் ஆறாம் ஆண்டுத் தொடக்க இதழ்.*

தொடக்க இதழே பல அரிய இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை உள்ளடக்கியதாகத் திகழ்கிறது. டாக்டர் அ. சிதம்பரநாதன் (சிலப்பதிகாரத்தில் நாகரிகக் கலப்பு), ஞா. தேவநேயப் பாவாணர் (பாயிரப் பெயர்கள்), கா. அப்பாத்துரை (தென்னிலங்கையும் மனித இன நாகரிகமும்), அ.மு. பரமசிவானந்தம் (மாற்றங்கள்) ஆகியோரின் கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவை. இவற்றோடு இரா. இராமநாதன், பி.ஏ. (ஆனர்ஸ்) இந்த இதழிலிருந்து தொடர்ந்து எழுதும் 'தொல்காப்பியச் சுவை'யையும் சொல்ல வேண்டும். மற்றும் 'நகராட்சிகளில் நல்ல தமிழ்' (இராசியண்ணன்), 'ஒரு நாள் கழிவது' (பனை சண்முகம்) பயனுள்ள கட்டுரைகள்.

ரவியின் 'தாழ்ந்திடவோ தளிர்த்திடவோ?' என்ற கவிதையுடன் மற்றும் ஆறு இளங்கவிஞர்களின் கவிதைகளும் இதே இதழில் இடம்பெற்றிருப்பது ஒரு சிறப்பு. கண்ணதாசன் வாசகர்களின் 'ஐயம் அகற்று'வதுடன் 'சிரிப்புத்தான் வருகுதையா' என்ற அரசியல் நையாண்டியையும் எழுதியுள்ளார்.

இரண்டாம் இதழில் 'பாத்திரப் படைப்பு' என்ற கண்ணதாசனின் சிறப்புக் கட்டுரையுடன் வழக்கமான இலக்கியக் கட்டுரைகள், கவிதைகள் இடம்பெற்றுள்ளன.

நாவலர் ச. சோமசுந்தர பாரதியாரின் 'தமிழ் வளர' என்ற சிறப்புக் கட்டுரையும் மூன்றாம் இதழில் (4.7.59) வந்துள்ளது. 11.7.59 இதழ் டாக்டர் அ. சிதம்பரநாதனின் 'சிலப்பதிகாரத்தில் நாகரிகம்' ஆய்வுக் கட்டுரையை முடித்து வைக்கிறது. 'தமிழில் விமர்சன நூல்கள்' (நா. ஜகந்நாதன்), 'தொல்காப்பியம் தரும் சில சொற்கள்' (இராசியண்ணன்) இலக்கியக் கட்டுரைகள்.

ப. புகழேந்தியின் உருவகம் (அழகும் அவலட்சணமும்) ஏழாம் இதழின் சிறப்பு. வழக்கமான கட்டுரை, கவிதை மற்றும் கண்ணதாசனின் 'ஐயம் அகற்றுவது'டன். பசுமலை நாவலர்

ச. சோமசுந்தர பாரதியாரின் மலர் (8.8.59) பல அறிஞர்களின் சிறந்த கட்டுரைகளுடன் வந்துள்ளது. எழுதியிருப்போர்: பேராசிரியர்கள் அ.மு. பரமசிவானந்தம், பூ. ஆலாலசுந்தரம், டாக்டர் அ. சிதம்பரநாதன், இளங்கீரன், ம.கி. தசரதன், சிறுவை மோகனசுந்தரம். கவிதை எழுதியோர்: கண்ணதாசன் (யாவலர்?), மதுரை எழுத்தாளர் மன்றத்தினர், பனப்பாக்கம் கு. சீத்தா, ரவி, அரிமழம் இராம. கணபதி. 'இந்தி கட்டாயப் பாடமா?' என்ற (1937ஆம் ஆண்டு), ச. சோமசுந்தர பாரதியாரின் (கடிதம்) கட்டுரையைத் தேடி எடுத்து வெளியிட்டுள்ளது மலரை மேலும் மணக்கச் செய்கிறது.

'தமிழில் உரைநடை' பற்றி முன்னர் வந்த கட்டுரையின் சில கருத்துக்களை மறுத்து ந. இனியன் என்பவர் எழுதியவற்றை வெளியிட்டுத் தனது நடுநிலையை வெளியிடத் தவறவில்லை தென்றல். 'நாவலருக்கு நாலிருபதாண்டு' (80) சோமசுந்தர பாரதியாரின் சிறப்புக்கூறுவது. 'தொல்காப்பியச் சுவை'யும் கண்ணதாசனின் 'ஐயம் அகற்று'ம் தொடர்கின்றன.

29.8.59 இதழில் கண்ணதாசனின் கவிதை 'வாழ்வும் தமிழும்' வந்தது. 5.9.59 இதழில் நாரா. நாச்சியப்பனின் கவியரங்கக் கவிதையுடன், பா. இளவழகனின் 'வேதநாயகத்தின் இலக்கியப் பணி' பற்றிய இலக்கியக் கட்டுரையோடு வந்துள்ளது.

12.9.59 தென்றல் அண்ணா பொன்விழாச் சிறப்பிதழ். 25 க்காசு விலை போடப்பட்ட இந்த மலர் அண்ணாவின் சிறப்பை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. குறிப்பாகக் கண்ணதாசன் எழுதிய 'ஒரே தலைவன்' என்ற மிகச் சிறந்த கவிதையும், 'இரண்டு கண்கள் நான்கு இலட்சம் கைகள்' என்ற வசன கவிதையும் அண்ணாவை வானளவு உயர்த்துகின்றன. 'தலைசிறந்த எழுத்தாளர்' (மா. தங்கவேலர்), 'பொது வாழ்வை மணந்தவர்' (ம.பொ.சி.), 'நீதி நெறிச் செல்வர் வாழ்க!' (டி.ஏ.வி. நாதன்), 'தென்னகத்தின் பேச்சாளர்' (வேலை எஸ். எழில்), 'அடுக்கு மொழி மன்னர்' (அமுது, எம்.ஏ.), 'தாயகத்தின் தொண்டர்' (சிறுவை இனியன்), 'அறிஞர்' (மா. பாண்டியன்), 'வாழ்த்து' (டாக்டர் அ. சிதம்பரநாதன்). இவை அண்ணாவின் புகழ்பாடும் கட்டுரைகள். கவிதைகள் அளித்தோர்: கா. அப்பாத்துரை, கா. வேழவேந்தன், பி. மணிவேந்தன்.

19.9.59 இதழும் அண்ணாவின் புகழ்பாடுகிறது. ஞா. தேவநேயப் பாவாணரும் மற்றும் பலரும் அண்ணாவை

வாழ்த்துகின்றனர். கண்ணதாசன் எழுதுகிறார்: "எங்களுக்குக் கட்சிதான் கண்களையே கொடுத்தது. கட்சியும் மொழியும் பிரிக்கமுடியாமல் பிணைந்துவிட்டன. கட்சிக் கண்ணே மொழிக் கண்கள்; இனக் கண்கள்; கலைக் கண்கள்."

அண்ணா விழாவில் (17.9.59) தான் அதிகம் பேச முடியாமைக்குக் காரணியை எழுதும் கண்ணதாசன் அற்புதமானதொரு உண்மையை - தத்துவத்தை - விளக்குகிறார்.

"எந்த மகிழ்ச்சியில் உன் கண்களிலிருந்து கண்ணீர் வருகிறதோ அதுதான் உச்ச மகிழ்ச்சி. எந்தச் சந்திப்பு உன் வாயை அடைத்து விடுகிறதோ, அதுதான் இணையற்ற சந்திப்பு. எந்த விழாவில் நீ பேசமுடியாமல் திண்டாடுகிறாயோ அந்த விழாவே உன் வாழ்விலே திருவிழா.

அண்ணாவுக்கு இது பொன்விழா; எனக்கு இது திருவிழா.

இந்த மகிழ்ச்சி என் வாயை அடைத்துவிட்டது". இந்த இதழில் 'திராவிடம் தென்சொல்லின் திரிபே' என்ற ஞா. தேவநேயப்பாவாணரின் ஆய்வுக் கட்டுரை சிறப்பித்துக் கூறத்தக்க ஒன்று.

'முயல்தலும் முயற்சித்தலும்' (புலவர் நஞ்சுண்டன்), 'சிலப்பதிகாரத்தில் வெண்பா' (இராம. இராமநாதன்), 'தமிழில் பெருநூல்கள்' (நா. நிலத்தலைவன்) 26.5.59 இதழின் இலக்கியக் கட்டுரைகள்.

3.10.59 இதழில் வந்த கவியரங்கக் கவிதை நாவுக்கரசனுடையது. 'பரிமேலழகரின் உரை சரியா, தப்பா?' என்ற இராசியண்ணின் கட்டுரை இந்த இதழில் வந்த கட்டுரைகளில் குறிப்பிடத்தக்கது.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் கண்ணதாசனைப் பொறுத்தமட்டில் திரைப்படத் துறையில் அவர் ஒரு போட்டியாளராகவே திகழ்ந்தார். எனினும் 'பட்டுக்கோட்டை'யின் மறைவு கவிஞரை மிகவும் பாதித்து விட்டிருக்கவேண்டும். அவரின், 'நின்றது போல் நின்றானே, நெடுந்தூரம் பறந்தானே' (10.10.59) என்ற கட்டுரையும், 'மூச்சடங்கும் வயதிலையே' (17.10.59) என்ற கவிதையும் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின்மீது அவருக்கிருந்த அன்பையும், மதிப்பையும் வெளிப்படுத்துகின்றன.

இந்த இரண்டு இதழ்களிலும் வந்துள்ள 'வருங்கால உலகில் தமிழ்' (கா. அப்பாத்துரை), 'பாரதி பாடியதும் சரியே!' (இராசியண்ணன்), 'சிலப்பதிகாரத்தில் சேர்க்கையா?' (அ. அறிவொளி), 'பழம்பாடல் வரிகளை எடுத்தாள்வது தவறா?' (துரைமோகன்) போன்ற கட்டுரைகள் சிந்தைக்கு விருந்தானவை.

ஆறாம் ஆண்டின் இருபத்தொன்றாம் இதழான தென்றல் 'திறனாய்வு ஒரு கலை' (சிவம் B..Sc.), 'பண்டைத் திராவிடம்' போன்ற கட்டுரைகளுடன், 'கர்னாடகத்தைப் பார்' என்ற சிறப்புக் கட்டுரையையும் (கண்ணதாசன் எழுதியது) வழக்கமான மற்றய இலக்கியத் தொடர்களையும் கொண்டதாகத் திகழ்கிறது. அதோடு 'கண்' வரும் குறட்பாக்கள் பற்றிய ஓர் ஆய்வும் வெளிவந்துள்ளது.

15.11.59 இதழின் சிறப்பு 'சாவு' என்ற கண்ணதாசனின் வசன கவிதை எளிமையும், அழகும், தத்துவமும் நிறைந்தது; பலமுறை படித்துப் பாராட்டத்தக்கது.

மகாகவி பைரன் பற்றிய 'முடிவு' என்ற ப. புகழேந்தியின் நாடகம் 22.11.59 இதழைச் சிறப்பிக்கிறது. அடுத்த இதழில் ப. புகழேந்தி எழுதிய நகைச்சுவை நாடகம் 'விநாயக புராணம்'. வசன கவிதை வரிசையில் கண்ணதாசனின் 'காலம்' மீண்டும் தனது தனித்துவத்தை வெளிப்படுத்துகிறது. 'கண்' போலவே 'ஆமை' பெற்ற குறட்பாக்களை ஆய்வு செய்கிறது மற்றொரு கட்டுரை. ஆய்வின் முடிவு எழுபத்தொரு குறட்பாக்களில் எண்பத்து மூன்று 'ஆமை'கள் என்பது. 'தமிழர் வாழ்விற் காலக்குறிப்பு' மற்றொரு இலக்கியக் கட்டுரை.

5.12.59 இதழின் மகுடம் கண்ணதாசனின் 'காதல்' வசன கவிதை. அந்த இதழில் உருவகம் எழுதியிருப்பவர் கரந்தை கணேசன். 'துணிச்சல்' வசன கவிதை கண்ணதாசனின் கை வண்ணத்தில் 12.12.59 இதழின் அழகுக்கு மெருகூட்டுகிறது. 'நோய்' பெற்ற குறட்பாக்கள் 33 என்பதை விவரிக்கிறது ஒரு கட்டுரை. 'உறவு' (கண்ணதாசன்) வசன கவிதை (19.12.59), நாவலர் சோமசுந்தர பாரதியின் மறைவு பற்றிக் கவிஞர் எழுதிய 'கண்ணீர்' என்ற தலையங்கக் கவிதை, இவற்றுடன் ப. புகழேந்தியின் 'நீடூழி வாழ்க!' என்ற கடிதம் இவை குறிப்பிடத்தக்கவை.

26.12.59 மற்றும் 2.1.60 இதழ்களில் கண்ணதாசனின் வசன கவிதை வரிசையில் 'சட்டம்' இடம் பெறுகிறது. 'குறள் கூறும்

ஐயநெறிக் கொள்கை' நல்ல கட்டுரை. தமிழகத்தின் சிறந்த வரலாற்றறிஞரான சதாசிவ பண்டாரத்தார் மறைவுக்கு இரங்கல் தெரிவித்துள்ளார் கண்ணதாசன் (தென்றல் இதழ் 9.1.60). பனப்பாக்கம் சீத்தா, சே. கனகசபை இவர்களின் கவிதைகளும் இந்த இதழில் உண்டு.

பொங்கலுக்குப் பிறகு வந்த தென்றல் (30.11.60), 'உணர்வு தந்த பொங்கல்' என்ற புதுவைச் சிவத்தின் கவிதையோடு புகழேந்தியின் 'ஞானம் பிறந்த கதை' மற்றும் இருவர் எழுதிய கதைகள், இலக்கிய வினாக்களுக்கு கா. அப்பாத்துரையாரின் 'ஐயம் அகற்று' விடைப்பகுதி இவற்றோடு திகழ்கிறது.

6.2.60 இதழில் 'கண்ணீர்' என்ற தலைப்பில் கண்ணதாசனின் ஆறு திரைப்பாடல்கள் வெளியிடப்பட்டுள்ளன. திரு. ஔவை துரைசாமி அவர்களின் 'வாழ்வாங்கு வாழ்ந்தவர்' கட்டுரை 13.2.60 இதழின் சிறப்பு. அதோடு 'திறவா நெடுங்கதவு' (கட்டுரை), உருவகம், கதை, 'ஐயம் அகற்று' (கா. அப்பாத்துரை) இவையும் உண்டு.

20.2.60 தென்றல் கருநாடகச் சிறப்பிதழ். 'அழகுத் தோட்டம்' என கருநாடகத்தை வர்ணிக்கும் கட்டுரையுடன் கே.ஏ. மதியழகனின் 'கருநாடக நினைவுகள்', 'அன்றொரு நாள் ஐதரின் ஆட்சியில்' ஆகியவை நம்மைக் கர்நாடகத்துக்கு அழைத்துச் செல்கின்றன. சிறுகதைச் செம்மல் ருஷிய நாட்டு ஆண்டன் செகாவ் பற்றிய 'வரைகோல் வேந்தர்' என்ற கட்டுரையுடன், இரண்டு இதழ்களில் தான் வள்ளுவரை ஓவியமாக வரைந்தவிதம் பற்றி விவரிக்கிறார் வேணுகோபால் சர்மா 'இதோ வள்ளுவர்' என்ற தலைப்பில்.

12.3.60 இதழ் முதல் தென்றல் பொறுப்பை இரா. கிருட்டினன் என்பவர் ஏற்கிறார். அந்த இதழில் 'அண்ணா உலா' வழங்குகிறார் வல்லம் வேங்கடபதி. வழக்கம்போல கதை, உருவகம், கட்டுரைகள், 'என் தாய்', 'ஐயம் அகற்று', கவிதைகள் தொடர்கின்றன (19.3.60). கல்லூரிக் கவியரங்கம் மணிவேந்தன் பாலசுப்பிரமணியன். 26.3.60இல் இதனைத் தருபவர் 'எழில்' சபாரத்தினம். 'எது ஆபாச இலக்கியம்?' (கட்டுரை), கல்லூரிக் கவியரங்கம் (டி. எழில் மற்றும் இரா.சீ. இராசகோபாலன்), கதைகள், கவிதை, 'ஐயம் அகற்று' இவை அடுத்த இதழிலும் காணப்படுகிறது.

கவிஞர் முடியரசனின் 'கா. அப்பாதுரைமகனே!' கவிதை மற்றும் 'திணை', 'சாடையில் சொன்னதென்ன?' 'புறம்' கட்டுரைகள்,

மு. கிருட்டிணசாமியின் கல்லூரிக் கவியரங்கக் கவிதை இவற்றோடு உருவகமும் உண்டு 9.4.60 இதழில்.

இலங்கைத் தமிழறிஞர் க.பொ. இரத்தினத்தின் 'தமிழோங்க' கட்டுரை வந்த 14.5.60 இதழில் நாரா. நாச்சியப்பனின் 'மல்லிகைப் பந்தல்' தொடர்கதை ஆரம்பமாகிறது. 'தொல்காப்பியம் - ஒரு சிறு விளக்கம்', 'பண்பும் நாகரிமும் பழம் பொருட்கள்' கட்டுரைகள் இடம் பெற்ற இதழ் 21.5.60. 'இலங்கையில் தமிழ் ஆட்சி அன்றொரு நாள் நடந்தது' என்ற அரிய உண்மையை விளக்குகிறது 28.5.60 'தென்றல்' கட்டுரை. எழுதியவர் : ஸ்ரீ கண்டி கோவிந்தசாமி ராசசிங்கம். ஒரு பெண்ணுக்கு எழுதுவதுபோல் 'எழுதாய் கண்ணே!' என்று ஒருவர் கவிதை எழுத, அதற்குப் பதிலாக 'அத்தானே!' என்று மற்றொருவர் கவிதை எழுத, கவிதை மடல்களைத் 'தென்றல்' தொடர்கிறது. வழக்கமாக வரும் கவிதை, கட்டுரைகளுக்கும் குறைவில்லை. ஆ. மாதவனின் நல்ல சிறுகதைகளில் ஒன்றான 'பாம்பு' வந்த இதழ் 4.6.60. 'பரிமேலழகரின் எச்சம்', 'கண்ணீர்' இவை கட்டுரைகள். 'கேளாயோ என் குரலை?', 'பொதுச் சொத்தோ?' 'பொங்குமன்றோ?' கவிதைகள்.

## ஏழாம் ஆண்டு

தென்றலின் ஏழாம் ஆண்டு 18.6.60இல் தொடங்குகிறது. ஓவியர் ஜெயராஜின் கைவண்ணம் வெளிப்படும் இதழில் குறிப்பிடத்தக்க கட்டுரை அப்பாத்துரையாரின் 'கிழக்கும் மேற்கும்'.

25.6.60 இதழின் 'எண்ணம்' பகுதியை கவிதையாகவே எழுதியுள்ளார் கண்ணதாசன் (வாரீர், வாரீர்! தமிழினைக் காப்போம்!).

அடுத்த வெண்பாப் போட்டி ஈற்றடி, 'காமம்' எனத் தொடங்கி 'கனி' என முடிதல். டாக்டர் அ. சிதம்பரநாதன் பற்றிய கண்ணதாசனின் கவிதை 'தமிழ்த் தலைவர் சிதம்பரநாதன்'. 'திருவள்ளுவர் ஒரு தத்துவமேதை' என்கிறார் பெரி. சிவனடியான் தம் கவிதையில். இவை அனைத்தும் 27.8.60 இதழில். அடுத்த இதழில் இரண்டு கதைகள், மூன்று கவிதைகள், கண்ணதாசனின் 'பதினெட்டுப் பிணங்கள்'. 'தேடிக் கொணர்ந்த திரு'. 10.9.60 வெண்பா ஈற்றடி. கடந்த இரண்டு மூன்று இதழ்களாக, செய்திகள் கவிதைகளாகத் தரப்படுகின்றன 'செய்திப்பாட்டு' என்ற தலைப்பில்.

'திருவள்ளுவர் ஒரு சமத்துவச் சான்றோர்' என்ற முடியரசனின் கவிதை வந்துள்ள இதழ் 1.10.60. செய்திப் பாட்டும், சிறுகதையும் உண்டு இந்த இதழில். வெண்பாப் போட்டி 'இல்லற வாழ்வே இனிது' என்ற ஈற்றடி கொண்டது (8.10.60). 'அடிமைப்பெண்' என்ற மலையாளச் சிறுகதை, கவிதைகள், இலக்கியக் கட்டுரைகள், தொடர்கதை இவையும் உண்டு. மா. தங்கவேலர் எழுதிய 'ஓ ஹென்றி' கட்டுரை வந்துள்ள இதழ் 22.10.60. 'பட்' டென்று தொடங்கி 'படார்' என முடிக்க வேண்டியது வெண்பாப் போட்டியாளர் பொறுப்பு.

'போய் வருகிறேன்' (12.11.60, 19.11.60) என்ற தலைப்பில் கண்ணதாசன் எழுதிய கட்டுரைகள் எவர் மனத்தையும் ஈர்க்கக் கூடியவை. அவருடைய கருத்துக்களுக்கு உடன்பாடில்லாதவர்களைக் கூட உடன் அழைத்துச் செல்லும் அற்புதமான நடை அது.

கண்ணதாசனின் சொல்லாட்சி நிறைந்த அடுத்த கட்டுரை 'முடிவின் தொடக்கம்' (3.12.60). 'காதல் போயின்' நாடகம் ('தேனருவி தியாகன்' எழுதியது), திருக்குறள் தென்றல் வெண்பாப்போட்டி, 'கவிதையும் அறிவியலும்,' 'கனவில் நடந்த கலவி' இலக்கியம் சார்ந்த கட்டுரைகள். 'பல்லவர் கோன் புகழ் நந்தி' என்னும் தியாகன் எழுதிய நாடகம் மூன்று இதழ்களில் (10.12.60, 17.12.60, 25.12.60) தொடர்கிறது. 'முடிவின் தொடக்க'மும் மூன்று இதழ்களில் முடிகிறது.

10.12.60 இதழுடன் 'மல்லிகைப் பந்தல்' தொடர்கதை முடிவு பெறுகிறது. இராம. கண்ணப்பனின் சிறுகதைகள் சில இதழ்களில் வந்துள்ளன. புலவர் பொன்னிவளவனின் 'இன்றே நீ' (25.12.60), முடியரசனின் 'வாழ்க தமிழகம்' கவிதைகள் குறிப்பிடத்தக்கவை.

'கோதுமை தந்த குணம்' (28.1.61), 'வெறி' எனத் தொடங்கி 'சரி' என முடிக்க (4.2.61), 'பச்சைத் தமிழரின் பண்பு' (18.2.61) இவை வெண்பாப் போட்டித் தலைப்புகள்.

'அருந்தமிழ்ப் புலவரும் ஆருயிர் மருந்தும்,' 'பிற மொழிகளில் தமிழ்' நல்ல கட்டுரைகள். கல்லூரிக் கவியரங்கங்களில் அரங்கேறுகிறார்கள் கா. வேழவேந்தன் (11.2.61), மீ. ராசேந்திரன் (18.2.61) ஆகியோர். 'தலைமைக் குடிமகன்' எனும் தேவநேயப் பாவாணரின் கட்டுரை (18.2.61) சிறப்புக்குரிய ஒன்று.

25.2.61 இதழில் 'சிரித்தேன்; அழவில்லை' கண்ணதாசனின் கட்டுரை. 4.3.61 இதழில் 'தமிழில் வானநூல் தடங்கள்,' 'அறிவியல்

வளர்ச்சி,' 'கடல் உலகம்', 'ரோம் நாகரிகச் சின்னம்', 'கென்யாவின் உதய சூரியன்' (1.4.61) சிறந்த கட்டுரைகள். கவியரங்கக் கவிதைகள் தொடர்ந்து வெளியிடப்படுகின்றன. 'தெற்கு'த் திசை பற்றி பெரி. சிவனடியானும், 'புன்முறுவல்' பற்றி மணிவேந்தனும், தஞ்சை கோவிந்த ராமானுசமும், மு. நரசிம்மனும் கவிதைகளை அளித்துள்ளனர். 'தலையாலங்கானத்துப் போர்', 'திரைச்சீலை' ஆகிய நாடகங்கள் இரண்டு இதழ்களில் வந்துள்ளன.

கண்ணதாசனின் 'பாவ மன்னிப்பு' கட்டுரையின் இரண்டாம் பகுதி வந்துள்ள இதழ் ரா.பி. சேதுப்பிள்ளையின் வெள்ளிவிழா மலராகவும் வெளிவந்துள்ளது.

## எட்டாம் ஆண்டு

ஆசிரியர் கண்ணதாசனின் அரசியல் மாற்றம் காரணமாக எட்டாம் ஆண்டுத் தென்றல் தன் வழியில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டது. ஆண்டின் முதல் இதழில் வெளியிடுபவர் பெயர் வேறாயிற்று (லெ. வீரப்பன்) - 24.6.61. கிட்டத்தட்ட முழுமையானதொரு அரசியல் கட்சி இதழாகவே அது மாறிவிட்டது.

'தோமான்' என்ற சிறந்த கண்ணதாசனின் கட்டுரை (17.61), பாரதி, பாரதிதாசன் பற்றி அவர் எழுதிய கவிதைகள், கவியரங்கில் இரண்டு மூன்று கவிஞர்கள் பாடிய கவிதைகள் தவிர வேறு இலக்கிய முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை. இதழும் அடிக்கடி தளர்ந்து, வெளிவர முடியாமல் தள்ளாடத் தொடங்கியது. தமிழ்த் தேசியக் கட்சி என்ற புதிய கட்சியின் ஒலிபெருக்கியாக மாறத் தொடங்கியதால் தென்றலின் உருவம் மாறி அது தன் ஒளியை இழக்க வேண்டியதாயிற்று.

## ஒன்பதாம் ஆண்டு

எட்டாம்ஆண்டில் இருந்ததை விடவும் இளைத்துப் போயிற்று தென்றல். நாம் தமிழர் என்ற மற்றொரு கட்சியின் பின்னணியில் வரத் தொடங்கிய அதன் ஆசிரியராக ஏ.கே. வில்வமும், வெளியிடுபவராக க. கணேசனும் பொறுப்பேற்றார்கள்.

எண்ணற்ற இலக்கியச் செல்வங்களை வாரி வழங்கிய தென்றல் வரட்டுவாதங்களை வெளியிடும் ஏடாயிற்று. முன்பு ஆசிரியராக இருந்த கண்ணதாசனோடு ஏற்பட்ட கருத்துவேறுபாடே சில இதழ்களின் எழுத்தாயிற்று.

கடைசியில், சில மாதங்களில் அதன் பயணமே நின்று போயிற்று.

## பொங்கல் மலர்கள்

ஒவ்வொரு ஆண்டும் தென்றல் பொங்கல் மலர் வெளியிடத் தவறவில்லை. கண்ணைக் கவரும் படங்களை விடக் கருத்தைக் கவரும் எழுத்தோவியங்களுக்கே தென்றல் முக்கியத்துவம் கொடுத்துள்ளது. மலர்கள் அதற்கு விலக்கல்ல.

மலர்களில் அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, பேராசிரியர் அன்பழகன், நாவலர் நெடுஞ்செழியன் முதலிய அரசியல் தலைவர்களிலிருந்து, பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், டாக்டர் அ. சிதம்பரநாதன், டாக்டர் மா. இராசமாணிக்கனார், அ.மு. பரமசிவானந்தம், டாக்டர் மெ. சுந்தரம், டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் தமிழண்ணல், அ.கி. பரந்தாமனார் போன்ற தமிழ்ப் பேரறிஞர்கள், புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், பொன்னி வளவன், சாமி. பழனியப்பன், கா. வேழவேந்தன், நாரா. நாச்சியப்பன் முதலிய கவிஞர்கள், எண்ணற்ற நாடக, சிறுகதை ஆசிரியர்கள் மலர்களில் எழுதிக்குவித்துள்ளனர்.

## தென்றலால் வளர்ந்தவர்களும் தென்றலை வளர்த்தவர்களும்

தென்றலின் இலக்கியப் பகுதியின் பெருமைக்குக் காரணமானவர்களில் குறிப்பிடத்தக்கவர் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை ஆவார். 'கேள்விப் பெட்டி', 'ஐயம் அகற்று' எனும் பகுதிகளில் சங்க இலக்கியம் முதல் தற்கால இலக்கியம், மற்றும் இலக்கணம் சார்ந்த சிறந்த விளக்கங்கள் தந்து தென்றலின் வளர்ச்சிக்குத் துணை புரிந்தவர் அவர். கவிஞர் கண்ணதாசனின் கருத்துகளுக்குத் தமது அறிவாற்றலால் துணை சேர்த்த அப்பாத்துரையாரின் பங்கு பாராட்டத்தக்கது.

தென்றல் பல கவிஞர்களை உருவாக்கியது. அவர்களுள் த. கோவேந்தன், துறையூர் ந. அலி, நாவுக்கரசன், பெரி. சிவனடியான், தமிழ்ப் பித்தன் மற்றும் எண்ணற்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

எஸ்.எஸ். தென்னரசு, ப. புகழேந்தி, ஏ.கே. வில்வம் ஆகியோர் முன்பே எழுதத் தொடங்கிவிட்டாலும், அவர்களின் எழுத்துக்கள்

வளம் பெறுவதற்கு வழிவகுத்தது தென்றலே. பின்னாளில் குறிப்பிடத்தக்க எழுத்தாளராகத் திகழ்ந்த ஆ. மாதவனின் பயிற்சிக் களமாகத் தென்றலே பயன்பட்டது.

புலவர் பெருமக்கள் பலர் தென்றலை வளர்த்துத் தாமும் வளர்ந்தனர். மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் தம் கருத்துகளை வெளியிடத் தேர்ந்தெடுத்த இதழ் தென்றல் மட்டுமே.

## முடிவுரை

இலக்கிய உலகில், இலக்கண நூல்களில் புதிய புதிய சர்ச்சைகளை - விவாதங்களை - தோற்றுவித்து வெற்றி கண்டது தென்றல். அதிலே குறிப்பிடத்தக்கவை 'தமிழர் திருமணத்தில் தாலி', 'நன்னூல் நன்னுலா?' ஆகியவை.

பாரதி, பாரதிதாசனுக்குப் பிறகு தமிழில் மரபுக் கவிதை 'செத்துவிட்டது' என்ற திமிர்வாதத்தை முறியடித்து, தான் வளர்த்த கவிஞர்கள் மற்றும் 'வெண்பாப் போட்டி' மூலம் எண்ணற்ற மரபுக் கவிதைகள் வளமுடன் வர வழிவகுத்தது தென்றல். இதற்காகத் தமிழ் கூறும் நல்லுலகம் தென்றலுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறது என்பது மிகையான கூற்றல்ல.

கவிஞர் கண்ணதாசனின் காவியம் 'மாங்கனி'யில் அரசவைக்கு வந்துபோன கதைத்தலைவி மாங்கனி உடனே மறைந்துவிட்ட அடையாளம் தெரியா நிலையை,

> தென்றல் வந்து போனதற்குச்
> சுவடு ஏது?

என்று எழுதுவார் கவிஞர். ஆனால் கண்ணதாசனின் தென்றல் இதழ் வந்து போனதற்குத் தமிழ் இலக்கிய உலகில் ஏராளமான சுவடுகளை அது பதித்துள்ளதை எவரும் மறுக்க முடியாது.

தென்றல் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு மைல் கல். திராவிட இயக்க இலக்கிய இதழ்களில் வைரக் கல்.

# திங்கள்

சு. ராஜசேகரன்

அறிவித்து, அறிவுறுத்தி, மகிழ்விக்கும் இதழ்கள் எண்ணற்றவை இக்காலத்தில் வெளிவருகின்றன. கால அடிப்படையில் ஒரு நாளில் தொடங்கி ஓராண்டுக் காலப் பகுதியில் அவை பிரசுரிக்கப்படுகின்றன.

அவற்றுள் திங்கள் தோறும் வெளிவரும் இதழ்கள் தனித் தன்மையும் சிறப்பும் கொண்டவையாக விளங்குகின்றன. திங்கள் இதழ்களில் சிறப்புப் பெற்றவை கலைமகள், அமுதசுரபி, செந்தமிழ்ச் செல்வி, தாமரை முதலியனவாகும்.[1]

இந்த இதழ்களைப் போன்று 1956ஆம் ஆண்டு தைத் திங்களில் 'திங்கள்' திங்கள் இதழாக வெளியானது. இது பொழுது போக்கு இதழன்று - சிந்தனைக்கு விருந்தாக அமைந்த பொன்னான இதழ். இதனை, "பல தமிழ்ப் பத்திரிகைகளில் சிறுகதைகளும் தொடர்கதைகளும் பிரதான்யமாக இடம் பெற்றுள்ளன. மேனாட்டில் - கண்கவர் படங்களும், கருத்தும் சுவையும் மிகுந்த பல வகைக் கட்டுரைகளே மாதப் பத்திரிகைகளின் அஸ்திவாரம். அத்தகைய பத்திரிகைகளே மக்கள் மனத்தைக் கவர்ந்து கோடிக் கணக்கில் விற்பனையாகின்றன. இதை அனுசரித்தே, திங்களில் வெளிவரவிருக்கும் விஷயங்கள் தீர்மானிக்கப்பட்டுள்ளன" என்று திங்கள் இதழின் ஆசிரியர் டி.வி. ராம்நாத் முதல் இதழிலேயே பறை சாற்றுவதால் அறியலாம்.

ஆங்கிலத்தில் வெளிவருகின்ற Readers Digest போன்று, தொகுப்பு இதழாகத்[2] திங்கள் உதயமாயிற்று. ஏற்கனவே தமிழ் நாட்டில் 1947 நவம்பரிலிருந்து 'மஞ்சரி' என்னும் மாதத் தொகுப்பு இதழ்[3] மலர்ந்து வந்து கொண்டிருந்தாலும், அதையும் மிஞ்சும் வகையில் திங்கள் விளங்க வேண்டும் என்பதே ஆசிரியரின் தீர்க்கமான குறிக்கோளாகும்.

மஞ்சரியில் உள்ளதைக் காட்டிலும் அதிகக் கட்டுரைகள், அதிகச் செய்திகள், அதே நேரத்தில் அதில் இல்லாத படக் கட்டுரைகளையும் கொண்டதாகத் திங்கள் இதழ் அமைந்திருக்கிறது.

1940களில் தமிழ் நாட்டில் தோன்றிய வெளியீட்டகங்களில் குறிப்பிடத்தக்க ஒன்று ராம்நாத் பப்ளிகேஷன்ஸ் என்னும் நிறுவனமாகும். பல நல்ல தமிழ் நூல்களையும், சிரஞ்சீவியின் துப்பறியும் நாவல்களையும் இந்த நிறுவனம் வெளியிட்டு வந்தது. பேசும் படம் என்னும் திங்கள் இதழையும் இந்த நிறுவனம் 1941ஆம் ஆண்டிலிருந்து வெளியிட்டு வந்தது.[4]

இந்த நிறுவனம் அச்சகம், பணபலம், வாசகர் வட்டம், பத்திரிகை முகவர்கள் என்னும் எல்லா வசதிகளையும் பெற்றிருந்தது. இதன் உரிமையாளரும் ஆசிரியரும் டி.வி. ராம்நாத் ஆவார். இப்படி சகல வசதிகளோடும் இருந்த நிறுவனத்திலிருந்து வெளியானதுதான் திங்கள் இதழ்.

ஆங்கில இதழ்களுக்கு இணையாக அல்ல அதற்கும் மேலான தொகுப்பிதழாகத் தன் வாழ்க்கையைத் தொடங்கியது திங்கள். இந்த இதழின் தோற்றம் குறித்துத் தமிழில் தோன்றிய இதழியில் வரலாற்று நூல்களில் குறிப்பேதும் காணப்பெறவில்லை.

விலையோ எட்டணாதான். பக்கங்களோ நூற்றிருபது. படிக்கவோ பலவகைச் செய்திகள். ஒரு நாளில் படித்து முடிக்க முடியாது. அடுத்த திங்கள் வெளிவரும் வரை படித்துக் கொண்டிருக்க வேண்டும். அவ்வளவு செய்திகள்.

இதழைப் பிரித்ததும் முதல் நான்கு பக்கங்களில் காணப்படுவது விளம்பரங்கள். அதையடுத்துப் பொருளடக்கம். பொருளடக்கத்தை அடுத்து 'வணக்கம்' என்னும் தலைப்பில் ஒரு பகுதி. இதை ஆசிரியர் முன்னுரை என்றே கூறலாம். இப்பகுதியில், "பள்ளிச் சிறுவர் முதல் முதியோர் வரை எல்லோருக்குமான விஷயங்கள் பிரசுரமாகும். அவ்வப்போது பிரதான்யம் வகிக்கும் விஷயங்களில் விசேஷ கவனம் செலுத்தப்படும்" என்றும், "படங்கள் மூலம் பல விஷயங்களைச் சுலபமாக விளக்கலாம். இந்த நோக்கத்துடனேயே படக்கட்டுரைகள் அமைக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து படக்கட்டுரைகள் வெளிவரும்" என்றும் வணக்கமாகக் கூறியுள்ளார் இதழாசிரியர்.

ஏற்கனவே 'பேசும்படம்' என்னும் நல்ல தமிழ்ப் பெயரில் பத்திரிகை நடத்தி வந்த டி.வி. ராம்நாத், திங்கள் என்னும் பெயரை இதழுக்கு வைத்ததற்கான காரணத்தைக் கூறுகிறார்.

"திங்கள் என்பது மிகவும் அழகானதோர் தமிழ்ச் சொல். சந்திரன், மாதம் என்ற பொருள்களைக் கொண்டது. இதையே நமது பத்திரிகையின் பெயராக வைத்திருக்கிறோம்". பேராசிரியர் ஸ்ரீ.ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் "திங்கள் என்ற சொல் எல்லோரும் அறிந்த தீந்தமிழ்ச் சொல்லாக வழங்கி வந்தது பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இச்சொல் பத்திரிகையைக் குறிக்கும் புதுச்சொல்லாக மாறித் தமிழ் மக்களிடையே தெரிந்த சொல்லாக ஆக வேண்டுமென்று விரும்புகின்றோம்".[5]

திங்கள் முதல் இதழின் வண்ண மேலட்டையில் கோயில், கோபுரம், குளம், தென்னை மரங்கள், பூஞ்சோலை ஆகியவை காட்சியளிக்கின்றன. மேலட்டையின் உள்புறம் விளம்பரம். முதல் நான்கு பக்கங்களில் விளம்பரங்கள். ஐந்தாம் பக்கத்தில் பொருளடக்கம். ஆறாம் பக்கத்தில் ராம்நாத் பப்ளிகேஷன்ஸின் வெளியீடுகள் பற்றிய விவரம். ஏழாம் பக்கத்திலிருந்து நூற்றிருபது பக்கங்கள் வரை நாற்பது கட்டுரைகள்; பெட்டிச் செய்திகள். பின் அட்டையின் உள்புறமும் வெளிப்புறமும் விளம்பரங்கள். இதுதான் திங்கள் இதழின் கட்டமைப்பு.

1956இல் வெளியான பன்னிரண்டு இதழ்களும் 1957ஆம் ஆண்டு ஆகஸ்டு வரையில் ஏழு இதழ்களுமாக மொத்தம் பத்தொன்பது மாதங்களே திங்கள் இதழ் வெளிவந்தது.

இவற்றுள்ளும் 1956ஆம் ஆண்டு ஜனவரி முதல் ஜூன் வரையிலான ஆறு இதழ்களும், 1957ஆம் ஆண்டில் பிப்ரவரி முதல் ஆகஸ்டு வரையிலான ஏழு இதழ்களுமாகப் பதின்மூன்று இதழ்கள் மறைமலையடிகள் நூலகத்தில் படிக்கக் கிடைத்தன. இந்தப் பதின்மூன்று இதழ்களில் உள்ள கட்டுரைகள், செய்திகள் போன்றவையே இந்த ஆய்வுரையில் இடம் பெறுகின்றன.

பொதுச்செய்திகள், சமுதாயம், இலக்கியம், இலக்கிய ஆராய்ச்சி, கவிதை, வரலாறு, அறிவியல், கலைகள், பயணம், மொழிபெயர்ப்பு, பொழுதுபோக்கு, சமயம், படக்கட்டுரை போன்ற பல்வேறு வகைகளில் சுமார் நாற்பது கட்டுரைகள் முதல் இதழில் வெளிவந்துள்ளன.

சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் திங்கள் இதழுக்கு அனுப்பிய வாழ்த்துரை, இளங்கோவும் ஆண்டாளும் திங்களைப் போற்றிய முறைமையை நன்கு எடுத்தியம்புகிறது.

மஞ்சரி இதழில் 'ஊரும் உலகமும்' என்று ஒரு பகுதி காணப்படுகின்றது. அதுபோலவே, திங்கள் இதழில் ஒரு பகுதி 'திங்களுக்குத் திங்கள்' என்னும் தலைப்பில் வெளியானது. இரண்டுமே நாட்டுநடப்புகளைத்தான் நவிலுகின்றன. திங்கள் இதழாசிரியர், ". . . . . . . . . 'தீவிளிக்குத் தீவிளி' என்பது போலத் தொனிக்கிறதல்லவா? சென்ற திங்களில் நடைபெற்ற முக்கிய செய்தி விவரங்கள் இப்பகுதியில் தொகுத்துத் தரப்படும்" என்று கூறுகிறார்.

டாக்டர் மு.வ. அவர்கள் 'இயற்கையின் கலை அரங்கு' என்னும் தலைப்பில் அகநானூற்றுப் பாடல் ஒன்றை அழகாக விளக்கியுள்ளார். 'என்றும் பதினாறு' என்னும் தலைப்பில் கவிதை ஒன்றைப் படைத்துள்ளார் பெ. தூரன். நமஸ்காரப் பிரியனான சூரியனுக்குக் கோயில்கள் எங்கெங்குள்ளன என்பது பற்றி ஒரு கட்டுரை கூறுகிறது. 'திங்கள் வருக' என்னும் தலைப்பில் சுத்தானந்த பாரதியார் ஒரு வாழ்த்துக் கவிதை பாடியுள்ளார்.

ஜன்னல், சாவி ஆகியவை போர்த்துக்கீசிய சொற்கள் என்று சொன்னதோடு மட்டுமல்லாமல் அவற்றுக்கு இணையான காலதர், திறவுகோல் என்னும் தமிழ்ச் சொற்களையும் பெட்டிச் செய்தியொன்று கூறுகின்றது. மகேந்திரவர்மனின் குடுமியா மலை சங்கீதக் கல்வெட்டுச் செய்திகளை ஒரு கட்டுரை ஆராய்கின்றது.

பிற நூல்களில் வெளியான சிறந்த செய்திகளைத் தங்கள் இதழில் வெளியிடும் போக்கினைத் திங்கள் மேற்கொண்டது. வ.வே.சு. ஐயரின் பாலபாரதியில் வெளியான கட்டுரை, 'மதுரை மாநகரம்' என்னும் தலைப்பில் எடுத்தாளப்பட்டிருக்கிறது.

'வாதப் பிரதிவாதம்' என்னும் பகுதி புதுமையாக அமைந்துள்ளது. புகை பிடிப்பது தீங்கு என்னும் வாதமும், மாறாக, தாராளமாகப் பிடி என்னும் வாதமும் சிறப்பாகச் சிரஞ்சீவியால் எழுதப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்புப் பகுதியும் உள்ளது. டேனிஷ் கிறிஸ்தவ சங்கத்தைச் சேர்ந்த மிஸஸ் எஸ்தர் மேனனுக்குக் காந்திஜி எழுதிய கடிதத்தின் தமிழாக்கம் 'இந்தியா பொறுமையின் சின்னம்' என்னும் தலைப்பில் வெளியாகியுள்ளது.

படக்கட்டுரை என்னும் பகுதி, தமிழ் இதழ்களுக்கு அக்காலத்தில் புதுமையானது என்று கூறலாம். பெரம்பூர் ரயில் பெட்டித் தொழிற்சாலை பற்றிய கட்டுரை குறிப்பிடத்தக்கது.

ஷெல்லியின் 'பொன்னகரப் புரட்சி' பற்றி ஒரு கட்டுரை உள்ளது.

'ரசவாதம்' என்னும் தலைப்பில் (இதற்கு மூலிகைகள் தேவையில்லை. மூளைதான் வேண்டும்) என்னும் குறிப்போடு சொல் விளையாட்டு குறிக்கப்பட்டுள்ளது.

பாரதி பாடல்களில் தீ, அனல், தழல் என்னும் சொற்கள் கையாளப்படுவது குறித்து, 'கவியும் கனலும்' என்னும் கட்டுரை கூறுகிறது.

முதல் இதழில் ஆசிரியர் தலையங்கம் எதுவும் எழுதவில்லை. அது அவருக்கு ஒரு குறையாகப் பட்டிருக்கலாம். அதனால் இரண்டாவது இதழில் இருந்து தலையங்கம் என்ற பெயரில் இல்லாமல் ஆசிரியர் எழுதிய கட்டுரைகளாக அப்போதைய பிரச்சினைகளாக அவை அமைந்துள்ளன. சான்றாக, தேசிய இன்ஸ்யூரன்ஸ்,[6] மொழிவாரி ராஜ்யங்கள் வேண்டும்,[7] பயிர்த் தொழிலுக்கு ஒரு திட்டம்[8] ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

தமிழ் நாட்டில் பூதானம், சுதந்திரமடைந்த சூடான் (அயல்நாடு பற்றிய செய்தி), ரஸ்ஸலின் 'எபெக்ட்' (அறிவியல்), கோவா (பயணம்), ஸ்ரீமதி ஸன்யாட் சென் (அயல்நாட்டுப் பிரமுகர்), கவிதையின் உதயம் (இலக்கிய ஆராய்ச்சி), சமூகத்தில் குற்றவாளிகள் நிலை, பாரசீக இலக்கியம், கன்னிமாரா லைப்ரரி, மேனாட்டு நவீன நடனம், சிலைகள் சொல்லும் கதை, சீட்டு விளையாட்டு, ஜீவராசிகள் எப்படித் தோன்றின? என்னும் கட்டுரைகள் திங்கள் முதல் இதழில் வெளிவந்தவையாகும். கட்டுரைத் தலைப்புகளே திங்களின் உயர்ந்த தரத்தை உணர்த்துபவையாக உள்ளன.

திங்களின் இரண்டாவது இதழ், வாசகர்கள், சகோதரப் பத்திரிகைகளின் பாராட்டு என்னும் ஊட்டச்சத்தைப் பெற்று உவப்புடன் வெளிவந்தது.

வாசகர்களுக்கு எழுத வாய்ப்பளிக்கும் இரண்டு புதிய பகுதிகள் இரண்டாம் இதழில் (1956 மாசி) இடம் பெற்றன. 'ஹாஸ்ய சம்பவம்' என்னும் பகுதியும், 'மறக்க முடியாத சம்பவம்' என்னும் மற்றொரு பகுதியும் வெளியிடப்பட்டது. இந்த இரண்டு பகுதிகளில்தான் புதிய எழுத்தாளர்களுக்கு வாய்ப்புகள் அளிக்கப் பெற்றன.

மற்றபடி பார்த்தால், வெளியான எல்லா இதழ்களிலும் எல்லாக் கட்டுரைகளையும் குறிப்பிட்ட சில பேர்களே எழுதி வந்தார்கள். ஒன்று அவர்கள் பத்திரிகை அலுவலகத்தில் வேலை பார்த்தவர்களாக இருந்திருப்பார்கள்; அல்லது ஆசிரியருக்கு வேண்டியவர்களாக இருந்திருப்பார்கள். அதனால் எழுத்துக்களில் புதுமையைக் காண இயலவில்லை. ஒரேவகையான முறையில் எல்லாக் கட்டுரைகளும் அமைந்திருந்தன.

நந்தலால், எஸ்.என்., எஸ். நடராஜன், ஸி. ராஜப்பா, ராசு, சாவித்ரி, பரணிகுமார், சௌரி, பரத்வாஜ், சிரஞ்சீவி, ஷாகுல், சாரதி, ஆர்.வி., மல்லாரி, பி.ஏ. சுப்பிரமணிய ஐயர், பிரதிபா, பண்டிட் வி. நடேசன் ஆகியோர் திங்கள் இதழின் நிரந்தர எழுத்தாளர்கள் ஆவர்.

விளையாட்டுக்கும் இந்த இதழில் இடம் கொடுத்திருந்தார்கள். அந்தக் கட்டுரை 'கிரிக்கெட் நிபுணர் ஹட்டன்' என்னும் தலைப்பில் இருந்தது.

கம்பனின் கருத்துப் புரட்சியை 'இலக்கிய நாடு' என்னும் கட்டுரை எடுத்துக்காட்டியது. காலச் சுவடுகளை 'அன்றைய சென்னை' என்னும் கட்டுரை காண வைத்தது. தாடி பற்றிய கட்டுரை, ஏன் தலைவர்கள் தாடி வைத்துக்கொண்டார்கள் என்பதைச் சிந்திக்கத் தூண்டியது. அதற்குத் தலைப்பு 'நிரந்தரமற்ற தாடி'. கோயில் ஒரு சமுதாய நிறுவனம் என்பதை, சிரஞ்சீவி எழுதிய, 'கோயில் கட்டினர் குடிகெடுக்க அல்ல' என்னும் கட்டுரை உணர்த்தியது.

1956 மார்ச்சு திங்கள் இதழில் வெளியான ரா.ஸ்ரீ. தேசிகனின் 'விமர்சனம் ஒரு கலை' என்பது குறிப்பிடத் தகுந்த கட்டுரையாகும். பி.ஏ. சுப்பிரமணிய அய்யரின் 'இலக்கிய பிரம்மாக்கள்', மற்றும் 'கப்பலோட்டிய இந்தியர்கள்', 'குடை பிறந்த கதை' என்னும் கட்டுரைகள் பல அரிய செய்திகளைத் தெரிவிக்கின்றன.

'இலங்கைத் தமிழ் மந்திரி ஸ்ரீ.ஸி. குமாரஸ்வாமி தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்தபோது 'கண்ணகிக்குத் தமிழ் நாட்டில் கோயில் இல்லையே' என்றார். அவர் கூறியது எவ்வளவு தவறு என்பதை விளக்கும் வகையில் பண்டிட் வி. நடேசனின் 'கண்ணகி கோயில்கள்' என்னும் கட்டுரை அமைந்துள்ளது.

ஏப்ரல் இதழில் மக்கள் உடல்நலனில் அக்கறை கொண்ட 'தேகப் பயிற்சி' என்னும் கட்டுரை இடம்பெற்றது. சிலம்புச் செல்வர்

ம.பொ. சிவஞானத்தின் 'புதுமைக்கவி இளங்கோ' புதிய சிந்தனைகளைத் தூண்டியது. முதல் தடவையாகத் தமிழகத்தில் கொண்டாடவிருக்கும் இளங்கோ தினத்தை (சித்ரா பௌர்ணமி) ஒட்டி இக் கட்டுரை வெளியிடப்பட்டது என்று இதழாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

மே இதழில், பகவான் புத்தரின் 2500ஆவது ஜன்ம தினத்தை முன்னிட்டு ராஜாஜி எழுதிய பகவான் புத்தர், டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனின் புத்தரின் போதனைகள், கிருத்திகாவின் நான் கண்ட பௌத்த சிற்பங்கள், டி.என். இராமச்சந்திரனின் இந்தியாவில் பௌத்தக் கலைகள் மற்றும் புத்த பகவான் படக்கட்டுரை ஆகியவை இடம் பெற்றிருந்தன.

ஜூன் இதழிலிருந்து முக்கிய பிரமுகர்களுடன் ஒரு நாள் தங்கிப் பேட்டி எடுத்த நிகழ்ச்சியை விளக்கும் படக்கட்டுரை இடம் பெற அரம்பித்தது. 'நந்தலால்' என்னும் எழுத்தாளர் பேட்டி காண, 'சந்தாமியான்' படம் எடுக்க, 'காமராஜருடன் ஒரு நாள்' என்ற புது அம்சம் இடம் பெற்றது இந்த இதழில்தான். 1957 பிப்ரவரி இதழில் வெளியான, 'டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியாருடன் ஒரு நாள்', மார்ச் இதழில் வெளியான, 'டாக்டர் ஸி.பி. யுடன் ஒரு நாள்,' மே இதழில் வெளியான 'மேஜர் ஜெனரல் கரியப்பாவுடன் ஒரு நாள்', ஆகஸ்டு இதழில் வெளியான 'நம் பிரதமர் வாழ்வில் ஒரு நாள்' முதலிய பேட்டிக் கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவை யாகும்.

1957 பிப்ரவரி இதழில் சர்வகலாசாலை நூற்றாண்டு விழாவையொட்டிய கட்டுரைகள் வெளியிடப்பட்டன. புதிய புத்தகங்கள் என்னும் தலைப்பில் நூல் மதிப்புரை என்னும் பகுதியும் இந்த இதழில் இடம் பெற்றது.

1957 மார்ச்சு இதழில் தேர்தல் சம்பந்தமான விசேஷக் கட்டுரைகள் இடம் பெற்றன. 'தமிழ் நாடகத் தந்தை' என்னும் கட்டுரை பம்மல் சம்பந்த முதலியாரின் சேவையைப் பாராட்டி எழுதப்பட்டதாகும். புத்தகப் பகுதி என்னும் புதிய பகுதியும் இந்த இதழில் இடம்பெற்றது. இப்பகுதியில் தமிழில் வெளியான நல்ல நூல்களின் சுருக்கத்தை வெளியிட்டனர்.

1957 ஏப்ரல் இதழின் மேலட்டையில் சென்னைப் பல்கலைக்கழகப் பரீட்சை மண்டபத்தின் படத்தை வெளியிட்டு,

உள்ளே, 'பரீக்ஷைகள் அவசியந்தானா?' என்ற கட்டுரையில் தேர்வு மண்டபம் கலையுணர்ச்சியுடன் கட்டப்பட்டுள்ளது என்றாலும் எல்லா மாணவர்களுக்கும் இடமளிக்கத் தக்கதாக இல்லையே என்ற ஏக்கத்தை இதழாசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். கொடைக்கானல் பற்றிய அரிய செய்திகள் அடங்கிய கட்டுரை ஒன்றும், எஞ்சினீரியங் கல்லூரிக் கண்காட்சி பற்றிய கட்டுரை ஒன்றும் உள்ளன.

1957 மே இதழில் மருத்துவப் பகுதியும் இடம் பெற்றது. அதில் ஹோமியோபதி மருத்துவம் பற்றி விளக்கமாகக் கூறப்பட்டிருந்தது. 'அழகப்பரின் அரிய சாதனைகள்' என்னும் கட்டுரை குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். மாமல்லபுரத்தைக் கண்கவர் படங்களுடன் விளக்கியது படக் கட்டுரை.

1957 ஜூன் இதழில் சேக்கிழார், பரிதிமாற்கலைஞர் பற்றிய கட்டுரைகள் வெளியாயின.

1957 ஜூலை இதழில் ஜோதிடம், விவசாயம் என்னும் புதிய பகுதிகள் இடம்பெற்றன. கவிஞர் லாங்பெலோ பால்ரிவியரைப் பற்றி எழுதிய கவிதை, தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு 'அமெரிக்க கட்டபொம்மன்' என்னும் தலைப்பில் வெளியானது. இராமேசுவரம் கோயிலைப் பற்றி, 'சேது நாட்டுக் கடற்கரையில்' என்னும் தலைப்பில் நா. பார்த்தசாரதி எழுதிய கட்டுரையும் குறிப்பிடத்தகுந்தது.

1957 ஆகஸ்டில் திங்கள் அஸ்தமனமாகிவிட்டது. ஆம். திங்கள் இதழ் வெளியிடப்படுவது நிறுத்தப்படுவதாக அறிவிப்பு அந்த இதழில்தான் வெளியானது. அந்த இதழ் முழுவதும், அவல, அமங்கலச் செய்திகளாகவே நிறைந்துள்ளன. ஆசிரியரின் மனவருத்தம் அந்த இதழ் முழுவதும் காணக்கிடக்கின்றது. அட்டையில் அழிந்த செஞ்சிக் கோட்டையின் கல்யாண மகால் படம் இடம் பெற்றிருந்தது. 'விலக்கப்படும் வெலிங்டன் சிலை' என்னும் கட்டுரை, சுதந்திர தினத்தன்று மவுண்ட் ரோடிலிருந்து அந்தச் சிலை அகற்றப்பட்டதைக் கூறுகின்றது.

எஸ். நடராஜன் எழுதிய 'புரட்சித்தீயில் குதித்த தமிழர்கள்' என்னும் கட்டுரை, விக்டோரியா ஞாபகச் சின்னம், கே. பாஸ்கரன் எழுதிய தமிழ்ப்புலவர் ஜெயங்கொண்டார், அ. ராம்கோபால் எழுதிய புகையிலை எண்ணெய், ஸி. சுப்பையா எழுதிய பர்மாவில் தமிழர்கள், டி. நடராஜன் எழுதிய 'உயிர்காக்கும் கொய்னா', கே. ஜெயராமன்

எழுதிய 'எள்ளும் எண்ணெயும்' என்னும் கட்டுரைகள் திங்களின் அஸ்தமனத்தைக் குறிக்கும் வகையில் அமைந்துவிட்டன.

1956 தைத் திங்களில் சிறந்த குறிக்கோள்களோடு தோன்றிய இதழ், இரண்டாவது இதழில் சக பத்திரிகைகளின் பாராட்டுரை களையும் வாசகர்களின் பாராட்டுரைகளையும் வெளியிட்டுத் தான் வளர்ந்து வருவதைக் காட்டிக்கொண்டது. மூன்றாவது இதழில் காணப்படும் வாசகர் பாராட்டுரை, திங்கள் இதழ் மக்களிடையே பிரபலமாகி வருகிறது என்ற எண்ணத்தை உருவாக்கும் வகையில் இருந்தது. ஐந்தாவது இதழின் வணக்கம் பகுதியில் வாசகர் ஆதரவு அதிகமாகி வருகிறது என்றே குறிப்பிடப்பட்டிருந்தது.

ஆறாவது இதழில் தன்னை ஆறுமாதக் குழந்தை என்று கூறிக்கொண்டது திங்கள்; வாசகர் ஆர்வம் மிகுந்துள்ளது என்றும் சொல்லிக் கொண்டது அந்த இதழ்.

ஆனால், 1957ஆம் ஆண்டின் முதல் இதழ் தைத் திங்களில் அதாவது பிப்ரவரியில் வெளியானபோது அந்த இதழ் மேலட்டையின் உள்புறத்தில் உள்ள விளம்பரத்தைக் காணும்போது, திங்களின் விற்பனை திருப்திகரமாக இல்லை என்பதும், விற்பனையாகாத இதழ்களைத் தொகுத்து விற்பனை செய்ய முயன்றார்கள் என்பதும் தெரிய வருகிறது.

"1956ஆம் வருஷ திங்கள் பிரதிகள் 'அறிவுப் பொக்கிஷம் என்று எல்லோராலும் பாராட்டப்பட்ட இந்தச் சஞ்சிகையின் 1956ஆம் வருஷ 12 பிரதிகள் கொண்ட 'செட்டு'கள் சொற்பமே கைவசமுள்ளன. விலை ரூ.6.00. தபால் செலவு இலவசம். வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்: ராம்நாத் பப்ளிகேஷன்ஸ், 17, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, சென்னை - 2. என்பதே அந்த விளம்பரமாகும். உண்மை நிலையை ஓரளவு மறைத்து, விடாப் பிடியுடன் எப்படியாவது இதழைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்ற நல்லெண்ணத்தில், தவறான நம்பிக்கை (False hope) தரும் விதத்தில், அடுத்து வந்த இதழ்களின் வணக்கம் பகுதியில் ஆசிரியர், திங்கள் வாசகர் ஆதரவைப் பெற்று வருகிறது என்றே குறிப்பிட்டுள்ளார்.

இந்த இதழில் (பிப்ரவரி 57) வணக்கம் பகுதியில் "திங்களுக்கு இரண்டாவது வயது இந்த இதழிலிருந்து ஆரம்பமாகிறது. ஓராண்டுக்

காலம் வாசகர்களின் இடைவிடாத ஆதரவைப் பெற்ற திங்கள் மேன் மேலும் தன் சேவை மூலம் அவர்களின் அபிமானப் பத்திரிகையாக விளங்கி வரும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்" என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

1957 ஏப்ரல் இதழின் வணக்கம் பகுதியில் "தமிழில் இம்மாதிரி இவ்வளவு அழகான முறையில் ஒரு சஞ்சிகை வெளிவருகிறதா? இங்கிலீஷில் வெளிவரும் சில சஞ்சிகைகளையும் மிஞ்சிவிட்டதே என்று புகழ்ந்தார் நமது சேனாதிபதி மேஜர் ஜெனரல் கரியப்பா. இச் சஞ்சிகையிலுள்ள விஷயங்களும் சிறந்தவைகளே என்றும் பாராட்டினார். இம்மாதிரி பார்த்தவர்கள் மனத்தைக் கவரும் திங்கள் பலருக்கும் பயனுள்ளதாக இருந்து வருகிறது நமக்கு மகிழ்ச்சி அளிக்கிறது" என்று பெருமைப்பட்டுக் கொண்டார் இதழாசிரியர்.

1957 ஜூன் இதழில், வணக்கம் பகுதியில் வாசகரின் கடிதம் ஒன்றை மேற்கோளாகக் காட்டியிருந்தார்கள். இதோ அந்தக் கடிதம்:.

"தமிழ் நாட்டில் ஒரு வழக்கம் - ஏன், சாபக்கேடு நிலவி வருகிறது. ஒருவர் ஒன்று செய்துவிட்டால் அதே துறையில் உள்ள இன்னொருவரும் அதையே செய்ய முற்படுவர். இது பத்திரிகைத் தொழிலிலும் இல்லாமல் இல்லை.

இந்த மனநிலைக்கு மாறாக உருவானது திங்கள். வழக்கில் உள்ளவைக்கு மாறானதை எளிதில் உடனே ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் மக்கள். ஆனாலும் திங்களைத் தமிழ் மக்கள் நிச்சயமாய் வரவேற்கிறார்கள். இன்னும் கொஞ்ச நாட்களில் பத்திரிகை அமோகமாக விற்பனை ஆகும் என்று எதிர்பார்க்கலாம்.

நல்ல தமிழில் - மக்களுக்குப் புரியக் கூடிய தமிழில், அரிய பெரிய விஷயங்களை வழங்குகிறது திங்கள். கல்விச் சாலை, தத்துவம், விஞ்ஞானம், அரசியல், சமயம் இப்படி எத்தனை எத்தனையோ விஷயங்களை லகுவாய் தமிழ் மக்கள் அறியச் செய்து விடுகிறது திங்கள்.

'டைஜஸ்ட்' என்பது பல பத்திரிகைகளில் உள்ள நல்ல கட்டுரைகளைத் தொகுத்து வெளியிடுவது; அதுவும் நல்ல முறைதான். ஆனால் திங்களில் சுயமான நல்ல கட்டுரைகள் - சோடை என்று ஒதுக்க இயலாத கட்டுரைகள் வெளிவருகின்றன. இத்தனை உயர்வான பத்திரிகை கிடைத்ததற்குத் தமிழ் மக்கள் பெருமைப்படுவார்கள்".

1956 தைத் திங்களில் வாசகர் மனத்தில் குடிகொண்ட திங்கள், 1957 ஆடித் திங்களில் ராம்நாத் பப்ளிகேஷனில் அடங்கிவிட்டது.

"ஒவ்வொரு சிறு பத்திரிகையின் முதலாவது இதழ் வெளியிடுகிற அறிவிப்பு எவ்வளவு நம்பிக்கையை, எவ்வளவு ஆசைக்கனவுகளை, எதிர்பார்ப்புகளை எல்லாம் முழக்கமிடுகின்றது! ஆனால் அவை பொய்த்துப் போகும்படி காலம் விளையாடி விடுகின்றது. தன்னம்பிக்கையோடும் உற்சாகத்தோடும் உழைக்க முனைந்தவர்களின் செயல்பாடுகள் பலவும் மறதிப் பாழில் மக்கிப் போகின்றன",[9] என்னும் வல்லிக்கண்ணனின் கூற்று திங்களுக்கும் அதன் ஆசிரியர் டி.வி. ராம்நாத்துக்கும் பொருந்துவதாக அமைந்து விட்டது.

1957 ஆகஸ்டு இதழின் 'வணக்கம்' பகுதியில், "சென்ற 20 மாதங்களாகக் கண்ணுக்கும் காதுக்கும் விருந்து என்று சொல்லப்படும் அளவுக்குப் பொலிவுடன் வெளிவந்த திங்கள் பத்திரிகையைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதை மிக வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

திங்கள் வகுத்துக்கொண்ட பாதை மிகவும் பாராட்டப்பட்ட தென்னவோ உண்மைதான். ஆனால், அதன் சேவையை நன்கு பயன்படுத்திக்கொள்ளத் தமிழகம் தவறி விட்டது. ஆகவே, சிறிது காலம் தாழ்ந்து மீண்டும் திங்கள் சேவை செய்ய முன்வரும் என்று வாசகர்கள் எதிர்பார்க்கலாம்" என்று ஆசிரியர் அறிவித்தார்.

கடைசி இதழின் கடைசிப் பக்கத்தில் கவி தாகூரின் வாக்கை வெளியிட்டுத் தனக்குத் தானே ஆறுதல் கூறிக்கொள்கின்றார் திங்கள் ஆசிரியர். இதோ அந்த வாக்கு:

"உனக்கு வேண்டியவர்கள் உன்னைக் கைவிடலாம். ஆனால் மனமே அஞ்சாதே.

உன் ஆசையாகிய கொடி பூமியில் விழுந்து புரண்டு சின்ன பின்னமாக ஒடிந்து கனி தர வகையற்றுக் கிடக்கும் பொழுதுகூட மனமே தளராதே!"

திங்கள் நின்று போனதற்கு இதுவன்றியும் வேறுசில காரணங்கள் இருந்தன. செறிவான செய்திகளைப் படிப்பதில் தமிழ் வாசகர்களுக்கு உள்ள ஆர்வக் குறைவு முதல் காரணமாகும்.

ஏற்கனவே, தமிழில் மஞ்சரி என்னும் தொகுப்பு இதழ், திங்களைப் போல் அதிகச் செய்திகளைத் திணிக்காமல் அளவோடு கொடுத்துக்கொண்டிருந்தது இரண்டாவது காரணம்.

கலைமகள் வாசகர்களை நம்பி அதே காரியாலயத்திலிருந்து வெளியிடப்பட்டது மஞ்சரி. கலைமகள் வாசகர்வட்டம் விஷயங்களை அறிந்து கொள்வதில் ஆர்வமுள்ள, அக்கறையுள்ள, படிக்கக்கூடிய நடுத்தரவர்க்கத்து மக்களைக் கொண்டதாகும். அதனால் கலைமகளோடு மஞ்சரியும் சேர்த்து வாசகர்கள் வாங்கிப் படித்தனர். இந்த வாசகர்களுக்கு மஞ்சரி மாதிரியில் வெளியிடப்பட்ட திங்கள் தேவைப்படவில்லை.

மஞ்சரியில் நகைச்சுவை, மறக்கமுடியாத சம்பவம் போன்ற பகுதிகள் இல்லாவிட்டாலும் மொழிபெயர்ப்புச் சிறுகதைகள், நாடகங்கள், நாவல்கள் வெளியிடப்பட்டன. அவை மஞ்சரிக்குப் பலமாக அமைந்து விட்டன. சிறுகதைகளும் தொடர்கதைகளும் இல்லாதது திங்களுக்குப் பலவீனமாக அமைந்துவிட்டது. திங்களின் அதிக விலையும் அதன் வீழ்ச்சிக்கு ஒரு காரணமாக அமைந்து விட்டது. மஞ்சரியின் விலை நாற்பது நயாபைசா. அதாவது ஆறரை அணா. ஆனால், திங்களின் விலையோ ஐம்பது நயாபைசா - அதாவது எட்டணா.

திங்களின் 120 பக்கங்களில் 40க்கும் மேற்பட்ட கட்டுரைகள் வாசகர்களைச் சலிப்படையச் செய்துவிட்டன. மஞ்சரி 96 பக்கங்களோடு 20 கட்டுரைகள் கொண்டதாக விளங்கியது.

தனித்தமிழில் திங்கள் என்னும் பெயரைக் கொண்டிருந்ததும் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் தமிழறிஞர்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்ததும் திங்கள் இதழின் வீழ்ச்சிக்குத் தலையாய காரணங்களாக அமைந்துவிட்டன.

சிரிக்க வைக்காமல், உணர்ச்சி அலைகளிலும் வலைகளிலும் சிக்க வைக்காமல் அதிகமாகச் சிந்திக்க வைத்த திங்களுக்குத் தமிழ் மக்களிடத்திலே ஆதரவு இல்லாமல் போய்விட்டது.

இருந்தாலும் திங்கள், தமிழ் இதழியல் வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பெற்றுவிட்டது என்பதை யாராலும் மறுக்க இயலாது. நல்ல தமிழ்ப் பெயரோடு தோன்றி, தமிழ் இலக்கியம்,

வரலாறு, பண்பாடு, விமரிசனம், மொழிபெயர்ப்புக் கட்டுரைகள், அறிவியல், கலை போன்றவற்றைத் தமிழ் வாசகர்களுக்கு அளித்த பத்தொன்பது திங்கள் இதழ்களை, இளங்கோவைப் போல் 'திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!' என அறிவுப் பொக்கிஷமாகப் போற்றிப் பாதுகாப்போம்.

## குறிப்புகள்

1. மா.பா. குருசாமி, இதழியல் கலை, ப. 16
2. மேலது, ப. 12
3. க. பட்டாபிராமன், தமிழ்ப் பத்திரிகைகள், ப. 92
4. மேலது, ப. 80
5. ரா.பி. சேதுப்பிள்ளை, திங்கள், 1956, ஜனவரி, பக். 7,8
6. திங்கள், பிப்ரவரி 1956
7. திங்கள், மார்ச்சு 1956
8. திங்கள், ஏப்ரல் 1956
9. வல்லிக்கண்ணன், தமிழில் சிறு பத்திரிகைகள், ப. iii

# எழுத்தாளன்

**கி. இராசா**

*"என்னைப் பொறுத்தவரை நான் எழுத்தை ஆள்பவன் அல்ல. எழுத்தடிமை என்பதுதான் உண்மையாகும். சிந்தித்து ஒன்றை எழுதிவிட்டால் அந்த சிந்தனைக்கு உபமானமாக என் வாழ்வு அமைந்துவிடும். எழுதிய ஒவ்வொரு வாக்கியமும் அது பிறக்கும்போது அதன்வழியில் நின்றிருக்காவிட்டாலும் என் எழுத்தில் அவை பிறந்தவுடன் அதற்கு அடிமைப்பட்டு அதன் வழியிலேயே நடைபோடத் தொடங்கிவிடுவேன்"*

*- 'என்னைப் பற்றி'. . .- அ.வெர.கி., எழுத்தாளன், 15971*

*"நல்ல திட்டங்கள் வைத்திருக்கும் ஒரு கட்சிக்குப் பணக்காரர்களின் தயவு கிட்டாவிட்டால் நாட்டுக்கு நல்லவழி காட்ட வழியில்லை. இந்த நிலைமாற ஒரு மாற்றம் தேவையல்லவா? சிந்திப்பவர்களுக்கு, தேர்தல் கமிஷனுக்கு, ஏன் எல்லா அரசியல் கட்சிகளுக்கும் பயன் தரும் ஒரு வழியை எழுத்தாளன் அறிமுகப்படுத்த விரும்புகின்றான்"*

இது இன்று நேற்று தமிழ் இதழில் வெளியான ஒரு செய்தியன்று. சற்றேறக்குறைய முப்பத்தியெட்டு ஆண்டுகட்கு முன்னர் 15.3.1962இல் எழுத்தாளன் இதழில் வெளியான தலையங்கத்தின் ஒரு பகுதியாகும். இலக்கியத்தோடு சமுதாய அக்கறையையும் அவ்வப் பொழுது எழுத்தாளன் வெளிப்படுத்தியது என்பதற்கு இஃதோர் சான்று.

இது திருச்சிராப்பள்ளி தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் அதிகார பூர்வமான திங்கள் இதழாக 1958 முதல் 1987 வரை முப்பதாண்டுகள் வெளிவந்தது. திரு. அ.வெ.ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் இவ்விதழின் ஆசிரியராகவும் வெளியீட்டாளராகவும் இருந்தார். நாலணா விலையில் 12 முதல் 16 பக்கங்களாக வெளிவந்த இவ்விதழின் ஆண்டுச்சந்தா ரூ3. 1971க்குப் பின்னர் இதன் ஆண்டுச்சந்தா ரூ5

ஆனது. இப்போதைய தினமணிகதிர் (Quart - octava) அளவில் இவ்விதழ் அச்சிடப்பட்டது.

எழுதுகோல் தெய்வம் - இந்த
எழுத்தும் தெய்வம்

என்ற பாரதியின் பாடலடிகள் எழுத்தாளனின் குறிக்கோள் வாசகமாகத் தலையங்கப் பகுதியில் இடம்பெறுகிறது. தலையங்கப் பக்கத்தில் எழுத்தாளனின் இலச்சினையாகத் திருச்சி மலைக்கோட்டை, அதன் குறுக்காகச் செல்லும் இறகுப் பேனா, அதைப் பிடித்து எழுதும் கை, மைக்கூடு, ஏட்டுச்சுவடி, திறந்த புத்தகம் ஆகியவை அடங்கிய ஓவியம் காணப்படுகிறது. இவற்றோடு சூரிய பகவான் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறி வருகின்ற காட்சியும், அதன் கீழே காளைகள் பூட்டிய ஏரினை உழவன் செலுத்தும் காட்சியும் இடம் பெற்றுள்ளன. இந்த இலச்சினை எழுத்தாளனின் இலக்கியக் கடப்பாட்டினையும், ஆன்மீகத் தேடலையும், சமுதாய உணர்வையும் சுட்டிக்காட்டுவதாக அமைந்துள்ளது. இந்த இலச்சினை சிற்சில மாற்றங்களுடன் ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு இதழுக்காகத் தனித்தனியே வரையப்பெற்று 'ப்ளாக்' எடுக்கப்பட்டுள்ளதை அறிகிறோம்.

முற்குறிப்பிட்ட குறிக்கோள் வாசகத்தைத் தவிர,

உலகமெனும் பெருவியப்பை உலகில் மாந்தர்
உயிர்வாழத் துடிக்கின்ற முனைப்பில் தோன்றும்
கலகமதைச் சிறுபிணக்கைக் காதல் என்னும்
கவினாகும் இன்பத்தைக் கூடி வாழும்
நிலைபேற்றை நிதம் ஆய்ந்து மற்றும்
நினைவயர்ந்து குமைகின்ற மானுடத்தின்
குலமுயரக் குணமுயரக் கொடிதான் ஏந்துங்
குறிக்கொண்ட எழுத்தாளர் ஓர் குலத்தார்

என்று எழுத்தாளர் ஒற்றுமையை வலியுறுத்தும் பாடலும் சில இதழ்களின் முகப்புப் பக்கத்தில் காணப்படுகிறது. குறிப்பாக ஆண்டு மலர்களில் இப்பாடல் தவறாது இடம்பெறுகிறது. இதனுடைய ஆண்டுக் கணக்கு 'கனவு' என்றும், இதழ்க் கணக்கு 'கற்பனை' என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

திங்கள்தோறும் வெளிவந்த எழுத்தாளன் இதழின் முதற்பக்கத்தில் பொதுவான 'ஒருபக்கக் கவிதை' ஒன்று இடம்பெறுகிறது.

அதற்கடுத்துத் தலையங்கப் பக்கம். அதனை அடுத்து வருபவை இலக்கியப் பக்கங்கள். இதில் இலக்கிய நிகழ்வுகள், படைப்பிலக்கியவாதிகள் பற்றிய செய்திகள், பிற இந்திய மொழி எழுத்தாளர்கள் அறிமுகம், அவர்களது எழுத்துக்களைப் பற்றிய மதிப்பீடு, கட்டுரைகள், சிறுகதைகள், தமிழிலக்கியத்தைப் பற்றிய ஆங்கிலக் கட்டுரை, புனிதத் தலங்களைப் பற்றிய ஆங்கிலக் கட்டுரை, பிற அயல்மொழி இலக்கியங்கள், இலக்கியவாதிகள் பற்றிய அறிமுகம், மதிப்பீடு, 'புத்தகப் பூங்கா' என்ற நூல் மதிப்புரை, 'எழுத்துலகம்' என்ற தலைப்பில் அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் பெருமன்றத்தின் செயற்பாடுகள் ஆகியவை உட்கூறுகளாக அமைகின்றன. தமிழும் ஆங்கிலமும் ஆகிய இருமொழிப் பத்திரிகையாக எழுத்தாளன் வெளியானது. எனவே இது 'Tamil & English Monthly' என்றும் 'A Bilingual Journal' என்றும் இதழினுள் குறிப்பிடப்படுகிறது.

சாகித்ய அகாதமியின் விருதளிப்பு பற்றி இன்றும் ஒருசாரார் கூறிவருகின்ற குற்றச்சாட்டுகளுக்கு அன்றே எழுத்தாளன் அடித்தளம் இட்டுள்ளது. 1962இல் தமிழறிஞர் மு.வ. அவர்களின் 'அகல்விளக்கு' நாவலுக்கு சாகித்ய அகாதமி பரிசு வழங்கப்பட்டது. இதனை வரவேற்கும் எழுத்தாளன்,

> சாகித்ய அகாடமி பல வருடங்களாகத் தமிழ் நூல்களுக்குப் பரிசு அளிக்கவில்லை என்ற பெருங்குறை ஒவ்வொரு தமிழ் எழுத்தாளருக்கும் இருந்து வருகிறது. சாகித்ய அகாடமியின் பேரில் தவறு ஏதும் இல்லை. நூலைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் தமிழ்ப் பிரதிநிதிகள் பரிசுக்குரிய நூலைச் சிபாரிசு செய்யவில்லை என்றும் கூறப்பட்டது (எழுத்தாளன், 15.3.62)

என்ற உண்மையை வெளிப்படுத்தியுள்ளது.

'இந்திய எழுத்தாளர் அறிமுகம்' என்ற பகுதியில் பிற இந்திய மொழி எழுத்தாளர்களாகிய அம்ருதா பிரீதம், ஹேம் பரூவா, நாமதாரி, சின்ஹா தின்கர், வி.கே. கோகக், சிவராமகரந்த், கங்காதர் காட்கில் போன்றவர்கள் பற்றிய வாழ்க்கைக் குறிப்புக்களும், அவர்களின் எழுத்துக்களின் வீச்சும் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

தமிழ் இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகளாக வெளியானவற்றுள், புத்திலக்கியம் (15.4.62), எழுத்துரிமையைப்

பாதுகாப்போம் (15.5.62) போன்ற கட்டுரைகளும், தமிழிலக்கிய வரலாற்றுத் தொடராக ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற Prose (15.8.62), Fiction (15.6.62), Drama (15.4.62), Post Independence Tamil Literature (15.3.62) போன்ற கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கனவாகும்.

அயல்நாட்டு எழுத்தாளர்களின் படைப்புக்களையும் அவற்றைப் பற்றிய விமர்சனங்களையும் வெளியிடுவதில் எழுத்தாளன் காட்டிய முனைப்பினை ஒவ்வொரு இதழிலும் காணலாம். 'சினிமாவும் எழுத்தாளரும் (சிங்கிஸ் அஸ்த்மதோவ்),' 'எது சினிமா? எது நாடகம்?' (வி. கோவவேவ் : 15.5.67), 'எழுத்தாளர்கள் பேரணி' (பீட்டர் சீடனக் : 15.2.67), 'அமெரிக்கக் கவிஞர் சாண்ட்பர்க்' (லில்லி லீனோ : 15.7.67), K. Paustrovskyயின் 'Sweet Briar' என்ற சிறுகதை (15.2.69), மாப்பசானின் 'God and Literature' (15.1.68) என்ற கட்டுரை, வேர்ட்ஸ்வொர்த்தின் 'பால பருவ தத்துவார்த்த விளக்கம்' என்ற கட்டுரை, கலீல் ஜிப்ரானின் 'Benediction' என்ற கவிதைத்துளிகள், Ivon Iranovவின் 'Continue' என்ற சிறுகதை (15.7.68), லியோ டால்ஸ்டாய் பற்றிய ஆங்கிலக் கட்டுரை (15.8.68), Elisher Kipian என்ற ஜியர்ஜிய எழுத்தாளரின் 'Hanes' என்ற சிறுகதை (15.8.68) ஆகியனவும் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியனவாகும்.

மொழிபெயர்ப்புத் துறையிலும் எழுத்தாளனின் பணி போற்றத்தக்கது. திருவாசகம் பாடல்கள் சிலவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்பு 15.7.68 இதழில் வெளியாகியுள்ளது. அயல்நாட்டு எழுத்தாளர்கள் பலரது கட்டுரைகளைத் தமிழில் மொழிபெயர்த்து எழுத்தாளன் தொடர்ந்து வெளியிட்டுள்ளது. இதன் ஆசிரியர் அ.வெ.ர.கி. அவர்கள் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் வல்லவர். சிறந்த கவிஞராகவும் திகழ்ந்த அவர், சௌந்தர்ய லஹரி, கனகதாரா, ஆதித்ய ஹ்ருதயம் போன்ற சமஸ்கிருதப் பக்திப் பனுவல்களின் சில பாடல்களை எழுத்தாளனில் மொழிபெயர்த்தது இவரது மொழிபெயர்ப்பு ஆற்றலுக்குச் சான்று பகரும். ஒரு பாடல் வருமாறு:

> சிவ : சக்தியா யுக்தோ யதிபவதி சக்த : ப்ரபவிதும்
> நசே தேவம் தேவோ நகலு குஸல : ஸ்பந்திது மபி
> அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹர விரிஞ்சாதிபி ரபி
> ப்ரணந்தும் ஸ்தோதும் வா சதமக்ருத புண்ய:ப்ரபவதி
> – ஸௌந்தர்ய லஹரீ

திங்களைச் சடையில் தரித்திடும் சிவனைத்
தேவிநீ அன்புடன் ஒன்றித்
தங்கிடலன்றி இவ்வுல கியக்கும்
தன்மையை இழப்பராம் அன்றோ
கங்கைவார் சடையான் அயன்முதல் மாலும்
கைதொழு தேத்தியே போற்றும்
பங்கையச் செல்வி புண்ணிய மிலார்நின்
பாதமே தொழுவதற் கெளிதோ

(மொழிபெயர்ப்பு 15.1.68)

இந்திய இலக்கியம் பற்றிய உணர்வை 1962லேயே தமிழர்களுக்கத் தந்த பெருமை எழுத்தாளனைச் சாரும். இது தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் அதிகார பூர்வமான ஏடாக வெளிவந்ததால் அச்சங்கத்தின் கருத்தரங்கங்கள், ஆண்டு விழாக்கள் பற்றிய செய்திகள் தொடர்ந்து வெளிவந்துள்ளன. இவற்றுள் மே 19,20 நாட்களில் சென்னை இராஜாஜி மண்டபத்தில் நடைபெற்ற தென்னிந்திய தமிழ் எழுத்தாளர் பெருமன்ற மாநாடு பற்றிய செய்தியும், இம்மாநாட்டில் இந்தியாவின் பல பகுதிகளிலும் இருந்து வந்த எழுத்தாளர்களும் மொழி அறிஞர்களும் தத்தம் மொழியில் தமிழின் அருமையும் பெருமையும் குறித்து உரையாற்றியுள்ளனர். மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் 'கன்னடத்தில் தமிழ்' என்பது குறித்தும், ச.ராதகிருஷ்ண சர்மா 'தெலுங்கில் தமிழ்' குறித்தும்; டாக்டர் எஸ்.கே. நாயர் 'மலையாளத்தில் தமிழ்' என்றும், த.ந. குமாரசாமி 'வங்க மொழியில் தமிழ்' என்பது பற்றியும், ஆக்கார் ஆனந்தாச்சாரி 'இந்தியில் தமிழ்' குறித்தும், ஹைதர் அலிகான் 'உருது மொழியில் தமிழ்' என்பது பற்றியும் ஆற்றிய உரைகளை எழுத்தாளன் (15.6.62) வெளியிட்டுள்ளது.

எழுத்தாளன் இதழ் இலக்கிய இதழாகத் தோற்றம் பெற்றாலும் அதன் வளர்ச்சியில் ஆன்மிகமும், பிற்காலத்தில் அரசியலும் கலந்தன. இதழாசிரியர், அ.வெ.ர.கி. அவர்கள் ஆன்மிக நாட்டம் உடையவராதலின் அட்டைப்படக் கவிதைகள் பெரும்பாலும் ஆன்மிகத்தின் மகத்துவத்தைப் பறைசாற்றும் கவிதைகளாகவே அமைந்துள்ளன. இதனுள் இடம்பெற்ற கட்டுரைகளும் ஆன்மிகச் செய்திகளைத் தாங்கி வெளிவந்துள்ளன. துணுக்குச் செய்திகளையும் ஆன்மிகம் ஆட்கொண்டுள்ளது. சான்றாக 'சிந்தனைக்கு' என்ற தலைப்பில் அமைந்த துணுக்குச் செய்தியைக் காணலாம்:

> மரணம் என்ற இருள் என்று நம்மை வந்து கவியும் என்பது நமக்குத் தெரியாது. மரண இருளைப் போக்குவதற்கு இறைவன் அறிவு ஒளியை ஏற்றும்படி எச்சரித்திருக்கிறார். அன்பென்னும் எண்ணெய் ஊற்றி அடக்கம் என்னும் விளக்கில் தியாகம் என்னும் திரியைத் திருகித் தெளிவாகிய தீப்பெட்டி கொண்டு அறிவாகிய ஒளி உண்டாக்கி வாழ நாம் முயல வேண்டாமா? அது மரண பயத்தைப் போக்கும்; வாழ்வில் இன்பம் தேக்கும் (எழுத்தாளன் : 15.7.69)

பொங்கல் திருநாளின் போது வாழ்த்துக்கள் அனுப்புவதைப் பற்றி 15.1.69இல் எழுதப்பெற்ற எழுத்தாளனின் பின்வரும் தலையங்கப்பகுதி இக்கருத்தை மேலும் உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

> பொங்கல் வாழ்த்து அனுப்புவதாலோ, பொங்கல் விழாக்களாகப் பேச்சு விழாக்கள் அமைப்பதாலோ இன்பம் பொங்காது. அன்பு தழைக்காது. அருள் பெருகாது. சமத்துவம் வளராது. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய பஞ்சேந்திரியங்களில் அமர்ந்துள்ள மரணதேவன், விஷத்தைப் பரப்புவதைத் தடுக்க முயலவேண்டும். பஞ்சேந்திரியங்களை அடக்கி ஆள்வதின் மூலம் நாட்டுக்கும் மனித சமுதாயத்திற்கும் நல்லது செய்தவர்கள் ஆவோம்

மொழிபெயர்ப்பு உணர்வை வளர்த்ததில் எழுத்தாளனின் பணி போற்றக்கூடியதாகும். திருவாசகப் பாடல்கள் சிலவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்பு 15.7.68 இதழில் வெளியாகியுள்ளது. Darkness and Darkness என்ற ஆங்கிலக் கவிதையும் அதற்கு அருகிலேயே அதன் மொழிபெயர்ப்பான 'இருள் முயக்கு' என்ற கவிதையும் திருலோக சீதாராம் 1960ஆம் ஆண்டு மலரில் எழுதியுள்ளார். அயல்நாட்டு எழுத்தாளர்கள் பலரது கட்டுரைகளைத் தமிழில் மொழிபெயர்த்து எழுத்தாளன் தொடர்ந்து வெளியிட்டுள்ளது. தேவிமகாத்மியம் எனும் பனுவலை, சக்திக் கவசம் என்ற பெயரில் மொழிபெயர்த்து அவற்றை 15.1.68 பொங்கல் மலரில் அதன் ஆசிரியர் தந்துள்ளார். அவற்றுள் ஒரு பாடல் வருமாறு:

அத்யாத்ம தத்வம் "ஐம்"யெனவே ஆனாய்
ஆதாரம் ஆறதனில் விளங்கும் ஜோதி
வித்யா தத்வம் "ஹ்ரீம்" யெனவே விளங்கும் சக்தி
மேவுகின்ற முக்கிரந்தி உலவும் தாயே!
சத்தெனவே சிவதத்வம் "க்லீம்"மும் ஆகி
சகஸ்ரார்க்கம் கொலுவமரும் தாயே போற்றி
வித்தெனவே சர்வதத்வம் "ஐம் ஹ்ரீம் க்லீம்" ஆய்
விளங்கும் ஜெகன்மாதா நின்பதம் போற்றி

மொழியில் ஆங்கிலக் கலப்பைத் தவிர்க்க வேண்டும் என்ற உணர்வு எழுத்தாளனில் மேலோங்கி இருந்தது எனலாம். இதற்குச் சான்றாக 15.2.69 இதழில் வெளியான ஒரு சிறுகதைப் பகுதி அமைந்துள்ளது.

> மேனாட்டுப் பாணி தமிழர்களுக்கு ஒத்து வராது. அது விபரீதம் விளைவிக்கும். நாம் தமிழர் - நினைவில் வைத்துக் கொள். பேசுவதில் கூட ஏன் சுதம்பம் செய்கிறாய்? ஒன்று தமிழில் பேசு அல்லது ஆங்கிலமே பேசு

ஆனால் வடமொழியைக் கலந்து எழுதும் போக்கினைப் பற்றி இவ்விதழ் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. வடமொழி கலந்து எழுதுவதை இவ்விதழ் ஏற்றுக் கொண்டுள்ளது என்பதற்குப் பின் வரும் கட்டுரைப் பகுதி சான்றாகும்.

> **ப்ரத்யக்ஷதர்சனம்**
>
> ஸ்தோத்தரமானது கடவுளது குறைவற்ற காருண்யத்தையும் நித்திய லக்ஷணங்களையும் நமது பக்தி சிரத்தைகளையும் வெளியிடுவதாகும். ஸ்தோத்திரம் செய்வதால் இறைவனுக்குப் பிரயோஜனமில்லை... நாம் பிரபஞ்சத்தில் பிறந்ததிலிருந்து சாகுமளவு சம்ரக்ஷணை செய்யும் ஆண்டவனிடம் நன்றி காட்டவேண்டியது மிக முக்கிய கடமையில்லையா? என்று பக்திக்குரிய பலவித உணர்ச்சிகள் எழுச்சியுற்று திருப்தியடையும்படியாக தியானம், வந்தனம், ஸ்தோத்திரம், பிரார்த்தனை முதலானவைகள் ஈஸ்வர உபாசனையில் நிறைந்திருத்தல் வேண்டும். இவ்வுபாசனையின் நோக்கம் நமதுள்ளத்தில்

ஆழ்ந்த கடவுள்பக்தியும் நிஷ்கபடமான நன்றியறிவும் பூரணமாய் வியாபித்து ஈச்வர ஸாந்தித்யத்தை உணர வேண்டுமென்னும் ஆசை நிறைவேறி பிரபந்த நிவாரணேச்சை பரிபூர்த்தியாயின் முடிவு பெற்றதாகும்
(எழுத்தாளன், 15.2.68)

எழுத்தாளன் இதழில் இது போன்ற கட்டுரைகள் - தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் உரிமைபூண்ட இதழில் இப்படிப்பட்ட வடசொற்கள் அதிகம் கலந்து மிடையப்பெற்ற கட்டுரைகளை நாம் எதிர்பார்க்க முடியாது. ஆனாலும் ஆசிரியர் அ.வெ.ர.கி. வடமொழி வல்லவர் என்பதாலும் வடமொழிப் பக்திப் பனுவல்களில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தவர் என்பதாலும் காலப்போக்கில் இப்படிப்பட்ட வடமொழிக் கலப்புமிக்க ஆன்மிகக் கட்டுரைகள் எழுத்தாளன் இதழில் தொடர்ந்து வெளிவரலாயின.

தலையங்கங்கள் பத்திரிகைகளின் கைநாடியாக விளங்குகின்றன. ஒரு பத்திரிகையின் நோக்கையும் போக்கையும் அப்பத்திரிகையில் வெளியாகும் தலையங்கம் காட்டிவிடுகிறது. 1958இல் எழுத்தாளன் தோற்றம் பெற்றபோது மொழி - இலக்கியம் குறித்த தலையங்கங்களே பெரிதும் இடம்பெற்று வந்தன. ஆனால் 1962 பொதுத்தேர்தலுக்குப் பின் எழுத்தாளன் அரசியல் விமர்சனங்களைச் செய்யத் தலைப்பட்டுவிட்டது. 1967இல் நடந்த பொதுத் தேர்தலின்போது தமிழக அரசியலில் எழுத்தாளன் காங்கிரஸ் கட்சியோடு தன்னை இனம் காட்டிக் கொண்டதை உணரமுடிகிறது. இதற்கு இரு ஆண்டுகட்கு முன்னரேயே 1965இல் தமிழகத்தில் பள்ளி - கல்லூரி மாணவர்கள் நடத்திய இந்தி எதிர்ப்புப் போரின் போது எழுத்தாளன் எழுதிய தலையங்கத்தின் வாயிலாக எழுத்தாளனின் எதிர்காலச் சார்பு எதுவாக இருக்கமுடியும் என்பதை உணரமுடிகிறது. அதற்கும் மூன்றாண்டுகட்கு முன்னர் 1962இல் 'பயிற்சி மொழி' என்ற தலையங்கத்தில் மேற்சொன்ன இருநிலைகளுக்கும் மாறுபட்டதொரு நிலை காணப்படுகிறது. எனவே 'மொழிப் பிரச்சனை'யோடு பிற்காலத்தில் அரசியலைக் கலந்து பார்த்த எழுத்தாளனின் நிலைப்பாட்டில் மூன்று விதப் போக்குகளைக் காணலாம்.

1962 : தமிழ், பயிற்சிமொழியாக்கப்பட வேண்டும் என்று சொல்லுபவர்கள் ஆங்கில மொழியையோ, கல்லூரிகளில்

> ஆங்கிலம் கற்பிக்கப்படுவதையோ எதிர்க்கவில்லை. கல்லூரியில் படிப்பவர்கள் ஆங்கிலமும் ஒரு பாடமாகப் படிக்கத்தான் போகிறார்கள். அதனால் தேசிய ஒருமைப்பாட்டிற்கோ ஆங்கில மொழி அறிவு பெறுவதற்கோ எவ்விதத் தடையுமில்லை (15.8.62).

'தமிழ், பயிற்சிமொழியாக்கப்பட வேண்டும்' என்று கூறும் அதே நேரத்தில் 'ஆங்கிலத்தின் செல்வாக்குக் குறைக்கப்பட வேண்டும்' என்ற அறிவுறுத்தல் இந்தத் தலையங்கத்தில் வெளிப்படவில்லை என்பதை உணரலாம்.

1965 : தமிழகமெங்கும் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போரைக் கண்டிக்கும் போக்கில் நீண்ட தலையங்கம் எழுதப்பட்டுள்ளது.

1967 : தமிழகத்தில் திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி மலரும் சூழல் வேகமாக வளர்ந்து வந்த நிலையில் எழுத்தாளன் தமிழக அரசியலில் தன்னை அடையாளப் படுத்திக் காட்டிய போக்கை உணரமுடிகிறது. இந்த அரசியல் சார்புத் தன்மை எழுத்தாளன் தொடங்கப்பட்ட பத்தாவது ஆண்டின் முனைப்போடு வெளிப்பட்டது என்பது குறிப்பிட்டுச் சொல்லவேண்டிய ஒரு போக்காகும். 15.1.67இல் எழுதிய 'தேர்தலும் நமது கடமையும்' என்ற தலையங்கம் திராவிட முன்னேற்றக் கழகத்தை ஏன் புறக்கணிக்க வேண்டும் என்பதற்கான காரணங்களை எடுத்துவைப்பதாக அமைந்துள்ளது. தொடர்ந்து அடுத்த இதழில் (15.2.67) 'காங்கிரசுக்கு வாக்களியுங்கள்' என்று வெளிப்படையாகவே எழுத்தாளன் தன்னை அடையாளப்படுத்திக் கொண்ட போக்கைப் பார்க்கிறோம். அந்த வேண்டுகோளின் முத்தாய்ப்பான பகுதி வருமாறு:

> வண்டியின் சொந்தக்காரன் காங்கிரஸ் கட்சி. இன்று நடைபெறும் பொதுத்தேர்தலில் எப்படியும் காங்கிரஸ் வெற்றிவாகை சூடி ஆட்சி பீடத்தில் அமரப் போகிறது என்பதில் சந்தேகமில்லை என்பது சிந்தனையாளனுக்குத் தெரியும். . . . நாட்டு நிர்வாகத்தைத் திறம்பட நடத்தவும் மக்கள் நல்வாழ்வு வாழவும் வழிவகுக்க வேண்டும். நாட்டில் பல கட்சிகள் இன்று முளைத்துவிட்டன. உருப்படியான திட்டங்கள் ஏதும் அக்கட்சிகளிடம் இருப்பதாகத்

> தெரியவில்லை. . . . வெண்ணெய் உருண்டுவரும்போது தாளியை உடைத்துவிடக் கூடாது என்பதை நினைவிற் கொண்டு ஜனநாயக சமதர்மம் வளர நம் மக்கள் காங்கிரசுக்கே வாக்களிக்க வேண்டும் என்று எழுத்தாளன் வேண்டிக் கொள்கிறான்.

இதனைத் தொடர்ந்து 15.4.67இல் 'பத்துக் கட்டளைகள்' என்ற தலையங்கம் திராவிட முன்னேற்றக் கழகத்தின் வெற்றியின் பின்னணியில் எழுதப்பட்டுள்ளது. இத்தலையங்கத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றிய எழுத்தாளனின் கணிப்பு புலப்படுகிறது.

> தமிழகத்தில் தமிழில் பேசுவதிலே எழுதுவதிலே வல்லவர்கள் என்று பெயர் பெற்றவர்கள் இன்று ஆட்சியில் இருக்கிறார்கள். அன்றுமுதல் இன்றுவரை அறிவாளிகள், சிந்தனையாளர்கள் இடையே இவர்கள் தமிழ் செல்லவில்லை. அதன் காரணம் ஆபாசமாகப் பேசுவதிலும் எழுதுவதிலும் இவர்கள் வல்லவர்கள் என்று நினைக்கும்படி செய்துவிட்டார்கள். அந்த நிலையை மாற்றி பேச்சிலும் எழுத்திலும் பிறர் மனம் புண்படாதவாறு செய்ய இவர்கள் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் உயர்ந்த பதவியில் வீற்றிருந்தாலும் பதவிக்குரிய கௌரவம் இவர்களைத் தேடி வராது

இத்தலையங்கத்தின் வாயிலாக 67ஆம் ஆண்டின் தொடக்கத்தில் எழுத்தாளன் எடுத்த அரசியல் நிலைபாட்டின் வளர்ச்சியை அறிகிறோம். இந்த அரசியல் நிலைபாட்டினை உறுதி செய்வதாக அமைகிறது. நான்காண்டுகளுக்குப்பின் - எழுத்தாளனில் (15.1.71) வெளிவந்த 'செய்யவேண்டியதைத் செய்' என்ற தலையங்கம். அப்போது இந்தியாவில் நாடாளுமன்றம் கலைக்கப்பட்டுத் தேர்தல் நடந்தபோது, தமிழக அரசு சட்டசபையையும் கலைத்துவிட்டு இரண்டிற்கும் சேர்த்துத் தேர்தலை நடத்தியது. தமிழக அரசு இவ்வாறு செய்தது தவறு என்று கண்டிக்கும் நோக்கில் அரசுப் பொறுப்பை ஏற்றிருந்த திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தண்டிக்க வேண்டும் என்ற போக்கில் தலையங்கம் அமைந்திருந்தது. தலையங்கத்தின் இறுதிப் பகுதி வருமாறு:

தேர்தலில் லஞ்சம் கொடுத்து வாக்குகள் பெறுவது சட்டப்படி குற்றம் என்று சொல்லப்படுகிறது. ஊர் அறிய உலகறிய தேர்தல் ஒன்றையே குறியாக வைத்து சட்டசபை தற்கொலை செய்துகொள்வதென முடிவு செய்த பின்னர் அரசாங்க ஊழியர்களுக்குச் சம்பள உயர்வு கொடுத்திருப்பதாக அறிவித்திருப்பது பட்டவர்த்தனமான தேர்தல் லஞ்சம் என்பதைத் தேர்தல் கமிஷன் உணர்ந்து தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்.

தனிநாடும் தனிக்கொடியும் தமிழ் படிக்காதவர்களைக் கடலில் தூக்கி எறிவோம் என்று பேசும் இவர்கள் சொல்லுகிறார்கள் பாரத மையரசின் பாங்கைத் தாங்கப் போவதாக.

தமிழ்மகனே! சிந்திக்கத் தெரிந்த செந்தமிழ்ச் சிங்கமே, மாஜி அமைச்சர்கள் சிந்தித்தாலும் சிந்திக்காவிட்டாலும் நீயாகிலும் சிந்தித்துப் பார். சின்னஞ்சிறிய பள்ளி மாணாக்கர்மீது போலீசை ஏவிவிட்டு மண்டையை உடைக்கும் இக்கருணாமூர்த்திகள் தொரட்டால் மாணவர் மண்டையைப் பிளக்கும் சிரேணிப் படையின் சேனாபதிவசம் நாட்டை இனியும் ஒப்புவிக்கலாமா? நாடு உருப்படுமா? தமிழ் வாழுமா? தமிழன் வாழ்வானா? ஆஸ்திகம் தமிழகத்தில் இருக்குமா? ஆலயம் நமது பாரம்பர்யத்தை நின்று காட்டுமா?

நீ எதைச் செய்தால் இந்த தீமை விடுபடுமோ அதனைச் செய்து தமிழ்த்தாயின் தலைநிமிர வைப்பாய். அதுவே நீ தமிழ் மொழிக்கு, தமிழர் இனத்துக்கு, தாய் நாட்டுக்குச் செய்யும் திருத்தொண்டு என்பதைச் சுட்டிக்காட்டும் தமிழ் எழுத்தாளன்

தொடர்ந்து, நடந்த தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம், 1967ஆம் ஆண்டுத் தேர்தலைக்காட்டிலும் அதிக இடங்களைப் பெற்றது. இதன் பின்னணியில் 'சோர்வும் வீழ்ச்சியும் தொண்டருக்கில்லை' என்ற தலையங்கம் எழுத்தாளனில் இடம்பெற்றது. தேர்தலில் ஓட்டுப் பதிவின்போது 'தில்லுமுல்லுகள்'

நடந்தன என்று எழுத்தாளன் தலையங்கம் தி.மு.க. அரசைக் குற்றம் சாட்டியது.

"எந்தத் தேர்தலிலும் இல்லாதபடி மக்களின் எழுச்சியும் விழிப்புணர்வும் ஒட்டுப் போடவேண்டும் என்ற விருப்பமும் வேகமும் அதிகாலையில் அவரவர்களாகவே வந்து அணிவகுத்து நின்ற அழகும் சிறப்புடன் இருந்தன. என்றாலும் இந்திர ஜாலத்தால், நிதியின் சூதால், மையின் மகத்துவத்தால் பெரும்பான்மையைச் சிறுபான்மை சூதால் வென்றதோ! எப்படித் தோற்றது என்பதே மக்களின் மனக் குமுறலாகிவிட்டது.

தேர்தலின் முடிவு மக்களுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. வேதனையைத் தந்தது. உள்ளம் வெம்பியவர் ஆயிரமாயிரம் பேர்; கண்ணீர் வடித்தவர் பல்லாயிரம் பேர்; என்ன சூதோ என்று திகைத்தவர் லட்சோப லட்சம். தாங்கள் போட்ட சீட்டு மந்திரச் சீட்டாக மாறியதோ மாயமாய் மறைந்ததோ! இது என்ன மாயம் என்று வாய்விட்டுச் சொல்லாதவர் இல்லை" (எழுத்தாளன், 15.3.71).

எழுத்தாளனின் இப்போக்கு மாதந்தோறும் எழுதப்பட்ட தலையங்கங்களிலும் தொடர்ந்து வந்துள்ளது. 'வேலியே பயிரை மேய்கிறது' (15.6.71), 'காவிரி கொண்டானா? கள்ளுக்குடி கொண்டானா?' (15.7.71) என்ற தலைப்பிட்டு எழுதப்பட்ட தலையங்கங்கள் இதற்கான எடுத்துக்காட்டுக்களாகும். எழுத்தின் வளர்ச்சிக்கும் எழுத்தாளர் நலனுக்கும் தோற்றுவிக்கப்பட்ட பத்திரிகை, தன்னுடைய பத்தாண்டுக் கால வளர்ச்சியில் பையப் பைய அரசியலில் ஒருசார்நிலையை ஏற்ற போக்கினை இந்த வரலாறு வெளிப்பட காட்டிநிற்கிறது.

எழுத்தாளனின் வாழ்க்கையில் சிறப்பு மலர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தனவாகும். ஆண்டுதோறும் ஜனவரித் திங்கள் இதழ் பொங்கல் மலராகவும், அக்டோபர்த் திங்கள் இதழ் எழுத்தாளர் சங்க ஆண்டுவிழாச் சிறப்பு மலராகவும் வெளிவந்துள்ளன. இவ்விதழ்கள் வழக்கமான இதழ்களைக் காட்டிலும் அதிகப் பக்கங்களுடனும் (சுமார் 120 முதல் 150 பக்கங்கள்) கலைநயத்துடனும் வெளிவந்துள்ளன. இவ்விதழ்கள் ஒவ்வொன்றிலும் எழுபதுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் இடம்பெற்றதை அக்காலத்தில் ஓர் இலக்கியச் சாதனை என்றே கருதலாம். மேலும் கவியரங்கம் என்ற பகுதி, கவிதைகளின் நாற்றுப்பண்ணையாக அமைந்த சிறப்பினைக் காண்கின்றோம். இக்

கவிதைப் பகுதிகளில் ஐம்பதிற்கும் மேற்பட்ட புகழ் பெற்ற கவிஞர்களின் கவிதைகளோடு, புதிய கவிஞர்களும் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளனர். 1960இல் வெளியிடப்பட்ட திருச்சித் தமிழ் எழுத்தாளர் சங்க ஐந்தாவது ஆண்டு மலரில் (15.10.60) இடம்பெற்ற கவியரங்கம் எனும் பகுதி பின்வரும் முன்னுரையுடன் தொடங்குகிறது:

**கவியரங்கம்**

> பாரதிக்குப் பின்னர் கவிஞர்களே தமிழ்நாட்டில் பிறக்கவில்லையென்று விறகுத் தராசில் தங்கத்தை எடைபோட்டுவிட்டு எடையில்லையென்று பவுன் காசுகளைத் தெருவில் வீசும் விமரிசகர்களின் அறியாமைமீது கருணை வைத்துக் கவியரங்கம் கூட்டுகிறோம். இக்கவிஞர்கள் எழுதிய கவிதை நூல்கள் புதுப்புனல் வெளியீடுகளாக மலர்ந்து தமிழ்ப் பெருமக்களின் ஆதரவைப் பெற்று அமோகமாக விற்பனையாகி வருகின்றன.

1960 முதல் 1987 வரை வெளிவந்த 28 ஆண்டுகளில் எழுத்தாளன் இதழ் 166 கவிஞர்களை அறிமுகம் செய்துள்ளது. இது தமிழ்க்கவிதை வளர்ச்சிக்கு எழுத்தாளன் ஆற்றிய சிறப்புமிக்க பணியாகும். இத்தகு சிறப்புமலர்களில் வெளியாகும் கட்டுரைகள் பல்துறை நோக்குடையனவாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். சிறந்த பழைய கட்டுரைகளை மீண்டும் பதிப்பித்தும், புதிய கட்டுரைகளை வெளியிட்டும் இவ்விதழ் இலக்கியப் பணி ஆற்றியுள்ளது. இவற்றுள் தமிழ் வசன நடை (இராஜாஜி), உழுதொழில் (ந.மு.வே. நாட்டார்), நாவல்களின் ஆரம்பம் (எஸ்.ஜி. இராமானுஜ நாயுடு), சதுரங்கத்தின் வரலாறு, தமிழ் தட்டச்சின் தந்தை, உலகம் உவப்ப ஒலிபரப்புகையில், பத்திரிகைகளும் மொழிநடையும், தமிழிலக்கியத்தில் திறனாய்வு, நமது நாணயமும் நாணயங்களும், இரவிக்குட்டிப் பிள்ளை போர் (வையாபுரிப் பிள்ளை) ஆகிய கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவையாகும் (எழுத்தாளன் - 15.10.60).

இச்சிறப்பு மலர்கள் தம்முள் பல உட்பிரிவுகளைக் கொண்டுள்ளன. கவிமணி ஆரம் (கவிதைப்பகுதி), சொந்தக் கதை (திறனாய்வுப் பகுதி), எழுத்தும் எழுத்தாளனும் (கட்டுரைப் பகுதி), சிறுகதைத் தோப்பு, புலவர் உலகம், மாதர் இலக்கிய உலகம் (மகளிர்

எழுதிய கட்டுரைகள்), குழந்தை இலக்கிய உலகம், நாடகப் பூங்கா, போன்ற பல உட்பிரிவுகள் இம்மலர்களில் உண்டு.

1961 அக்டோபரில் 96 கட்டுரைகளைத் தாங்கி வெளியான சிறப்புமலர் அ.வெரா.கி. அவர்களின் அயராத உழைப்புக்கு அழியாத சான்றாகத் திகழ்கிறது.

இஃது இருமொழி இதழாதலால் சிறந்த ஆங்கிலக் கட்டுரைகள் பலவும் இச்சிறப்பிதழ்களில் வெளியாயின. Post Independence Tamil Literature, Poet of Poets (Bharathi), French influence in Tamil Literature ஆகியன இவற்றுள் சிலவாகும்.

1962ஆம் ஆண்டு பொங்கல் மலர் பெண்களாலேயே உருவாக்கப்பட்டுள்ளது. அ.வெரகி.அவர்கள் பெண்களைப் போற்றிய தன்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இவ்விதழ் திகழ்கிறது.

பொங்கலோ பொங்கல்

> .... உடன்பிறந்த சகோதரி செல்வச் செழிப்பில் வாழ்ந்தாலும் பிறப்பின் தொடர்பை, பாசத்தை, பண்பை, பரிவை, சுற்றத்தை, அன்பை உறுதிப்படுத்த, சகோதரியைக் கௌரவிக்க, பொங்கல் சீர் கொடுத்து சகோதரர்கள் பூரிப்படையும் பாங்கும், சகோதரன் குடும்பம் ஆல் போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி, எந்நாளும் இன்பம் தவழ, இல்லில் பொங்குக பால், "பொங்கலோ! பொங்கல்!" என்று சகோதரி இறைவனை வழுத்தி வணங்கும் பாசம் நிறைந்த நிறைநாள் பொங்கல் திருநாள். . . .

இவ்விதழில் ஔவையாரின் கொன்றைவேந்தன், ஆண்டாளின் 'வாரணமாயிரம்' பாடல்களும், ஆடை அலங்காரம் (ராதிகா), பேச்சுக்கலை (வசுமதி இராமசாமி), அன்பு எங்கே (லலிதா பாரதி), ஆண்மை வேண்டும் (ஜி.ஆர். ராஜலட்சுமி), இரவல் நகை (ராஜம் கிருஷ்ணசாமி) போன்ற எழுத்தோவியங்களும், புறநானூற்றில் சிறப்பிக்கப்பெறும் வீரத்தாய்மார் பற்றிய துணுக்குகளும், பெண்மையைப் போற்றிய பாரதியாரின் வாக்கும் உள்ளடக்கங்களாக அமைந்துள்ளன.

எழுத்துக்களின் வாழ்க்கையில் மட்டுமன்றி எழுத்தாளர்களின் வாழ்க்கையிலும் எழுத்தாளன் கொண்ட அக்கறை 15.7.62 இதழில் வெளியாகியுள்ள பின்வரும் அறிவிப்பின் வாயிலாகப் புலனாகின்றது:

இலக்கியத்தூதர் எழுத்தாளர்களே!

* நல்லதோர் சமுதாயத்தை வளர்ப்பதற்கும்

* எழுத்தாளர்களுடைய உழைப்பைப் பாதுகாப்பதற்கும்

* நல்ல தமிழ் இலக்கியம் வளர்வதற்கும்

எழுத்துரிமைப் பாதுகாப்பு நிதி
வளர்ந்து வருகிறது.
உங்களால் முடிந்த அளவுக்கு உதவிபுரிய வேண்டுகிறோம்.

நிதி அனுப்பவேண்டிய முகவரி:
தலைவர், திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கம்,
24, தேரடிக்காரத் தெரு, திருச்சி-2.

1958 முதல் 1987 வரை சுமார் 30 ஆண்டுகளாக வெளியான எழுத்தாளன் இதழ் 87 டிசம்பர்த் திங்களோடு நின்றுபோனது. தொடக்கக் காலத்தில் இலக்கிய வளர்ச்சி, எழுத்து ஆகியவற்றையே குறிக்கோளாகக் கொண்டு வந்தாலும் 65க்குப் பிறகு அரசியலின் சுவையை ருசிபார்க்கத் தலைப்பட்டது. 75களில் அரசியலின் உச்ச நிலையை எட்டியது. அரசியல் சார்புத்தன்மை மீதூர வெளிவந்த எழுத்தாளன், வளர்ச்சியில் இயல்பான தளர்ச்சி ஏற்பட்டது. வெகுஜன இதழ்களின் வரவும் வளர்ச்சியும் எழுத்தாளனின் வாழ்வையும் வளர்ச்சியையும் பாதித்தன. இதன் ஆசிரியராகிய அ.வெ.ர.கி. ரெட்டியார் அவர்களும் இதழ்ப்பணியோடு, எழுத்தாளர் சங்கப் பணி, ஆன்மிகப் பணி, நூல்வெளியீட்டுப் பணி ஆகியவற்றிலும் ஈடுபட்டிருந்தார். இதன் காரணமாகவும், பிற்காலத்தில் எழுத்தாளனின் உருவாக்கத்திலும் சிரமங்கள் இருந்திருக்கக்கூடும். இத்தகு பல்வேறு சூழ்நிலைகளில் சிறந்த நோக்கத்தோடு தோற்றம் பெற்ற எழுத்தாளன் இதழ், தன்னுடைய தொடக்கக் காலத்தில் குறித்த பொருளை முடிய நாட்டும் முயற்சியில் முழுமையாக ஈடுபட்டாலும் பிற்காலத்தில் திசைமாறிச் சென்றதால் 30ஆவது கனவுடன் நின்றுவிடல் ஆயிற்று. தமிழ் இதழியல் வரலாற்றில், புதிய இதழியல் கூறுகளை அறிமுகம் செய்ததிலும், இதழைக் கலை நுணுக்கத்தோடு வெளியிட்டதிலும் எழுத்தாளனுக்குச் சீரிய பங்கு உண்டு.

# எழுத்து

**தி.சு. நடராசன்**

இலக்கிய இதழ் என்பது, நோக்கம், செயற்பாடு, உத்தி அல்லது கூறுகள் என்ற அடிப்படையில் பார்க்கிறபோது, செய்தியிதழ், பொழுதுபோக்கு இதழ் என்பவற்றிலிருந்து வேறுபட்டுத் தனித்துறை அல்லது சிறப்பியல் இதழ் என்ற வகைக்குள் அடங்குகிறது. அன்றாடச் செய்திகளை அல்லது செய்திகளின் தொகுப்புக்களைத் தருகிற செய்தியிதழ் எனும் தகவல் ஊடகத்தோடு இலக்கிய இதழுக்கு மோதல், முரண்பாடு இல்லை. ஆனால், பொழுதுபோக்கு இதழ்களோடு இலக்கிய இதழுக்கு முரண்பாடுகளும் மோதல்களும் உண்டு. பெருந்திரள் மக்களின் சாவகாசமான அல்லது ஓய்வு நேரங்களை எடுத்துக்கொள்ளுவதும், அதற்கேற்ற முறையில், அவர்களிடையே தீவிரத்தனம் இல்லாத அல்லது யோசிக்க முடியாத பொத்தாம்பொதுவான ரசனைகளை உருவாக்குவதும் அல்லது ஊக்குவிப்பதும் ஆகிய செயற்பாடுகளையும் அதற்கேற்ற உத்திகளையும் கொண்ட பொழுதுபோக்கு இதழ்கள், செய்தியிதழ்களின் சில அம்சங்களையும், விளம்பரக் காட்சித் துண்டங்களின் சில அம்சங்களையும் மட்டுமல்லாது, கவிதை, சிறுகதை, நாவல் (தொடர்கதை) என்ற இலக்கிய வகைகளின் வடிவங்களையும் எடுத்துக்கொள்ளுகின்றன. மலினமான ரசனை, மகிழ்ச்சிப்படுத்துதல், வணிகமாக்குதல் என்பனவற்றின் தளத்துக்குள், இலக்கிய வடிவத்தையும் உள்ளடக்குகின்றபோது, இலக்கியம் என்பதன் அடிப்படையும் அளவுகோலும் ரகளைக்கு (rupture) உள்ளாகின்றன. அதனோடு வேறுபட்டும் முரண்பட்டும் தோன்றுவதுதான் இலக்கிய இதழ் அல்லது இலக்கியச் சிற்றிதழ்.

தரம், தளம், நோக்கம், போக்கு என்ற எல்லைகளுக்குட்பட்ட அளவுகோல்களையும் கருதுகோள்களையும் கொண்டு, இலக்கியத்தைத் தீர்மானிக்கிறதன் அடிப்படையில், இலக்கிய இதழ்கள் செயல்படுகின்றன. மலிவு, மரபு, நிறுவனத்தன்மை வணிகத்துவம் என்பவற்றை மறுத்து, அதே சமயம், இன்றைத்துவட அல்லது சமகாலத்துவம் (Contemporaneity) என்பதனையும், மற்று-

அதன் சூழமைவாகிய நவீனத்துவம் (Modernism) என்பதையும் மையமாகக் கொண்டிருக்கிற இலக்கிய இதழ்கள், இந்த வகையான போக்குகள் காரணமாகவும், தமிழ் வாசகப் பரப்பின் சில பிரத்தியேகமான சூழல்கள் காரணமாகவும், இலக்கிய இதழ்கள், பெருந்திரளான மக்களின் கவனத்தைப் பெறுவதில்லை; மேலும், இதனால், குழுக்கள் என்ற நிலையில் இயங்கும் இவற்றைத் தொடர்ந்து நடத்துவதும் முடிவதில்லை. ஆயினும், ஒரு தீவிரத்தனமும் பிடிவாதமும் சில செயல்கள் மீதான பிடிமானமும் சில கருத்தியல்கள் மீதான பார்வையும் கொண்ட இலக்கிய இதழ்கள், இன்றைத் தமிழ் இலக்கியச் சூழலில், அதன் தளத்தில் அழுத்தமாகத் தடம் பதித்துள்ளன; பெரும் பங்களிப்புச் செய்துள்ளன.

இலக்கிய இதழ்களில், குறிப்பிட்டவகையான இலக்கிய இயக்கத்திற்கும், ஏற்புடைய ஒரு படைப்புச் சூழலுக்கும், இலக்கியம் பற்றிய மனநிலை அல்லது கருத்தியலுக்கும் பங்களிப்புச் செய்த ஒரு சில இலக்கிய இதழ்களில், எழுத்து இதழுக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. மணிக்கொடி எழுத்தாளராகவும், 'சரஸாவின் பொம்மை' முதலிய குறிப்பிடத்தக்க சில சிறுகதைகள் எழுதியவராகவும், விமர்சனத்தில் அக்கறை கொண்டவராகவும், கு.ப.ரா., ந. பிச்சமூர்த்தி, பி.எஸ். ராமையா, சிட்டி, ந. சிதம்பர சுப்பிரமணியன் முதலிய அன்றைய முன்னணி எழுத்தாளர்களுடன் நெருக்கமான தொடர்பு கொண்டவராகவும் அறியப்பட்டிருந்த சி.சு. செல்லப்பா, 1959இல் எழுத்து இதழை ஆரம்பிக்கிறார். திங்கள் இதழாகப், பதினொரு ஆண்டுக்காலம், இடைவிடாது (ஆனால், கடைசி இரண்டாண்டுகள் தயங்கியும் தடுமாறியும்) 1969-1970 வரை தொடர்ந்து வந்து, 119 ஏடுகள் வரை வெளியிட்ட எழுத்து, பெரும்பாலும் அவருடைய தனிமனித முயற்சியின் வெளிப்பாடாகவே அமைந்திருக்கிறது.

அறுபதுகளில், நவீனத் - தமிழ் இலக்கியச் சூழலில், மையத்தில் இருந்த எழுத்துவுக்கு முன்னர், 1930-40களில், முக்கியமான மணிக்கொடியையும் (1933-36; 36-39) தொடர்ந்து, சூறாவளி (1939), கலாமோகினி (1942), கிராம ஊழியன் (1944) ஆகியவற்றையும் மையமாகக் கொண்ட - ஏறத்தாழ, அதே வகையான ஒரு நவீன இலக்கியச் சூழல் இருந்தது. தமிழ் இலக்கியத்தில், நவீனத்துவத்தின் 'முதல்அலை' இது என்று சொல்ல வேண்டும். பொழுதுபோக்கு ரசனைகளுக்கு மாறாக, வித்தியாசமான மனநிலைகளுடன், உருவத்திலும் உள்ளடக்கத்தின் கோணங்களிலும் சோதனை செய்து

பார்க்கிற முயற்சிகளை முன்னெடுத்துக்கொண்டு, நவீனத்துவம் என்பது, தன்னை வெளிப்படுத்திக்கொண்டு வளர்கிற ஒரு சூழலை, இந்த முதல் அலை பிரதிநிதித்துவப்படுத்தியது. மரபை மீறுதல், மரபை மறுத்தல், அதுவரை அதிகம் தொடாதவற்றை மாற்றத்துடன் அணுகுதல், மற்றும் அறிவாளிகளுக்குரிய மனநிலை, எழுச்சி பெற்றுவரும் மத்தியதரவர்க்கத்தின் உணர்வு, சமகாலத்துப் பிரச்சினைகளின் மீதுகொள்ளும் எதிர்வினை எனும் இவற்றோடு, மேலை நாட்டுக் கருத்து நிலைகளையும் பாணிகளையும் உடன் கொண்டதாகிய இந்த நவீனத்துவம், 30-40களின் முதல் அலையைத் தொடர்ந்து, அறுபதுகளில் - அதாவது எழுத்துக் காலத்தில் இரண்டாவது அலையாக, இன்னும் சற்றுக் கூடுதலான வேகத்துடனும் பரந்த வீச்சுடனும் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது.[1]

மணிக்கொடி, நவீன சிறுகதைகளுக்குத் தளம் அமைத்துத் தந்தது என்றால், எழுத்து, நவீன கவிதைகளுக்குத் தளம் அமைத்துத் தந்தது; நவீன கவிதையை ஒரு இயக்க உணர்வோடு முன்கொண்டு சென்றது என்று சொல்லவேண்டும். மணிக்கொடிச் சூழலிலிருந்து வந்த சி.சு.செல்லப்பா, திரும்ப அந்தச் சூழலைக் கொண்டுவர வேண்டும் என்ற ஏக்கத்தோடு, புதுமை, விமர்சனம், சிறுகதை என்ற கனவுகளோடும் எழுத்துவைத் தொடங்குகிறார்.

எழுத்து இதழுக்கு ஒரு நோக்கம் ஒரு திட்டம் இருந்ததாகத் தெரிகிறது. அதன் முதலாண்டு இதழ்களில் முதல் பக்கத்தில் அது தன்னைப் 'புதுமை இலக்கிய மாத ஏடு' என்று அறிவித்துக் கொள்கிறது. பின்னர், இரண்டாம் - மூன்றாம் ஆண்டுகளில் 'இலக்கிய விமர்சன குரல்' என்று அது தன்னை அழைத்துக்கொள்கிறது. "இலக்கிய விமரிசனம், படைப்புத் துறையில் சோதனைகள் இவற்றில் அக்கறை கொண்ட மாதப்பத்திரிகை' என்று தன்னிடம் எழுதுகிறவர்களுக்கு அது நினைவுபடுத்திக் கொள்கிறது.[2] மேலும், அது திரும்பத் திரும்ப, தனது தலையங்கம் முதற்கொண்ட பல பகுதிகளிலும் புதுமை, புதிய பார்வை, புதிய நோக்கம், புதிய தடம் என்று சொற்றொடர்களைப் பயன்படுத்துகிறது. முதல் தலையங்கத்திலேயே தனது நோக்கத்தைச் சொல்லிவிடுவதுபோல, எழுத்தாளர்களுக்கு அழைப்பு விடுக்கின்றபோது, "புதுப்புதுவிதமாக நோக்கும் பார்வையும் கொண்டு வெளியிட்டுச் சொல்லவேண்டும்" என்றும், "சுவடு தெரிகிற தடத்திலே செல்லமறுத்து, புதுத்தடம்

போட்டுக் கொண்டு செல்லும் படைப்பாளர்களை எழுத்து வரவேற்கும்" என்றும் தெளிவாக அறுதியிட்டுச் சொல்லுவது போல் அது சொல்லுகிறது.[3]

நவீனத்துவம் என்ற சொல்லை எழுத்து அதிகமாகப் பயன்படுத்தவில்லை யென்றாலும், அதன் சொல்லாடல் 'புதுமை' என்பதனை மையமிட்டே நிகழ்த்தப்படுகின்றது. ஆனால், சரியான வரையறையுடன் அது கூறப்பட்டிருக்கிறதா? அப்படியல்ல வென்றால், இது மேலெழுந்தவாரியான ஒரு சொல்லாகவே போய்விடும். ஆனால், இதற்கு விளக்கம் தர முயலுகிறார், செல்லப்பா. புதுசு என்றால் தற்காலத்துவம் என்று அவர் பொருள் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நவீனத்துவம் அல்லது புதுமை என்பதற்கு மேலை நாட்டவர் பல விளக்கங்கள் தந்திருந்தாலும், மேலைநாட்டில் இது 'மனமுறிவு' (Frustration) என்பதையே குறிக்கிறது என்ற ஒருவகையான முடிவுக்கு வந்து, அதனைத் தவறு என்று மறுக்கிறார்.[4] பிறகு, இவரே ஒரு விளக்கம் சொல்லுகிறார். "புதுமைத் தன்மை என்ற சொல்லுக்குப் பார்வை, சுபாவம், குணம், உணர்வு சம்பந்தமாக இக்கால அல்லது உடனிகழ்காலத் தன்மை என்று பல பொருள்களைக் கொள்ளலாம்... நிகழ்கால உணர்வை வெளியிடுவதுதான் இக்காலத் தன்மையது." இது அவர் விளக்கம்.[5]

புதுமை வேண்டும் என்று திரும்பத் திரும்பச் சொன்னாலும், அந்தப் புதுமை என்பது உடனிகழ்காலத் தன்மை என்று சொன்னாலும், 'நமது இன்றைய உணர்வு தொனிப்பதை வைத்துத்தான் நமது இலக்கியம் இக்காலத்தது என்று மதிப்பிடவேண்டியது முறையானது' என்று அறுதியிட்டுச் சொன்னாலும், அந்த உடனிகழ்காலம், அந்த இன்றைய உணர்வு, எழுத்துவில் தொனிக்கிறதா என்று தேடுவது சிரமம். அன்றைய எழுத்துவின் உடனிகழ்காலத்து முக்கிய நிகழ்வுகளாகிய விடுதலை பெற்ற இந்தியாவின் அதிகாரப் பகிர்வுகள், மொழிவழி தேசிய இனங்களின் அடையாளங்கள், இந்திய - சீனப் போர், திராவிடர் இயக்க எழுச்சி, இந்தி எதிர்ப்புப் போராட்டம் முதலியவை, நேரிடையாக அல்ல, என்றாலும் வேறு ஏதாவது ஒருவகையில் எதிர்வினை கொள்ளவேண்டுமே. எழுத்துவின் ஏடுகளில் அவற்றைத் தேடுவது சிரமம். ஆனால், மாறாக, மல்லார்மே, சி.டே. லீவிஸ், டபிள்யூ.பீ.யேட்ஸ் என்ற மேலைநாட்டு இலக்கியவாதிகளின் பெயர்கள் நூறுக்கு மேல் பலமுறை உச்சரிக்கப்படுகின்றன;

அசமுசக்குரல், லயம், உணர்ச்சி, தொனி, சூக்குமம், சிருஷ்டி, பிரக்ஞை, சோதனை, தனித்துவம் என்ற சொற்கள் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்படுகின்றன.

பாரதி பற்றிப் பல இடங்களில் எழுத்து பாராட்டிப் பேசுகிறது. ஆனால் பாராட்டுகின்ற எந்த இடத்திலும், உடனிகழ் காலம், தற்காலம், இன்றைய உணர்வு என்று செல்லப்பா கூறுகிற எந்த விஷயமும் பாரதியிடம் பார்க்கப்படவில்லை என்பது மட்டுமல்ல; தவிர்க்கவும் படுகிறது. மேலும் சாதுரியமாக மறுக்கவும் படுகிறது. 'பாரதி கலை' பற்றித் தருமு சிவராமுவின் கட்டுரை ஒன்று சொல்லுகிறது, "பாரதியின் தேசிய கவிதைகளிலிருந்து ஒன்றையும் குறிப்பிட முடியாமல் போகிறது. ஏனெனில் அவற்றுள் கவிஞனின் கம்பீரமும் இயற்கை சக்தியின் துடிப்பான வேகமும் இருந்தாலும் கற்பனை விளைவான படிமங்களும் கற்பனைகளும் செழுமை குறைந்து காணப்படுகின்றன. . . கவிஞன் இயற்கையனுபவத்தைக் கையலம்பிவிட்டு தேசத்தின் உயர்வுகளைச் சரித்திர நிகழ்ச்சிகள் மூலமும் நாட்டின் அறிவுச் செல்வங்கள் இத்யாதி மூலமும் அளவிட முயன்றது தெரிகிறது. எனவே கலைத்தன்மை குறைவுபடுகிறது. . . சுதந்திரம் என்ற பகுதியில் விடுதலை, சுதந்திரப் பள்ளு என்ற பகுதிகளைக் குறிப்பிட்டு, பாரதி, ஒரு தீர்க்கதரிசனம் உள்ளவன் என்றும் அவரது மகாகவி ஸ்தானத்துக்கு அந்த தீர்க்கதரிசனம் குறிப்பிடத்தக்கது என்றும் சிபார்சித்து இருக்கிறார்கள். ஆனால் அந்தக் கவிதைகளில் அனுபவ ஆழமோ செழிப்போ இல்லை. கவித்துவமுழுமை இல்லை. . ." இப்படி - உடனிகழ்காலம், இன்றைய உணர்வு எனும் 'புதுமையின்' குணங்கள் வேறு ஏதோ ஒரு அர்த்தத்தில் என்று தெரிகிறது. தொடர்ந்து தருமு சிவராமுவின் குரல் ஒலிக்கிறது! "தெய்வப்பாடல்கள் பகுதியில் சில கவிதைகள் முழுநயத்தோடு கிடைக்கின்றன. பாரதியின் முழுசக்தியும் தெய்வத்தன்மைக்கே, அவரின் மனசின் இணக்கத்தோடு அர்ப்பணிக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு இது அத்தாட்சிதான்".[6] தருமுசிவராமு எங்கே நிற்கிறார் என்பதற்கு இது ஒரு அத்தாட்சி என்பதல்ல இங்கு முக்கியம்; ஆனால் எழுத்துவின் 'புதுமை' பற்றிய கணிப்புக்கு இது ஒரு அத்தாட்சி.

எழுத்துவில் உருவானவர், டி.ஏ. இராமலிங்கம் எனும் தருமுசிவராமு; எழுத்துவில் அவரே அதிகமாக எழுதியவர் என்பது ஒரு பக்கம் இருக்கப் பல சமயங்களில் சி.சு. செல்லப்பாவே, தருமு சிவராமுவைப் பின்பற்றி எழுதக்கூடியவர்தான். அந்தக் கட்டுரை

வெளிவந்த பின் எழுத்துவின் அடுத்த ஏட்டிலேயே அதனைப் பின்பற்றிப் பாரதியின் 'அக்கினிக் குஞ்சு' பற்றிச் செல்லப்பா எழுதுகிறார். கற்பனை, படிமம், இயற்கையனுபவம் என்று அங்கே சிவராமு சொல்லியிருக்க, செல்லப்பா, அதனை நிறைவு செய்வது போல, குறியீடு, தொனி என்று இங்கே சொல்லுகிறார். ஆனால், அக்கினிக் குஞ்சு என்பதனைக் குறியீடு என்று பேசுகிற செல்லப்பா, அது, எந்தப் பொருளுக்குக் குறியீடு என்று எங்கும் விளக்கவில்லை. தீய சக்தி, ஆக்க சக்தி என்று சில சொற்களைச் சொல்லுகிறார். ஒருவேளை அக்கினிக் குஞ்சு அதற்குத்தான் குறியீடா? நாம்தான் யூகிக்கவேண்டும். மேலும் வெறும் ரசனை சம்பந்தப்பட்ட வார்த்தைகளையே அடுக்கிச் செல்லுகிற அந்தக் கட்டுரை எதனுடைய குறியீடு அக்கினிக் குஞ்சு என்று தெளிவாகச் சொல்லுவதைத் தவிர்ப்பதன் மூலம், நாட்டுப்பற்று, விடுதலைப் போராட்டம் என்ற நிகழ்வுகளுக்கு உரிய குறியீடாக (மிகப்பலர் அப்படி விளக்குவது போல்) விளக்க / குறிப்பிட வேண்டியிருக்குமோ என்ற சாத்தியப் பாட்டினை வலியத் தவிர்த்துவிடுகின்றது. இங்கு மட்டுமல்ல எங்குமே இத்தகைய சொல்லாடல்கள் நிகழ்த்தப்படவில்லை.

எனவே புதுமை, புதியபார்வை என்பதெல்லாம், 'உடனிகழ் காலத்'திற்குச் சம்பந்தமில்லாதவை என்றாகிறது. அல்லது உடனிகழ்வு, தற்காலம், இன்றைய உணர்வு என்பதெல்லாம் தேசம், சமூகம் என்பவற்றுக்குச் சம்பந்தமில்லாதவை என்றாகிறது. அப்படியானால், ரஸம், தரம், லயம், கற்பனை, படிமம், குறியீடு, கலாதரிசனம், அற்புதம், உன்னதம் என்பன போன்றவைதான் புதுமை என்பது எழுத்துவின் நிலைப்பாடு. அதற்கேற்றாற் போன்றுதான் எழுத்துவின் பெரும்பான்மை யான பகுதிகளும் தோரணைகளும் அமைந்திருக்கின்றன.

எழுத்துவின் நோக்கம் அல்லது செயல்பாடு புதுமை மற்றும் விமரிசனம். அப்படியாகத்தான் அது தொடங்குகிறது. ஆசிரியர் செல்லப்பாவுக்கு இவையிரண்டும் பின்னால் நிகழ்ந்தவை. சிட்டி, கநா.சு., குபரா. சிதம்பர சுப்பிரமணியம் போன்றவர்கள் மூலம் கற்றுக் கொண்டவை.[7] அதற்கு முன்னால், அவர் சிறுகதைகள் எழுதியவர்.[8] எனவே எழுத்து இதழில் தொடக்கத்தில் சிறுகதைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. சிறுகதை பற்றிய விமரிசனங்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஆனால், ஆசிரியர் செல்லப்பா (புதுக்) கவிதைகள் எழுதத் தொடங்கிச் சிறுகதைகள் எழுதுவதை மிகவும் குறைத்துக் கொண்டுவிட்டபிறகு,

எழுத்துவில் சிறுகதையின் முக்கியத்துவம் குறைந்துவிடுகிறது. அந்த இடத்தைப் புதுக்கவிதைகள் பிடித்துக்கொள்கின்றன. முதல் ஆண்டில் (1959) 14 சிறுகதைகள்; அடுத்த ஆண்டில் 11; அதன்பிறகு படிப்படியாக எண்ணிக்கை குறைகிறது. ஆனால் இல்லாமல்போய் விடவில்லை. அதேபோது, புதுக்கவிதைகளின் எண்ணிக்கை குறையாமல் இருக்கிறது.

ஒவ்வொன்றும் 24 பக்கங்கள் கொண்ட 112 ஏடுகளைக் கண்ட எழுத்து இதழ்,[7] வெளியிட்ட இலக்கியப் படைப்புக்கள் மொத்தம் 516. இவற்றுள், முதல் ஆண்டில், ஆசிரியரின் 'ஜீவனாம்சம்' தொடர்கதையாக வெளிவந்தது. எழுத்து மூலம் வந்த ஒரே தொடர்கதை (நாவல்) அது ஒன்றுதான். அதுபோக, அதில் பிரசுரமான சிறுகதைகள், மொத்தம் 76. புதுக்கவிதைகள் (சிறிதும் பெரிதுமாக) மொத்தம் 431. சிறு நாடகங்கள் 8. படைப்புக்கள் அதிகமாக வெளிவந்த ஆண்டு, அதன் நான்காம் ஆண்டு (1962) ஆகும். ஆனால் இதில் வந்த சிறுகதைகள் இரண்டே இரண்டுதான். ஒன்று ந. பிச்சமூர்த்தியினுடையது; இன்னொன்று சுந்தர ராமசாமி யினுடையது. ஆனால், இந்த ஆண்டில் வந்த புதுக்கவிதைகள் 68. இவற்றுள் 334 வரிகள் கொண்ட சி. மணியின் 'நரகம்' என்ற கவிதையும் 120 வரிகள் கொண்ட 'நான்' என்ற கவிதையும் அடங்கும். இந்த நான்காம் ஆண்டில், 'எதற்காக எழுதுகிறேன்' என்ற தலைப்பில் ஆர். ஷண்முகசுந்தரம், தி. ஜானகிராமன், லா.ச.ரா., ஜெயகாந்தன் முதலிய பதினொரு எழுத்தாளர்களின் கட்டுரைகளும், 'நான் என்ன படிக்கிறேன் ஏன்' என்ற தலைப்பில் சி. கனகசபாபதி, வல்லிக்கண்ணன், க.நா.சு. முதலிய ஐந்து எழுத்தாளர்களின் கட்டுரைகளும், க.நா. சுப்பிரமணியத்தின் 'தமிழில் சிறந்த சிறுகதைகள்' என்ற கட்டுரைத் தொடரும் குறிப்பிடத் தக்கவையாகும்.

எழுத்துவில் வந்த மொத்தக் கட்டுரைகள் 227. இவற்றுள், புதுக்கவிதை பற்றி மட்டுமே வந்த கட்டுரைகள் 35; புதுக்கவிதை யையும் மரபுக் கவிதையையும் சேர்த்துப் பேசுகின்றவை 40; சிறுகதை பற்றியவை 30; நாவல் பற்றியவை 28; விமரிசனப் பொது நெறிக்கட்டுரைகள் 29; புத்தக விமரிசனங்கள் 21; எழுத்தாளர் பற்றியும், ஏனைய பொதுநெறி பற்றியும் பேசுகிற கட்டுரைகளிலும் கூடப் புதுக்கவிதை பற்றியனவே அதிகம். எழுத்தரங்கம் என்ற வாசகர் பங்கேற்கும் பகுதியிலும் புதுக்கவிதை பற்றிய பேச்சுக்களும் விவாதங்களுமே அதிகம்.

பொதுவாக, எழுத்து இதழை ஒட்டுமொத்தமாகப் பார்க்கிற போது, அதன் பல்வேறு பகுதிகளிலும் மற்றும் அவற்றில் நிகழ்த்தப் பெறும் பேச்சுக்களிலும் உரக்கக் கேட்பதும், திரும்பத் திரும்பக் கேட்பதும் ஆகிய குரல் புதுக்கவிதை பற்றியதே யாகும். புதுக்கவிதை பற்றிய இந்தக் குரல் எவ்வெவ்வாறெல்லாம் எதிரொலிக்கிறது என்று பார்ப்பதும், புதுக்கவிதை பற்றிய சேதிகளும் பேச்சுக்களும் எவ்வெவ்வாறெல்லாம் வெளியிடப்படுகின்றன என்று பார்ப்பதும், எழுத்து இதழின் ஒரு முக்கியமான தளத்தையும் அதன் செல்நெறியையும் இனங்காண்பதற்கு உதவும். புதுக்கவிதைப் பேச்சு, கேட்கின்ற முறைகளைப் பின்வருமாறு தொகுத்து அறியலாம்:

1. ஏற்கனவே வேறு வேறு இலக்கிய இதழ்களில் வசன கவிதைகள் எழுதிய ந.பி. போன்ற அறியப்பட்ட படைப்பாளர்களின் கவிதைகளை வெளியிடுதல்.
2. புதிதாக எழுதத் துவங்கியவர்களின் கவிதைகளைத் தொடர்ந்து பிரசுரித்தல்.
3. புதுக்கவிதை பற்றிய ஆதரவான கருத்துக்களைப் பிரபலமான எழுத்தாளர்களைக் கொண்டு பேச வைத்தல்.
4. புதுக்கவிதை பற்றிய விவகாரங்களை - விவாதங்களை எழுப்பி விடுதலும், அவற்றிற்குப் பதில் சொல்லுதலும்.
5. மரபுக் கவிதைகளை - மரபுகளைச் - சாடுதல்.
6. மரபுக் கவிதைகளோடு புதுக்கவிதைகளைப் பொருத்தி வைத்துப் பார்த்தலும், இரண்டின் உறவுகளையும் சொல்லிப் புதுக்கவிதைக்கு அங்கீகாரம் தேடுதலும்.
7. புதுக்கவிதை பற்றிய அல்லது புதுக்கவிதைச் சூழல் பற்றிய பேச்சுக்கள் இடம்பெறுமாறு, விமரிசன / இலக்கியப் பொது நெறிக் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிடுதல்.
8. புதுக்கவிதை பற்றித் தலையங்கங்கள் எழுதுதல்.
9. எழுத்து அரங்கம் போன்ற பகுதிகளின் மூலம் வாசகர் அபிப்பிராயங்களைப் - புதுக்கவிதையை மையமிட்டுத் - திரட்டுதல்.
10. சோதனை, புதுமை, புதிய தேடல் என்ற சொல்லாடல்கள் நிகழ்த்துகிற போதெல்லாம், பெரும்பாலும் புதுக்கவிதையைப் போற்றி பேசுதல்.

11. புதுக்கவிதை பற்றிய மேலை நாட்டவர் கருத்துக்களை / விளக்கங்களை வெளியிடுதல்.

12. எழுத்துப் பிரசுரமாகப் புதுக்கவிதைகளைத் திரட்டி அவற்றை நூல்களாக வெளியிடுதல்.

13. புத்தக விமரிசனங்கள் / மதிப்புரைகள், தகவல்கள் முதலியவற்றின் மூலமாகவும் புதுக்கவிதை பற்றிப் பேசுதல்.

இவ்வாறு, புதுக்கவிதை பல உத்திகள், பல வழிமுறைகள், பல பகுதிகள் மூலமாக எழுத்துவில் இடம் பெறுகிறது; பேசப்படுகிறது. இதன்மூலமாகக் கிடைக்கும் தகவல் : எழுத்து, புதுக்கவிதையை ஓர் இயக்கமாக நடத்துகின்றது; இயக்கத்திற்கு ஒரு முதன்மையான சாதனமாக நின்று, திட்டமிட்டோ, திட்டமிடாமலோ இது நடத்தப்படுகின்றது. எழுத்துவுக்கு முன்னாலேயே மணிக்கொடி, சூறாவளி, கலாமோகினி, கிராம ஊழியன் ஆகிய இதழ்களும் இதே வகையான கவிதைகளை 'வசன கவிதை' என்ற பெயரில் வெளியிட்டிருக்கின்றன. எனினும், அவை மிகக் குறைவு; பலர் பங்குபெறவில்லை; பல பகுதிகள் - பல உத்திகள் மூலம் அவை பேசப்படவில்லை. ஆனால், எழுத்துவில்தான் மேலே கூறிய பல கோணங்களிலிருந்தும், புதுக்கவிதைப் பேச்சு வெளிப்படுகிறது. எனவே எழுத்து, புதுக்கவிதை இயக்கத்திற்கு ஒரு முதன்மையான சாதனமாக அமைந்திருக்கிறது என்று சொல்ல வேண்டும்.

ஆனால், செல்லப்பா, எழுத்துவுக்கு முன்னால் கவிதை வசன கவிதை எதுவும் எழுதியவரல்லர்; 'சூறாவளி'யில் க.நா.சு.வுக்கு உதவியாக இருக்கும்போது கூட எழுதியதில்லை. எழுத்துத் தொடங்கி இரண்டாம் ஆண்டில்தான் (1960) அவருக்குப் புதுக்கவிதையைப் பற்றிய கருத்து, ஒரு நிலைப்பாடு, எழுதக் கூடிய ஆர்வம் ஏற்படுகிறது. ஆனாலும், முதலாண்டிலிருந்தே, ந. பிச்சமூர்த்தி, கு.ப.ரா. முதலியவர்களின் கவிதைகளும் தொடர்ந்து பிறருடைய கவிதைகளும் வெளிவரத் தொடங்கிவிட்டன. எப்படி இவர் புதுக்கவிதைக்கு மாறினார்? எப்படி எழுத்து, புதுக்கவிதைக்கான ஒரு தளமாக மாறியது? அதன் சூழல் என்ன? அவரே சொல்லுவார்: "எழுத்து, பின்னால் புதுக்கவிதை இயக்கத்தைத் தோற்றுவிக்கும் என்பது என் பிரக்ஞையில் அப்போது இம்மியும் கிடையாது. ஏன், கவிதைக்கு எழுத்துவைப் பயன்படுத்தும் நினைப்பே எனக்குக் கிடையாது."[12] பிறகு, எப்படி, எந்தச் சூழலில் புதுக்கவிதைக்காகத் தளம் அமைத்தார். முக்கியமாக இரண்டு சூழல்கள்:

1. இவருடைய எழுத்தினுடைய - புதுமை நாட்டம். திரும்பத்திரும்பச் சொல்லும் புதுமை நாட்டம். சோதனை. புதிய பாதை. தடம்பதிக்காத பாதையில் புதிதாய்த் தடம் பதிப்பது - இப்படியே அவர் உருவாக்கிக் கொண்ட சோதனை பற்றிய கருத்து நிலைக்குச் 'சிறுகதையை விடக் கவிதையே அதிகம் ஏற்புடையதாக இருந்தது. ஏற்கனவே இங்கு மரபுக் கவிதைகள் வலுவிழந்து உலுத்துப் போகத் தொடங்கியிருந்தன. மேலும் வசன கவிதை, மேலை நாட்டுத் தோரணைக்கும் அவர்களின் நவீனத்துவக் கண்ணோட்டத்திற்கும் வசதியாக இருந்தது. மொழி விளையாட்டுக்கு வசதியாக இருந்தது.

2. அடுத்து, செல்லப்பாவே ஒருமுறைக்கு இருமுறை சொல்லுகிறார். கவிதைகளை ஆரம்பத்தில், பிச்சமூர்த்திக்காகவும் மயனுக்காகவும் கு.ப.ராவுக்காகவுமே போட்டதாகச் சொல்லுகிறார். அதாவது; வசன கவிதை அல்லது புதுக்கவிதை பற்றித் தெரியாமலேயே - தனிப்பட்ட முறையில், தனக்கு வேண்டியவர்களின் - தன்னால் மிகவும் மதிக்கப்படுபவர்களின் செல்வாக்கிற்காளாகி வெளியிடுகிறார். பிறகு படிப்படியே அதற்கு மரியாதை கிடைத்துவிட, எழுத்துவில் புதுக்கவிதை, மையமான இடத்தைப் பிடித்துக் கொண்டுவிட்டது.

எழுத்துவில் எழுதிய படைப்பாளர்களின் மொத்த எண்ணிக்கை 130; இவர்களுள் சிறுகதை எழுதியவர்கள் 45 பேர்; புதுக்கவிதை எழுதியவர்கள் 78 பேர். ஆனால் புதுக்கவிதைகள் எழுதிய பலர், ஒன்றுக்கு மேற்பட்ட பல கவிதைகள் எழுதியவர்கள் பழையவர்கள் சிலரைத் தவிர. எழுத்துவில் புதிதாக உருவான புதுக்கவிதையாளர்களில் முக்கியமானவர்கள் சி. மணியும் தருமு சிவராமுவும் மற்றும், தி.சோ. வேணுகோபாலன், எஸ். வைத்தீஸ்வரன், நகுலன், கிருத்திகா, இரா. மீனாட்சி, மா. இளையபெருமாள் முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். பின்னால் வானம்பாடியில் எழுதிய நா. காமராசனும், சேலம் தமிழ் நாடனும் கூட எழுத்துவில் எழுதியிருக்கிறார்கள். இவர்களையெல்லாம் செல்லப்பா ஊக்கப்படுத்தி வளர்த்திருக்கிறார். எழுத்துவில் உருவான தி.சோ. வேணுகோபாலன் ஓரிடத்திலே கூறுவார்: "மூன்று ஆண்டுகளுக்கு மேலாக ஒரு கவிதையும் எழுதாமல் இருந்த என்னை, எழுத்து ஒரு கவிதை எழுத ஊக்குவித்தது. அதுவும் பழகிய தடத்தைவிட்டுப் புதுப்பாதைக்குத் திருப்பியது."[14] இதுபோல,

எழுத்துவில் வந்த ந. பிச்சமூர்த்தியின் புதுக்கவிதைகளும், எழுத்து அரங்கம் எனும் பகுதியும் கட்டுரைகளும், தம்மைப் புதுக்கவிதை எழுதத்தூண்டின என்று சி. மணியும் குறிப்பிட்டுள்ளார்.

எழுத்துக் காலத்துப் புதுக்கவிதைகள், தமிழ் இலக்கியத்தில் குறிப்பிட்ட ஒரு வகையான போக்கு அல்லது செல்நெறியை (trend) பிரதிநிதித்துவப்படுத்துகின்றன. நடப்பு, நடப்புப்பிரச்சினை, சமூகவுணர்வு, சமூக எழுச்சி, வாழ்தல் பற்றிய உத்வேகம், நம்பிக்கை வறட்சி, விரக்தி, வக்கிரம் முதலிய உணர்வுநிலைகளும், உத்திகளுக்கு முதன்மை, படிமம், குறியீடு, வரிகளை உடைப்பது, வார்த்தைகளுக்குப் புதிய பரிமாணம் கொடுப்பது முதலியனவும் பெரும்பான்மையான இடத்தைப் பெறுகின்ற ஒரு போக்குதான், எழுத்துக்காலத்துப் புதுக்கவிதைகளின் போக்கு ஆகும். புதிய தடம் என்ற சொல்லாடலில், எழுத்து இந்த வகையான போக்கினையே அடையாளப் படுத்தியிருக்கிறது; பதிவுசெய்திருக்கிறது.

இதற்கு ஒரு அத்தாட்சியாக, திருகோணமலை - டி.சி. ராமலிங்கம் என்ற தருமு (அரூப்) சிவராமுவின் கவிதையை இங்கு எடுத்துக்காட்டலாம். எதிர் எதிரான நோக்கங்களில் பலரும் எடுத்துக் காட்டுகின்ற 'விடிவு' என்ற கவிதை,

> பூமித் தோலில்
> அழுக்குத் தேமல்
> பரிதி புணர்ந்து
> படரும் விந்து
> கதிர்கள் கமழ்ந்து
> விரியும் பூ
> இருளின் சிறகைத்
> தின்னும் கிருமி
> வெளிச்சச் சிறகில்
> மிதிக்கும் குருவி.

நாட்டுப்புற விடுகதை (riddle) பாணி, அடுக்கடுக்கான படிமங்கள், ஒரு அருவருப்பு (தேமல், கிருமி) அல்லது இழிவுச்சுவை (absurdidy), வெளியே சொல்லிக்கொள்ளாத (taboo) வார்த்தைகளை / உவமங்களை (விந்து) சொல்லுவதின் மூலம் ஏற்படுத்துகின்ற அதிர்ச்சி, எதையும் புனிதம், தூய்மை என்று கொள்ளாமல் அடித்து உடைக்கும்

ஒரு மதிப்பு மாற்றம் அல்லது கவிழ்ப்பு - இது தருமுசிவராமுவின் - இந்தக் கவிதையில் என்று இல்லை - பொதுவாக அவருடைய பல கவிதைகளிலும் காணப்படுகின்ற ஒரு முக்கியமான போக்கு. எழுத்திலும் இது மாதிரியான போக்கே முக்கியமானதாக இடம் பிடித்திருக்கிறது.

இந்த வகையான போக்கு, எழுத்து இதழிலும் அதனுடைய சமகாலத்துப் பெரும்பான்மையான இலக்கியச் சிற்றிதழ்களிலும் காணப்படுகின்ற அல்லது முன்வைக்கப்படுகின்ற ஒரு பொதுவான போக்கேயாகும். தூலமற்ற ஒரு மன உணர்வு, விரக்தி, பயம், எரிச்சல், இனம் தெரியாத கோபம், அமுங்கி உள்ளடங்கிப் போய்விடுகிற பின்னடைவு (withdrawal) மனப்பான்மை, நழுவல் எனும் இவற்றினூடே உருவ சோதனை வேட்கையோடு செய்நேர்த்தியில் செலுத்தப்படுகின்ற கவனம், நவீனத்துவத்தின் பலமுகங்களில் இதுவும் ஒன்று.

எழுத்துவில் வெளியான சிறுகதைகளிலும் இந்தப் போக்கே தூக்கலாக உள்ளது. ஆசிரியர் வலியத் தேடிப்பிடித்துப் போட்ட சிறுகதைகள் மெளனியின் சிறுகதைகள், புதுமைப்பித்தனின் சில சிறுகதைகள், லா.ச.ரா.வின் சிறுகதைகள். இவை எழுத்து இதழின் போக்கையும் நோக்கையும் அடையாளங் காட்டுவன. குறிப்பிட்டுச் சொல்லும்படியான சிறுகதைகள் எழுத்துவில் குறைவு; அதேபோல குறிப்பிட்டுச் சொல்லும்படியாக எழுத்துவில் முதன்முறையாக எழுதித் தங்கள் பெயரைச் சிலகாலம் நிலைநிறுத்திக் கொண்டவர்களும் மிகக் குறைவு. ஏற்கனவே மணிக்கொடியும் சூறாவளி, கிராமஊழியன் ஆகியனவும் பின்னர் சரஸ்வதியும் சிறுகதைக்கான பணியைத் தங்கள் பெயர்கள் பதியுமாறு செய்துவிட்டன.

ஆனால், எழுத்து இலக்கிய விமரிசனத்துக்கு, ஒரு நல்ல தளத்தை அமைத்துத் தந்ததோடு, சமகாலத்திய ஏனைய பிற இலக்கியச் சிற்றிதழ்களை விட அதற்குக் கணிசமானதொரு பங்களிப்பினைச் செய்திருக்கிறது. சி.சு. செல்லப்பா, க.நா. சுப்பிரமணியன், வல்லிக் கண்ணன் ஆகியவர்களைத் தவிரவும், இதில் அதிகமாக விமரிசனக் கட்டுரைகள் எழுதியவர்கள், தருமுசிவராமு, வெ. சாமிநாதன், இ. முருகையன், சி. கனகசபாபதி, மு. பழனிச்சாமி ஆகியோர், மற்றும், எழுத்து அரங்கம் எனும் வாசகர் பகுதியில் விமரிசனக்குரலை

எழுப்பிய சிறுகதையெழுத்தாளர் ம.நா. ராமசாமியும் குறிப்பிடத் தகுந்தவர். இவர்களின் கூர்மையான விவாதங்களும், அழுத்தமான பார்வையும் குறிப்பிட்டுச் சொல்லும்படியான அணுகல் முறையும் தமிழ் விமரிசனத்திற்குப் புதிய பரிமாணத்தைத் தந்துள்ளன.

இவர்களுள்ளும் சி. கனகசபாபதியைப் பற்றி இங்குக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். கல்வியாளராக - தமிழ்ப் பேராசிரியராக இருந்து - புதுக்கவிதைகளை முதலில் வரவேற்றவர்; எழுத்துவுக்கு ஒரு புதிய பரிமாணத்தைத் தந்தவர்; வலியச் சென்று சில விளக்கங்களைக் கூறுவது இவரிடம் பரவலாக உண்டு எனினும், விமரிசனத்தை நுண்மையாகவும் உண்மையாகவும் செய்தவர். எழுத்துவில் தன்னுடைய பல கட்டுரைகளில் புதுக்கவிதைகளுக்கு - மரபை மீறுவது, மரபை மறுப்பது, போகாத தடத்திற்குப் போவது என்று உரிமை கொண்டாடப்படும் அல்லது அப்படி வேறு பிறரால் குற்றம் சாட்டப்படும் - புதுக்கவிதைகளுக்கு இவர் மரபு தேடினார். சங்க இலக்கியக் கவிதைகளோடு (இணைக்குறளாசிரியப்பா) இவற்றை உறவுபடுத்திப் பேசினார்; விளக்கினார். இதில் குறிப்பிடத்தக்க தென்னவென்றால், மரபு பற்றி மறுப்புக்கூறும் புதுக்கவிதையாளர்கள் யாரும் இவருடைய இந்தக் கருத்துக்களை மறுக்கவில்லை. ஒரு அங்கீகாரம் கிடைக்கிறதே என்ற மனநிலையில் இவற்றை மவுனமாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். மேலும், சி.சு. செல்லப்பா இந்த வகையான கட்டுரைகளுக்காக சி. கனகசபாபதியை உற்சாகப் படுத்தியிருக்கிறார். ந. பிச்சமூர்த்தியின் 'காட்டுவாத்து' என்ற நீண்ட கவிதையைப் பற்றி வந்த இவருடைய விமரிசன விளக்கக் கட்டுரையைப் பற்றிச் சி.சு. செல்லப்பா இப்படிக் கூறுகிறார்:

"புதுக்கவி ஒருவரைப் புதுமை நோக்கில் பார்க்கும் பழைமையறிந்த ஒருவரது பார்வை கொண்ட அமைப்பான கட்டுரை."[18]

அங்கீகாரம் தேடுவது, படைப்பாளியின், கலைஞனின் இயற்கை. அங்கீகாரம் தேடுவது இலக்கிய இதழின் வேட்கை. புதுமை, புதிய தடம், சோதனை என்று பிரகடனப்படுத்திக் கொள்ளும் எழுத்து, இப்படி ஒரு மரபுக்குள்ளும் ஒரு வரலாற்றுக்குள்ளும் தன்னை இனங்காணுகிற ஒரு அங்கீகாரத்தைத் தேடுகிறது - ஆனால், தனது அடையாளத்தை இழந்துவிடாமல், இலக்கியச் சிற்றிதழுக்குரிய ஒரு குணத்தை, ஒரு புத்திலக்கியத்திற்கான தேடுதலை, அதற்கான அயராத

ஒரு உழைப்பை, இறுதிவரை, இந்த எழுத்து, சமரசப்படுத்திக் கொள்ளாமல், தன்னுடைய சுய அடையாளத்தோடு இருந்துவிட்டுப் போனது.

## குறிப்புகள்

1. இந்த இரண்டாவது அலைக் காலத்தில் வந்த பிற இலக்கிய இதழ்கள் - விஜயபாஸ்கரனின் 'சரஸ்வதி' (1955), ஜீவாவின் 'தாமரை' (1958), கநா. சுப்பிரமணியத்தின் 'இலக்கிய வட்டம்' (1963), நா. பார்த்தசாரதியின் 'தீபம்' (1965), கி. கஸ்தூரிரங்கனின் 'கணையாழி' (1965), கிருஷ்ணசாமி, ந. முத்துசாமி, சி. மணி ஆயோரின் 'நடை' (1968).

   எழுபதுகளில் நவீனத்துவத்தின் மூன்றாவது அலை. 'வானம்பாடி', 'பிரக்ஞை', 'ஞானரதம்', 'மீட்சி' என்று வேறு எந்தக் காலத்தையும் விட மிக அதிகமான சிற்றிதழ்கள். இதன்பின் இந்த அலைக்கு ஓய்வு. 90களில் நவீனத்துவத்துக்கு எதிரான அலை.

2. எழுத்து, 1961 : 27

3. எழுத்து, 1959 : 1

4. 'மனமுறிவு' என்பதை இப்படி மறுத்தாலும் எழுத்துவின் புதுக்கவிதைகளில் மனமுறிவு என்பதே அதிகமாக வெளிப்படுகிறது. கதைகளிலும் கட்டுரைகளிலும்கூட அதன் சாயல் அதிகம்.

5. எழுத்து, 1964 : 62

6. எழுத்து, 1961 : 34-35

7. காண்க : சி.சு. செல்லப்பா, 'நான் என்ன படிக்கிறேன் - ஏன்', எழுத்து, 1962 : 46

8. எழுத்துவுக்கு முன்னால், செல்லப்பா, கவிதைகள் எழுதியதில்லை. எழுத்துவில் ந. பிச்சமூர்த்தி முதலியவர்களின் கவிதைகளுக்குக் கிடைத்த வரவேற்புக்குப் பிறகுதான் (புதுக்).

9. 1970இல் ஒரே ஒரு ஏடு. அதனோடு எழுத்து தன்னை முடித்துக் கொண்டு விட்டது; கடைசி மூன்றாண்டுகளில் சிரமப்பட்டு, சில ஏடுகள் விடுபட்டு வெளிவந்திருக்கிறது.

10. இவ்வாறு எழுத்துப் பிரசுரமாக 1962இல் வந்த முதல் புதுக்கவிதைத் தொகுப்புக்கள் : 'புதுக்குரல்கள்' (23 கவிகளின்

62 கவிதைகள்), காட்டுவாத்து (ந. பிச்சமூர்த்தி). அதன்பிறகு எழுபதுகளில் எழுத்துப் பிரசுரமாக வந்தவை: 'கோடைவயல்' (தி.சோ. வேணுகோபாலன், 1972), 'பசப்பல்' (கே. ராசகோபால், 1974) 'அந்தி' (துரை. சீனிச்சாமி, 1974).

11. புதுக்கவிதை என்ற பெயருக்கு முன்னால் அதற்கு இருந்த பெயர்கள், ரகளைக்கவி, கட்டற்றகவி, சுயேச்சா கவிதை, யாப்பிலாக் கவிதை, வசன கவிதை முதலியவை. புதுக்கவிதை என்ற பெயரை யார் உருவாக்கினார்கள்? க.நா.சு. தான் முதலில் உருவாக்கினார் என்ற கருத்து உண்டு. ஆனால் அது முடிவாகக் கூறப்படவில்லை.

12. சி.சு. செல்லப்பா, 'எழுத்து அனுபவங்கள்', தீபம், ஜூலை 73, ப. 61

13. பிறருடைய செல்வாக்கிற்கு ஆளாவது - அவர்களின் தாக்கத்தையும், சார்பையும் பெறுவது என்பது சி.சு. செல்லப்பாவின் ஒரு ஆளுமைப் பண்பு. முதலில் கு.ப.ரா., ந. பிச்சமூர்த்தி, ந. சிதம்பர சுப்பிரமணியன், பி.எஸ். ராமையா, சிட்டி. க.நா. சுப்பிரமணியன் (க.நா.சு.வுடன் மாறுபட்டதும் சண்டைபோட்டதும், இன்னொரு பக்கம்) அடுத்து தருமுசிவராமு, வெ. சாமிநாதன், பிறகு ஓரளவு, கி.அ. சச்சிதானந்தன், சி. மணி. எழுத்துவின் ஏடுகளில் அவர் எழுதுகிற பல நிலைகளிலிருந்தும் இதனை அறியமுடியும்.

14. எழுத்து, 1959: 3

15. இந்தக் குணங்கள், இந்திய விடுதலையின் விடிவுக்காலத்தில் தேசிய உருவாக்கத்தின்போது, மத்தியதர வர்க்கத்தாருக்கு ஏற்பட்ட உளவியல் மற்றும் சுய அடையாளங்களில் ஏற்பட்ட நெருக்கடிகளின் பிரதிபலிப்புக்கள்.

16. சரஸ்வதியில்தான் ஜெயகாந்தனும் சுந்தர ராமசாமியும் உருவானார்கள்.

17. வலிந்து சென்று விளக்கும் சி.சு.வின் விமரிசனத்துக்கு ஒரு உதாரணம்: சி.சு. செல்லப்பாவின் 'வாடிவாசல்' எனும் குறுநாவலைத் தேசியப் போராட்டத்தின் ஒரு குறியீடு என்று சொன்னது.

18. எழுத்து, 1963 : 49

# தமிழ்ச்செல்வி

## ஆ. இளங்கோவன்

தமிழ் இலக்கிய இதழ்களின் வரலாற்றை மூன்று காலகட்டங்களாகப் பகுக்கலாம். அவை,

1. தொடக்க கால இலக்கிய இதழ்கள்
2. புதிய அல்லது நவீன இலக்கிய இதழ்கள்
3. பிற்கால இலக்கிய இதழ்கள்

எனப்படும். தொடக்கக் கால இலக்கிய இதழ்களான மதுரை தமிழ்ச்சங்க இதழான 'செந்தமிழ்', கரந்தைத் தமிழ்ச்சங்க இதழான 'தமிழ்ப்பொழில்', சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக இதழான 'செந்தமிழ்ச்செல்வி' முதலியவை குறிப்பிடத்தகுந்தன. இவ்விதழ்கள் அனைத்தும் இலக்கண இலக்கிய ஆராய்ச்சிகளிலும் தமிழறிஞர்களின் இலக்கிய விளக்கங்களிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டு அவற்றைப் பிரதிபலிப்பதில் கண்ணும்கருத்துமாக விளங்கின என்பதை,

> இலக்கியப் பத்திரிகைகளான செந்தமிழ், தமிழ்ப் பொழில் போன்றவற்றில் ஓர் இலக்கண முடிவு பற்றிய விவாதமோ, ஒரு பழம்பாடலுக்குப் பொருள் காண்பதில் இரு புலவர்களுக்கு இடையில் உள்ள கருத்து வேறுபாடோ, கல்வெட்டு, சாசன ஆராய்ச்சிகளோதான் இலக்கிய அம்சங்களாகக் கருதப்பட்டன[1]

என்பதிலிருந்து உணரமுடிகிறது. இவ்விதழ்களை நன்கு கற்றறிந்த தமிழறிஞர்கள் மட்டுமே விரும்பிப் படிக்க முடிந்தது. இவை பொதுமக்களையும், இலக்கிய மாணவர்களையும் கவருகின்ற வகையில் புதிய இதழியல் உத்திகளைத் தேடாமல், புலமை எல்லையிலேயே (Intellectual rank) இருந்து பணியாற்றிக் கொண்டிருந்தன.

### தமிழ்ச்செல்வி

இந்நிலையில் இவ்விதழ்கள் இலக்கிய இதழ்களைப் படிப்போரின் எண்ணிக்கையைப் பெருக்கவோ, இலக்கியச்

சிந்தனைகளை நெடிய தூரத்திற்குப் பரப்பவோ இயலாமல், தேக்க நிலையை அடைந்தன. இந்நிலையை மாற்றியமைக்கப் பிற்காலத்தில் சிலர் முயன்றனர். இவர்களின் முயற்சியின் விளைவாகப் புதிய அல்லது நவீன இலக்கிய இதழ்கள் தோற்றம் பெற்றன. இவற்றை மணிக்கொடி, கலைமகள், நவசக்தி, சந்ரோதயம், சரஸ்வதி, பொன்னி, சுதந்திரச்சங்கு, இலக்கிய வட்டம், சிந்தனை, சக்தி முதலிய இதழ்கள் என்று குறிப்பிடலாம். இவற்றில் "மணிக்கொடி நவீன இலக்கிய இதழ்களின் ஒரு மைல்கல் என்றும் வரலாற்றில் அழியாத இடத்தைப் பெற்றது என்றும் நவீன இலக்கிய இதழ்களில் முதன்மையானது"[2] என்றும் அறிஞர் சோமலே குறிப்பிடுவார்.

இவ்விதழ்கள் சிறுகதை, நாவல், இலக்கியத் திறனாய்வு, புத்தக விமர்சனம் முதலிய பகுதிகளை இலக்கிய இதழ்களுக்குரிய பகுதிகளாகக் கொண்டு விளங்கின. இதனால், தமிழில் புனைகதைகள் இலக்கியத் தகுதியைப் பெற்றன. இவ்விதழ்களில் எழுதிய எழுத்தாளர்களில் பலர் மேலைநாட்டு இலக்கியத் துறைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதினர். இதனால் தமிழ் இலக்கியம் உலக இலக்கிய உத்திகளைப் பெற்று வளர்ந்தது. இவ்விதழ்கள் இலக்கிய உருவாக்கத்தில் பல சோதனைகளையும், சாதனைகளையும் நிகழ்த்திக்காட்டின. இதனால் தமிழ் இலக்கியப் பரப்பு புதிய இலக்கிய இதழ்களால் பரந்து விரிந்தது.

பொதுமக்களின் பொழுதுபோக்குகளை மையமாகக் கொண்டும், வணிக நோக்கை முதன்மையாகக் கொண்டும் தோன்றிய பொழுதுபோக்கு இதழ்கள் பெரிய அளவில் தங்களை இம்மண்ணில் நிலைநிறுத்திக் கொண்டன. நினைத்ததை நினைத்தபடி செய்யவல்ல வலிமையோடும் விளங்கின. இப்பொழுதுபோக்கு இதழ்களை இலக்கிய இதழ்கள் எதிர்த்து நிற்கவோ, எதிர்நீச்சல் போடவோ முடியாமல் தடுமாறின. இந்நிலையைத் தொடர்ந்து தாக்குபிடிக்க இயலாத பல இலக்கிய இதழ்கள் மறைந்தன. மிஞ்சிய சில இதழ்கள் நெடுங்கடலைக் கடக்க நினைக்கும் கட்டுமரங்களைப் போலத் தள்ளாடிக் கொண்டிருந்தன.

இந்நிலையில் இலக்கிய ஆர்வலர்கள், ஒன்றுகூடிச் சந்தித்த இடங்களிளெல்லாம் தற்காலப் பொழுதுபோக்கு இதழ்களின் வியாபார நோக்கத்தையும், பெரும்பொருளை ஈட்டுவதற்காகச் செய்யும் பண்பாட்டுச் சீரழிவுகளை மக்களிடம் புகுத்தும்

இழிநிலைகளையும் குறித்துப் பேசினர். பொழுபோக்கு இதழ்கள் இலக்கிய, இலக்கணச் செய்திகளை அறவே புறக்கணிப்பதைக் கண்டு மனம் வெம்பினர்.

இலக்கியத்தை, இலக்கணத்தை, நாகரிகப் பண்பாட்டுச் செய்திகளைப் பரப்புவதற்கு இளைஞர்கள் பலர் ஒன்று கூடி ஒரு புதுவகை இலக்கிய இதழ்களை உருவாக்கி இங்கொன்றும் அங்கொன்றுமாக நடத்தினர். இவ்விதழ்கள், தொடக்கக்கால இலக்கிய இதழ்கள் நவீன இலக்கிய இதழ்கள் ஆகியவற்றின் உள்ளடக்கங்களைக் கலந்து வெளிப்படுத்தின. இதனால் இவ்விதழ்களில் பண்டைய இலக்கண இலக்கியங்களைப் பற்றிய கட்டுரைகளும், மொழிபெயர்ப்பு, நாவல், சிறுகதை, நூலாய்வு, துணுக்கு முதலிய பகுதிகளும் இணைந்து வெளிப்பட்டன. அத்தகு இதழ்களில் ஒன்று தமிழ்ச்செல்வி.

## அமைப்பு

1960ஆம் ஆண்டு வைகாசி மாதம் தமிழ்ச்செல்வியின் முதல் இதழ் வெளிவந்தது. இவ்விதழ் 'இலக்கியத் திங்கள் இதழ்' என்று தன்னை விளம்பரப்படுத்திக் கொண்டது. இவ்விதழின் தொடக்கக்கால ஆசிரியராகப் பன்மொழிப்புலவர் ப. சுந்தரவேலனார் விளங்கினார். இவரை அடுத்து மது.ச. விமலானந்தம் ஆசிரியப் பொறுப்பேற்று இதழை நடத்தினார். இவ்விதழ் தொடக்கக் காலத்தில் இருபது பைசாவிற்கு விற்பனை செய்யப்பட்டது. பின்னர் இருபத்தைந்து பைசாவிற்கு விற்பனை செய்யப்பட்டது. ஆண்டுச் சந்தாவாக ரூ.3 வசூலிக்கப்பட்டுள்ளது. இவ்விதழ் நாற்பதிலிருந்து நாற்பத்தெட்டுப் பக்கங்களைத் தன்னுள் கொண்டதாக விளங்குகிறது. தைத்திருநாள், பாரதி பிறந்தநாள் முதலிய நாட்களில் சிறப்பு மலர்களை வெளியிட்டது. இச்சிறப்பு மலர்கள் அறுபது பக்கங்களைக் கொண்டதாக விளங்கின.

இவ்விதழ் 87, வைசியர் தெரு, புதுச்சேரி என்ற முகவரியிலிருந்து வெளி வந்துள்ளது. இவ்விதழின் உரிமை யாளராகவும், பதிப்பாசிரியராகவும் திரு. திவ்வி சந்தனசாமி என்பவர் விளங்கி உள்ளார். இதழ் பதின்மூன்று செ.மீ. அகலமும், இருபது செ.மீ. உயரமும் கொண்ட டெம்மி சைஸ் ஆகும். ஐந்தாண்டுக் காலம் இப்பத்திரிகை நடந்ததாகச் செவிவழிச் செய்தியாக உணரமுடிகிறது.

ஆனால் முதலிதழ் தொடங்கி, தொடர்ச்சியின்றி முப்பத்தியேழு இதழ்கள் மட்டுமே கிடைத்துள்ளன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு இவ்விதழின் உள்ளடக்கம், குறிக்கோள், உத்தி ஆகியவற்றை இக்கட்டுரை வெளிப்படுத்த விழைகிறது.

## குறிக்கோள்

தமிழ்ச்செல்வி இலக்கிய, இலக்கணச் செய்திகளை விளக்கவும், வரலாற்றுப் பண்பாட்டுக் கூறுகளைத் தவறின்றிப் பிரதிபலிக்கவும், பிறமொழி இலக்கியங்களைத் தமிழ்ப்படுத்தவும் முயலுவதாகக் கூறுவதை,

> நாட்டின் நல்லறிஞர் கருத்துரைகளைத் தமிழ் மக்களுக்கு வழங்கி அவர்தம் மனநிலையை வளர்க்கவும், அவரைத் தனித்துச் சிந்திக்கவும், செயல்படவும் தூண்டுவதுடன், நற்றமிழ் வழக்கு மக்களிடையே வழங்கச் செய்வதும் தமிழ்ச்செல்வியின் முதல் கடமை. அவற்றிற்கான எல்லாத் தொண்டினையும் தமிழ்ச்செல்வி மேற்கொள்வாள்[3]

என்றும்

> இத்தரை வாழ்வார் அத்தனை பேரும் தமிழ்ப்பற்றுக் கொள்ளவே வேண்டும். அதற்குத் தமிழ்ச்செல்வி பணிபுரிந்தே ஆவாள்[4]

என்றும் வாசகர்களுக்குத் தன் செயலில் உள்ள உறுதியை வெளிப்படுத்துகிறது. தமிழர்கள் தமிழ்ப்பற்றும், மொழி உணர்ச்சியும் பெற்று இருக்க வேண்டும். இஃது இல்லாதவர்களைத்,

> தாய்மொழிப் பற்றில்லாதவன் நெட்டுயிர்ப் போடுற்ற பிணம்[5]

என்று வசை பாடித் தம் பயணத்தை இவ்விதழ் தொடங்குவதிலிருந்து இதன் குறிக்கோள் புலப்படுகிறது.

## உள்ளடக்கம்

இதழின் அட்டைப் படத்தை அடுத்த முதல் பக்கத்திலேயே பொருளடக்கம் அமைந்துள்ளது. இப்பொருளடக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, இதழின் உள்ளடக்கத்தை உணரமுடிகிறது. தமிழ்ச்செல்வி கவிதை, கட்டுரை, சிறுகதை,

தொடர்கதை, மொழிபெயர்ப்பு, கேள்வி-பதில், நூலரங்கம், துணுக்குச்செய்தி, ஆசிரியருக்குக் கடிதம், வடசொல்லுக்கு நிகரான தமிழ்ச்சொல் பட்டியல், இலக்கியம் வழங்கும் இனியசொல், சிறுவரரங்கம், மூலநூல் விளக்கம், கடிதம், தமிழ்த்தொண்டர் பிறந்தநாள் பகுதி, பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்கள் குறிப்பு, புலவர் அறிமுகம், மாணவர் பகுதி, புது நூலாக்கம் ஆகிய பகுதிகளைத் தன்னுள் கொண்டதாக விளங்குகிறது. இவற்றில் கவிதை, கட்டுரை என்ற இரண்டு பகுதிகளைத் தவிர மற்றவை தொடர்ச்சியின்றிக் காணப்படுகின்றன.

## கட்டுரைகள்

தமிழ்ச்செல்வியில் கட்டுரைகள் முதன்மையான இடத்தைப் பிடித்துள்ளன. ஒவ்வொரு இதழிலும் நான்கு கட்டுரைகளுக்குக் குறையாமல் இடம் பெற்றுள்ளன. இவை ஒவ்வொன்றும் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருக்க வேண்டும் என்பதில் இவ்விதழ் மிகவும் கவனமாக இருந்துள்ளதை,

> செல்விக்குக் கட்டுரை சிறுகதை அனுப்புவோர் முழுத்தாளில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் தெளிவாக எழுதியனுப்புமாறு வேண்டுகிறோம்[6]

என்பதிலிருந்து அறிய முடிகிறது. நான்கு பக்கங்களுக்கு அதிகமாகக் கட்டுரை அமையுமேயானால், அக்கட்டுரைகளைத் தொடர்ச்சியாக ஒரே இதழில் வெளியிடாமல் நான்கு பக்கங்கள் மட்டும் ஒவ்வொரு இதழிலும் இடம்பெறுமாறு கட்டுரையைப் பிரித்துப் பதிப்பித்தனர். ஓர் இதழில் பல கட்டுரைகள் இடம் பெற்றிருந்தாலும் அக்கட்டுரைகள் ஒரே வகையைச் சார்ந்ததாக இல்லாமல் பல்வேறு வகையான (இலக்கியம், இலக்கணம், வாழ்வியல் முதலிய) கட்டுரைகளாக இருக்குமாறு தேர்ந்தெடுத்துள்ளனர். தமிழ்ச்செல்வியில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளை 1. இலக்கியக் கட்டுரை, 2. இலக்கணக் கட்டுரை, 3. திறனாய்வுக் கட்டுரை, 4. அட்டைப்படக் கட்டுரை, 5. வாழ்வியல் கட்டுரை, 6. சொல் நயக் கட்டுரை, 7. பிறதுறைக் கட்டுரை என்று பல வகைகளாகப் பிரிக்கலாம்.

## இலக்கியக் கட்டுரை

சங்க இலக்கியங்கள், நீதி இலக்கியங்கள், காப்பியங்கள் முதலிய நூல்களிலுள்ள இலக்கிய நயங்களைச் சுட்டிக்

காட்டுவதையோ அல்லது அவ்விலக்கியங்களில் காணப்படும் பாத்திரங்களின் பண்பை விளக்கியோ அல்லது இலக்கியப் படைப்பாளிகளின் கவியுள்ளத்தை அறிய முற்படுகின்ற செயலையோ தாங்கி நிற்கும் கட்டுரைகள் இலக்கியக் கட்டுரைகள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வகையில் த. இராமநாத பிள்ளையின் 'சீறிய கற்பு', 'யவனர் சோனகரா', ந. கமலேசுவரியின் 'ஆறி நின்றது அறனன்று', சா. பெருமாளின் 'வள்ளுவரின் புரட்சி', மது.ச. விமலானந்தத்தின் 'பாட்டுக்கொரு புலவன்', 'தாய்த் தமிழின் தனி மாண்பு', அ. கேசவமூர்த்தியின் 'நாலடியார் தோன்றிய வரலாறு', இராமசுப்ரமணிய நாவலரின் 'வள்ளுவர் தனிக்கொள்கை', கோவை ந. சிவானந்தத்தின் 'பரணர் காட்டிய பண்பு', திரு. இராசுவின் 'இளங்கோவின் புரட்சி' முதலிய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

த. இராமநாத பிள்ளையின் 'சீறிய கற்பு' எனும் தலைப்பில் அமைந்த கட்டுரை, தமிழில் எழுந்த முதல் காப்பியமான இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டதாகும். சிலப்பதிகாரத்தின் கதைத்தலைவியான கண்ணகி கொஞ்சம்கூட இரக்கம் இல்லாமல் பாண்டியன் மாதேவியையும், மதுரை நகரையும் அழித்தது பொருத்தமில்லாதது; குறைபாடுடையது என்று பலரால் குற்றம் சுமத்தப்படுவதைப் போக்கவும் கண்ணகியின் செயலுக்குக் களங்கம் வராமல் காக்கவும் இக்கட்டுரையாளர் முயன்றுள்ளார். கடுஞ்சினம் என்பது சிறுமை குணம். கண்ணகியின் கற்பின் பெருமையை விளக்குகின்ற இக்காப்பியத்தில், கடுஞ்சினம் என்ற சிறுமை குணம் இன்றியமையாததாக விளங்குகிறது என்பதை 'அச்சிறுமை தன் உருவம் மாறிப் பெருமைக்குத் துணை நின்று, தானும் ஒரு பெருமை குணமாகின்றதை உற்று நோக்குக. . . கற்பின் திறமையைக் காட்டும் நோக்கத்தோடேயே கண்ணகி சீரிய கற்பினளாகப் படைக்கப்பட்டாள்''[7] என்று கட்டுரையாளர் கண்ணகிக்கு ஏற்படவிருந்த இழுக்கைத் தடுக்கும் நோக்கத்தோடு இக்கட்டுரையை எழுதியுள்ளார். இது போன்ற இலக்கியக் கட்டுரைகள் பல இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கட்டுரையும் அறிஞர்கள் விரும்பும் வகையில் வெளிப்பட்டுள்ளன.

## இலக்கணக் கட்டுரை

தொல்காப்பியம், நன்னூல், மொழியியல் முதலிய நூல்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட கட்டுரைகள் இலக்கணக்

கட்டுரைகள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன. இலக்கணக் கட்டுரைகளாக த. இராமநாத பிள்ளையின் 'கலப்புயிர்', தெ.பொ.மீ.யின் 'தமிழில் உட்பிணை அசைச்சொற்கள்' ஆகியன இடம்பெற்றுள்ளன. இவற்றில் இராமநாத பிள்ளையின் கலப்புயிர் (இரட்டையுயிர்) எனும் கட்டுரை உயிரெழுத்துக்கள் தனியுயிர், கலப்புயிர் என இருவகைப்படுவதில் அ, ஆ, இ, ஈ முதலியன தனி உயிர் என்றும், ஐ, ஔ என்னும் எழுத்துக்கள் ஈருயிர் சேர்ந்து ஒலிப்பதால் அவற்றைக் 'கலப்புயிர்' என்றும் ஆசிரியர் மனதில் கொண்டு இக்கட்டுரையை எழுதியுள்ளார். "தொல்காப்பியர் கூறிய கருத்தே நமக்கு ஏற்புடையது. வடநூலார் கருத்தைப் பின்பற்றிப் பவணந்தியாரும், சிவஞான முனிவர் ஆகியோர் கூறியுள்ள கருத்துக்கள் நமக்கு இழிவை உண்டாக்கக்கூடியன"[8] என்று உரைத்துள்ளார்.

தெ.பொ.மீ.யின் 'தமிழில் உட்பிணை அசைச்சொற்கள்' எனும் கட்டுரை ஆங்கிலத்தில் அமைந்துள்ள கட்டுரையின் மொழிபெயர்ப்பாகும். இக்கட்டுரையைத் தமிழில் மொழிபெயர்த்தவர் மு. மாணிக்கம். இக்கட்டுரை ஓர் இதழுக்கு நான்கு பக்கங்கள் வீதம் நான்கு இதழ்களில் வெளிவந்துள்ளது. தமிழில் பெரும்பாலான பெயர்ச்சொற்கள் வேற்றுமை உருபு ஏற்கும்முன் குறிப்பாக அசைச்சொற்களைப் பெறுவதன் மூலம் சிறிது மாற்றம் பெறுகின்றன. உதாரணமாக 'வாள்' என்னும் சொல் கருவிப்பொருளில் வருகின்ற மூன்றாம் வேற்றுமை உருபாகிய 'ஆல்' என்பதுடன் சேரும் பொழுது இடையில் 'இன்' வருகிறது. வாள் + இன் + ஆல் = வாளினால். இத்தகைய அசைச்சொற்களை டாக்டர் கால்டுவெல் 'உட்பிணை அசைச்சொற்கள்' என்ற குறிப்பிடுகிறார். ஆனால் தமிழ் இலக்கண ஆசிரியர்கள் இவற்றை, சாரியை என்று குறிப்பிடுகின்றனர். சாரியைக்கும், வேற்றுமை உருபுகளுக்கும் இடையே உள்ள உறவைப் பழந்தமிழில் காணப்படும் சொற்களைக் கொண்டு ஆராய்கிறது கட்டுரை. இலக்கணக் கட்டுரைகள் மிக அதிகமாக இடம்பெறாமல் இவ்விதழ் அமைக்கப்பட்டிருக்கிறது. வந்துள்ள கட்டுரைகளும் மிக மிக எளிமைப்படுத்தப்பட்டு படித்தவுடன் பொருள் புரிந்து கொள்ளும் வகையிலேயே எழுதப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## திறனாய்வுக் கட்டுரை

மது.ச. விமலானந்தத்தின் 'கவிதையோ கவிதை' எனும் கட்டுரை திறனாய்வுக் கட்டுரையாக விளங்குகின்றது. இதில் செய்யுள்

வடிவில் எழுதப்படுவது எல்லாம் கவிதையாகாது என்றும், கவிதை வேறு, செய்யுள் வேறு. ஆனால் துரதிஷ்டவசமாக நம்மிடத்தில் செய்யுள், கவிதை இரண்டும் ஒன்றே என்பது போல ஒரு மாயத்தோற்றம் நிலவுகிறது. அது தவறு என்பதைக் கட்டுரை விளக்குகிறது.

"எத்தனையோ செய்யுட்கள் யாப்பு முறையில் அடங்கினாலும், அவற்றில் கவிதைக் கனிவோ, கற்பனை இனிமையோ, சந்தச் சிறப்போ, உயிரோட்டம் இல்லாத வெறும் சொற்கோவையாகவோ அமைகின்றன. அதே சமயத்து எத்தனையோ உரைநடைப் பகுதிகள் யாப்பு முறையில் இல்லாவிடினும் கவிதைத் தன்மையும், கற்பனைச் சிறப்பும், சந்தப்பொழிவும், துள்ளி ஓடும் துடிப்பும் கொண்டிலங்கக் காண்கிறோம்"[10] என்று தம் திறனாய்வுக் கட்டுரையில் கவித்துவம் என்பது செய்யுளுக்கும், உரைநடைக்கும் அப்பாற்பட்ட ஒன்று என்ற தம் கருத்தை வேர்ட்ஸ்வொர்த், ஷெல்லி, ரஸ்கின், எட்கர் ஆலன்போ, டான்டன் முதலிய இலக்கியவாதிகளின் கருத்துக்களையும் அவர்கள் எழுதிய நூல்களையும் மேற்கோள் காட்டி நிறுவுகிறார் கட்டுரையாளர்.

## அட்டைப்படக் கட்டுரை

அட்டைப்படக் கட்டுரை என்பது வித்தியாசமாக விளங்குகிறது. இதழின் அட்டைப்படத்தை இரு பாகங்களாகப் பிரித்துக் கொள்கின்றனர். இதழின் மேல்பாகத்தில் தமிழன்னையின் திருவுருவத்தையும், அட்டையின் கீழ்புறத்தில் தமிழறிஞர் ஒருவரின் ஆளறி புகைப்படத்தையும் (Passport) அச்சிட்டு மேலட்டை உருவாக்கப்பட்டிருக்கிறது. ஆய்வாளருக்குக் கிடைத்த முப்பத்தியேழு இதழ்களில் நான்கு இதழ்களில் மட்டும் தமிழன்னையின் உருவப்படமும், தமிழறிஞரின் உருவப்படமும் இல்லை. மீதி உள்ள முப்பத்துமூன்று இதழ்களில் திருவள்ளுவர், உ.வே. சாமிநாதய்யர், மறைமலையடிகள், திரு.வி.க., தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், சிதம்பரநாதர், லெப. கரு. இராமநாதனார், டாக்டர் மா. இராசமாணிக்கனார், கி.ஆ.பெ. விஸ்வநாதம், கோ. சுப்பிரமணியனார், கா.பொ. இரத்தினம், ஐயம்பெருமாள் கோனார், டாக்டர் ஆர்னோலெமன், ருதின்செம்பியன், ப.மீ. சுந்தரனார், சரவண ஆறுமுக முதலியார், அ. சீனிவாச ராகவன், பாலூர் கண்ணப்ப முதலியார், அ.மு. பரமசிவானந்தம், ஜேசுதாசன், மயிலை சிவமுத்து, செங்கல்வராய முதலியார், அருணாசலனார்,

எஸ்.வி. வரதராஜ ஐயங்கார், ஆ. சபாஇரத்தினம், ந. சேது ரகுநாதன், ர. விசுவநாதன், கா. அப்பாத்துரை, வி.ஆர்.எம். செட்டியார், ராய. சொக்கலிங்கம், தா.ஏ. ஞானமூர்த்தி ஆகிய தமிழறிஞர்கள் அட்டைப்படத்தில் இடம்பெற்றுள்ளனர். இவ்வட்டைப்பட நாயகர்களின் வரலாற்றை இதழின் மூன்றாவது பக்கத்திலேயே இடம்பெறுமாறு அமைத்துள்ளனர். முதல் நான்கு அட்டைப்பட கட்டுரைகளை யார் எழுதினார்கள் என்ற குறிப்பு இல்லை. தெ.பொ.மீயின் அட்டைப்படக் கட்டுரை தொடங்கி தா.ஏ. ஞானமூர்த்தி கட்டுரை வரை 'மகிழ்ச்சி' என்ற பெயரில் எழுதப்பட்டுள்ளது. மகிழ்ச்சி என்னும் புனைப்பெயரைத் தாங்கியர் மது.ச. விமலானந்தம் என்பது குறிப்பிடத்தக்கது. அட்டைப்படக் கட்டுரைகள் ஒவ்வொன்றும் தமிழறிஞர்களின் பிறப்பு, இளமைக் காலம், கல்வி, நிகழ்த்திய சாதனைகள், எழுதிய நூல்கள், கிடைத்த விருதுகள் முதலியவற்றைக் கட்டுரை வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது.

## அனுபவக் கட்டுரை

அனுபவக் கட்டுரையென்பது ஒரு புலவர் தம் வாழ்வில் அனுபவித்த அனுபவத்தை மையமாக வைத்து எழுதப்பட்ட கட்டுரையைக் குறிக்கும் . புலவர் சுந்தரசண்முகம் என்பவர் 'குடிசை' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அவர், தம்மை ஒரு திருமண நிகழ்ச்சிக்கு வாழ்த்துரை வழங்க ஒரு பெரியவர் அழைத்தார் என்றும், அப்போது அவர் குடிசையில் வந்து தங்கி, விருந்து அருந்திச் செல்ல வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்ததைச் சொல்லி, கட்டுரையைத் தொடங்குகிறார். பெரியவர் 'குடிசை' என்று சொல்லியதை நான் 'கூரைவீடு' என்று கருதுவேன் என்று நினைத்தார். ஆனால் நான் குடிசை என்பதைக் குடியிருக்கும் வீடு என்ற பொருளிலேயே எடுத்துக்கொண்டேன். குடி+சை+இல் என்பதே 'குடிசையில்' என்று மருவி இருக்கும். பின்னர் இச்சொல் கூரைவீட்டை மட்டுமே குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது என்று குடிசை என்ற சொல்லாராய்ச்சியைப் படிப்படியாக விவரித்துச் சொல்லுகிறார்.

## வாழ்வியல் கட்டுரை

வாழ்வியல் கட்டுரையென்பது, வாழ்வில் இடம்பெறக்கூடிய நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு அமைவது. இதில்

ப. முருகனின் 'நாம் காணும் கனவு', கனகசவுந்தரி இளந்திரையனின் 'தலை', முனியாண்டியின் 'ஆயக்கலைகளும் மேய வாழ்வும்' இவ்வகையைச் சார்ந்ததாகும். 'நாம் காணும் கனவு' எனும் கட்டுரையில் மனிதனின் மண்ணுலக வாழ்க்கையில் கனவு இன்றியமையாதது என்று கனவின் தேவையைச் சுவை தோன்றக் குறிப்பிடுகின்றார். "கனவு என்பது நமது வாழ்க்கையில் உப்பு; கனவு காணாத வாழ்வு உப்பற்ற வாழ்வாகும். உணவுப்பொருளுக்குச் சுவையூட்டி உண்ண உண்ணத் தெவிட்டாது மேலும் மேலும் உண்ண வைப்பது போல கனவு வாழ்க்கைக்குச் சுவையூட்டி இன்னும் பல நாள் வாழச் செய்து விடுகிறது"[11] என்று கட்டுரையாளர் குறிப்பிடுகிறார்.

## சொல்நயக் கட்டுரை

சொல்நயக் கட்டுரையென்பது திருவள்ளுவரின் சொற்களை வியந்து வியந்து எழுதப்பட்ட கட்டுரையாகும். இக்கட்டுரைகளுக்கு வள்ளுவர் 'சொல்லோவியம்' என்ற தலைப்பு உள்ளது. இவ்வகைக் கட்டுரையைப் பன்மொழிப்புலவர் ப. சுந்தரவேலனார் எழுதியுள்ளார். இவர் 'தள்ளா விளையுள்ளும் தக்காரும்', 'எண்ணும் எழுத்தும்', 'கூத்தாட்டவை' என்ற தலைப்புகளில் கட்டுரையை இயற்றியுள்ளார். இப்பகுதியில் திருவள்ளுவரின் அமர்ந்திருக்கும் கோலம் காணப்படுகிறது. திருவள்ளுவரின் இடக்கையில் ஓலைச்சுவடியும், வலக்கை அபயம் அளிக்கும் குறிப்புடனும் காணப்படுகிறது. வள்ளுவரின் தலைப்பகுதியில் ஓர் ஒளிவட்டம் காணப்படுகிறது. திருக்குறள் உரையாசிரியர்கள் குறிப்பிடும் சொல்விளக்கத்தை எடுத்துக்காட்டி அவற்றில் ஆழ்ந்து கிடக்கும் நுவல்பொருள்களை இக்கட்டுரைகள் வெளிப்படுத்துகின்றன.

## பிறதுறைக் கட்டுரை

பிறதுறைக் கட்டுரை இலக்கியத்தையும் அறிவியலையும் இணைத்துப் பார்க்கும் கட்டுரைகள், பொருளாதாரம், தமிழ் காப்போர் வரலாறு, வரலாற்றுக் கட்டுரைகள் முதலியவைகளை உள்ளடக்கும். கா. விஸ்வநாதனின் 'தமிழ் இலக்கியத்தில் அறிவியல்', கெ. பாஸ்கரனின் 'பொருளியல் வரலாறு', கோ. முத்துப்பிள்ளையின் 'தமிழ்வேள் தா.வே உமாமகேசுவரானர்' முதலிய கட்டுரைகள் இவ்வகையைச் சார்ந்தன.

## கவிதை

தமிழ்ச்செல்வியில் கட்டுரைக்கு அடுத்த நிலையில் வைத்த மதிக்கத்தக்க பகுதியாகக் கவிதை விளங்குகிறது. தமிழ்ச்செல்வி கவிதைப் பகுதியை வாசகர்களுக்கு வித்தியாசமாக வழங்க வேண்டும் என்பதை மனதில் கொண்டு, பலவகையான உத்திகளை மேற்கொண்டுள்ளது. அவ்வுத்திகளை உரையாடல் கவிதை, கவிச்சித்திரம், தன்னுணர்ச்சிக் கவிதை என்று மூன்று வகையாகப் பகுக்கலாம்.

### உரையாடல் கவிதை

கவிதையில் உரையாடலைக் கவிதையாக மாற்றும் முயற்சி சங்க இலக்கியத்தில் காணப்படும் முயற்சியாகும். இம்முயற்சியை மேற்கொண்ட சங்க நூலாக விளங்குவது கலித்தொகையாகும். இக்கலித்தொகையில்தான் உரையாடல் கவிதைகள் பல இடம்பெற்றுள்ளன. இம்முயற்சியைத் தமிழ்ச்செல்வியும் மேற்கொண்டுள்ளது.

பொ.செ. செண்பகம் என்பவர் எழுதிய 'காதலும் கடமையும்' என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ள கவிதைத் தலைவன் தலைவியரிடையே நிகழும் உரையாடலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது.

### கவிச்சித்திரம்

கவிச்சித்திரத்தில் ஒரு பக்கம் கவிதையும் அக்கவிதையின் எதிர்ப்பக்கம் கவி நிகழ்ச்சியை விளக்கும் ஓவியமும் இடம் பெற்றிருக்கும். இப்பகுதி கண்ணுக்கும் கருத்திற்கும் விருந்தளிக்கும் பகுதியாகக் காட்சி அளிக்கிறது. கவிஞர் வேலழகனின் 'ஊஞ்சலில் உயிர்க்காட்சி' எனும் கவிதை கவிச்சித்திரமாக இடம்பெற்றுள்ளது. இக்கவிச்சித்திரத்தைப் புதுவை திரு. மோகன்ராஜ் வரைந்துள்ளார். கவிதையில் பொன்னியும் அவள் தோழியும் அம்மானை ஆடுவது போல கழங்காடுவது போல பேசிக்கொண்டே ஊஞ்லாடுகின்றனர்.

### தன்னுணர்ச்சிக் கவிதை

தமிழ்ச்செல்வியில் இடம்பெற்றுள்ள மிகப் பெரும்பான்மை யான கவிதைகள் தன்னுணர்ச்சிக் கவிதைகளாக விளங்குகின்றன.

கவிஞர்களின் உள்ளத்துணர்வுகளைப் பிரதிபலிப்பது தன்னுணர்ச்சிக் கவிதையாகும். இவ்விதழில் வந்துள்ள கவிதைகள் அழகியல் உணர்வையும், வாழ்வியல் செய்திகளையும், காதல், தன்னம்பிக்கை, சமயம், கனவு, புகழ்ச்சி, இரங்கற்பா முதலிய பலவகை உணர்வுகளை வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. கவிஞர் வேலழகனின் 'அன்பின் மகிழ்ச்சி', 'அவளும் அவனும்', எழில் முதல்வனின் 'இனிக்கும் நினைவு', தமிழன்பனின் 'பாரதிப்பாட்டு', தி.கு. நடராஜனின் 'கனவுதெய்வம்', அழகனின் 'கொதிக்காதா', 'அன்பழைப்பு', 'அவள்பாற் கூறுக', பொ.செ. செண்பகத்தின் 'களையெடுப்போம்', சாலை இளந்திரையனின் 'தமிழர் திருநாள்', குடும்ப விளக்கு, மனசை ப. கீரனின் 'தாய்மை வேண்டும்', முதலிய கவிதைகள் 'தமிழ்ச்செல்வியின்' கவிதைப் பகுதியை அழகு செய்கின்றன.

சிறுவர் அரங்கம் எனும் பகுதியில் சிறுவர்களுக்கு நன்னெறி புகட்டும் வகையில் பாரதியார், காந்தி தாத்தா, சூரியன், வெண்ணிலா, தம்பி ஓடி வா, தமிழ்படி, ஔவை முதலிய தலைப்புகளில் எளிய நடையில் இனிய சந்தத்தில் கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இக்கவிதைகளைக் கவிஞர் ஆ. அழகன் என்பவர் மட்டுமே எழுதி உள்ளது குறிப்பிடத்தக்கது. இவர் இவ்விதழின் குழந்தைக் கவிஞராக விளங்குகிறார்.

தமிழ்ச்செல்வியின் கவிதைகளில் 'இரங்கற்பா' ஒன்று குறிப்பிடத்தக்கதாக விளங்குகிறது. அமெரிக்க அதிபர் ஜான் கென்னடி சுட்டுக் கொல்லப்பட்டதற்கு வருந்திப் புலவர் கோவைவாணன் எழுதிய இரங்கற்பாவில்,

> *மாந்தர் நலம் எண்ணி மண்ணனைந்த வீரருள்ளே*
> *ஆர்ந்த நபியைப் போல் லிங்கனைப் போல்*
> *காந்தியைப் போல்*
> *ஏந்தலென பேர்நிறுத்தி இன்னுயிரை விட்டனையே*
> *மாந்தர் உளக்கோயில் நின்றொளிர்வோய் வாழியவே!*[14]

என்ற பாடலோடு கென்னடியின் புகைப்படமும் வந்துள்ளது.

## சிறுகதைகள்

தமிழ்ச்செல்வியில் சிறுகதைகள் குறைந்த எண்ணிக்கையிலேயே இடம்பெற்றுள்ளன. இச்சிறுகதைகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை,

1. சமூகச் சீர்திருத்தச் சிறுகதை
2. மொழிபெயர்ப்புச் சிறுகதை
3. சிறுவர் கதை

எனலாம்.

### சமூகச் சீர்திருத்தச் சிறுகதை

சிறுகதைகளாக ஆறு இடம்பெற்றுள்ளன. அவை தமிழன்பனின் 'இளவரசி', 'பாவா', புலவர் ந. ஜெகதீசனின் 'வடு', இர. குழந்தைவேலின் 'பூத்தக்காதல்', 'தொழிலாளியின் அதிர்ச்சி' ஆகியனவாகும். இதில் தமிழன்பனின் 'இளவரசி' என்னும் சிறுகதை இராஜா இராணி காலத்தில் நடைபெற்ற கதையை அடித்தளமாகக் கொண்டு அமைந்துள்ளது. வறுமை என்பது பொருளால் ஏற்படும் நிலையை மட்டும் கொள்ளக் கூடாது. எண்ணத்தால் வறுமை, மனதால் வறுமை, அன்பில் வறுமை, அடக்கத்தில் வறுமை முதலியவற்றில் வரும் வறுமையும் வறுமையேயாகும். என்பதை உணர்த்துகிறது. மற்ற சிறுகதைகளெல்லாம் சமூக நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டவை.

### மொழிபெயர்ப்புச் சிறுகதை

ஜப்பானிய பழங்கதையான 'பியூஜிசான்' எனும் கதை 'அழியாத மலை'யாகப் பகவதி ஜெயராமனால் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. 'செகெயினின் ஆடு' எனும் அல்போன்ச்தொதேயின் சிறுகதை செம்பியனால் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. இவ்விதழ்களில் வந்துள்ள மொழிபெயர்ப்புச் சிறுகதைகள் அனைத்தும் தாய்மொழியில் தோன்றிய கதை போன்று நேர்த்தியாக மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.

### சிறுவர் கதை

சிறுவர்களுக்கு உரிய நீதி நெறிகள் கதை வடிவில் கூறப்பட்டுள்ளன. 'இன்பன்' எழுதிய 'மூன்று உண்மைகள்', 'பேசும்

நாய்', 'மின்னுவதெல்லாம் பொன்னல்ல', 'திருந்திய முருகன்', 'உயர்ந்த உள்ளம்' முதலிய கதைகள் சிறுவர்களுக்கு நல்லொழுக்கத்தைப் புகட்டுவதற்காக எழுதப்பட்டவை.

### தொடர்கதை

தமிழ்ச்செல்வியில் ஒரு தொடர்கதை மட்டுமே இடம் பெற்றுள்ளது. வரலாற்றுத் தொடர்கதையாக அது கோவைவாணன் எழுதிய 'ஆதித்தன் காணிக்கை' என்ற பெயரில் இடம்பெற்றுள்ளது. இத்தொடர்கதை பத்து இதழ்களில் இடம்பெற்று நிறைவடைகிறது. பல்லவ வரலாற்றின் இறுதி காலகட்டத்தையும், பிற்காலச் சோழர்களின் உதயகால கட்டத்தையும் இத்தொடர்கதை களமாகக் கொண்டுள்ளது. இத்தொடர்கதை வரலாற்றின் நெருடலான பகுதியாகத் 'திருப்புறம்பியம் போரை' விளங்குகிறது.

### கடிதம்

தமிழ்ச்செல்வி வாழ்க்கையின் நெளிவுசுழிவுகளைக் கடிதத்தின் வாயிலாக வெளிப்படுத்தும் முறையைக் கையாண்டுள்ளது. தங்கைக்கு அண்ணன் எழுதும் கடிதம், மகளுக்குத் தந்தை எழுதும் கடிதம், மகனுக்குத் தந்தை எழுதும் கடிதம், மனைவிக்குக் கணவன் எழுதும் கடிதம் என்று நான்கு வகையான கடிதங்கள் இடம்பெற்றுள்ளன. தங்கைக்கு என்று தொடங்கும் கடிதத்தைப் புலவர் அருணா பொன்னுசாமி, கருநலங்கிள்ளி, சோமதேவராசன் ஆகியோர் எழுதியுள்ளனர். இவர்கள் முறையே பெண்ணின் உரிமை, சீனப்போர் தொடங்கிய வரலாறு, பெண்கல்வி, ஒழுக்கம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு கடிதம் வரைந்துள்ளனர்.

தந்தை மகனுக்கு எழுதிய கடிதத்தைத் தேவி கவிமணிதாசன் எழுதியுள்ளார். இக்கடிதம் 'ஆருயிர் அனைய அன்பு மகனுக்கு' என்று தொடங்குகிறது. மகனின் உடல்நலம் விசாரித்தும், அவன் ஐயம் கேட்கும் முறையைப் பாராட்டியும், ஊக்கப்படுத்தியும், பிறர் சொல்லுவதில் நல்லதை ஏற்றுக்கொண்டு, கெட்டதைத் தள்ள வேண்டும் என்ற பகுத்தறிவைப் புகட்டி, இலட்சியம் ஏன் வேண்டும்? அதற்கு அறிவு எப்போது துணை செய்யும்? பரம்பொருள் உள்ளது என்பதை அனுமான அளவிலாவது அறிவது எப்படி? என்பனவற்றிற்குப் பதில் சொல்லும்முகமாகக் கடிதம் அமைந்துள்ளது.

தந்தை மகளுக்கு எழுதும் கடிதத்தில் ஒரு தந்தை தன் மகளிடம், உன் தாய் இளம்வயதில் ஓர் ஆடவனைக் காதலித்தாள். அவனும் அவளைக் காதலித்தான். பின்னர் பொருளாசைகொண்டு தன் மாமன் மகளை மணந்து கொண்டான். இதையறிந்த உன் தாய் ஏமாற்றம் அடைந்து பலரால் தூற்றப்பட்டு, தற்கொலை முயற்சியை மேற்கொண்ட ஒரு மனநோயாளியாக என் மருத்துவமனை வந்தாள். முதலில் உடல்நோயைப் போக்க முடிந்த என்னால் மனநோய்க்கு மருந்து தர இயலவில்லை. பின்னர் உன் தாயின் நிலை கண்டு இரங்கி அவளையே திருமணம் செய்து கொண்டு இச்சமுதாயத்தில் அவள் இழந்துவிட்ட மதிப்பையையும், மரியாதையையும் மீட்டுத் தந்தேன் என்று கடிதம் நீள்கிறது. இக்கடிதத்தைப் 'பொற்கோ' எழுதியுள்ளார்.

மனைவிக்குக் கணவன் எழுதும் கடிதத்தில் 'மாலதி நீ என்னை மறந்து விடு' எனும் தலைப்பில் வந்துள்ளது. நான்கு இதழில் இக்கடிதம் தொடர்ச்சியாக வெளிவந்துள்ளது.

## நூலரங்கம்

நூலரங்கம் என்னும் பகுதி புது நூல்களை அறிமுகப்படுத்தும் பகுதியாக அமைந்துள்ளது. இதை மதிப்புரை என்றும் சொல்லலாம். நூலரங்கில் ஒரு நூலைப் பற்றி ஒரு பக்கம் விரித்துரைக்கிறது. நூலரங்கில் மது.ச. விமலானந்தம், சி. இலக்குவனாரின் 'தொல்காப்பிய ஆராய்ச்சி'க்கும் பழந்தமிழுக்கும், சிலம்புப் புதையல் என்ற நூலுக்கும் மதிப்புரை எழுதியுள்ளார். சோம இளவரசின் 'இலக்கண வரலாறு', அ. சக்கரவர்த்தியின் 'திருக்குறள் வழங்கும் செய்தி', புலவர் செந்துறை முத்துவின் 'வள்ளுவர் வகுத்த தெய்வம்', மு. அண்ணாமலையின் 'இலக்கிய மேடை', மு. இராமகிருஷ்ணனின் 'பிரதிபேத ஆராய்ச்சி', மனசை ப. கீரனின் 'கடை திறக்கலாம்', ச.அ. இராமசாமிப் புலவரின் 'செல்வத் திறவுகோல்' முதலிய நூல்களுக்கு மது.ச. விமலானந்தம் மதிப்புரை வழங்கியுள்ளார். மது.ச. விமலானந்தத்தின் 'சிலம்புப் புதையல்', 'பாட்டும் சபதமும்' ஆகிய நூல்களுக்குத் தண்.கி. வேங்கடாசலம், சுப்பிரமணிய ஐயர், ப.மீ. சுந்தரனார், டாக்டர் மா. இராசமாணிக்கனார் முதலியவர்கள் மதிப்புரை வழங்கி உள்ளனர். மதிப்புரை காய்தல் உவத்தலின்றி, உள்ளதை உள்ளபடி சொல்லுவதாக அமைந்துள்ளது.

## கேள்வி–பதில்

வாசகர்களின் வினாக்களுக்குப் பதில் தரும் பகுதி கேள்வி பதில் பகுதியாக இடம்பெற்றுள்ளது. இக்கேள்வி-பதில் பகுதி (27.7.60) இரண்டாம் இதழிலிருந்து இடம்பெற்றுள்ளது. இப்பகுதி முதலில் 'கேள்விக்கு வில்லவன் கோதை பதில்கள்' என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ளது. இதில் ஒரு கேடயமும், வாளும் மோதிக்கொள்வது போல படம் அமைக்கப்பட்டுள்ளது. வில்லவன் கோதை பதில்கள் ஐந்து இதழ்களில் மட்டுமே காணப்படுகின்றன. 16.7.61 தேதியில் வெளிவந்த இதழில் 'விமலன் பதில்கள்' என்று பெயர்மாற்றம் செய்யப்பட்டு இப்பகுதி வெளிவந்துள்ளது. விமலன் பதில்கள், கேள்வி சிகப்பு மையிலும் பதில் கறுப்பு மையிலுமாக வெளிப்பட்டுள்ளன. தொடர்ந்து மூன்று இதழ்களில் மட்டுமே விமலன் பதில்கள் வெளிவந்துள்ளன. பின்னர் கேள்வி-பதில் பகுதி தொடர்ச்சியின்றி இடம்பெற்றுள்ளது. அதுவும் நான்கு இதழ்களில் மட்டுமே வந்துள்ளது. பின்னர் கேள்வி-பதில் பகுதி இடம்பெறாமலேயே பல இதழ்கள் வந்துள்ளன.

கேள்வி பதில் பகுதியில் இலக்கியம், இலக்கணம், பொது அறிவு முதலிய கேள்விகளுக்குப் பதில் அளிக்கப்பட்டுள்ளது. மிக அதிகமான கேள்வி பதில்கள் இலக்கியம் சார்ந்ததாகவே அமைந்துள்ளன.

## துணுக்கு

துணுக்குச் செய்திகள் சில தமிழ்ச்செல்வியில் இடம்பெற்றுள்ளன. மிக அதிகத் துணுக்குச் செய்தியாக ஆறு துணுக்குச் செய்திகள் ஓர் இதழில் இடம்பெற்றுள்ளன. இவை அறிவை வளர்க்கும் வகையில் இடம்பெற்றுள்ளன. பழந்தமிழகத்தின் செய்திகள், எல்லை, தமிழுக்கு ஆக்கம், பாரதியின் குணம், சகிப்புத்தன்மை முதலிய செய்திகள் துணுக்குச் செய்திகளாக இடம்பெற்றுள்ளன. மனிதர்களிடம் சகிப்புத்தன்மை வளர வேண்டும் என்பதை, "ஒழுக்கம் கெட்டவர்களையும், பொய்யர்களையும் வஞ்சகர்களையும் காணும்போது கழுகு, பூனை, பாம்பு முதலியவற்றைக் கண்டு இயற்கையின் பகுதியாக உணர்ந்து மகிழ்வது போல் மகிழ வேண்டும். எல்லாம் கிளியாகவும், பசுவாகவும், நாங்கூழ்ப் புழுவாகவுமே இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது அறியாமை.

இந்த அறியாமைதான் வாழ்வில் கவலையையும் வெறுப்பையும் துயரத்தையும் உண்டாக்கும்"[15] என்ற டாக்டர் மு.வ.வின் கருத்தின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர்.

## சிறுவரரங்கம்

தமிழ்ச்செல்வியில் சிறுவரரங்கம் எனும் பகுதி விமலன் ஆசிரியராக வந்த பிறகு இடம்பெற்றுள்ளது. இப்பகுதியில் சிறுவர்களுக்கு உரிய கவிதை, கதை, இடம்பெற்றுள்ளன. ஆறு இதழ்களில் மட்டுமே சிறுவரரங்கம் பகுதி இடம்பெற்றுள்ளது.

## ஆசிரியருக்குக் கடிதம்

ஆசிரியருக்குக் கடிதம் எனும் பகுதி இரண்டாம் இதழிலிருந்து இடம்பெற்றுள்ளது. இப்பகுதியும் எட்டு இதழ்களில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இராஜாஜி, முனைவர் வ.சுப. மாணிக்கம், சி. இலக்குவனார், கி.வ. ஜகந்நாதன் முதலியோர் தமிழ்ச்செல்விக்கு ஆசீர்வாதத்தையும் வாழ்த்துக்களையும் வழங்கியுள்ளனர். சாலை இளந்திரையன், அழகிய சொக்கலிங்கம், அ.வை. தாமோதரன், கோ. தாமோதரன், எழில்முதல்வன் முதலிய இலக்கிய ஆர்வலர்கள் தமிழ்ச்செல்வியின் தொண்டை மனம் விரும்பி வரவேற்றுள்ளனர்.

## சொற்களஞ்சியப் பகுதி

சொற்களஞ்சியப் பகுதி இதழின் அரைப்பக்கத்தில் இடம்பெற்றுள்ளது. இதில் ஒரு பக்கம் வடசொல்லும், அதற்கு எதிர்ப்பக்கம் வடசொல்லுக்கு நிகரான தமிழ்ச்சொல்லும் இடம்பெற்றுள்ளது. உதாரணமாக,

அசங்கியம் - அருவெறுப்பு
அசாத்தியம் - கூடாமை, முடியாமை[16]

இப்பகுதி முதல் ஐந்து இதழ்களில் மட்டும் இடம்பெற்றுள்ளது. ஆறாவது இதழில் இலக்கியம் வழங்கும் இனிய சொற்கள் என்று ஆறு சொற்கள் இடம்பெற்றுள்ளன.

## மூலநூல் விளக்கம்

மூலநூல் விளக்கம் எனும் பகுதியில் சங்க இலக்கியத்தில் ஒன்றான 'முல்லைப் பாட்டு' முழுவதும் இடம்பெற்றுள்ளது.

இப்பாட்டின் விளக்கத்தைச் 'செம்பியன்' என்பவர் எழுதியுள்ளார். இம்முயற்சி மாணவர்களின் நலன் கருதி மேலும் குறிஞ்சிப் பாட்டு முதலிய நூல்களைப் பதிப்பிக்கும் பணி தொடரும் என்ற அறிவிப்பும் வெளிவந்துள்ளது. ஆனால் இம்முயற்சி தொடரவில்லை.

## புது நூலாக்கம்

புது நூலாக்கம் என்ற பகுதியில் 'வெண்பாக் கோவை' என்ற பகுதி இடம்பெற்றுள்ளது. இப்பகுதியில், இலக்கியத்தில் (அகப்பொருள் துறையில்) கோவையின் வளர்ச்சியைப் பற்றிக் கூறி, குடியாட்சியில் எல்லோரும் தலைவர் என்னும் நிகழ்காலச் சாயலோடு புதுமையாகச் செய்யப்பட்டுள்ளது.

"இந்நூலின் கருத்திலும், கற்பனையிலும், உவமையிலும், உள்நோக்கிலும் நூற்றுக்கு நூறு புதுமைதான். பல புதிய துறைகள் புகுத்தப்பட்டுள்ளன. காலத்திற்கு ஏலாத பழைய அகப்பொருள் துறைகள் கழிந்துள்ளன[17] என்று குறிப்பிடுவதிலிருந்து உணரமுடிகிறது. இதன் புதுமைக்கு ஒரு சான்றாகக் களவு வாழ்க்கையில், தலைவன் தலைவியைக் கண்டு அவள் மனிதப்பெண்ணா? தெய்வமா? என்று ஐயுறுவான். பின்னர் அணிகலன், கண் இமைத்தல், கால் நிலத்தில் தோய்தல், நிழல் வீழ்தல் முதலிய ஐயம் களையும் கருவிகளைக் கொண்டு இவள் மனிதப்பெண்ணே என்று துணிவு கொள்வான். இத்துணிவை 'வெண்பாக் கோவை',

> சிங்களத்து லுங்கியில்லை; சேரனாட்டு வெண்மையில்லை
> அங்கியில்லை ஆகையின் ஐரோப்பா - மங்கையில்லை
> பாரீசு பட்டில்லை பைந்தொடி முன்கொசத்தால்
> தேரில் தமிழ்நாடே தேறு[18]

இவ்வாறு அழகுற வெளிப்படுத்தியுள்ளது. இவ்வெண்பாக் கோவை முழுமையும் வெளிவந்ததா? என்பதை அறிய இயலவில்லை.

## புலவர் அறிமுகம்

புலவர் அறிமுகம் என்ற பகுதி 16.4.62ஆம் இதழில் இடம்பெற்றுள்ளது. இதில் 'புதுவைப் புலவர்கள்' என்ற தலைப்பில் இலக்கணப் புலவர் சு. குமாரசாமி இராசா, மு.த. வேலாயுதனார், த. பன்மொழிப்புலவர், இருசப்பனார், சா. இராமச்சந்திரபூபதி ஆகிய

புலவர்கள் இடம்பெற்றுள்ளனர். இப்பகுதியில் புலவர்களின் புகைப்படம், இல்ல முகவரி, அவர்களின் எழுத்தாற்றல் முதலிய சிறப்புக்களைப் புகழ்ந்து ஒரு பக்கத்தில் 'சச்சி' என்பவர் செய்துள்ளார். இம்முயற்சியும் பின்னர் கைவிடப்பட்டது.

## அறிஞர் பகுதி

தமிழ்ச்செல்வியில் 'தமிழறிஞர்களின் பிறந்தநாள் பகுதி' என்று ஒரு பகுதி ஆரம்பிக்கப்பட்டது. இதில் ஒரு மாதத்தில் பிறந்த தமிழறிஞர்களின் பட்டியல் இடம்பெற்றுள்ளது. இப்பகுதி, இதழின் முன் அட்டையின் உள்பக்க அட்டைப்பகுதியில் இடம்பெற்றுள்ளது. அம்முயற்சியும் 1961ஆம் ஆண்டு நவம்பர், டிசம்பர் 1963ஆம் ஆண்டு ஜனவரி ஆகிய மூன்று மாதங்களே தொடர்ந்தன. பின்னர் இதுவும் கைவிடப்பட்டது. ஒரே ஒரு இதழில் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர்களின் பெயர்கள், அவர்கள் பணியாற்றும் பல்கலைக்கழகம் முதலிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

## மாணவர் பகுதி

இப்பகுதி 1963ஆம் ஆண்டு நவம்பர் மாத இதழில் தொடங்கப்பட்டது. இதில் மாணவர் ஒருவரின் கவிதை ஒரு பக்கத்தில் இடம் பெறும். இப்பகுதியின் மேல்புறத்தில் மாணவர் பகுதி என்று தலைப்பிடப்பட்டுள்ளது.

## விளம்பரம்

ஒரு இதழின் வாழ்க்கைக்கு இன்றியமையாதது 'பொருள்வளம்'. அதை விளம்பரம் தேடித்தரும். தமிழ்ச்செல்வியில் இதழ் தொடங்கிய காலகட்டத்தில் ஐந்துக்கும் மேற்பட்ட பக்கங்களுக்கு விளம்பரங்கள் கிடைத்தன. ஆறு மாதங்களுக்குப் பிறகு இவ்விளம்பரங்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவாக இருந்தன. அரைப்பக்கம் விளம்பரத்தை மட்டும் தாங்கிப் பல இதழ்கள் வெளிவந்துள்ளன. இந்த விளம்பரமும் நான்கைந்து நூலாசிரியர்களின் நூலுக்குரிய விளம்பரமாகவே இருக்கிறது. ஆகையால் விளம்பரத்தின் வாயிலாகத் தமிழ்ச்செல்விக்குப் பெரும்பொருள் கிட்டவில்லை.

## உத்திகள்

தமிழ்ச்செல்வி வாசகர்களைக் கவருவதற்குப் பல இதழியல் உத்திகளைக் கையாண்டுள்ளது. அவற்றை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை 1. குறிப்பு 2. படங்கள்.

## குறிப்பு

குறிப்புரை என்பது கட்டுரை, கவிதை முதலிய படைப்புகள் குறித்து ஒரு சில வாக்கியங்களை விளக்கியுரைப்பதைக் குறிக்கும். இவ் உத்தி கட்டுரை, கவிதை ஆகியவற்றில் தமிழ்ச்செல்வியால் பயன்படுத்தப்பட்டுள்ளது. கட்டுரைகளில் 'கட்டுரை' தொடங்குவதற்கு முன்பு கட்டுரையைப் படிக்க விழையும் வாசகர்களுக்குக் குறிப்பு வழங்கப்பட்டுள்ளது. உதாரணமாக ந.சி. கமலேசுவரியின் 'ஆறிநின்றது அறனன்று' எனும் கட்டுரையைப் பற்றி "கண்ணகியின் ஆறிநின்ற கற்பையும், சீறிநின்ற கற்பையும் படம் பிடித்துக் காட்டுகிறார் கட்டுரையாளர். படித்துச் சுவையுங்கள்"[19] என்று குறிப்பிடுகிறது. இக்குறிப்பு மிகமிகச் சிறிய எழுத்தில் அமைந்துள்ளது. இக்குறிப்பைப் படிக்கும் வாசகர்கள் கட்டுரையைப் படிக்க முயலுவர். கட்டுரைகளைப் படிக்கும் பழக்கம் வாசகர்களுக்கு உருவாக வேண்டும் என்பதை எண்ணியே இம்முயற்சி செய்யப்பட்டுள்ளது.

## படங்கள்

கட்டுரை தலைப்புகளில் புகைப்படங்களையும் ஓவியங்களையும் பயன்படுத்தி அழகுபடுத்தியுள்ளனர். மது.ச. விமலானந்தத்தின் 'கவிதையோ கவிதை' எனும் திறனாய்வுக் கட்டுரை போன்று பல தலைப்புகளில் உருவமோ, இயற்கைக் காட்சிகளோ இடம்பெற்றுள்ளன.

உயர்ந்த எண்ணங்களையும், அரிய பண்பாட்டுச் செய்திகளையும் தாங்கி வந்த தமிழ்ச்செல்விக்கு வாசகர்களின் எண்ணிக்கை நாளடைவில் குறையத் தொடங்கியது. இதைத் தமிழ்ச்செல்வியில் வெளிவந்த குறிப்பைக் கொண்டு உணரமுடிகிறது. 'திட்டம் தேவை' என்ற தலைப்பு, "செல்வி தரணியெல்லாம் பரவ வேண்டும்; ஒவ்வொரு தமிழர் வீட்டிலும் செல்வி விளங்க வேண்டும்; தமிழர் வாழும் இடமெல்லாம் தமிழ்ச்செல்வி தவழ வேண்டும்."[20] இதற்குரிய திட்டத்தை வழங்குவோர்க்கு ரூபாய் பத்து சன்மானம் வழங்கப்படும் என்று குறிப்பிடுகிறது.

அறிவிப்பை அடுத்துத் தமிழ்ச்செல்வி இதழோடு டாக்டர் மு.வ.வின் 'சொல்லின் கதை' ஒருமுறையும் சாலை இளந்திரையனின் 'சிந்தனை' என்ற நூல் ஒருமுறையும் இலவசமாக வழங்கப்பட்டன. அப்படியும் வாசகர்கள் எண்ணிக்கை உயரவில்லை. இதை "இற்றை நாளில் இலக்கிய ஏடுகளை நடத்தும் நெறியில் உள்ள இன்னல்களையும், இடும்பைகளையும் ஏற்றுத் தூய தமிழ் இலக்கியத் தொண்டு கருதி அல்லலோடு அயராது உழைத்திடும் எங்கட்கு உங்கள் ஆதரவினைத் தாரீர்". அப்படியும் தமிழர்களின் நெஞ்சம் உருகவில்லை. தமிழுக்காக, தமிழ் மக்களுக்காக, அவர்களின் உயர்வுக்காக அல்லும் பகலும் உழைத்த இதழை மறந்தனர். இத்தகைய இழிநிலையைத் தமிழ்ச்செல்வி "இன்றைய தமிழகப்போக்கு உண்மை உணராத போக்கு. தமிழ் தமிழென வியந்து பேசுகின்றோம். இன்னும் தமிழ் வளர்ந்தபாடில்லை. தமிழ் பேசிடும் எவர்க்கும் இன்னும் தக்க மதிப்பு தரப்படவில்லை. தமிழ்ப்புலமை நடாத்தும் தமிழ்ப் பணியாளனுக்குத் தக்க மதிப்பு தருகின்றோம் இல்லை. இது தமிழன் தலையெழுத்து போலும்"[22] என்று கடைசி குரல் கொடுத்து ஓய்ந்தது. தமிழ் இனத்திற்காகவும், தமிழ் மக்களின் வளர்ச்சிக்காகவும், தமிழறிஞர்களின் கருத்துக்களைப் பரப்புவதற்காகவும் ஒரு பெரும் தமிழ்ப் பேராசிரியனைப் போல, தமிழ்ச்செல்வி பணியாற்றியது என்று கூறுவதில் மிகை இருக்க முடியாது.

## குறிப்புகள்

1. சோமலெ, தமிழ் இதழ்கள், ப. 1 i
2. மேற்படி., ப. 1 ii
3. தமிழ்ச்செல்வி, வைகாசி இதழ், ப. 2
4. மேற்படி., ப. 2
5. மேற்படி., ப. 2
6. தமிழ்ச்செல்வி, 16.8.62, ப. 45
7. த. இராமநாத பிள்ளை, சிறிய கற்பு (தமிழ்ச்செல்வி), வைகாசி, ப. 8
8. த. இராமநாத பிள்ளை, கலப்புயிர், தமிழ்ச்செல்வி, 15.6.61, ப. 39
9. மது.ச. விமலானந்தம், கவிதையோ கவிதை (தமிழ்ச்செல்வி), வைகாசி, 1960, ப. 18

10. மேற்படி, ப. 18
11. ப. முருகன், நாம் காணும் கனவு, தமிழ்ச்செல்வி, வைகாசி, 1960, ப. 24
12. பொ.செ. செண்பகம், காதலும் கடமையும், தமிழ்ச்செல்வி, 16.6.63, ப. 11
13. கவிஞர் வேலழகன், ஊஞ்சலில் உயிர்க்காட்சி, தமிழ்ச்செல்வி, வைகாசி, 1960, பக். 22-23
14. புலவர் கோவைவாணன், இரங்கற்பா, தமிழ்ச்செல்வி, 16.12.63, பக். 7-8
15. தமிழ்ச்செல்வி, 16.6.62, ப. 28
16. தமிழ்ச்செல்வி, வைகாசி, 1960, ப. 38
17. தமிழ்ச்செல்வி, 16.12.63, ப. 18
18. மேற்படி
19. தமிழ்ச்செல்வி, 27.7.60, ப. 9
20. தமிழ்ச்செல்வி, 16.4.62, ப. 48
21. தமிழ்ச்செல்வி, 16.6.63, ப. 3
22. மேற்படி., ப. 3

# தீபம்

## சுப்புலட்சுமி இராசமுருகன்

இலக்கியம் என்பது இலக்கினை இயம்புவது. இலக்கியத்தையே இலக்காகக் கொண்டு நா. பார்த்தசாரதி அவர்கள் தொடங்கியது 'தீபம்' - மாத இதழ். 1965ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் முதல் இதழ் வெளிவந்துள்ளது.

1965லிருந்து 1975வரையிலான பத்தாண்டு கால இதழ்கள் வாயிலாக தீபம் குறித்த செய்திகளைச் சுருக்கமாகத் தருவது இக்கட்டுரை.

### தொடங்கப்பெற்ற காலச்சூழல்

தமிழ் வாசகருக்கும், இலக்கிய ஆர்வலருக்கும் அறிவையும் இன்பத்தையும் ஒருசேர ஊட்டும்பொருட்டு நா. பார்த்தசாரதி தீபத்தைத் தொடங்கினார். 'கல்கி' இதழிலிருந்து விலகியதும் இப்பணியில் அவர் ஈடுபட்டார்.

இலக்கிய இதழ்கள் நிலைக்க முடியாமல் தடுமாறிய சூழலில், சிறந்த இலக்கிய இதழொன்றை மறுமலர்ச்சிப் பாதையில் அமைக்க விழைந்தார் நா. பார்த்தசாரதி என்பதை அவர்தம் இதழ்களிலிருந்து அறிய முடிகிறது.

> மெய்வருத்தம் பாராமல் பசி நோக்காமல் கண் துஞ்சாமல் எவ்வெவர் தீமையும் போட்டியும் பொறாமையும் பாராமல் கருமமே கண்ணாக நான் என் 'தீபத்தை' மேலும் மேலும் நன்றாகப் பிரகாசிக்கச் செய்யும் காரியங்களைச் செய்து விடாப்பிடியாக முயன்று கொண்டிருக்கிறேன். எனக்கு இன்றும்-இனி என்றும் இது ஒரு நோன்பு-தவம்.

என்று நா. பார்த்தசாரதி தீபம் இரண்டாவது இதழ்த் தலையங்கத்தில் கூறுகிறார். இதழ்ப் பணியை ஒரு நோன்பாகக் கருதும் அவருடைய உயர்ந்த எண்ணம் - தம் இலக்கிய இதழை உலகிற்கோர் எடுத்துக்காட்டாய் நிற்கச் செய்யும் வேட்கையை, ஆர்வத்தை, தாகத்தை, தளராத உறுதியைப் பறைசாற்றுகிறது.

1967 ஜூலை மாதத் தலையங்கத்தில்,

> தமிழகம் முழுவதும் உள்ள தரமான எழுத்தாளர்களும் இலக்கிய அன்பர்களும், நல்ல பத்திரிகையை நாடிப் படிப்பவர்களும் ஓர் இலக்கியச் சூழ்நிலையை உருவாக்க வேண்டும்

என்கிறார். தமிழ்மொழியின் தரமும், அதைத் தரும் எழுத்தாளரின் தரமும், இவற்றால் உயர்த்தப்பட வேண்டிய வாசகனின் தரமும், இவையனைத்தும் ஒருங்கிணைந்த இதழியலின் தரமும் என்றென்றும் உயர்ந்து நிற்பதைத் தம் தலையாய நோக்காகக் கொண்டார் நா. பார்த்தசாரதி.

1965 ஏப்ரல் முதல் 1979 செப்டம்பர் வரை தீபத்தின் ஆசிரியராயிருந்த நா. பார்த்தசாரதி, வல்லிக்கண்ணன், ஆ. மாதவன், நாஞ்சில் நாடன் ஆகியோரிடம் இதழ்ப் பொறுப்பை ஒப்படைத்து, தினமணிக்கதிரின் ஆசிரியர் பொறுப்பேற்றார்.

தீபத்தின் அட்டைப் படமும் உள்ளடக்கப் பக்கத்தில் வடிவமைக்கப்பட்டுள்ள வரைபடமும் எளிமையாக ஆனால் கலைநயமிக்கதாக உள்ளதைக் காணமுடிகிறது.

> எண்ணிய முடிதல் வேண்டும்
> நல்லவே எண்ணல் வேண்டும்
> திண்ணிய நெஞ்சம் வேண்டும்
> தெளிந்த நல்லறிவு வேண்டும்

என்ற பாரதியின் வரிகள் ஒவ்வோர் இதழிலும் முகப்பு வரிகளாக இடம் பெற்றுள்ளன. அதோடு,

> தீபத்தில் வெளியாகும் கதை, கட்டுரைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் யாவும் கற்பனையே. ஆனால் அதே சமயத்தில் அவை அவற்றைப் படைத்த இலக்கியச் சிற்பிகளின் பொறுப்பு என்கிற கம்பீரமான பலத்தைச் சார்ந்து நிற்பவையுமாகும்.

என்ற மாறுபட்ட, துணிவான அறிக்கையும் இடம்பெறக் காணலாம். இந்தத் துணிவுக்குக் காரணம் தம் இதழில் இடம்பெறும் எழுத்துக்கள் மீதும் எழுத்தாளர்கள் மீதும் ஆசிரியருக்கிருந்த நம்பிக்கை எனலாம்.

தீபத்தின் விலை ரூ.1; வருடச் சந்தா ரூ.10; அரையாண்டுச் சந்தா ரூ.5. 1965 ஏப்ரலிலிருந்து 1983 நவம்பர் வரை இதழின் விலை ரூ.1 ஆகவே இருந்து வந்துள்ளது. ஏறத்தாழ பதினெட்டு ஆண்டுகள் விலை ஏற்றாமலே இதழை நடத்தி வந்துள்ளமை பெரும் சாதனையாகும். எண்பது பக்கங்கள் கொண்ட இதழாக வந்த தீபம், ஆண்டு மலர், தீபாவளி, பொங்கல் மலர்களில் பக்க எண்ணிக்கை அதிகமாகவும், சில மாதங்கள் எண்பதை விடக் குறைந்தும் மாறிமாறி வந்துள்ளன.

முதல் இரு ஆண்டுகளுக்கான ஆண்டு மலர்கள் தனியே வெளிவந்துள்ளன. பின்னர் ஒவ்வோர் ஆண்டின் ஏப்ரல் இதழும் கூடுதல் பக்கங்களுடன் வெளிவந்துள்ளது.

## பொருளடக்கம்

படைப்பிலக்கியங்களுக்குச் சிறப்பிடம் வழங்கியும், தரமான இலக்கியங்களை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தியும், இலக்கிய விமரிசனப் பரப்பினை விரிவுசெய்தும், இலக்கிய வரலாற்றினை எழுதுவித்தும் - இலக்கிய இதழ் வளர்ச்சியோடு தமிழ் இலக்கிய வளர்ச்சியிலும் தீபம் பெருந்தொண்டாற்றியுள்ளது.

'இலக்கியம்' என்பதைக் குறுகிய வட்டத்திற்குள் நுழைக்காமல் பரந்துபட்ட பார்வையை வாசகர்களுக்குத் தம் இதழ் மூலம் வழங்கினார் நா. பார்த்தசாரதி. இது ஆசிரியரின் பரந்துபட்ட நோக்கையும் மறுமலர்ச்சி வேட்கையையும் எடுத்தியம்புகிறது.

சிறுகதைகள், புதினங்கள், கவிதைகள், கட்டுரைகள் என்று அனைத்திலும் ஆழமான சிந்தனையோட்டம் செழித்து நிற்பதைக் காண முடிகிறது. வாசகர், படைப்பாளர், விமரிசகர் ஆகிய மூவரும் பங்கேற்பதற்கு ஏற்புடைய இதழ்த்தளமாகத் தீபம் அமைந்தது. இதை உணர்ந்த படைப்பாளர்களின் சமுதாயப் பொறுப்புடைய தரமான ஆக்கப் படைப்புகள் இதழில் வெளிவரலாயின.

புதினங்களை-சரித்திரத் தொடர் நாவல், சமூகத் தொடர் நாவல், குறுநாவல் என்று வகைப்படுத்தி, ஒவ்வோர் இதழிலும் மிளிரச் செய்தது தீபம்.

கு. அழகிரிசாமி, அகிலன், ஜெயகாந்தன், சி.சு. செல்லப்பா, ஆர். சூடாமணி, அசோகமித்திரன், வல்லிக்கண்ணன், நீல. பத்மநாபன், இந்திரா பார்த்தசாரதி என்று தீபம் சிறந்த படைப்பாளர்களின் சிறுகதைகளை அளித்து வாசகரை மகிழ்வித்தது. தரமான

சிறுகதைகளை இனம்கண்டு தெரிவுசெய்து சுவையறியும் திறனை வாசகர்கள் பெறவேண்டுமென்ற ஆசிரியரின் பரந்த நோக்கை இது படம்பிடித்துக் காட்டுகிறது.

'பொன்முடி' என்ற புனைபெயரில் நா. பார்த்தசாரதி எழுதிய 'கொய்யாப்பழமும் கைத்தறித்துண்டும்' (மே 67), 'கங்கை இன்னும் வற்றிவிடவில்லை' (ஆகஸ்டு 67) என்ற சிறுகதைகள் கிண்டலும் கேலியும் நையாண்டியுமாக அரசியலமைப்பின் கோளாறுகளைக் கண்முன் நிறுத்தும். சார்வாகனின் (இயற்பெயர்-ஹரிஸ்ரீனிவாசன்) 'புதியவன்' என்ற சிறுகதை (ஏப்ரல் 67), வேலையில்லாத இளைஞன் ஒருவனின் பகற்கனவை, நடுத்தரவர்க்கத்தின் உறவுகள், மனோநிலைகளை இயம்பும். ஆதவனின் 'இண்டர்வியூ' என்ற சிறுகதை, மனித நேயத்தை வலியுறுத்தும். நீல. பத்மநாபனின் 'தரித்திரவாசி' என்ற சிறுகதை, பொறுப்பற்ற சமுதாய உணர்வை நகைச்சுவையாய் நையாண்டி செய்யும். இந்திரா பார்த்தசாரதியின் 'ஒரு புதிய சமுதாயம் உருவாகிறது' (டிசம்பர் 73) என்று இதழின் சிறுகதைகளை அடுக்கிக் கொண்டே போகலாம்.

கி. ராஜநாராயணன் தொகுத்தளித்த தமிழ்நாட்டு நாடோடிக் கதைகளும், கு. அழகிரிசாமி தொகுத்த குட்டிக்கதைகளும் சிறுவர்களையும் பெரியவர்களையும் ஈர்க்கவல்லன.

'காலத்தை வென்ற சிறுகதைகள்' என்ற பெயரில் தனித்து ஒளிரும் சிறுகதைகள் தரப்பட்டன. எம்.வி. வெங்கட்ராமின் 'கோடரி' (ஜூன் 67), கு. அழகிரிசாமியின் 'வெந்தழலால் வேகாது' (பிப். 68) போன்றவை இதில் இடம்பெற்றன. பொற்றேகாட் மலையாளத்தில் எழுதிய 'வெறிநாய்' என்ற சிறுகதை இவ்வரிசையில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

தமிழ் வாசகர்கள் பல மொழிகளின் கதைப்பாணியை அறிந்திட, பல மொழிபெயர்ப்புச் சிறுகதைகளையும் தொடர் கதைகளையும் தீபம் வெளியிட்டது. குஜராத்தி, உருது, வங்காளம், இந்தி, கன்னடம், மலையாளம் என்று பிற இந்திய மொழிக் கதைகள் வாயிலாக அந்தந்தச் சமூகம் சார்ந்தவற்றை அறிய வழிவகை செய்தது.

இந்திய மொழிகள் மட்டுமல்லாமல் சர்வதேசப் படைப்புக்களையும் வாசகருக்கு அளித்த பெருமை தீபத்திற்கு உண்டு. ஜான் பால் சார்ட்ரே எழுதிய 'ஈக்கள்' (The Flies) என்ற புதினமும், ஜார்ஜ் ஆர்வெல்லின் 'மிருகப் பண்ணை'யும் (Animal Farm)

குறிப்பிடத்தக்கவை. உலகத்தரமான இலக்கியச் சிந்தனைகள் தமிழிலும் பெருக வழியமைத்துள்ளது தீபம்.

மணிவண்ணன் என்ற புனைபெயரில் நா. பார்த்தசாரதி எழுதிய 'நெஞ்சக்கனல்', ஆர். சூடாமணியின் 'தீயினில் தூசு', இந்திரா பார்த்தசாரதியின் 'தந்திரபூமி', 'பொய் முகங்கள்', நீல. பத்மநாபனின் 'மின் உலகம்', தி.ச. ராஜுவின் 'இசைக்க மறந்த பாடல்', ஆதவனின் 'காகித மலர்கள்' போன்றவை தீபத்தில் தொடர்கதைகளாக வந்தவை. குடும்பம், அரசியல், சமூகம் என்று பல்வேறு தளங்களில் தனிமனிதனுக்கு ஏற்படும் பல்வேறு சிக்கல்களை இப்படைப்புகள் களமாக்கியிருந்தன.

ஆதவன், இந்திரா பார்த்தசாரதி ஆகியோரைப் புதின உலகுக்கு அறிமுகப்படுத்தியது தீபமேயாகும். அதுவரையில் சிறுகதைகள் மட்டுமே எழுதிவந்த இந்திரா பார்த்தசாரதிக்கு முதன்முதலாகத் 'தந்திர பூமி' எனும் புதினத்தைத் தொடர்கதையாக எழுதும் வாய்ப்பளித்து, ஒரு சிறந்த புதின ஆசிரியரைத் தமிழ் வாசகருக்கு அளித்தது தீபம்.

படைப்புகள் குறித்த விரிவான செய்திகள் கட்டுரையில் அலசப்பட்டுள்ளன.

### கவிதைகள்

எழுபதுகளுக்கு முன்னர் வெளிவந்த தீபம் இதழ்களில் பெரும்பாலும் மரபுக் கவிதைகளே இடம் பெற்றுள்ளன. '72 வரையிலும் மரபுக் கவிதைகளின் ஆதிக்கமே தெரிகிறது. வெண்பாவின் ஈற்றடி தந்து பாடல் பாடவைத்துப் பரிசளித்தும் வந்தது.

'இலக்கிய மேடை' என்ற கேள்வி-பதில் பகுதியில், வாசகர்கள் ஆசிரியருக்கு ஈற்றடி தந்து வெண்பா எழுதச் செய்துள்ள சுவாரஸ்ய அம்சமும் தீபத்தில் உண்டு.

ந. பிச்சமூர்த்தி, ஜெயகாந்தன், நா. காமராசன், மு. மேத்தா, ஈரோடு தமிழன்பன், கலாப்ரியா என்று கவிஞர்களின் பட்டியல் நீள்கிறது. மொழிபெயர்ப்புக் கவிதைகளும் தீபத்தில் உண்டு.

வல்லிக்கண்ணனின் 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற கட்டுரைத் தொடர்-இளம் கவிஞர்களைப்

புதுக்கவிதை எழுதத் தூண்டிற்று. புதுக்கவிதைகளின செல்வாக்கு விரைவாகப் பரவியதற்குத் தீபம் பெரும் பொறுப்பு வகித்தது.

## இலக்கிய விமரிசனங்கள்

தீபத்தின் சிறந்த பகுதிகளாக அன்றும் இன்றும் என்றும் புகழப்படுபவை அதன் இலக்கிய விமரிசனங்கள், பட்டிமன்றம், இலக்கியச் சந்திப்பு, நானும் என் எழுத்தும், இலக்கிய மேடை, ஆறங்கம், அஞ்சறைப் பெட்டி, இவர்கள் இப்படிக் கருதுகிறார்கள் என்ற பகுதிகள் இலக்கிய ஆர்வலர்கள் - படைப்பாளிகள், விமரிசகர்கள், வாசகர்கள் என்று அனைவரும் பங்கேற்கும் வகையில் தீபம் அமைத்துக் கொடுத்த வாய்ப்புகள்.

ஆழ்ந்த இலக்கிய அறிவும் விமரிசன நோக்கமுடைய அறிஞர்கள் வாயிலாகச் சிறந்த கருத்துக்களைத் தமிழுலகிற்கு வழங்கியது 'பட்டிமன்றம்' என்ற பகுதி. ஒரு தலைப்பை ஒட்டியும் வெட்டியும் அறிஞர்கள் பேசி முடிபுகள் காண்பது இது. எடுத்துக்காட்டாக - 'தமிழில் நாடகம் வளர்ந்திருக்கிறதா வளரவில்லையா' என்பதில் - தமிழில் நாடகத்தின் நிலை ஆழமாக அலசப்படுகிறது.

இலக்கியச் சந்திப்புகளில் மணிக்கொடி சீனிவாசன், டி.எஸ். சொக்கலிங்கம், நா. வானமாமலை, தொ.மு.சி. ரகுநாதன், கி. சந்திரசேகரன், க. கைலாசபதி, கன்னட எழுத்தாளர் கே.வி. புட்டப்பா போன்ற பல அறிஞர்களின் பேட்டிகள் பாங்குற இடம்பெறுகின்றன.

சாகித்திய அகாதமியைப் பற்றிய குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளிக்க அதன் செயலாளர் டாக்டர் பிரபாகர் மாச்வேயைப் பேட்டி கண்ட சந்திப்பு போன்ற வேறுபட்ட சந்திப்புகளும் இதிலடக்கம். மும்பை 'டைம்ஸ் வீக்லி' இதழிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட சந்திப்பு இது. எவ்வகையிலாவது முக்கியச் செய்திகளை வாசகர்களுக்கு அளித்து அறிவூட்டவேண்டுமென்ற விழைவையே இது காட்டுகின்றது.

'நானும் என் எழுத்தும்' என்ற பகுதி படைப்பாளர்களிடம் தங்கள் படைப்புகளையே விமரிசிக்கச் சொல்லும் புதுமைப் பகுதி.

"எழுத்தின் மூலம் நான் எப்படி இந்தச் சமுதாயத்தைப் பார்க்கிறேன் அல்லது சமூகத்தை என் எழுத்துக்கள் எப்படிப் பார்க்கின்றன என்பதை ஓரளவு உங்களுக்கு விளக்கிக்

சொல்லுவதுதான் இந்தத் தலைப்பின் பொருள் என்று கொள்ளமுடியும்" என்கிறார் நா. பார்த்தசாரதி.

"எழுத்து எனக்கும் என் மனைவிக்கும் என் ஆறு குழந்தைகளுக்கும் சோற்றுப்பானை. என்னுடைய சிருஷ்டிகளில் நான் எதைக் கொண்டு வருகிறேன் என்பதில் அரிசியும் கலந்து இருந்தது... இதற்காக நான் எத்தனையோ பத்திரிகைகளில் எப்படியெல்லாமோ ஒத்துப் போனேன்" என்று வாசவன் யதார்த்தம் உரைத்துச் சிந்திக்க வைக்கிறார்.

'ஆறங்கம்', 'அஞ்சறைப் பெட்டி' பகுதிகளில் அறுவரும் ஐவருமாக முறையே பங்கேற்றுப் பேசுகின்றனர். கவிஞர் ஆறங்கம், நூலகர் ஆறங்கம், ஆசிரியர் ஆறங்கம், முதல்வர் ஆறங்கம், மாணவர் ஆறங்கம் என்று ஒரே நிலையிலுள்ளவர்களைக் கூட்டிப் பதிலளிக்கச் செய்கிறது தீபம். எடுத்துக்காட்டாக, 'உங்களைக் கவர்ந்த பாத்திரம் எது?', 'நீங்கள் விரும்பிப்படித்த கவிதைத் தொகுதி எது?' போன்ற வினாக்களை மாணவ நிலையிலுள்ள வாசகரிடம் எழுப்பிப் பதில்கள் பெறப்பட்டுள்ளன. ஆறுபேரையும் தனித்தனியாகப் பேட்டி எடுக்கிறார்கள் - அதுவும் ஒரே கட்டுரையில். மினி பேட்டிகள் என்று இதைச் சொல்லலாம்.

இலக்கிய மேடை என்பது வாசகர்களின் கேள்விகளுக்கு ஆசிரியர் பதிலளிக்கும் பகுதி. இலக்கியம் மட்டுமல்லாமல் அரசியல், சமூகம், இதழியல் என்று பல்வேறு களங்களிலும் வினாக்களைத் தொடுத்துள்ளனர் வாசகர்கள். நா. பார்த்தசாரதியின் துடுக்கும், துணிவும், மதிநுட்பமும் நிறைந்த பதில்கள் சுவை பயப்பன.

எடுத்துக்காட்டாக,

கே: பிரபல பத்திரிகைகளின் பழைய இதழ்களுக்கு 'புக் வால்யூ' உண்டா? இல்லையா? என்ற வாசகர் கேள்விக்கு,

"பாம்பே ஸ்வீட் ஸ்டாலில் பக்கோடா மடிப்பதற்கு உபயோகப்படும் தாள்களை மதிப்பில்லாதவை என்றா கூறிவிட முடியும்? தமிழ்ப் பத்திரிகைகளில் சிலவற்றுக்கு மணம் வருவதே அவற்றில் காராபூந்தி பொட்டலம் மடிக்கப்படும் போதுதானே?"

என்று பதில் தருகிறார் நா. பார்த்தசாரதி.

இதில் தென்படும் கிண்டலையும் நையாண்டியையும் மீறி, தம் துறைமீது அளவிலாக் காதலுடைய இதழாளரின் ஆழ்மனத்து ஆதங்கமும் வருத்தமும் தெரிகிறது.

தீபத்தின் திறனாய்வுகள் ஆய்வியல் அறிஞர்களின் தரமான சிந்தனைகளை வாசகருக்கு விருந்தாக்கியளித்தன. தொமுசி. ரகுநாதனின் 'பாரதியின் மாயையைப் பழித்தல் ஒரு விசாரணை', 'பாரதியும் தேசிய ஒருமைப்பாடும்', எம்.கே. மணிசாஸ்திரியின் 'தமிழ் நாடகத்தின் இன்றைய நிலை?' (ஜனவரி 73) போன்றவை இவை.

டாக்டர் ஆல்பர்ட் பி. ஃபிராங்க்ளினின், 'இலக்கியச் சிந்தனை' சார்பில் சென்னையில் 14.4.1971 அன்று படித்த முழுக் கட்டுரை ஆர். சுவாமிநாதனால் தமிழாக்கம் செய்யப்பட்டு, தீபத்தில் இடம்பெற்றுள்ளது. கட்டுரையின் தலைப்பு 'தற்காலத் தமிழ் இலக்கியம்-விண்வெளியிலிருந்து சில கருத்துக்கள்'. இதற்கு விளக்கம் தரும் வகையில், 'நான் ஒரு அந்நியன் என்று என்னளவில் உணர்ந்துள்ளதை உங்கள் நடுவில் வலியுறுத்தவே விண்வெளியிலிருந்து சில கருத்துக்கள் என்று தலைப்பிடப் பட்டிருக்கிறது' என்று அவரே கூறுகிறார்.

சுவைமிகுந்த அந்தக் கட்டுரையிலிருந்து சில பகுதிகள்-

"நான் இந்த ஆராய்ச்சியை முதலில் மேற்கொண்டபோது என்னுடைய நலம் விரும்பும் தமிழர் ஒருவர் 'வெற்றிகரமான' ஆசிரியர்களை மட்டும் படிக்குமாறு எனக்கு அறிவுரை கூறினார். யாரும் கேள்விப்படாத எழுத்தாளர்களை எடுத்துக்கொண்டு காலவிரயம் செய்வானேன் என்று கேட்டார் அவர். ஆனால் அவருடைய அறிவ்ரைக்கு மாறாக நான் உயர்தரமான எழுத்தைத் தேடிச்சென்று கண்டுபிடித்திருக்கிறேன்" என்கிறார்.

அமெரிக்காவிலிருந்து கிளம்பும் முன்பே 'நடை' என்ற சிறிய, நின்றுவிட்ட ஏட்டில் 'இழப்பு' என்ற கதையை எழுதிய ந. முத்துசாமி என்ற ஆசிரியரைக் குறித்துவைத்து, தமிழகத்தில் தேடியுள்ளார் ஃப்ராங்க்ளின். அவர் கூறுகிறார்:

> ஆனால் நான் முத்துசாமியையும் அவருக்குச் சமமானவர்களையும் பற்றி அறிய தமிழ்நாடு வந்தபோது முத்துசாமியையோ, அவர் கதையையோ, அது வெளியான சிறிய ஏடான நடையைப் பற்றியோ அறிந்த சமூகத்தின் எப்பிரிவும் இங்கு இல்லை என்பதைத் தெரிந்து கொண்டேன். தமிழ் மத்தியதர சமூகக் கூட்டங்களில் Updike, Cheever, Capote, Saturday Review பற்றிப் பேசுவது சுலபமாயிருந்தது; நடை

> பற்றியோ முத்துசாமி என்ற எழுத்தாளர் பற்றியோ அவர்கள் எதுவும் கேள்விப்பட்டதில்லை

என்று ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவிக்கிறார்.

தீபத்தின் திறனாய்வுச் செழுமையின் தரத்திற்கு இது ஒரு சிறிய எடுத்துக்காட்டுத்தான்.

அதே கட்டுரையில்-

> நா. பார்த்தசாரதி, எழுத்தாளராகவும் பத்திரிகை ஆசிரியர் என்ற முறையிலும் முத்துசாமி கோஷ்டியினரின் உயர்ந்த இலக்கிய ஆர்வத்திற்கும் மற்ற ஜனரஞ்சக பத்திரிகைகளின் ரசனையற்ற ஃபார்முலா இலக்கிய முயற்சிகளுக்கும் நடுவே உள்ள அகழிக்குப் பாலம் அமைக்க முயற்சிப்பதாய்த் தோன்றுகிறது. ஆயின் இதற்குப் பெருமுயற்சி தேவை.

என்று நா. பார்த்தசாரதியின் இலக்கியப் பணியையும் இதழியல் பணியையும் அவ்வறிஞர் சுட்டியிருப்பது பெருமைக்குரியது.

தமிழ்நாட்டின் பிரபல வார இதழ்களான ஆனந்தவிகடன், குமுதம், தினமணிக்கதிர் ஆகியவற்றில் வெளிவந்த சிறுகதைகள் ஒவ்வோராண்டும் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன.

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் கருத்தரங்கக் கட்டுரைகள் பலவும் வாசகரின் அறிவுப் பயன் கருதிச் சுருக்கமான அளவில் தரப்பட்டுள்ளன (பிப். 1968).

சுதந்திரத்திற்குப்பின் இந்தி இலக்கிய வளர்ச்சி, சுதந்திரத்திற்குப்பின் குஜராத்தி இலக்கியம், சுதந்திரத்திற்குப்பின் தெலுங்கு இலக்கிய வளர்ச்சி என்று பன்மொழி இலக்கிய நோக்கில் தனித்தடம் பதித்துள்ளது தீபம்.

பி.எஸ். ராமையாவின் 'மணிக்கொடிக் காலம்', வல்லிக்கண்ணனின் 'சரஸ்வதி காலம்' ஆகிய தொடர்க்கட்டுரைகள், தனிச்சிறப்புடைய அவ்விதழ்களினால் ஆக்கம்பெற்ற இதழுலகத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

அகிலனின் 'எழுத்தும் வாழ்க்கையும்', சி.சு. செல்லப்பாவின் 'எழுத்து அனுபவங்கள்' ஆகியன அவர்கள் வாழ்க்கைப்பாதையைச்

சொல்வதுடன் படைப்பாளனுக்கும் சமூகத்திற்குமுள்ள உறவை வாசகர்களுக்குப் புலப்படுத்துபவை.

புதிய புத்தகங்கள் பற்றிய மதிப்புரையும், 'எனது குறிப்பேடுகள்' என்ற பகுதியும் இலக்கிய நூற்பரப்பைத் தெரியப்படுத்தி, படிப்போர் சுவைத்திறனை வளர்க்கின்றன.

## முடிவுரை

இலக்கியம் என்ற சொல்லுக்கும் புதிய பரிமாணத்தைத் தம் இதழின் உள்ளடக்கம் வாயிலாக நா. பார்த்தசாரதி ஒளியூட்டிக் காட்டியுள்ளார். அவர் காலத்தில் மட்டுமல்லாமல் எக்காலத்திற்கும் நலம் பயக்கும் விரிந்த பரப்புடைய புதிய பாதையை அமைத்த பெருமை அவரைச் சேரும். சிறுகதை, புதினம், கவிதை என்ற இப்படைப்பிலக்கியங்களோடு தரமான வேறுபட்ட கோணங்களில் தனித்து மிளிரும் கட்டுரைகளை வழங்கியது தீபம். இலக்கியம், இதழியல், வரலாறு, வாழ்க்கைப் பாதைகள், பெரியோர் சிந்தனைகள், மொழி, அறிவியல், அரசியல் என்று பல்வேறு துறைகளையும் தன்னிடம் தாங்கி அணையா விளக்காகத் தீபம் ஒளிர்கிறது.

நேற்று காலையில், வாழ்த்துரை வழங்கிய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மேலாண்மை இயக்குநர் ஐயா. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள், 'திங்கள்' இதழ் குறித்துப் பேசுகையில் அதன் ஆசிரியர் கே. ராமநாதன் அதன் இறுதி இதழான பதினோராவது இதழில்,

> இது போன்ற இதழ்களை வரவேற்கும் ஆர்வமும் பக்குவமும் தமிழ் வாசகர்களுக்கு இல்லாத காரணத்தால் நிறுத்துகிறேன். இனி அப்படி ஒரு நிலை வந்தால் மறுபடி தொடங்குவேன்

என்று ஆழ்ந்த வருத்தம் தெரிவித்து இதழை முடித்தார் என்று குறிப்பிட்டார். இது தமிழனின் தோல்வியே தவிர, அந்த ஆசிரியரின் தோல்வியே அல்ல என்று கூறினார்.

இதையே, 1970 ஏப்ரல் இதழ்த் தலையங்கத்தில் நா. பார்த்தசாரதி,

> வெறும் அனுதாபத்தையும் புகழையும் மட்டும் நல்ல பத்திரிகைகளுக்குத் தந்துவிட்டு, ஆதரவையும்

> பணத்தையும் சுமாரானவற்றிற்கே தொடர்ந்து அளிப்பதன்மூலம் நீங்கள் உங்களது மொழிக்கோ இலக்கியத்திற்கோ இம்மியும் நன்மை செய்யவில்லை என்பதைத் தயவு செய்து உணருங்கள்!

என்று என்றென்றும் தமிழ் வாசகர்கள் நினைவில் கொள்ள வேண்டிய படிப்பினையை அறைக்கூவலாய் விடுத்துள்ளார்.

> எப்ரல் 75இல்,
>
> தீபம் என்பது ஒரு நம்பிக்கை. பிறகு பத்திரிகையும் கூட. தீபம் என்பது ஓர் இலக்கு. பிறகு இலக்கியம். தீபம் என்பது ஓர் இலக்கிய இயக்கம். பிறகுதான் பத்திரிகை. வியாபார ரீதியாக இதில் முதல்போட்டு இதை லாபயந்திரமாக வளர்க்க முன்வந்த பலரை நான் அனுமதிக்காத காரணம் இதன் இலக்கும் நம்பிக்கையும் தடுமாறக் கூடாது என்பதுதான். மாற்றியிருந்தாலோ, மாறியிருந்தாலோ, திசை தவறியிருந்தாலோ இதையும் பணவளமுடையதாக்கி என்னையும் செழிப்பாக்கி யிருப்பார்கள் சில வசதியுள்ள நண்பர்கள். முதலிலிருந்தே அதில் உறுதியாக இருந்து விட்டேன். இதன் தரமான வாசகர்கள் அளித்த நல்லெண்ணம்தான் அதற்குக் காரணம்

என்ற நா. பார்த்தசாரதியின் கூற்றிலிருந்தே தீபத்தின் ஒளிவிடும் தரத்திற்கும் அந்தத் தரத்தின் உயர்வுக்கும் காரணம் ஆசிரியரின் உறுதியும், துணிவும், நம்பிக்கையும், சீரான நோக்குமென்பது விளங்கிவிடும். வாசகர் பங்கேற்பிற்குத் தனியிடம் வழங்கியும், அவர்கள் படிப்புத்திறனையும் இலக்கியத் தரத்தையும் மேம்படுத்தவும் பாடுபட்ட தீபம் அதன் தளர்வில்லாக் கொள்கையால் என்றென்றும் ஒளிவீசிக் கொண்டேயிருக்கும்.

# கணையாழி

## மு. சுதந்திரமுத்து

மணிக்கொடி உள்ளிட்ட எல்லா இலக்கியச் சிற்றிதழ்களுமே பொழுதுபோக்கு மனப்பாங்கை ஊட்டும் பேரிதழ் செயற்பாட்டிற்கு எதிராகவே இயங்குகின்றன. மரபின்மீது பேரிதழ்கள் கொண்டிருக்கும் பொருளற்ற பெரும்பற்றை இலக்கியச் சிற்றிதழ்கள் கொண்டிருக்கவில்லை. அவை புதுமரபை உருவாக்கவும் இலக்கியம், அரசியல், தத்துவம், கலை, மொழி, சமூகம் ஆகியவற்றில் காணப்படும் சீரழிவுகளை இனங்கண்டு நீக்குவதற்கும் பாடுபடுகின்றன. இவை நல்ல இலக்கியம், கலை, தத்துவம் ஆகியவற்றை ஒருங்கிணைக்கின்றன. தரமான எழுத்தாளர்கள், இலக்கியம், கலை, தத்துவம் ஆகியன குறித்த தங்கள் பார்வையைப் பதிவு செய்யும் களமாகவும் இருக்கின்றன.

இலக்கியச் சிற்றிதழ்கள், பக்கங்களிலும் படிகளிலும் படிப்போர் தொகையிலும் சுருக்கம் கொண்டிருப்பினும் இலக்கிய மரபை நிலைநிறுத்துவதிலே பெருக்கம் கொண்டிருக்கின்றன.

1950ஆம் ஆண்டிற்குப்பின் இலக்கியச் சிற்றிதழ்ப் பாதையைப் பெரிதும் செப்பம் செய்தவை. எழுத்து, இலக்கிய வட்டம், சரசுவதி போன்ற இதழ்கள்தாம். இவை உலக இலக்கிய வளர்ச்சிகளையும் சமூக மாற்றங்களையும் தமிழுக்கு அறிமுகப் படுத்தின. இப்பணியைத் தொடர்ந்து வந்த நடை, தீபம், கசடதபற போன்ற இதழ்கள் மேற்கொண்டன. குறிப்பாக அறுபதுக்குப் பின்னால் வந்த இலக்கிய இதழ்கள், பேரிதழ்களின் போக்குக்கு எதிராகச் செயல்படுவதில் முனைப்புக் காட்டின. தமிழில் பரவலாக இருந்த மரபு வணக்கப் போக்கிற்கு எதிராகப் புதுமை ஆக்கத்தை முன்வைத்தன. இடதுசாரிக் கருத்துப்பரப்பலை முதன்மைப்படுத்துகிற போக்கிற்கு எதிராகக் கலைச் செழுமையை முன்வைத்தன. வணிகமயப் போக்கிற்கு எதிராக அறிவுமயப் போக்கை முன்வைத்தன. வணிகமைய மரபு, மைய கருத்துப்பரவல் மையச் செயற்பாடுகளுக்கு எதிரான செயற்பாட்டையோ ஒதுங்கிய செயற்பாட்டையோ இலக்கியச் சிற்றிதழ்கள் கொண்டிருக்கின்றன.

இந்த இலக்கியச் சிற்றிதழ்களின் செயல்தளம் நடுத்தர மக்கள் கூட்டத்தின் படிப்பாளிகள்தான்.

இத்தகைய இதழியல் செயல்பாட்டைத் தமிழ்த்தளத்தில் கொண்டிருந்த கணையாழியின் 35 ஆண்டு கால இயக்கத்தை மதிப்பிட அதன் தோற்றச் சூழலையும் மாற்றநிலைகளையும் புறஅமைப்பையும் அகஅமைப்பையும் அதன் அரசியலையும் எடைபோட வேண்டும்.

## தோற்றச் சூழல்

கணையாழியின் தோற்றக்காலத்தில் நாடு அரசியல் திருப்புமுனையில் இருந்தது. தலைமை அமைச்சர் நேருவின் மறைவுக்குப்பின் சாஸ்திரி பொறுப்பேற்றிருந்த காலம்; காமராசர் காங்கிரசு இயக்கத்திற்குத் தலைமை ஏற்கிற காலம்; இந்தி எதிர்ப்பு ஓங்கியிருந்த காலம்; தி.மு.க. இயக்கம் வலிமை பெற்றுவந்த காலம்; பாகிஸ்தானுடன் இந்தியா போர் நிகழ்த்திய காலம். இந்தச் சூழலில் டில்லிப் பத்திரிகையாக டில்லித் தமிழர்களுக்காகத் தொடங்கப்பட்ட கணையாழி இலக்கிய மைய இதழாக இல்லை. அன்றைய பேரிதழ்கள் கதை திரைப்படம் நகைச்சுவை என்ற தடத்திலேயே செக்குமாட்டுத்தனமாகச் சுற்றிய காலத்தில் வெளிவந்த கணையாழி, சற்று வேறுபட்டு வந்தது உண்மையெனினும், இலக்கிய இதழ் என்ற நிலையில் அது இல்லை. கணையாழி செய்திகளையும் சுவையான சிறப்பான பகுதிகளையும் தாங்கிய இதழாகப் பத்திரிகையாளர் கி. கஸ்தூரி ரங்கனால் தொடங்கப்பட்டது.

கஸ்தூரி ரங்கனின் தலையங்க வாக்குமூலம் கணையாழியின் நிலையை உணர்த்தும்.

"இது டில்லிப் பத்திரிகை. ஆயிரம் மைல்கள் கடந்து வந்து இங்கு வாழ்ந்து வரும் தமிழர்களுக்காக அவர்கள் சுவைத்து மகிழக்கூடிய விஷயங்களைப் பிரசுரிக்கும் நோக்கத்துடன் ஆர்வமுள்ள சில நண்பர்களின் கூட்டு முயற்சியால் ஆரம்பிக்கப் பட்டிருக்கும் மாதப் பத்திரிகை.

தேர்ந்தவர்களால் சுவைபட எழுதப்படும் செய்திக் கட்டுரைகள், கதைகள், இலக்கியம், விஞ்ஞானம், கல்வி மற்றும் வாழ்க்கைக்குப் பயன்தரும் பல சுவையான குறிப்புகள் இவற்றைத் தாங்கி ஒவ்வொரு தமிழ்மாத முதல்வாரத்தில் உங்களைத் தேடிவரும்"

### மாற்றநிலை

'டில்லிப்பத்திரிகை' என்ற பட்டத்தைக் கொண்டு பத்திரிகையின் எல்லையைக் கட்டுப்படுத்த வேண்டாம்; அதைப்

பரவலாக ஆக்கவேண்டும் என்று அன்றைய எழுத்தாளர் சங்கத் தலைவர் சோமலெ கேட்டுக் கொண்டதால் அது கைவிடப்பட்டது. கொந்தளிப்பான அரசியல் சூழலில் பத்திரிகையாளரால் தொடங்கப்பட்ட கணையாழி படிப்படியாகச் சில மாறுதல்களைப் பெற்றது. பத்திரிகையாளர்க்குப் பெரும்பங்கு இடமளித்த கணையாழி எழுத்தாளருக்கு இடம் அளிக்கும் நிலைபெற்று, 1970ஆம் ஆண்டளவில் இலக்கிய மையப்பட்டுப் படிப்படியாக மாறுவதை ஐந்து கட்டங்களாகக் காணலாம்.

1. 1965-1970 - டெல்லித் தமிழர்களுக்காக அரசியலை முதன்மைப்படுத்திய செய்திப்பத்திரிகை - உலக நாட்டு நடப்புகள், இலக்கியத் தொடர்கட்டுரைகள், அரசியல் பேட்டிகள், பொருளியல் செய்திகள், நகைச்சுவைத் துணுக்குகள் கொண்ட இதழ். கதைகளில் புதுமை எதுவும் இல்லை. மரபுக்கவிதைகள் இடம்பெற்றன.

2. 1970-1975 - அரசியலுடன் புதுக்கவிதைகளுக்கும் இடமளிக்கப்பட்டது. சிறந்த கதைகள், நாடகங்கள், சமூகவியல் சிந்தனைகள் ஆகியவை இடம் பெறலாயின. இந்த மாற்றம் பற்றி கி. கஸ்தூரி ரங்கன், "இது முழுக்க முழுக்க அடல்ட்ஸ் மாகஸின். புத்திசாலிகளால் (?) புத்திசாலிகளுக்காக நடத்தப்படும் பத்திரிகை . . . கணையாழி எழுத்தாளர்களும் சரி, வாசகர்களும் சரி அறிவில் ரசனையில் சராசரிக்குமேல் இருப்பவர்கள். கணையாழி இலக்கியச் சிந்தனை அமைப்பின் நிர்வாகத்தில் இரண்டாண்டு காலம் இருந்தது.

3. 1975-1980 - கதைகள் துணுக்குகளுக்கு முதன்மை தரப்பட்டது. அரசியல் செய்திகள் துணுக்குகளாக அளிக்கப்பட்டன. தொடர் கதைகளுக்கு இடமளிக்கப்பட்டது. ஆசிரியர் குழுவினரின் எழுத்துக்கள் மிகுதியும் இடம்பெற்றன.

4. 1980-1985 - அரசியல் பெரும்பகுதி நீக்கப்பட்டுவிட்டது. குறுநாவல்களின் ஆதிக்கம் உருவானது. கதை கவிதைகளின் ஆதிக்கமும் மிகுதிப்பட்டது. இன்னொரு வகையில் பார்ப்பன எழுத்தாளர்களின் களமாக ஆனது.

5. 1995 முதல் - தனிமனிதரான கி. கஸ்தூரிரங்கனின் பிடிவாதத்தால் தொடர்ந்து நடத்தப்பட்ட கணையாழி நின்று போகக்கூடிய சூழலில் 'தசரா' அறக்கட்டளை அதன் பொறுப்பேற்றது. இப்போது தசரா அறக்கட்டளை, கணையாழியை நடத்துகிறது. தமன் பிரகாஷ், சாமிநாதன், ராஜேந்திரன் எனும் மூவரின் முதல் எழுத்துக்களைக் கொண்டது 'தசரா' என்ற பெயர். 1994 அக்டோபரில் கலை இலக்கிய மேம்பாட்டுக்காகத் தொடங்கப்பட்ட 'தசரா' அமைப்பின் பணிகளில் ஒன்றாகக் கணையாழிப் பொறுப்பு ஆகியது. 'தசராவின்' கொள்கை, "நமது பண்பாட்டு மரபுகளின் வேர்களைத் தேடவும் வேர்விடக் களம் காணவும் தரமான கலை இலக்கிய முயற்சிகளை இனம்காணவும் காட்டவும் அங்கிங்கெனாதபடி ஆதிக்கம் செலுத்தும் கன்சூயுமர் கலாச்சார நெருக்கடி மிகுந்த இந்தத் தருணத்தில் உண்மையான கலை இலக்கியவாதிகள் காலூன்றவும் தசரா கைகொடுக்கும்; தேவையானால் தோள் கொடுக்கும். தரமான கலை இலக்கிய முயற்சியில் தசராவின் பணி இனி தொடரும்" என்று அறிவிக்கப்பட்டுள்ளது (தினமணி, 6, ஆகஸ்டு 95).

தசராவின் பொறுப்பில் வந்த பிறகு பல மாற்றங்கள் தென்படுகின்றன. பார்ப்பன எழுத்தாளர்களின் ஆதிக்கம் குறைந்திருக்கிறது. இடதுசாரிகளின் படைப்புகளுக்கு இடம் தரப்படுகிறது. புதிய இலக்கியக் கொள்கைகள், ஆய்வுகள் இடம்பெறுகின்றன.

## கணையாழியின் புற அமைப்பு

இதழின் பெயர், வடிவம், நிர்வாகம் (ஆசிரியர் குழு முதலானவை), வாசகப்பரப்பு (சந்தா நிலை) போன்றவற்றைப் புற அமைப்பு எனலாம். பெயர்: இலக்கிய இதழ்களின் பெயர்கள் வித்தியாசமாகவும் கொள்கையை உணர்த்தும் வகையிலும் அமைக்கப்படுகின்றன. எழுத்து, கசடதபற, மீட்சி, நடை, காலச்சுவடு போன்ற பெயர்கள் இப்படி அமைந்தனவே. கணையாழி என்பது நல்ல தமிழ்ப்பெயர். கணையாழி இரண்டாம் இதழில் இதனை உணர்த்துவது போல சௌமியன் கம்பராமாயணத்தில் கணையாழி ஆளப்படும் இடங்களை எடுத்துக்காட்டியிருந்தார். 1968 அக்டோபர் இதழில் சந்திரசேகரன் கணையாழி என்ற பெயர்ப் பொருத்தம் பற்றிக் கட்டுரை எழுதினார். இராமாயணம், சாகுந்தலம் ஆகியவற்றிலும் மேலைநாட்டு இலக்கியங்களிலும் முக்கியமான இடம்பெறுவது கணையாழி என்றும், தமிழுக்குப் பெருங்காப்பியங்கள் பெரிய அணி என்றால் கணையாழி தமிழுக்குச் சிறிய அணி என்றும் குறிப்பிட்டிருந்தார். சொல்லின் செல்வன் இராமனைச் சீதைக்கு அடையாளம் காட்டியது போலத் தமிழருக்கு நல்ல இலக்கியத்தைக் 'கணையாழி' அடையாளம் காட்டும் என்றும் குறிப்பிட்டார்.

### வடிவம்

பெரிய வடிவிலும் டைஜஸ்ட் போலச் சிறிய வடிவிலும் கணையாழி வெளியாகி இருக்கிறது. பெரிய வடிவில் வந்தபோது அதுதான் நல்ல வடிவமென்று கணையாழி ஆசிரியர் குறிப்பிட்டார். ஒரு முகவர், 'ஆனந்தவிகடன்', 'குமுதம்' போல மாற்றிக் கவர்ச்சியான அட்டையுடன் வெளியிட்டால் விற்பனை பெருகும் என்று எழுதியதற்கு 6ஆவது இதழில் ஆசிரியர், "படங்கள், அதிக பக்கங்களை வைத்து பத்திரிகையை வியாபாரப் பொருளாக்குவது எங்கள் நோக்கம் அல்ல. உண்மையில் கணையாழி அப்படிப்பட்ட நிர்ப்பந்தங்களை எதிர்த்து நிற்கும் சக்தியை வேண்டுகிறது" என்று குறிப்பிட்டார்.

கணையாழி டைஜஸ்ட் வடிவில் வந்தபோது ஒரு வாசகர் 'வௌவால் போல் கடைகளில் தொங்கும் பத்திரிகைகளிடையே கணையாழியைக் கண்டுபிடிப்பது இயலவில்லை' என்றும் 'பெரிய அளவில் போடலாம்' என்றும் குறிப்பிட்டார். அதற்கு ஆசிரியர் 'கணையாழி பாதுகாக்கப்பட வேண்டியது. அதற்கு இந்த வடிவம்தான் ஏற்றது' (ஜனவரி 91) என்று சமாதானம் சொன்னார்.

கணையாழி 1965 முதல் 1991 வரை பெரிய வடிவிலும், 1991 ஜனவரி முதல் 1993 நவம்பர் வரை டைஜஸ்ட் வடிவிலும் 1993 டிசம்பர் முதல் பழைய வடிவிலும் வெளிவந்தது. தசரா பொறுப்பில், பெரிய அளவில் ஒரே சீராக வெளிவருகிறது.

## ஆசிரியர் பொறுப்பு

நியூயார்க் டைம்ஸ் இதழின் டெல்லி நிருபர் (பின்னாளில் தினமணி துணை ஆசிரியர், தினமணி ஆசிரியர்) கி.கஸ்தூரி ரங்கன் ஆசிரியராகவும் பத்திரிகையாளர் கே. சீனிவாசன் (கலைமகள், காவேரி, துக்ளக், தினமணி ஆகியவற்றில் அரசியல் கட்டுரை எழுதுபவர்) துணை ஆசிரியர் என்ற நிர்வாக அமைப்பில் கணையாழி தொடங்கப்பட்டது. எழுத்தாளர் அசோகமித்திரன் (ஜ. தியாகராஜன்) கணையாழியைச் சென்னையில் அச்சிட்டு டில்லிக்கு அனுப்பிக் கொண்டிருந்தார். கி. கஸ்தூரி ரங்கன் வீடே அலுவலகமாக இருந்தது. தி. ஜானகிராமன், க. நா.சு., இந்திரா பார்த்தசாரதி, டி.எஸ். சுந்தரராஜன், என்.எஸ். ஜகந்நாதன், கே.பி. ரங்காச்சாரி, கே.எஸ். சீனிவாசன், சாலை இளந்திரையன் போன்றோரது தொடர்புடன் கணையாழி வெளிவந்தது.

நான்காவது இதழிலிருந்து அசோகமித்திரன் பொறுப்பாசிரியர் ஆக்கப்பட்டார். 1968 செப்டம்பர் திங்கள் முதல் இந்திரா பார்த்தசாரதி ஆசிரியர் குழுவில் இணைந்தார். இதுமுதல் கல்வியாளர் தொடர்பும் பாதிப்பும் கணையாழியில் ஏற்பட்டது. 1972ஆம் ஆண்டிலிருந்து கே. சீனிவாசன் ஆசிரியர் குழுவில் இல்லை. இந்திரா பார்த்தசாரதி, போலந்தில் இருந்த காலத்தில் முழுக்க அசோகமித்திரனின் பொறுப்பில் கணையாழி இருந்தது. 1987 பிப்ரவரி திங்களில் இந்திரா பார்த்தசாரதி மீண்டும் ஆசிரியர் குழுவில் இடம்பெற்றார். 1988 ஜூன் திங்களில் அசோகமித்திரன் பொறுப்பிலிருந்து விலகிக்கொண்டார். அவர் பொறுப்பிலிருந்து விலகிய செய்தி கணையாழியில் அவர் எழுதியதைப் படித்த பின்புதான் கஸ்தூரி ரங்கனுக்குத் தெரியவந்தது. அசோகமித்திரன் வெளிப்படையாகத் தனக்கு ஊதியம் எதுவும் தரப்படவில்லை என்பதைத் தெரிவித்திருந்தார். "கௌரவ ஆசிரியர் பணிபுரிவதற்கு வசதிகள் நிறைந்தவர்களால்தான் முடியும். இவ்வசதிகள் ஏதுமில்லாமல் இரு மாமாங்கங்கள் காலத்தைக் கழித்ததை ஊதாரித்தனம் என்றும் சிலர் சொல்லக்கூடும். ஆங்கிலத்தில் Can't afford the luxury of என்றொரு சொற்றொடர் உண்டு. இனியும் கௌரவ ஆசிரியராக இருப்பதை என்னால் 'afford' செய்ய இயலவில்லை. வணக்கம்" (ஜூன் 88) என்று தெரிவித்திருந்தார்.

ஆசிரியர் பொறுப்பில் இருப்பவர்களைப் பொறுத்துக் கணையாழியின் இலக்கியத் தன்மையில் ஏற்ற இறக்கம் இருந்திருக்கிறது. அசோகமித்திரனின் பொறுப்பில் இலக்கியப் பகுதிக்கு முதன்மை தரப்பட்டது. இந்திரா பார்த்தசாரதி சமூக நடவடிக்கைகளுக்கு இடமளிப்பதை விரும்பினார். 'எழுத்து' இதழ் சி.சு. செல்லப்பா என்ற ஒருவரின் பொறுப்பிலேயே இருந்து அவருடைய விருப்பு வெறுப்புக்கேற்ப நடைபெற்றது. கணையாழியில் ஆசிரியப் பொறுப்பு மாறிமாறி அமைந்ததால் ஒரு கலவைத் தன்மை பெற்றதாக இருந்தது. மாலன், மலர்மன்னன், இயக்குநர் ஜெயபாரதி, ஞாநி, முன்னாள் அமைச்சர் ப. சிதம்பரம் ஆகியோரும் கணையாழிப் பொறுப்பேற்று நடத்தியிருக்கிறார்கள்.

'தசரா' அறக்கட்டளை பொறுப்பேற்றபின் மய்திலி ராஜேந்திரன் ராம்ஜீ பொறுப்பில் அது இருந்தது. தற்போது மய்திலி ராஜேந்திரன் பொறுப்பில் இருக்கிறது. கி. கஸ்தூரி ரங்கன் இப்போது கௌரவ ஆசிரியராகப் பணியாற்றுகிறார்.

## வாசகப் பரப்பு

கணையாழிக்கு வாய்த்த வாசகர் வட்டம் பரந்தது. முதல் இதழ் வெளிவந்தபோது 200 படிகள் மட்டுமே விற்பனையாகிற்று. அப்போதைய விலை 40 காசு. படிப்படியாக உயர்ந்து இன்று 10 ரூபாயாக உயர்ந்திருக்கிறது. கணையாழிக்கு விளம்பரங்கள் நிதி ஆதாரமாக இருந்திருக்கின்றன. பொதுவாகச் சிற்றிதழ்கள் விளம்பர வாய்ப்பைப் பெறுவதில்லை. 35 ஆண்டுகளாக விளம்பரம் இல்லாமல் கணையாழி வரவேயில்லை. அரசு நிறுவனங்கள், தனியார் விளம்பரம் இல்லாமல் கணையாழி வரவேயில்லை. "பாரதத்தின் தலைசிறந்த ஸ்தாபனங்களும் மத்திய மாநில அரசுகளும் இந்த இதழுக்கு விளம்பரம் தந்து கணையாழியின் எதிர்காலத்தை உறுதிசெய்துள்ளன" என்று ஆசிரியர் (அக்.68) அதன் தொடக்க நாட்களிலேயே குறிப்பிட்டிருக்கிறார். பார்ப்பனர்களின் வலுவான ஆதரவும் கணையாழிக்குக் கிடைத்திருக்கிறது. 25ஆம் ஆண்டில் கணையாழிக்கு நிதிகேட்டபோது பாலகுமாரன், வாஸந்தி, பூரணம் விஸ்வநாதன், லட்சுமி கிருஷ்ணமூர்த்தி, கமலகாசன் போன்றவர்கள்தான் கொடுத்தார்கள். கல்கி நிறுவனம் கொஞ்ச காலம் கணையாழியின் விற்பனைப் பொறுப்பை ஏற்றிருந்ததையும் இங்கே இணைத்துப் பார்க்கவேண்டும்.

பொது நிறுவன விளம்பரமின்றிக் கணையாழியை நடத்த முடியாது என்ற நிலை ஏற்பட்டபோது எழுத்தாளர்கள் கூடி

விவாதித்தனர். அப்போது ஜெயந்தன் 'ஒரு டிரஸ்ட் தொடங்கி நடத்தலாம்' என்று கருத்துத் தெரிவித்தார். இப்போது தசரா நிறுவனத்தின் புரவலத் தன்மையால் கணையாழி தொடர்கிறது. இப்போது தமன் பிரகாஷின் சம்பா நிறுவன விளம்பரம் தொடர்ந்து நான்கு ஆண்டுகளாக இடம்பெறுகிறது. ஐயாயிரம் படிகள் அச்சாகிற கணையாழியில் நாலாயிரம் படிகள் விற்பனையாகின்றன.

வாசகர் ஆதரவைத் திரட்டுவதற்குக் கணையாழி பல திட்டங்களை நடைமுறைப்படுத்தியிருக்கிறது. நூறுபேரை நிரந்தர வாசகர் ஆக்கும் திட்டத்தில் அரசியல் தலைவர்கள் சிலரைக் கணையாழி வாசகர் ஆக்கியிருக்கிறது. கணையாழிக்கு வரும் படைப்புகளுக்குச் சன்மானம் தருவதற்கான சந்தா திட்டம் ஒன்றும் ஒருசமயம் அறிவிக்கப்பட்டது. மூன்று கணையாழி வாங்கினால் 25% கழிவு தரும் ஏஜன்சி திட்டம் ஒன்றும் அறிவிக்கப்பட்டது.

வாசகர் பங்களிப்பைப் பெருக்குவதற்காக வாசகர்களுக்கு விமரிசனப் பரிசுத்திட்டங்களும் அறிவிக்கப்பட்டன. 'எழுத்தாளர் கதை' ஒன்று வெளியாகும்; அதற்குத் தகுந்த விமரிசனம் எழுதுபவர்களுக்குப் பரிசு உண்டு என அறிவிக்கப்பட்டு வாசகர் பங்கு வளர்க்கப்பட்டது. கணையாழியில் வரும் படைப்புக்குறித்தோ கணையாழி குறித்தோ எழுதப்படும் நல்ல விமரிசனத்துக்கு வரிக்கு ஒரு ரூபாய் பரிசு வழங்கப்படும் என்றும் அறிவிக்கப்பட்டது.

'விவாதமேடை' என்ற பகுதியில் 'உலகத்தரமான நாடகம் தமிழில் எழுதமுடியுமா?' போன்ற கேள்விகளுக்கு விடையளிக்குமாறு வாசகர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள்.

அபிப்பிராயம், கணையாழி விமரிசனம், கடிதம், வாசகர் பக்கங்கள், வாசகர் விமரிசனம், எதிரொலி என்றெல்லாம் மற்ற இதழ்களில் இல்லாத அளவு வாசகர் கடிதங்களுக்கு இடமளிக்கப் பட்டது. கடுமையான விவாதங்களுக்குக் கணையாழி இடம் தந்தது. முழுக்கடிதங்கள் அப்படியே வெளியிடப்பட்டன. அப்படி வெளியிடுவது குறித்து ஆசிரியர், "நல்ல விமர்சனமாகவும் ஆழ்ந்த சிந்தனையின் வெளிப்பாடாகவும் படிப்பதற்கு சுவாரஸ்யமாகவும் இருக்கும் இந்தக் கடிதங்களை வெறும் துணுக்குகளாக வெட்டிக் குறைத்து வெளியிடுவதற்கு மனம் வரவில்லை" (ஜன. 92) என்று குறிப்பிட்டிருக்கிறார். இந்த வாசகத்தொடர்பு கணையாழியின் வாழ்விற்குப் பெரிதும் உதவியிருக்கிறது எனலாம்.

## அக அமைப்பு

கணையாழியின் உள்ளடக்கப் பகுதிகளைப் பார்க்கையில் சில பகுதிகள் நிரந்தரமான பகுதிகளாகவும் பல பகுதிகள் தற்காலிகமானவையாகவும் இடம்பெற்றிருப்பதை அறிய முடிகிறது. எந்த ஓர் இதழுக்கும் இன்றியமையாதவை நிரந்தரப் பகுதிகள். மற்ற பகுதிகள் அவ்வப்போது எழுத்தாளர்களைப் பொறுத்தும் ஆசிரியர் குழுவினரைப் பொறுத்தும் மாற்றி மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. சில பகுதிகள் ஒரே மாதிரித் தன்மைகொண்டு வேறுவேறு பெயர்களில் உள்ளன.

## நிரந்தரப் பகுதிகள்

அட்டை, ஆசிரியர் பகுதி, இலக்கிய விமரிசனம், மொழிபெயர்ப்பு, தொடர்கள், குறுநாவல், சிறுகதை, கவிதை, நாடகம், கட்டுரைகள், நேர்காணல், பிற விமரிசனங்கள் (நாடக விமரிசனம், திரை விமரிசனம், ஓவிய விமரிசனம், பிறகலை விமரிசனங்கள்) ஆகியன நிரந்தரப்பகுதிகள்.

## அட்டை

இலக்கிய இதழ்கள், அட்டைப் படங்களை முக்கியமாகக் கருதுகின்றன. கணையாழி காலந்தோறம் தன்னியல்பிற்கேற்ப அட்டை அமைப்பைப் பெற்றுவருகிறது. அரசியல் வீச்சு ஓங்கியிருந்த காலத்தில் (1965-1967) அட்டையில் தலைவர்களது நிழற்படங்கள் இடம்பெற்றன. நேரு, சாஸ்திரி, காமராஜர், இந்திராகாந்தி, சி. சுப்பிரமணியம், சவான், பக்தவத்சலம், ஆர். வெங்கட்ராமன், ம.பொ.சி., அண்ணா, கலைஞர், சாகிர் உசேன் ஆகியோர் படங்கள் இடம்பெற்றன. அவ்விதழ்களில் இவர்களது பேட்டிகளும் இடம்பெற்றன. ஆகஸ்டு 67 முதல் நான்கு இதழ்களில் பொருளடக்கம் மட்டும் அட்டையில் தரப்பட்டது. ஏப்ரல் 68 முதல் கார்ட்டூன்கள் இடம்பெறலாயின. காங்கிரசை சி. சுப்பிரமணியமும் காமராசரும் வேறுவேறு திசையில் அழைத்துச் செல்ல முயல்வதை, இருவரும் ஒரே படகில் இரு எதிர்த் திசைகளில் துடுப்பைப் போடுவது போன்று வரையப்பட்ட கார்ட்டூன் விளக்கியது (மே-ஜூன் 1968). கம்யூனிஸ்ட் வேள்வி நடத்த நக்ஸல் பூதம் கிளப்புவது போல் ஒரு கார்ட்டூன் தரப்பட்டிருந்தது (ஜூன் 69).

1970 ஜனவரி முதல் ஓவியங்கள் அட்டையில் இடம்பிடித்தன. கோபுலு, இந்தர்மோகன், கிருஷ்ணமூர்த்தி, அச்சுதன் கூடலூர்,

வைத்தீஸ்வரன், என்.எஸ். வெங்கட்ராமன், ஆதிமூலம், ம.செ.ஜி. ராமன், டிராட்ஸ்கி மருது, டி. சந்தானம் முதலானோர் ஓவியங்கள் அட்டைகளில் இடம் பிடித்தன. குறுநாவல்களுக்குப் பொருத்தமாக மருதுவின் ஓவியங்கள் அட்டையாயின. ஆகஸ்டு 90 முதல் கார்ட்டூனும் மீண்டும் மார்ச்சு 91 முதல் ஓவியமும் இடம்பெற்றன. மார்ச்சு 91 'ஹைகூ சிறப்பிதழில் ஜப்பானிய ஓவியங்கள் இடம்பெற்றன. ராஜீவ் மறைவை யொட்டி கறுப்பு அட்டையில் ராஜிவ்வின் கோட்டோவியம் இடம்பெற்றது (ஜூன் 91). ராஜா ரவிவர்மா பற்றிய அறிமுகம் இடம்பெற்ற ஆகஸ்டு 93 கணையாழிக்கு ரவிவர்மா ஓவியம் அட்டையாகத் தரப்பட்டது.

ராகுல் சாங்கிருத்தியான் பற்றிய கட்டுரை இடம் பெற்ற ஜூலை 93 இதழுக்கு 'ராகுல்ஜீ படம் அட்டையானது. ஏ.கே. ராமாநுஜன் பற்றிய கட்டுரை இடம்பெற்ற இதழுக்கு ஏ.கே. ராமாநுஜன் படம் அட்டையானது. மாளவிகா சருக்கை பற்றிய அறிமுகம் இடம்பெற்ற இதழுக்கு மாளவிகாவின் படம் அட்டையானது. இப்படி உள்ளடக்கப் பொருத்தமாகவும் அட்டைகள் இடம்பெற்றன.

தசரா அறக்கட்டளை ஏற்றபிறகு ஓரிரு இதழ்கள் தவிர மற்றவற்றில் பெரும்பாலும் மருதுவின் ஓவியங்களே இடம்பெறுகின்றன. எட்வர்ட்பீயூரா, வெர்மிர், வான்ஹோகார்த் ஆகியோரின் ஓவியங்களும் இடம்பெற்றன. ஜூன் 99 இதழ் கலைஞர் சிறப்பிதழாக வந்தபோது ஆதிமூலம் வரைந்த கலைஞரது ஓவியம் அட்டையானது. பிரமிள் பற்றிய கட்டுரை இடம்பெற்ற ஜூலை இதழுக்குப் பிரமிள் நிழற்படம் அட்டையானது. கா. சிவத்தம்பியின் பின் நவீனத்துவம் பற்றிய கட்டுரை இடம்பெற்ற ஆகஸ்டு 99 இதழில் அவரது நிழற்படம் அட்டையானது. பாரதியின் நினைவாக செப். 99 இதழில் பாரதி படம் அட்டையில் தரப்பட்டிருக்கிறது.

## ஆசிரியர் பகுதி

1968 வரை 'தலையங்கம்' என்றும், நவ. 68 முதல் 'உங்களுடன் ஒரு வார்த்தை' என்றும், அக். 96 முதல் 'உங்களுடன் சற்று நேரம்' என்றும் தலைப்பிடப்பட்டு ஆசிரியர் பகுதி அமைந்துள்ளது. இப்பகுதியில் இதழ் தொடர்பான செய்திகளும் மாற்றங்களும் புதிய பகுதிகள் பற்றிய அறிவிப்பும் பல்வேறு நிகழ்வுகள் பற்றிய ஆசிரியர் குழுவின் கருத்துக்களும் விமர்சனங்களும் இடம்பெற்றன.

கி. கஸ்தூரி ரங்கன் 'தலையங்கம்' பகுதியை அறிவிப்புப் பகுதியாகவும் செய்தி விமர்சனம் பகுதியாகவும் வைத்திருந்தார்.

வாஸக்டமி, கருணாநிதி ஆட்சி கலைப்பு, அவசரநிலை போன்ற செய்திகளை எழுதினார். இந்திரா பார்த்தசாரதி அதைச் செய்தித் தொகுப்பாக மாற்றினார். நாடகம் தமிழ்நாட்டில் வளர்ச்சி பெறவில்லை (ஆகஸ்டு 88), லெனின் மறைவு ரஷ்யாவுக்கு இழப்புப்போல அண்ணாவின் மறைவு தமிழகத்துக்கு இழப்பு (அக். 88), க.நா.சு.வின் இலக்கியச் சாதனைகள் (அவர் மறைவையொட்டி) (ஜன. 88), உயர்வு நவிற்சி தமிழர் இயல்பு (பிப். 89), வடக்கும் தெற்கும் இணையமுடியாது (நவ. 89), பகுத்தறிவு ஓங்கிய தமிழ்நாட்டில் இறைத்தூதர்கள் பெருகிவிட்டார்கள் (அக். 90), பிள்ளையார் பால்குடிக்கும் செய்தி பரவியது தகவல் தொழில் நுட்பத்தின் அற்புதம் போன்ற சிந்தனைகளைப் பரிமாற இ.பா. இப்பகுதியைப் பயன்படுத்தினார்.

தசரா அறக்கட்டளை கணையாழியை ஏற்றபிறகு இப்பகுதி 'உங்களுடன் சற்று நேரம்' என மாற்றப்பட்டது. அவ்வப்போது செய்திகளில் மிகவும் இடம்பிடிக்கிற நிகழ்வுகள் குறித்து ஆசிரியர் குழுவின் கருத்து இப்பகுதியில் முன்வைக்கப்படுகிறது.

ராமர் பெட்ரோல், ராமர் விளைவு (அக். 96) என்று பாராட்டப்பட்டது. போலாக்கல் (clowning) பற்றி எழுதப்பட்டது (ஏப். 97). தென்மாவட்ட சாதிக் கலவரம் (ஜூன். 97) அன்னை தெரசா, டயானா மறைவு (அக். 97), சமத்துவபுரத்துக்கு வரவேற்பு (டிச. 97), ஏ.எம். எஸ்ஸின் தியாகம் (ஏப். 98), பொக்ரான் அணுகுண்டு (ஜூன் 88), பெண்களுக்கு 33 இடஒதுக்கீடு (ஆகஸ்டு 98), 356 பிரிவைப் பயன்படுத்த மறுத்த குடியரசுத் தலைவருக்குப் பாராட்டு (அக். 98), அமர்த்தியா சென்னுக்கு நோபல் பரிசு (நவ. 98), தாய்மொழிக்கல்வி (ஏப்ரல் 99), படைப்பாளி கலைஞருக்குப் பவளவிழா (ஜூன் 99), சமூக நீதிக்கு இட ஒதுக்கீடு தேவை (செப். 99) என்று செய்திகள் விமர்சிக்கப்படுகின்றன.

## இலக்கிய விமரிசனம்

இலக்கிய இதழ்களின் இன்றியமையாப் பகுதி திறனாய்வு. எழுத்து இதழ், திறனாய்வு மரபை உருவாக்குவதில் பெரும்பணி செய்தது. கணையாழியும் திறனாய்வில் மிகுதியாக ஈடுபட்டிருக்கிறது.

கணையாழியின் முதல் இதழிலேயே ந. பிச்சமூர்த்தி கவிதை பற்றிய மதிப்பீடு செய்யப்பட்டிருந்தது. தி.சோ. வேணுகோபாலன் கவிதை பற்றியும் தொடக்க இதழில் இடம் பெற்றது. எனினும் கணையாழி புதுக்கவிதையை மட்டம் தட்டுகிற போக்கையே

கடைப்பிடித்தது. சுஜாதா, நா. பார்த்தசாரதி ஆகியோர் இப்போக்கை மேற்கொண்டனர். டி.ச. 66 இதழில் கல்கியின் எழுத்து பற்றி க.நா.சு., கடுமையாக விமர்சித்தார். 'கல்கியின் எழுத்தில் தனித்தன்மை இல்லை, ஆங்கிலக் கதைகளைத் தழுவியது அவர் எழுத்து' என்று குறிப்பிட்டார்.

இப்படி உதிரியான திறனாய்வுகளுக்குப்பின் திறனாய்வுக் கென்று தனிப்பகுதிகள் தொடங்கப்பட்டன. இபா. எழுதி வந்த 'வளரும் தமிழ்', 'டில்லிப் பேச்சு', க.நா.சு. எழுதிய 'இலக்கியச் சிந்தனைகள்' திருப்பூர் கிருஷ்ணன் எழுதிய 'இலக்கிய விகாரம்' ஆகிய பகுதிகளும் கணையாழியில் வெளியான இலக்கியக் கட்டுரைகளும் நூல் மதிப்புரைகளையும் இலக்கிய விமரிசனப் பதிவுகளாகக் கொள்ளலாம்.

## வளரும் தமிழ்

தமிழ் இதழ்கள் பற்றியும் அவற்றில் வெளியாகும் சிறப்புப் பகுதிகள் பற்றியும் புதிய நூல்கள் பற்றியும் இலக்கியச் சாதனைகள் பற்றியும் பதிவு செய்யும் பகுதியாக 'வளரும் தமிழ்' பகுதி இந்திரா பார்த்தசாரதியால் அறிமுகப்படுத்தப்பட்டது.

## டில்லிப் பேச்சு

தலைநகர் டில்லியில் 'இலக்கிய வாசகர் வட்டம்' என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. கணையாழி அலுவலகமான கி. கஸ்தூரி ரங்கன் இல்லத்திலும் இந்திரா பார்த்தசாரதியின் இல்லத்திலும் வாசகர் வட்டம் கூடி இலக்கியம் பற்றிய தீவிரமான விவாதத்தை மேற்கொண்டது. 68 முதல் 70 வரை நிகழ்ந்த இவ்விவாதங்களில் தி. ஜானகிராமன், கிருத்திகா, க.நா.சு. இ.பா., கே. சீனிவாசன், கி. கஸ்தூரி ரங்கன், என்.எஸ். ஜகந்நாதன், சாலை இளந்திரையன், சாலினி இளந்திரையன், வெங்கட்சாமிநாதன் முதலானோர் கலந்து கொண்டார்கள். தமிழில் தடம்பதித்த நாவல்கள், குறுநாவல்கள், சிறுகதைகள், கவிதைகள், திறனாய்வுகள் குறித்து ஒருவர் தலைமையில் கருத்துரையும் விவாதமும் நிகழ்த்தினர். இவ்விவாதம் கணையாழியில் 'டில்லிப் பேச்சு' என்ற தலைப்பில் வெளியாயிற்று.

## இலக்கியச் சிந்தனைகள்

1985 முதல் 1987 வரை கணையாழியில் க.நா.சு. எழுதிய திறனாய்வுக் கட்டுரைகள் இலக்கியச் சிந்தனைகள் என்ற பெயரில் வெளியாயின. அதில் எழுத்தாளர், திறனாய்வாளர் பற்றிய காட்டமான கருத்துக்களைக் க.நா.சு. வெளியிட்டார். குறிப்பாகப் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள்மீது இவர் தொடுத்த சாடல்

குறிப்பிடத்தக்கது. பல்கலைக்கழக ஆசிரியர்கள் புதிதாக எதையும் படிப்பதில்லை என்றும் (ஜூலை 85), அவர்கள் இலக்கிய உலகுக்குக் கெடுதல் செய்கிறார்கள் என்றும் (ஆகஸ்டு 85), பேராசிரியர்கள் ரசனைக்கு இலக்கியம் படிக்காமல், பிழைப்புக்குப் படிக்கிறார்கள் என்றும் (செப். 85) சாடினார்.

தமிழுக்குச் செய்ய வேண்டியவையாகச் சிலவற்றைக் க.நா.சு. கோடிட்டுக் காட்டினார். தெளிவான தமிழ் இலக்கிய வரலாறு எழுதப்பட வேண்டும்; அதில் சங்க காலம் தெளிவாக வரையறுக்கப் படவேண்டும்; சமணர்களின் தமிழ்ச்சேவை சரியாக மதிப்பிடப்பட வேண்டும் (செப். 85) என்றும் குறிப்பிட்டார். தமிழில் தரமான நூறு நூல்களைப் பதிப்பித்து எப்போதும் கிடைக்கச் செய்யவேண்டும் (பிப். 86) என்ற ஆவலையும் வெளியிட்டார். தமிழின் விமர்சனம் அகம், புறம் பகுப்பு (ஜூன் 86) என்று சுட்டிக்காட்டினார்.

தமிழ் நூல்களை உலகு அறியச் செய்யவேண்டும் என்றும் க.நா.சு. வலியுறுத்தினார். உலகுக்குப் பகவத் கீதையைத் தெரிந்த அளவுக்குக் குறளையும் தெரியச் செய்யவேண்டும் (மார்ச்சு 87) என்று ஆசைப்பட்டார். இளங்கோவையும் வள்ளுவரையும் 'Encyclopaedia Britannica' வில் இடம்பெறச் செய்ய வேண்டும் (மார்ச்சு 87) என்றும் வலியுறுத்தினார். ஹைகூவில் ஏதோ அற்புதம் நிகழ்வதாகச் சொல்லும் புதுக்கவிதைக்காரர்கள் திருக்குறளில் பல இடங்களில் ஹைகூவிலும் விட அதிகமான ஆழத்துடன் கவிதை அமைந்திருப்பதைக் காண முன்வருவதில்லை என்றும் அதற்கு ஈடாக உலகளவில் ஒருவரும் செய்துவிடவில்லை என்று சொல்லவே தோன்றுகிறது என்றும் பெருமிதப்பட்டார் (மே 87).

## இலக்கிய விசாரம்

எழுத்தாளர் திருப்பூர் கிருஷ்ணன் 88 முதல் 92 வரை எழுதிய கட்டுரைப் பகுதி இது. தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டங்கள் பற்றியும் கணையாழி வாசகர் வட்டக் கூட்டங்கள் பற்றியும் பிற இலக்கிய நிகழ்வுகள் பற்றியும் எழுதியதுடன் தமிழில் வளர்ந்து வரும் சில புதிய போக்குகளைப் பற்றியும் இப்பகுதியில் எழுதிவந்தார்.

சிட்டி, தமிழில் சேஷய்யங்கார் எழுதிய 'அந்தியூர் அவதானி' என்ற கவிதை நாவல்தான் முதல் நாவல் என்ற தகவலைத் தெரிவித்தது (செப். 88) பற்றி ஒரு கட்டுரை எழுதினார். வரா. (அக். 88) கி.வ.ஜ. (டிச. 88) க.நா.சு. (ஜன. 89), எழுத்தாளர் கிருஷ்ணமணி (ஏப். 89)

ஆகியோர் பற்றி நடந்த நினைவுக் கூட்டங்கள் பற்றி எழுதினார். லா.ச.ரா. நாவல் பற்றிய (செப். 89) கூட்டம் குறித்தும் எழுதினார்.

படைப்பாளிகளுடன் நிகழ்ந்த சந்திப்புகள் பற்றியும் திருப்பூர் கிருஷ்ணன் எழுதினார். கோமலுடன் சந்திப்பு (நவ. 98), ஓவியர் ஜயராமனுடன் சந்திப்பு (பிப். 89), சிவபாத சுந்தரத்துடன் சந்திப்பு (ஜூன் 89), தேனுகாவுடன் சந்திப்பு (ஜூலை 89), ஜெயகாந்தனுடன் சந்திப்பு (ஜன. 90), சா. கந்தசாமியுடன் சந்திப்பு (ஜன. 91) ஆகிய நிகழ்வுகள் குறித்து எழுதினார்.

திருப்பூர் கிருஷ்ணன் பல புதிய போக்குகள் குறித்து எழுதிய கட்டுரைகளும் இப்பகுதியில் இடம் பெற்றன. 'இராமாயணக் கதைகளும்' (நவ.89), 'எழுத்தாளர்களின் மேடைப்பேச்சு' (நா.பா, தி.ஜா., கநா.சு., பி.எஸ். ராமையா போன்றவர்கள்) (ஆகஸ்டு 90), ஒலிப்பேழையில் இடம்பெறும் பக்திக் கவிதைகள் (ஏப்ரல் 91), 'பக்திச்சொற்பொழிவுகள்' (ஜூன் 91) 'சிறுவர் பாடல் ஓவியப் பேழைகள்' (ஜூலை 91) பத்திரிகைக்கு வரும் கடிதங்கள் (மே 92) துணுக்கு எழுத்தாளர்கள் (ஆகஸ்டு 92) எனப் பல புதிய கோணங்களில் சுவையாக எழுதினார்.

## இலக்கியக் கட்டுரைகள்

கருத்தரங்கு, பட்டறைகள், கலந்துரையாடல்கள் குறித்த கட்டுரைகளுடன் (அ) சிறந்த எழுத்தாளர் எழுத்து பற்றிய கட்டுரைகள், (ஆ) நாவல் பற்றிய கட்டுரைகள், (இ) சிறுகதைகள் பற்றிய கட்டுரைகள், (ஈ) கவிதை பற்றிய கட்டுரைகள், (உ) தமிழிலக்கியப் போக்குப் பற்றிய கட்டுரைகள், (ஊ) ஆய்வுப்போக்குகள் பற்றிய கட்டுரைகள், (எ) திறனாய்வு நெறிகள் பற்றிய கட்டுரைகள், (ஏ) தொடர் கட்டுரைகள், (ஐ) பிறமொழி எழுத்தாளர் பற்றிய கட்டுரைகள், (ஒ) பிறமொழிகளிலிருந்து மொழிபெயர்த்த கட்டுரைகள் என இலக்கியக் கட்டுரைகள் கணையாழியில் இடம்பெறுகின்றன.

## எழுத்தாளர்–எழுத்து

எழுத்தாளர் பற்றியும் எழுத்துப் பற்றியும் நிறையக் கட்டுரைகள் வெளியாகியுள்ளன. கா. சிவத்தம்பியுடன் ஒரு கலந்துரையாடல் (திருப்பூர் கிருஷ்ணன், ஜன. 88), சாகித்ய அகாடமி நடத்திய கூட்டம் பற்றியதான புதுடில்லியில் புதுமைப்பித்தன் (அசோகமித்திரன், மே 88), வ.ரா. பற்றி எழுதப்பட்ட வ.ரா.

நூற்றாண்டு (ஆகஸ்டு 90), ராஜராஜன் விருது பெற்ற கலைஞரைப் பாராட்டுகிற 'ராஜராஜன் விருது' பெற்ற கலைஞருக்குப் பாராட்டு (ஆகஸ்டு 90), கோமல் பற்றிய 'சக பயணி' (அசோகமித்திரன் ஏப்ரல் 96), புதுமைப்பித்தன் பற்றிய 'அன்றைய ஊடகங்களும் புதுமைப்பித்தனும்' (தி.க.சி. ஆகஸ்டு 98) ஆகிய கட்டுரைகள் தனி எழுத்தாளர் பற்றியவை.

எழுத்தாளர்கள் தங்கள் எழுத்துக் குறித்துத் தன்மதிப்பீடு செய்யும் கட்டுரைகளும் உள. 'அக்னி' அமைப்பின் பரிசைப் பெற்றபோது இ.பா. ஆற்றிய உரை, 'நானும் என் எழுத்தும்' (ஜன. 93), எழுத்தனுபவத்தைப் புலப்படுத்துகிறது. சாகித்ய அகாதமி பரிசு பெற்றபோது தி. ஜானகிராமன் ஆற்றிய உரையான 'நான் ஏன் எழுதுகிறேன்?' (பிப். 93) நீல. பத்மனாபனின் 'என் எழுத்து அனுபவங்கள்' (ஏப். 97) ஆகியனவும் குறிப்பிடத்தக்க கட்டுரைகள். எம்டி. வாசுதேவன் நாயரின் 'ஓர் இலக்கியவாதியின் பாதை' கட்டுரை மொழிபெயர்ப்பு, பொதுநிலையிலும் தனிநிலையிலும் எழுத்தனுபவத்தை உணர்த்துகிறது.

## நாவல்

நாவல் பற்றி மிகுதியான கட்டுரைகள் இல்லை. நாவலின் போக்குப் பற்றியும் இல்லை. தனிப்பட்ட சில நாவல்கள் பற்றிய கட்டுரைகளே காணப்படுகின்றன. 'அந்தியூர் அவதானி' (பெருமாள் முருகன், ஜன. 99) 'இ.பா.வின் ஏசுவின் தோழர்கள்' (ஜூன் 99) சா. கந்தசாமியின் சாகித்ய அகாதமி பரிசுபெற்ற நாவலான விசாரணைக் கமிஷன் பற்றிய 'வில்லங்க மில்லாத விசாரணைக் கமிஷன்' (ஜன. 99) ஆகியன குறிப்பிடத்தக்க கட்டுரைகள். ஜெயமோகனின் 'விஷ்ணுபுரம்' (ஜூலை 98) கட்டுரையும் குறிப்பிடத்தக்கது.

## சிறுகதை

சிறுகதைகள் பற்றிப் பொதுநிலையில் கட்டுரைகள் வந்துள்ளன. 'எப்படிச் சிறந்த சிறுகதையாகும்?' (பிர்தௌஸ், ஜூலை 88) என்பது பொதுநிலையில் எழுதப்பட்ட கட்டுரை. செ. யோகநாதனின் 'கணையாழியும் ஈழத்து இலக்கியமும்' என்னும் கட்டுரை (நவ. 90) 1980 முதல் இலங்கை எழுத்தாளர்கள் கணையாழியில் தொடர்ந்து எழுதி வருவதைப் பற்றிக் குறிப்பிட்டு ஆய்கிறது. ஈழப் போராட்டம் பற்றியும் அடக்குமுறைக்கு எதிரான குரல்களாக அச்சிறுகதைகள் விளங்குவதையும் கட்டுரை எடுத்துக்காட்டுகிறது. 'எண்களில்

படைப்பிலக்கியம்' (பிப். 91), சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள் (மார்ச்சு 93) ஆகிய கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கன.

## கவிதை

கணையாழியின் தொடக்க இதழ்களில் பழைய இலக்கியங்கள் பற்றிய கட்டுரைகள் இடம்பெற்றன. 'கம்பன் காவியத்தில் கணையாழி' (செப். 65) முதல் ஆழ்வார்கள் மூவர் பற்றிக் கூறும் 'தமிழ் மறை போதிக்கும் வாழ்க்கை நெறி' (நவ. 65), 'பாவைப்பாடல் போதிக்கும் நாட்டுப்பற்று' (ஜன. 66), 'மூவர் கண்டவேங்கட மாமலை' (ஜன. 70) ஆகிய கட்டுரைகளைச் சௌமியன் எழுதியிருந்தார். ஆகஸ்டு 68 முதல் மே 70 வரை, கே.எஸ். சீனிவாசன் 'காவ்ய ராமாயணம்' என்ற தலைப்பில் வான்மீகி ராமாயணத்தைக் கம்பராமாயணத்துடன் ஒப்பிட்டு தொடர் கட்டுரையாக எழுதினார். அவரே தொடர்ந்து 'உத்தர ராமாயணம்' என்ற தொடரையும் எழுதினார். அகலிகையின் மௌனம் (ஜூலை 91) என்ற கட்டுரையை அவர் பின்னாளில் எழுதினார்.

புதுக்கவிதைகள் பற்றிய கட்டுரைகள் பின்னாட்களில் வந்துள்ளன.

ஹைகூ கவிதை பற்றி விரிவாகவும் தெளிவாகவும் ஆய்ந்து சொன்ன கட்டுரைகளும் உள. மாலன் எழுதிய 'கோயில் மணியில் தூங்கும் வண்ணத்துப்பூச்சி' (மார்ச்சு 91), தஞ்சாவூர்க் கவிராயர் - எழுதிய 'ஹைகூ சிலகுறிப்புகள்' (செப். 91) ஆகியன நல்ல கட்டுரைகள். தமிழ்ப் பெண்ணியக் கவிதைகள் தொடக்க நிலையில் மேலோட்டத் தன்மையில் இருப்பதைத் 'தமிழில் பெண்ணியக் கவிதைகள்' (முகில், ஜன. 98) என்ற கட்டுரை காட்டுகிறது.

## தமிழிலக்கியப் போக்கு

தமிழ் இலக்கியப் போக்கை உணர்த்தும் வகையில் தற்காலக் கவிதைகளைத் தொகுக்கும் பணியில் பாண்டிச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், 'இருபதாம் நூற்றாண்டின் பாட்டும் தொகையும்' (டிச. 91) என்னும் கட்டுரை எடுத்துக்காட்டுகிறது. தி.க.சி. 'கி.பி. இரண்டாயிரத்தில் தமிழிலக்கியம் சில கவலைகளும் கதையும்' (நவ. 96) என்ற கட்டுரையும், புதிதாகத் தமிழில் வெளிவருகிற சிற்றிதழ்கள் பற்றிய தகவல்களைத் தருகிற 'சிற்றிதழ்கள் பற்றிய தகவல்கள்' (பிப். 97) என்ற கட்டுரையும் தமிழிலக்கியப் போக்கை உணர்த்துகின்றன. இ.பா. எழுதிய, 'தமிழ்ப் படைப்பிலக்கியத்தின்

எதிர்காலம்' என்ற கட்டுரையும் குறிப்பிடத்தக்கது. 'சாகித்ய அகாதமி ஓர் அலசல்' (பிப். 96) என்ற தலைப்பில் சரவணன் எழுதிய கட்டுரை, பரிசுபெற்ற தமிழ் நூல்களின் பட்டியலைத் தந்து படைப்பிலக்கியப் போக்கை உணர்த்துகிறது.

## தமிழாய்வுப் போக்கு

சென்னைப் பல்கலைக்கழகத்திலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலும் நிகழ்ந்து வரும் ஆய்வுகள் குறித்துத் 'தமிழில் ஆய்வுப் போக்குகள்' (ஆகஸ்டு, அக்., டிச., 1995) என்ற தலைப்பில் நெடுஞ்செழியன் எழுதிய கட்டுரைகள் ஆய்வுத் தகவல் தருகின்றன. 'இருபத்தியொன்றாம் நூற்றாண்டில் தமிழ் ஆய்வு' என்ற தலைப்பில் ஜி. ஜான் சாமுவேல் எழுதிய கட்டுரையும் (செப். 97), மா. கோபாலகிருஷ்ணன் எழுதிய கட்டுரையும் (மே 98) ஆய்வுப்போக்கை உணர்த்துகின்றன. மதுசூதனன் 'தமிழியல் ஆய்வு' (மே 99) என்ற தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மன்றமும் இணைந்து நடத்திய பொதுவுடைமை இதழ்க் கருத்தரங்கு புலப்படுத்திய ஆய்வுப்போக்கை உணர்த்துகிறது.

## திறனாய்வு நெறி

உத்திகள் பற்றியும் ஆய்வுப்போக்குகள் பற்றியும் சில கட்டுரைகள் உள. 'இருண்மை இலக்கிய உத்தியா? தந்திரவித்தையா?' (ஜன. 98) என்ற கட்டுரையில் பழனியப்பா அது தந்திர வித்தை என்பதைப் புலப்படுத்தியிருக்கிறார். 'மேட்டிமையும் எதிர்வினைகளும்' (ஏப். 89) என்ற கட்டுரையில் இ.பா. வெகுசன இலக்கியம் என்ற பகுப்பு ஏற்பட்ட காலகட்டம் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்.

புதிய திறனாய்வு நெறிகள் குறித்த அறிமுகக் கட்டுரைகளும் ஆய்வுக்கட்டுரைகளும் இடம்பெற்றிருக்கின்றன. இ.பா.வின் 'பழையன புகுதல்' (நவ. 95), எஸ்ஸார்சி எழுதிய 'பின்நவீனத்துவம் சில புரிதல்கள்' (ஜூலை 97), 'பின்நவீனத்துவமும் நவீனத்துவமும் சில புரிதல்கள்' (அக். 98) ஆகிய கட்டுரைகள், கா. சிவத்தம்பியின் 'மார்க்சியமும் சமகாலச் செல்நெறியும்' (ஆகஸ்டு 99) என்ற கட்டுரை, இக்கட்டுரைக்கு எதிர்வினையாகத் தமிழவன் எழுதிய கட்டுரையும் (செப். 99), அமைப்பியல் திறனாய்வில் அமைந்த 'ஆனந்த் கவிதைகளில் வார்த்தைகளின் அர்த்த உற்பத்தி அர்த்தப் பிறழ்ச்சி அர்த்த உற்பத்தி மறுப்பு' (செப். 92) என்ற தலைப்பில் எஸ். சண்முகத்தின் கட்டுரை ஆகியன குறிப்பிடத்தக்கன.

## தொடர்கட்டுரைகள்

ஞானக்கூத்தன், தியாகு, மருதமுத்து, தி.க. சிவசங்கரன் ஆகியோர் ஒரேபொருளிலும் தனித்தனிப் பொருளிலும் தொடராக எழுதிய கட்டுரைகள் கணையாழியில் வெளியாகியுள்ளன. 'ஏற்பியல்' 'கவிதையும் அளவும்' (பிப். 91), 'சரியான சொல்' (மார்ச்சு 81), கவிதை ஏன் பிறக்கிறது? (செப். 91), சொல்லின் நிகழ்வு (டிச. 91), 'கவிஞர் வகைமை' (ஏப். 91), 'அவுசித்தியம்' (ஜூன் 91), 'ஈங்கோய்மலை வானரம்' (ஏப். 92) போன்ற ஞானக் கூத்தன் கட்டுரைகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

தியாகு 'மார்க்ஸின் தூரிகை' என்ற கட்டுரைத் தொடரில் காரல் மார்க்சின் எழுத்துக்களில் இடம்பெற்ற இலக்கியக் கூறுகள் குறித்தும் தமிழில் அவற்றுக்கு இணையான பகுதிகள் பற்றியும் ஒப்பிட்டும் நயமுணர்த்தியும் காட்டினார். இக்கட்டுரைகள் 'மார்க்ஸின் தூரிகை' என்ற தலைப்பில் நூலாக வந்துள்ளன. கணையாழியில் பெரும் வரவேற்பைப் பெற்ற கட்டுரைத் தொடர் இது. மருதமுத்து பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்தும் குறளிலிருந்தும் பார்ப்பனீய மறுப்புக் கருத்துக்களையும் தமிழ் மரபுகள் குறித்த கருத்துக்களையும் பல கட்டுரைகளாக எழுதினார்.

தி.க. சிவசங்கரன் 'காலத்தின் குரல்' என்ற தலைப்பில் மறைந்த எழுத்தாளர்கள் பற்றிய கட்டுரைகளைத் தருகிறார். புதுமைப்பித்தன், சி.சு. செல்லப்பா, சாமிநாதசர்மா, கே.சி.எஸ். அருணாசலம், தகழி சிவசங்கரன் பிள்ளை, கல்கி ஆகியோரைப் பற்றிய அரிய செய்திகளைத் தருகிறார். பிப். 99 முதல் தொடர்ந்து இப்பகுதி வந்து கொண்டிருக்கிறது.

பிறமொழி எழுத்தாளர் பற்றியும் படைப்பு பற்றியும் கட்டுரைகள் வெளியாகியுள்ளன. யமரேஷ் பாஸு பற்றி (ஜூன் 88), பங்கிம் சந்திரர் பற்றி (ஏப். 93), மகா சுவேதாதேவி பற்றி (ஏப். 97, டிச. 97) எழுதப்பட்ட கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன. நவீன மலையாளக் கவிதை குறித்து நகுலன் (நவ. 92) எழுதியுள்ளார்.

ஆங்கிலக் கவிஞர்கள் பற்றியும் கட்டுரைகள் வெளியாகியுள்ளன. டால்ஸ்டாய் (ஆகஸ்டு 65, செப். 65), ஹென்ரி (செப். 65), செக்நாட்டுக் கவிஞர் மிராஸ்லாவ் ஷோலூ (ஜூலை 70), எட்கர் ஆலன்போ (ஆக. 92), எமிலிடிக்கன்ஸன் (செப். 92), நோபல் பரிசு பெற்ற கவிஞர் டெரெக் வால்காட் (நவ. 92) ஆகியோர் பற்றிய கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

## நூல் மதிப்புரைகள்

நூல் விமரிசனம், நூல் மதிப்புரை என்ற தலைப்புகளில் கவிதை, நாவல், சிறுகதை, திறனாய்வு நூல்களும் பொதுவான நூல்களும் திறனாய்வு நூல்களும் அறிமுகப்படுத்தப்பட்டு மதிப்பீடு செய்யப்பட்டன. எனவே இதனையும் இலக்கிய விமரிசனப் பகுதியில் சேர்த்துக் கருதவேண்டும். திருப்பூர் கிருஷ்ணன், தி.க. சிவசங்கரன், ஞானக்கூத்தன், இந்திரன், எஸ். குரு, வே. சபாநாயகம், பாரதி, ராஜம் கிருஷ்ணன், கமலாலயன், சரவணன், பகலவன் சேது, எஸ்ஸார்சி, கோபிகிருஷ்ணன், வாஸந்தி, ஞாநி, கரிச்சான் குஞ்சு, சுப்ரபாரதிமணியன் முதலானோர் நூல் மதிப்புரை எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

## மொழிபெயர்ப்பு

மற்ற இலக்கிய இதழ்களுடன் ஒப்பிடக் கணையாழியில் மொழி பெயர்ப்புகள் குறைவுதான். பிறமொழிக் கவிதைகள், கதைகள், கட்டுரைகள் சில மொழிபெயர்த்துத் தரப்பட்டுள்ளன. ஜெயலட்சுமி சுப்பிரமணியன், பாவண்ணன், சாந்தாதத், பிரகாஷ், மனோன்மணி, திலீப்குமார், நிர்மால்யா, டேவிட் சித்தையா, கோ. ராஜாராம் ஆகியோரது மொழிபெயர்ப்புகளைக் காணமுடிகிறது.

இந்திக் கவிஞர்கள் ஸ்ரீகாந்த்வர்மா, ஜிதேந்திரகுமார், பாரத்பூஷன் அகர்வால், சுமதி ஐயர் ஆகியோரது படைப்புகளும், மலையாளக் கவிஞர்களான சுரேந்திரன், அய்யப்பப் பணிக்கர் முதலானோர் படைப்புகளும், வங்கக் கவிஞர்களான மல்லிகா சென்குப்தா, ஜகந்நாத் சரஸ்வதி, பிரம்மேந்திர மித்ரா ஆகியோருடைய கவிதைகளும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

ஜப்பானிய ஹைகூ கவிதைகள் கலாப்பிரியாவாலும் மனோன்மணியாலும் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளன.

மராத்தி, தெலுங்கு, கன்னடம், இந்தி ஆகிய மொழிச் சிறுகதைகள் தமிழாக்கம் பெற்றுள்ளன. வியட்னாம் ரஷ்ய சிறுகதைகளும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. காப்கா, இபடாலோ, கால்வனோ போன்ற மேல்நாட்டு எழுத்தாளர்கள் கதைகளும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

## தொடர்கதை

பொதுவாகச் சிற்றிதழ்கள், தொடர்கதைகள் வெளியிடுவதில்லை. ஆனால் சிற்றிதழ் என்ற எண்ணமின்றித் தொடங்கப்பட்டதால் கணையாழியில் தொடர்கதைகள் இடம்பெற்றன. ஆசிரியர் குழுவைச் சார்ந்தவர்களின் தொடர்கதைகள் மிகுதியாக வெளியாயின. இ.பா.வின் கானல்நீர் (ஜூன் 68 முதல்), அசோகமித்திரனின் மணல் (மார்ச்சு 69 முதல்), சுஜாதாவின் '6961' (ஆகஸ்டு 69 முதல்) ஆகியனவும் இ.பா.வின் முதல் அரசியல் நாவலான சுதந்திர பூமியும் (ஜன. 70 முதல்) தொடக்க ஐந்து ஆண்டுகளுக்குள் வெளியாயின. இ.பா.வின் குருதிப்புனல், பேர்ப் பற்று ஆகியனவும் கணையாழியில்தான் வெளிவந்தன. அசோகமித்திரனின் புகழ்மிக்க நாவலான தண்ணீர், 18ஆவது அட்சக்கோடு ஆகியனவும் வெளியாயின. தி.ஜா.வின் மரப்பசு, நளபாகம், மோகமுள் ஆகியனவும் தொடராக வெளியாயின. து. ராமமூர்த்தியின் குடிசை, நீல. பத்மனாபனின் ஃபைல்கள், வண்ணநிலவனின் கடல்புரத்தில் ஆகியனவும் கணையாழியில் வெளியாயின.

## குறுநாவல்கள்

குறுநாவல் வளர்ச்சிக்குக் கணையாழி ஆற்றியுள்ள பணி பாராட்டுக்குரியது. கலைமகள், கல்கி பாணியில் போட்டி நடத்தியும் நல்ல குறுநாவல்கள் உருவாகக் கணையாழி காரணமாக இருந்திருக்கிறது. கணையாழியில் குறுநாவல்கள் தொடர்ச்சியாக இன்றுவரை வெளியாகிக் கொண்டேயிருக்கின்றன. முன்னால், 'தி. ஜானகிராமன் குறுநாவல் திட்டம்' என்று போட்டி வைத்துத் தேர்ந்தெடுத்து அப்பட்டியலையும் வெளியிட்டுத் திங்கள் தோறும் அவற்றை வெளியிட்டனர். 'தசரா' பொறுப்பேற்ற பிறகு தமன்பிரகாஷ் சகோதரர் நரேந்தர் நினைவாக 'சம்பா நரேந்தர் குறுநாவல் திட்டம்' என்பதன் மூலம் குறுநாவல்களை உருவாக்கச் செய்து வெளியிடுகிறார்கள்.

ஆ. மாதவன், நீல. பத்மநாபன், மந. ராமசாமி, வண்ணநிலவன், கி. சச்சிதானந்தம், பாவண்ணன், கோணங்கி, அழகிய சிங்கர், கோபிகிருஷ்ணன், ஜெயமோகன், சுப்ரபாரதிமணியன், எஸ். ராமகிருஷ்ணன், செ. யோகநாதன், அ. முத்தானந்தம், ம. ராஜேந்திரன், அபிமானி, ரெ. கார்த்திகேசு ஆகியோரது படைப்புகள் குறிப்பிடத்தக்கன. இவர்களில் ஓரிருவர் தவிர எல்லோரும் கணையாழியில் சிறுகதைகளையும் படைத்திருக்கிறார்கள்.

குடும்ப உறவுகள், பார்ப்பனத் தன்னிரக்கம், வேலையின்மை, வறுமை போன்ற பிரச்சினைகள் மையப்படுத்தப்பட குறுநாவல்கள் இவர்களால் எழுதப்பட்டன. இலங்கை எழுத்தாளர்கள் அங்குள்ள அடக்குமுறைப் பிரச்சினை குறித்து எழுதினார்கள்.

## சிறுகதை

கணையாழியின் தொடக்க நாட்களில் தரமான சிறுகதை எதுவும் வெளியாகவில்லை. 1966ஆம் ஆண்டில் 'துறவி' என்ற பெயரில் நா. பார்த்தசாரதி எழுதிய கதையும், ந. முத்துசாமி எழுதிய கதையும் வெளியாயின. கணையாழியில் 'சிறுகதைப் போட்டி' ஓரிருமுறை நடந்தது. தொடக்ககாலக் கதைகளில், கணையாழிக் கட்டுரைகள் அரசியல் செய்திகள் அனைத்திலுமே வெளிப்பட்டுக் கொண்டிருந்த கிண்டல் தொனி இருந்து கொண்டிருந்தது.

தொடக்கத்தில் இந்திரா பார்த்தசாரதி, நா. முத்துசாமி, ஆதவன், அசோகமித்திரன், நீல. பத்மனாபன், கு. அழகிரிசாமி, தி. ஜானகிராமன் முதலானோர் சிறுகதைகள் படைத்தனர்.

வல்லிக்கண்ணன், ஆர்.வி., சுஜாதா, சா. கந்தசாமி, மகரிஷி, சிட்டி, தி.ஐ. ரங்கநாதன், சி.ஆர். ரவீந்திரன், அம்பை, திலீப்குமார், பிரபஞ்சன், நாஞ்சில் நாடன், கி. ராஜநாராயணன், சாருநிவேதிதா, மா. அரங்கநாதன், ஜெயமோகன், காவேரி, எஸ். ராமகிருஷ்ணன், பா. செயபிரகாசம், சு. சமுத்திரம், தோப்பில் முகமது மீரான், நகுலன், கிருஷ்ணன் நம்பி, அசோகமித்திரன், விமலாதித்த மாமல்லன், ஜெயந்தன், தங்கர்பச்சான், சங்கரநாராயணன், விழி.பா. இதயவேந்தன், கண்மணி குணசேகரன் முதலானோர் சிறுகதை எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்

1980ஆம் ஆண்டுக்கு மேல் தொடங்கிய ஈழப் போராட்டத்தில் இலங்கைத் தமிழர்கள் பாதிக்கப்பட்டனர். அடக்குமுறைக்கு எதிரான குரல்கள் கணையாழியில் சிறுகதைகளாக வெளிவந்தன. எம்.ஏ. நுஃமான் அ. யேசுராஜா, எஸ். பொன்னுதுரை, சாந்தன், உமா வரதராஜன், செ. யோகநாதன், ஸ்ரீதரன், டேனியன், ராஜேஸ்வரி பாலசுப்ரமணியன் முதலான இலங்கை எழுத்தாளர்கள் எழுதினர்.

சிறுகதை எழுத முயற்சிப்பதைக் கேலிசெய்து ஜூன் 92இல் கோபி கிருஷ்ணன் ஒரு கதை எழுதியிருந்தார். ஏப்ரல் 96இல் சு.கி. சிவகுமார் Magical Realism பாணியில் சிறுகதை எழுதியிருந்தார்.

## கவிதை

தொடக்கத்தில் கணையாழி புதுக்கவிதையை வெளியிடவில்லை. கணையாழியின் தொடக்கத்தை ஒட்டியே தொடங்கப்பட்ட 'நடை' இதழில் புதுக்கவிதைகளின் வீச்சு ஓங்கியிருக்க, இதில் புதுக்கவிதைகளுக்கு இடமளிக்கப்படவில்லை. சாலையார், கம்பதாசன் போன்றவர்களின் மரபுக் கவிதைகள்தான் வெளியிடப்பெற்றன. போகப்போகக் கணையாழி புதுக்கவிதைகளை வெளியிடத் தொடங்கியது. ஞானக்கூத்தன், எஸ். வைத்தீஸ்வரன் போன்றவர்கள் நிறையக் கவிதைகள் எழுதித் தாக்கத்தை ஏற்படுத்தினார்கள். ஹைகூ சிறப்பிதழையும் கணையாழி வெளியிட்டது. ஏப்ரல் 97இல் தமிழ்ப்புத்தாண்டு மலருடன் புதுக்கவிதைகள் 32 பக்கங்கள் கொண்ட தனிநூலாக, இணைப்பாகத் தரப்பட்டது.

கோ. ராஜாராம், நா. விஸ்வநாதன், கி. மணி, தி.கோ. வேணு கோபாலன், கல்யாண்ஜி, இரா. மீனாட்சி, தமிழன்பன், புவியரசு, தேவமகள், பழமலய், அகல்யா, விக்ரமாதித்யன், வித்யா ஷங்கர். கலாப்பிரியா, நீலமணி, உமாமகேசுவரி, வெ. அனந்த நாராயணன், ந. முத்துசாமி, நெ. காளிதாஸ், கார்க்கிராஜா, க. மோகனரங்கம், ஆர். ராஜகோபாலன், வண்ணநிலவன், மாலன், மனுஷ்ய புத்திரன், ஹரிசீனிவாசன், பாரதிராமன், நா. முத்துக்குமார், மகுடேஸ்வரன், யூமா வாசுகி, இளமுருகு, மாத்தளை சோமு, பாப்லோ அறிவுக்குயில், தஞ்சை பிரகாஷ், யவனிகா ஸ்ரீராம், தாமரை, கனிமொழி, பா. ராஜாராம், பா. சத்தியமோகன், யுகபாரதி, இன்குலாப், கண்மணி குணசேகரன், சுதந்திர சுப்பிரமணியன், அறிவுமதி, கிருஷாங்கினி முதலானோர் கணையாழியில் எழுதிய புகழ்மிக்க கவிஞர்கள்.

கணையாழியில் வந்த கவிதைகள் தனிமனித உணர்வுகளையும் சில மனப்பதிவுகளையும் வாழ்நிலைக் கொள்கைகளையும் வெளிப்படுத்தின. 'எழுத்து', 'கசடதபற' ஆகிய இதழ்களின் கவிதைகள் போலவே இவை அமைந்திருந்தன.

## நாடகம்

நாடகங்களுக்குக் கணையாழியில் மிகுதியான இடம் தரப்படவில்லை. ஜெயந்தன், இந்திரா பார்த்தசாரதி, கரிச்சான் குஞ்சு, எஸ்.எம்.ஏ. ராம் ஆகியோர் நாடங்கள் வெளியீடு பெற்றிருக்கின்றன.

ஜெயந்தனின் 'இயக்கவிதி' (நவ. 74), 'நினைக்கப் படும்' (நவ. 75) ஆகிய நாடகங்கள், மண்ணின் மைந்தர்களின் பண்பாட்டு வீழ்ச்சியைப் பற்றியவை. நிஜந்தனின் 'கணக்கன்', 'நிறைகாப்பு' ஆகிய நாடகங்களும் கணையாழியில் இடம் பெற்றன.

இந்திரா பார்த்தசாரதியின் 'அண்ணா வந்தார்' (டிச. 68) நாடகம் அண்ணா அமெரிக்காவில் மருத்துவ சிகிச்சை பெற்றுத் திரும்பியபோது எழுதப்பட்டது. தி.மு.க. காங்கிரஸ் அரசியலை உருவகப்படுத்தி அந்நாடகம் எழுதப்பட்டது. அதில் பாத்திரங்களின் பெயர்கள் வாசகர்கள் இன்னார் என அறியும் வகையில் உருவாக்கப் பட்டன. அறிஞர்கோன், கலைவாணன், மதிவாணன், செந்நாவலர், வீடுமர் (உடுக்கட்சித் தலைவர்), விசுவாமித்திரர் (வீடுமரின் பகைவர்), ராமராசர், திண்ணைதாசன், செருக்காந்தன் என்று வரும் பாத்திரங்களை இனம் காண்பது கடினம் இல்லை.

பொற்றேகாட் எழுதிய 'நாவடகம்' (ஜன. 92) என்ற புதிய வடிவம் மலையாளத்திலிருந்து தமிழுக்கு அறிமுகப்படுத்தப்பட்டது. நாவல் + நாடகம் ஆகிய இரண்டு படைப்பு வடிவங்களையும் கலந்த வடிவம் நாவடகம்.

அவந்தி மெகதூரியின் 'கடவுள் தன்பெயரை மாற்றிக் கொண்டார்' என்ற நாடகமும் மொழிபெயர்த்துத் தரப்பட்டிருந்தது.

## கட்டுரைகள்

பொதுவான கட்டுரைகள் இலக்கிய இதழ்களில் இடம் பெறுவதில்லை. ஆனால் கணையாழியில் அத்தகைய கட்டுரைகள் இடம்பெற்றன.

சமூகச் சிக்கல்கள், பொருளியல் சிக்கல்கள், அறிவியல், வரலாறு குறித்த கட்டுரைகள் வெளியாகியுள்ளன. அகாலிதளம் (நவ. 85), திராவிட இயக்கம் (செப். 91), சோசலிச நாடகங்கள் (டிச. 87), சுற்றுச் சூழல் (ஆகஸ்டு 97, நவ. 97), பயங்கரவாதம் (மார்ச்சு 98, ஆகஸ்டு 98), ஈழத்தமிழர் சிக்கல் (ஆகஸ்டு, செப்., அக். 95, டிச. 98) பற்றிய கட்டுரைகள் வந்துள்ளன.

குழந்தைத் தொழிலாளர் நிலை (ஜூன் 96), இலங்கைத் தோட்டத் தொழிலாளர்கள் (டிச. 96), என்ரான் (செப். 95), சென்னைக்குக் குடிநீர் (ஆகஸ்டு 95) ஆகிய கட்டுரைகளும் வந்துள்ளன.

அறிவியல் கட்டுரைகள் ஒன்றிரண்டு வெளியாகியுள்ளன. சென்னை நகரின் வரலாறு (செப். 90, ஜூன் 91) கட்டுரையாகத் தரப்பட்டுள்ளது.

## நேர்காணல்

சம்பாஷணை, பேட்டி, நேர்முகம், நேர்காணல் என்று பெயரிடப்பட்டு அவ்வப்போது தொடர்ந்து இடம்பெறுகிற பகுதி. தொடக்கத்தில் தொடர்ச்சியாக அரசியல்வாதிகளின் பேட்டிகள் இடம்பெற்றன. கஸ்தூரி ரங்கன் புகழ் வாய்ந்த பத்திரிகையாளராக இருந்ததால் எளிதாக அவரால் பேட்டி ஏற்பாடு செய்ய முடிந்தது. அப்பேட்டிகள் கணையாழியில் இடம்பெற்ற அடுத்தவாரத்தில் அன்றைய ஆங்கில ஏடுகள் மொழிபெயர்த்து வெளியிட்டுக் கொண்டன. காமராசர், இந்திரா காந்தி, சி. சுப்பிரமணியம், சவாண், ம.பொ.சி. டாக்டர் கரன்சிங், கே.கே. ஷா, ஆர். வெங்கட்ராமன், அண்ணா, நிஜலிங்கப்பா, மொரார்ஜி தேசாய், கலைஞர் போன்றோருடைய பேட்டிகள் இடம்பெற்றன.

லா.ச.ரா., மௌனி, ஆனந்த மூர்த்தி, பாசு சட்டர்ஜி, மலையாள எழுத்தாளர் வைசாகன் போன்ற படைப்பாளிகளின் நேர்முகங்கள் இடம்பெற்றன. சிவகாமி, ஜெயகாந்தன் ஆகியோருடன் நிகழ்த்திய பேட்டிகளும் இடம்பெற்றன.

பதிப்பாளர்களை நேர்முகம் செய்து பதிப்புத் துறையிலுள்ள சிக்கல்களையும், வாசகத்தன்மையையும் புலப்படுத்தும் வகையில் 'க்ரியா' ராமகிருஷ்ணன், கண. முத்தையா (தமிழ்ப் புத்தகாலயம்), மாசிலாமணி (கலைஞன் பதிப்பகம்), மீரா (அன்னம்), சே. செல்லப்பன் (மீனாட்சி புத்தக நிலையம்) போன்றோரிடம் பேட்டி காணப்பட்டது.

எம்.ஜி.ஆருடன் செம்பியன் நிகழ்த்திய பேட்டி குறிப்பிடத்தக்கது. 'அண்ணாயிசம்' என்றால் சமதர்மம், ஊழல் ஒழிப்பு, மதுவிலக்கு, சூதாட்ட ஒழிப்பு என்ற நான்கு அம்சக் கொள்கைதான் என்று முதன்முதலாக விளக்கம் தந்தது அப்பேட்டியில்தான்.

சில நல்ல பேட்டிகள் பிற மொழியிலிருந்து மொழிபெயர்த்து வெளியிடப்பட்டன. பின் அமைப்பியல்வாதியான தெரிதா (ஜூன் 97), மகாஸ்வேதாதேவி (டிச. 97), வாசிரெட்டி சீதாதேவி (செப். 97), கத்தர் (நவ. 70) ஆகியோரது பேட்டிகள் இவ்வாறு வெளியாயின.

## பிற விமரிசனங்கள்

இலக்கிய விமரிசனம் போல நாடக விமரிசனம், திரை விமரிசனம், ஓவிய விமரிசனம், கலை விமரிசனம் ஆகியனவும் கணையாழியில் இடம் பெற்றன. சிற்றிதழ்கள் இத்தகைய விமரிசனங்களைத் தங்களுடைய கலை பண்பாட்டுத் தேடல்களின் அடையாளங்களாகக் காட்டிக் கொள்கின்றன.

## நாடக விமரிசனம்

கணையாழி, டிச. 69இல் 'சோ' நாடகங்களைக் கிண்டல் செய்து எழுதியது. தொடர்ந்து பரிசோதனை நாடகக் குழுக்களையும் நாடகங்களையும் பற்றிய செய்திகளை அவ்வப்போது வெளியிடுகிறது.

பரிக்ஷா, கூத்துப்பட்டறை, ஐக்கியா அரூபா, ஆடுகளம் போன்ற அமைப்புகள் பற்றியும் குழுக்களின் ஒருங்கிணைப்பு அமைப்பான கோலம் பற்றியும் அவற்றின் நாடக நிகழ்வுகள் பற்றியும் கணையாழி விமர்சனம் செய்திருக்கிறது.

தஞ்சை நாடக எழுத்துப்பட்டறை (மே 90), புரிசை நாடக விழா (ஜூன் 90), மதுரை நாடக விழா (டிச. 93), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடத்திய நாடகப் பயிற்சி (டிச. 95) ஆகியன பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. நற்றுணையப்பன் (நவ. 88), நிரபராதிகளின் காலம் (மார்ச்சு 89), மீள முடியுமா? (ஜூலை 89) ஆகிய நாடகங்கள் பற்றிய விமரிசனங்கள் இடம் பெற்றன.

நாடகமும் நாவலும் கலந்த வடிவமான 'நாவடகம்' என்னும் புதிய கலைவடிவம், மலையாள மொழியில் 'பொற்றேகாட்'டால் எழுதப்பட்டது. அதனைத் தமிழில் மொழிபெயர்த்து அறிமுகப்படுத்தியது (ஏப். 96) கணையாழி. பாதல் சர்க்கார் பற்றிய அறிமுகம் (ஜன. 90) குறிப்பிடத்தக்கது.

## திரை விமரிசனம்

தொடக்கத்தில் டில்லித் தமிழர்களுக்காகக் கணையாழி, தமிழ்த் திரைப்படங்கள் குறித்த செய்திகளைத் தந்துவந்தது. கணையாழியின் இரண்டாவது இதழிலேயே சுஜாதா, தமிழ்ப் படங்களை மட்டம் தட்டி எழுதியிருந்தார். 'திரைப்படக் காட்சிகள்' (செப். 65) என்ற கட்டுரையும், வை.ரா. தமிழ் சினிமாபற்றி எழுதிய கட்டுரையும் (நவ. 65) தொடக்கத்தில் வெளிவந்தவை.

திரை இயக்குநர் பற்றிய 'சினிமா உலகம்' (ஆகஸ்டு 68), திரைப்படத் தொழிலாளர் பற்றிய 'நடமாடும் நிழல்கள்' (ஜூலை 76) ஆகிய கட்டுரைகள் சிறப்பானவை. 1974-75இல் எல்லா இதழ்களிலும் திரை விமரிசனங்கள் வெளியாயின. படவிழாச் செய்திகள் இடம்பெற்றன. பாலச்சந்தருடன் பேட்டி இடம்பெற்றது.

1985-86ஆம் ஆண்டுகளில் ஆர்.பி.எஸ். 'புது சினிமா' என்ற தலைப்பில் தமிழ்த் திரைப்படங்களின் பாத்திரங்களை (ஜூன் 86) சுட்டிக்காட்டியது. தமிழ்ப் படங்களில் அரசியல் மிகுதியாகி வருவதை விரிவாக எடுத்துக்காட்டியது பாஸ்கரின் கட்டுரை (நவ. 87).

கலைப்படங்களின் இயல்பு பற்றி நிறையக் கட்டுரைகள் வந்தன. தோட்டம் ஆர்.எஸ். மணியனின் (பிப். 88) கட்டுரையும் நிஜந்தனின் (மே 88) கட்டுரையும் குறிப்பிடத்தக்கன.

திரைப்படங்களின் வரலாற்றைக் கூறும்வகையில் எஸ். சுவாமி நாதன் 'சினிமாவுக்கு நூறு வயது' (ஆகஸ்டு 95) என எழுதினார். தமிழ்த் திரைப்படங்களின் கதைகள் குறித்து அ. இருதயராஜ் (டிச. 98) எழுதினார். ஈழப்படங்கள் (நவ. 98) பற்றியும், புலம் பெயர்ந்து பாரிசில் வாழும் தமிழர்கள் எடுத்த படம் பற்றியும் (ஆகஸ்டு 96) கட்டுரைகள் வந்தன. 'தமிழ்த் திரைப்படங்களில் தலித் மக்கள்' (ஜூன் 98) என்ற கட்டுரையில் அ. இருதயராஜ் தலித்துகள் சித்தரிக்கப்படுவதைச் சமூகவியல் நோக்கில் ஆய்ந்திருந்தார். அனிமேஷன் படங்கள் பற்றித் தொழில் நுணுக்கத்துடன் டிராட்ஸ்கி மருது (மார்ச்சு 94) விளக்கினார்.

அம்ஷன்குமார் இயக்கத்தில் உருவான பாரதியார் பற்றிய குறும்படம் புலப்படுத்தும் தகவல்களை அழகியசிங்கர் (செப். 99) எடுத்துக்காட்டியுள்ளார். தேசிய விருது பெற்ற 'மல்லி' என்ற குறும்படம் 13 நிமிடங்களில் ஒரு பெண்ணின் வாழ்க்கையை விளக்கும் விதத்தில் தொழில்நுட்பத்துடன் மாதவ கிருஷ்ணனால் இயக்கப்பட்டு உருவானது குறித்துச் செய்யாறு வி. பானு (செப். 99) எழுதிய கட்டுரையும் குறிப்பிடத்தக்கது.

இந்தி, ஒரியா, வங்கம், தெலுங்கு, அசாமி, மலையாளம், மராத்தி முதலிய மொழிப் படங்களையும், ஜெர்மன், ஜப்பான், பிரேசில், ஆஸ்திரேலியா, ஹங்கேரி முதலான வெளிநாட்டுப் படங்களையும் கணையாழி அறிமுகம் செய்துள்ளது.

## ஓவிய விமரிசனம்

கணையாழி, சிற்றிதழ் மரபுப்படி நிறையப் புத்தோவியங்களையும் கோட்டோவியங்களையும் அட்டையில் வெளியிட்டிருந்தும் ஓவியங்கள், ஓவியர்கள் பற்றிய செய்திகள் குறைவாகவே காணப்படுகின்றன. சந்தானராஜ், மாற்கு, புகழேந்தி, சாரங்கன், கிருஷ்ணமூர்த்தி, ராஜாரவிவர்மா போன்றவர்கள் பற்றிய அறிமுகம் தரப்பட்டுள்ளது. மாடர்ன் 'ஆர்ட் பற்றிச் சிற்பி தட்சிணாமூர்த்தியின் கட்டுரையும் (மார்ச்சு 94) ஓவியர்கள் கிராமம் பற்றி சி. அண்ணாமலை எழுதிய கட்டுரையும் (மார்ச்சு 91) குறிப்பிடத்தக்கன. ஆகஸ்டு 98 முதல் 'தூரிகை முற்றம்' என்ற பகுதியைத் தொடங்கி மியூசியம் பற்றிய புதிய தகவல்களைக் கணையாழி தருகிறது.

## கலை விமரிசனம்

இசை, நாட்டியம், சிற்பம் பற்றியும் கலை அமைப்புகள் பற்றியும் விமரிசனங்கள் காணப்படுகின்றன. 'கலை உலகம்' என்ற பகுதியில் கே.எம். ரங்கசாமி கலை விமரிசனங்கள் எழுதினார். சுப்புடு இசை, நாட்டியம் பற்றி இசைக்கலைஞர்கள் பற்றி எழுதிய பகுதிகளும் குறிப்பிடத்தக்கன.

லால்குடி ஜெயராமன், எல். சுப்பிரமணியன், மதுரை மணி ஐயர், பாலமுரளி, மாலி, வீணை பாலசந்தர் ஆகியோர் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. யாமினி, பாலசரஸ்வதி, அலர்மேலு வள்ளி, குமாரி பத்மா, குமாரி கமலா ஆகியோரின் நடனம் குறித்துச் செய்திகள் காணப்படுகின்றன.

கலாசேத்திரா, சம்பிரதாயா போன்ற அமைப்புகள் பற்றியும் 'ஜனநாயக நாட்டிய மண்டலி' அமைப்பைப் பற்றியும் செய்திகள் உள.

## என்.எஸ். ஜகந்நாதனின் 'என்னைக் கேட்டால்'

1970 முதல் இன்று வரை இடையே சிறிதுகாலம் இல்லாமற்போய் தொடர்ந்து இடம்பெறுகிறது 'என்னைக் கேட்டால்' பகுதி. இதில் என்.எஸ்.கே. திரைப்படம், நாடகம், தத்துவம், சமூக உளவியல், அரசியல், பிரச்சினைக்குரிய எழுத்துக்கள், மதம், கலாச்சாரம் போன்ற பல செய்திகள் குறித்து எழுதுகிறார்.

ஒரு நீண்ட இடைவெளிக்குப்பின் அக். 88இல் மீண்டும் எழுத முன்வந்த என்.எஸ்.கே. எழுத்தாளர்களை அச்சுறுத்த அவதூறு மசோதா கொண்டு வந்த செயல் தன்னை மீண்டும் எழுதத் தூண்டியதாகக் கூறுகிறார். ருஸ்தியின் சாட்டனிக்வெர்ஸஸ் நாவலில் 'Magical Realism' உள்ளமை பற்றி ஆழமாக எழுதியுள்ளார் (டிச. 88). காதாசப்தகதி, ஆனந்தரங்கம் பிள்ளை டைரி போன்றவற்றைப் படித்தது குறித்த அனுபவங்களையும் நூல்களின் சிறப்பையும் குறிப்பிட்டுள்ளார்.

இவர் கட்டுரைகளில் சமூக சிந்தனைக் கட்டுரைகளே மிகுதி. தமிழகத்தில் மலர்க்கிரீடம் பூணும் மனோபாவம் (மே 70), தமிழ் மக்களிடம் காணப்படும் பசப்புப் பணிவன்பு (Cycophancy), கூட்டங்களில் மிகையாகப் பேசுவது (பிப். 92) ஆகியன தமிழ்ச் சமூகம் பற்றிய கண்ணோட்டங்களாக உள்ளன. பொதுவாக இந்தியர்களிடம் ஊழல் பற்றிய தார்மீக சிந்தனை குறைந்து விட்டது (பிப். 98) என்று இந்திய சமூக மனோபாவத்தையும் எடுத்துக்காட்டுகிறார். கணிப்பொறி, செயற்கைக் கோள் ஒளிபரப்பு, ஊடக நிறுவனங்கள் குறித்தும் மதவாதம் குறித்தும், கூட்டணி அரசியல் குறித்தும் ஆழமான கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

### சுஜாதாவின் 'கடைசிப்பக்கம்'

ஸ்ரீரங்கம், எஸ்.ஆர். என்கிற பெயரில் சுஜாதா, 'பெட்டி' என்ற தலைப்பிலும், 'நீர்க்குமிழி' என்ற தலைப்பிலும் நிறையச் செய்திகளைத் துணுக்குகளாகத் தருகிறார். பின்னர் கடைசிபக்கம் என்று அன்றாட அரசியல், புதிய நூல்கள், அண்மையில் படித்த பழைய நூல்கள், பழைய நூல்களில் காணும் புதிய செய்திகள், கணிப்பொறிச் செய்திகள், தமிழ்ப் படைப்புகளில் நயமானவை, நயமான பகுதிகள், திரைப்படங்கள், வானொலி, திரைப்படங்கள், மரபுக்கவிதை என்று பல்வேறு துறைகள் பற்றி 69 முதல் டிச. 98 வரை எழுதியுள்ளார்.

கணிப்பொறி விசைப்பலகைக்கு மிகவும் பொருத்தமான மொழி உலக மொழிகளில் தமிழ் மட்டும்தான் என்ற கருத்தை இப்பகுதியில் வெளியிட்டிருக்கிறார். ஹைகூ, சிறு பத்திரிகைகள், இலங்கை எழுத்துக்கள், நாடகக்குழுக்கள் பற்றிய செய்திகளும் தமிழில் சாஃப்ட்வேர், பயண அனுபவங்கள் என்றும் பல தளங்களில் அவர் எழுத்து ஊடாடுகிறது.

பிராய்ட், எரிக்கா ஜங், பீட்டர் ப்ருக், ஓ ஹென்றி போன்ற வெளிநாட்டுப் படைப்பாளர்கள் பற்றியும் அறிமுகம் செய்துள்ளார்.

அகிராகுரோசேவா, ஷியாம் பெனகல், சத்யஜித்ராய் போன்ற இயக்குநர்கள் பற்றியும் எழுதியுள்ளார்.

லா.ச.ரா., சுந்தர ராமசாமி முதலான நாவலாசிரியர்கள் பற்றியும், புவியரசு, பழமலய், உமாமகேசுவரி, வ.ஐ.ச. ஜெயபாலன், ஞானக்கூத்தன், சி. மணி போன்றவர்களின் கவிதை பற்றியும் எழுதியுள்ளார். ஏ.கே. ராமாநுஜன் பற்றியும் 'Freedom at Midnight' போன்ற நூல்கள் பற்றியும் எழுதியுள்ளார்.

அவரே சொல்வது போல, 'கடைசி பக்கம்' இந்த வர்ணத்தில் கொஞ்சம் அந்த வர்ணத்தில் கொஞ்சம் என்று ஈஸ்ட்மென் கலரில். உள்ளதாகக் சொல்லலாம்.

## தற்காலிகப் பகுதிகள்

கணையாழியில் தொடர்பு கொண்டிருந்த எழுத்தாளர் பலர். இவர்கள் போட்டி போட்டுக்கொண்டு எழுதித்தள்ளிய பல பகுதிகள் திடீரென இடம்பெறுவதும் காணாமற் போவதும் இயல்பாக இருந்திருக்கிறது. தொடக்கத்தில் இப்பகுதிகளில் கிண்டல் தொனியும் கண்டனத் தொனியும் மிகுதியாக இருந்தது. போகப்போக வெறும் தகவல் தரும் போக்கில் - தொனியில் அவை அமைந்தன. பத்திரிகையாளர்கள் பலர் இப்பகுதிகளை எழுதியிருக்கிறார்கள். புதிதாக இதழ் தொடங்குபவர்களுக்கு இன்னின்ன பகுதிகளை அமைக்கலாம் என்று அறிந்து கொள்ளக்கூடிய அளவு கணையாழியில் மிகுதியாக இப்பகுதிகள் இடம் பெற்றன. தொடக்கத்தில் வாசக ஈர்ப்புக்காக இப்பகுதிகள் அமைந்தன. பின்னாட்களில் குறிப்பிட்ட சில எழுத்தாளர்களின் எழுத்துக்கள் இடம் பெறச் செய்யும் நோக்கத்தில் இடமளிக்கப்பட்டன. அவற்றைக் கால வரிசையாகத் தருவது இதழியல் போக்கை உணர உதவும் என்பதால் அவ்வகையில் தரப்படுகிறது.

டில்லி முதல் தனுஷ்கோடி வரை (கே. சீனிவாசன் 1965) - பயண அனுபவங்கள் வாயிலாக மக்கள் இயல்பை நாட்டு நடப்பை விமர்சித்தல்; சிந்தனையாளர் சித்தலிங்கம் (1965) - கற்பனையான ஒரு பாத்திரத்தைக் கொண்டு சமகாலச் செய்திகளை விமரிசனம் செய்த பகுதி; அயல் விவகாரம் (1965-1970) - வெளிநாடுகள் பற்றிய செய்திகள் - குறிப்பாக அரசியல் செய்திகள்; தலைநகர் (1965-1972) கே. சீனிவாசன் எழுதிய பகுதி டில்லியில் உலவிய அரசியல் வதந்திகள் முதலானவை; பத்திரிகை உலகம் (1967) - புதிய பத்திரிகைகள் பற்றிய செய்திகள்; டில்லி வரலாறு

(1968); தமிழ்நாட்டில் (1968-1972) தீரன் என்ற புனைபெயரில் நா. பார்த்தசாரதி தமிழக அரசியல் பற்றி எழுதியது; கண்டதும் கேட்டதும் (1968-1970); ஆண்டாளு அம்மாள் பற்றி (1969); டில்லி வாழ்க்கை (1969) - டில்லி வாழ் தமிழர்களின் அனுபவங்களைப் பங்கிட்டுக் கொண்ட பகுதி; சென்னை (1969-1970) - சென்னையிலிருந்து கணையாழியை அச்சாக்கி அனுப்பிக் கொண்டிருந்த அசோகமித்திரனுடைய பகுதி. சென்னையில் நடக்கும் இலக்கிய நிகழ்வுகளைப் பதிவு செய்யும் சென்னைப் பேச்சு செய்திகள் (1969) போன்ற பல்வேறு பகுதிகள் சூழலுக்கு ஏற்ப பல தலைப்புகளில் வந்தன.

## கணையாழி அரசியல்

கணையாழியை நடத்திய பத்திகையாளர்களுக்குக் காந்தியக் கோட்பாடுகளில் ஈடுபாடு இருந்திருக்கிறது. குறிப்பாக ஜெயபிரகாஷ் நாராயணன் அணியில் ஈடுபாடு இருந்திருக்கிறது. இதனால், பொதுவுடைமை இயக்கத்தின்மீது வெறுப்பும் இருந்திருக்கிறது. காங்கிரசில் ஜெயபிரகாஷ் எதிர்த்த இந்திரா காந்தி பிரிவின் மீதும் வெறுப்பு இருந்திருக்கிறது. பார்ப்பனர்களால் நடத்தப்பட்ட இதழ் என்பதால் இயல்பாகவே தி.மு.க. திராவிட இயக்கங்களின்மீது வெறுப்பு இருந்திருக்கிறது. இதையொட்டியே தனித்தமிழில் வெறுப்பும் வடமொழிப் பற்றும் இருந்திருக்கிறது.

## பொதுவுடைமை இயக்கத்தின்மீது வெறுப்பு

பொதுவுடைமைக் கட்சியினரைத் தேசத் துரோகிகள், வேதம் ஓதும் சாத்தான்கள் என்று சாடி அக்கட்சியைத் தடை செய்யவேண்டும் என்று துணையாசிரியர் கே.சீனிவாசன் எழுதினார் (ஜன. 69) பொதுவுடைமைக் கட்சி உறவாடிக் கெடுக்கும் கட்சி என்றும் (ஆகஸ்டு 69) கணையாழி தாக்கியது.

'சோசலிசம் பற்றி ஐந்து கேள்விகள்' என்ற பகுதி கணையாழியில் தொடங்கப்பட்ட போது அதற்குச் சொல்லப்பட்ட காரணங்களில் ஒன்று 'அதன் பொதுவுடைமை வெறுப்பைப் புலப்படுத்துகிறது. 'சோசலிசத்தின்மீது கணையாழிக்கு நம்பிக்கை இருப்பதாகவும் சோசலிசம் வெற்றி பெறவில்லை என்றால் கம்யூனிசம் வந்து விடும் என்றும் அது அச்சம் தெரிவித்தது (மே 69). நக்ஸல்பாரி இயக்கம் வளர்ச்சியடைந்தது கண்ட கணையாழி அதற்குக் காரணம் பொதுவுடைமை இயக்கம்தான் என்று கூறுவது போல,

பொதுவுடைமைக் கட்சி நடத்தும் வேள்வியில் நக்ஸல்பாரி பூதம் கிளம்புவதாகக் கார்ட்டூன் வரைந்து அட்டையில் வெளியிட்டது (ஜூன் 69).

மத்திய அரசு ஊழியர்கள் ஊதிய உயர்வுக்காகக் கிளர்ச்சி செய்தபோது, 'இது கம்யூனிஸ்டுகளின் முயற்சி; சீன, ரஷ்ய வலையில் வீழ்த்தும் முயற்சி' என்று கோ. சீனிவாசன் எழுதினார் (செப். 68).

## இந்திரா காந்தி பிரிவின்மீது வெறுப்பு

கணையாழி தொடங்கும் போது பொறுப்புக்கு வந்திருந்த சாஸ்திரி திடீரென்று மறைந்தார். அடுத்த பிரதமர் காமராசரா? இந்திராவா? மொரார்ஜியா? என்ற கருத்தோட்டங்கள் இருந்தன. கணையாழி நடுநிலை வகித்தது. 1967ஆம் ஆண்டுத் தேர்வில் கூட காங்கிரசுக்கு வாக்களிக்குமாறு கஸ்தூரி ரங்கன் குறிப்பிட்டார். காமராசரை ஆதரித்த கணையாழி அவர் படத்தை இரண்டாவது இதழின் அட்டையில் வெளியிட்டுப் பேட்டியும் கண்டது. காமராசருக்கும் இந்திராவுக்கும் முரண்பாடு ஏற்பட்டபோது கணையாழி காமராசர் பக்கம் நின்றது. இந்திராவுக்குக் கட்சிக்குள்ளேயே எதிர்ப்பு இருப்பதாக எழுதியது (ஏப். 69). குடியரசுத் தலைவர் தேர்தலில் கட்சியின் முடிவுக்கு எதிராக வி.வி. கிரியை இந்திரா நிறுத்தியதைக் கணையாழி எதிர்த்தது (ஆகஸ்டு - அக். 69) இந்திரா ஜனநாயக சர்வாதிகாரியாக மாற முயல்வதாகவும் அது குற்றம் சாட்டியது (நவ. 69). காங்கிரஸ் கட்சி வேட்பாளர் சஞ்சீவ ரெட்டி தோற்கடிக்கப்பட்டதற்கு இந்திரா தண்டிக்கப்பட வேண்டும் (ஜன. 70) என்றும் எழுதியது.

இந்திராவை எதிர்க்கிற வேகத்தில் அவர் கொண்டுவந்த நலத்திட்டமான வங்கிகள் தேசியமயத்தையும் எதிர்த்தது கணையாழி. வங்கி, நாட்டுடைமையானால் வேலைநிறுத்தம் வரும்; எல்லாமே கெட்டுவிடும்; எரு வாங்கக் கடன் கேட்டால் பயிர் விளைந்து சாவியாகும் சமயத்தில் கிடைக்கும் என்றெல்லாம் எழுதியது (அக். 69). இந்திராவின் சோசலிசத்தைக் கழுதைக்குக் காட்டப்படும் காரட் என்று சித்தரித்தது (மார்ச்சு 76). இந்திராவின் செயல்களை இந்திரஜாலம் (ஜூன் 70) என்றும் வருணித்தது. இந்திராவைத் தாக்கும் வேகத்தில் 'மானார் விழியார் மனத்தை மட்டும் காணமுடியாது' என்று பெண்ணினத்தையே பொதுவில் தாக்கி எழுதியது.

## தி.மு.க. வெறுப்பு

'தமிழ்நாட்டில்' என்ற தலைப்பில் 'தீரன்' (நா. பார்த்தசாரதி) எழுதிய பகுதி முழுக்க முழுக்க தி.மு.க. இயக்கத்தைத் தாக்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. கணையாழியைச் சார்ந்த பிற எழுத்தாளர்களும் இத்தகைய போக்குடையவர்களாகவே இருந்தார்கள்.

தி.மு.க. இயக்கத் தலைவரான அண்ணாவைக் கொள்கையற்றவராகக் காட்டத் தீரன் முயன்றார். அண்ணா சோதிடம் பார்க்கிறார் என்றெல்லாம் எழுதினார். அண்ணா மறைந்த பிறகு கூட இவ்வெறுப்புத் தொடர்ந்தது. அண்ணாவைத் தமிழ் மரபுப்படி முதுமக்கள் தாழியில் அல்லவா வைக்கவேண்டும் (மார்ச்சு 69) என்று வக்கிரமாக எழுதினார். அண்ணா சமாதியில் அஞ்சல் செலுத்த மக்கள் சென்றது கண்டு 'ஊதுவர்த்தி கொளுத்தி வணங்கப்படலாம்' என்று காய்ச்சலை வெளிப்படுத்தினார்.

கலைஞர் முதலமைச்சரானதும் தீரனுக்குப் பிடிக்கவில்லை. தி.மு.க. அமைச்சரவையில் திரு. நெடுஞ்செழியன் சேர மறுத்தமைக்குப் பாராட்டுத் தெரிவிக்கப்பட்டது (மார்ச்சு 69). அண்ணாவின் சாவு குறித்து விமர்சனம் செய்த வாரியாரைக் கட்சிக்காரர்கள் தாக்கிய போது தி.மு.க. ஆட்சி தனிமனித சுதந்திரத்திற்கு இடமளிக்காது என்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டது (மே 69).

தி.மு.க. கட்சியினரின் அடுக்கு மொழிப் பேசுவதும் கடுமையாக விமர்சிக்கப்பட்டது. 'அடுக்குமொழி கொண்டு ஆளமுடியாது' என்று (மே 69) என்.எஸ். ஜகந்நாதன் எழுதினார். செய்திப் படங்களில் தி.மு.க. அமைச்சர்களைக் காட்டுவதையும் (ஜூன் 69), கட்டிடங்களுக்குத் தி.மு.க.வினர் பெயர் சூட்டப்படுவதையும் தீரன் எதிர்த்தார். கோவை மருத்துவமனைக்கு அண்ணாவின் பெயர் சூட்டப்படுவதும் (அக். 69) புதிய ரக நெல்லுக்கு 'கருணா' என்று பெயர் சூட்டப்படுவதும் (மார்ச்சு 70) எதிர்க்கப்பட்டது. மவுண்ட் சாலைக்கு அண்ணா பெயர் வைக்கப்பட்டபோது காந்தி, நேரு, திருவள்ளுவர் போன்றோர் பெயரைச் சூட்டிய பிறகு வேண்டுமானால் அண்ணா பெயரை வைக்கலாம் என்று கண்டனம் தெரிவிக்கப்பட்டது (டிச. 69).

மதச்சார்பின்மை அடிப்படையில் அரசு அலுவலகங்களில் இருந்த சாயிபாபா, சங்கரர், சரஸ்வதி படங்கள் நீக்கப்பட்டபோது

அமைச்சர்கள் படங்களை வைப்பதும் சிலை வைப்பதும் சரியா? என்று தீரன் கேட்டார் (ஆக. 68).

## தமிழ்ப் பற்றின்மை

தி.மு.க.வை எதிர்ப்பதில் அவர்கள் தமிழை வளர்ப்பதும் விமரிசிக்கப்பட்டது. பேருந்துகளிலும் அலுவலகங்களிலும் தமிழைப் புகுத்துவது பற்றி (மே, ஜூன் 68) எழுதுகையில் 'காவற்றுறை' என்று எழுதுவதுபோல, 'அண்ணாற்றுரை' என்று எழுதத் தயாரா? என்று கேட்கப்பட்டது.

பாடப்புத்தகங்கள் தமிழில் உருவாக்கப்பட்டபோது அதில் இடம்பெற்ற தனித்தமிழ் எதிர்க்கப்பட்டது (ஜூன், ஜூலை 68, ஆகஸ்டு 68). தமிழ்வழிக் கல்வியையும் விமர்சனம் செய்யும் போக்கில் 'தமிழ் வழிக்கல்வி அரசு கல்லூரிகளில் தொடங்கப்பட்டதால் மாணவர்கள் அங்கு சேராமல் தனியார் கல்லூரிகளில் சேருகிறார்கள்' (ஜூலை 69) என்றும், என்.சி.சியில் இந்திக் கட்டளைச் சொற்களை ஏற்க மறுத்ததால் தமிழக மாணவர்கள் பாதிக்கப்படுவார்கள் (ஜூலை 69) என்றும் எழுதித் தமிழ்மயத்தால் தமிழருக்குப் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்துப் பரப்பப்பட்டது.

தமிழ்மயத்தை எதிர்க்கும் நிலையில் வடமொழிக்கு ஆதரவும் காட்டப்பட்டது. வடமொழி பயின்றால் ஆயுள் குறையும் என்று மறைமலை அடிகள் கூறிய கருத்து மறுக்கப்பட்டது (ஆகஸ்டு 68). தமிழின் தனித்தன்மையைப் பறையடிப்பவர்கள் பாரத கலாச்சாரத்திற்குத் தமிழ் அளித்த கொடையைச் சிறுமைப் படுத்துகிறார்கள் (டிச. 91) என்றும் முரசொலி இதழில் தமிழ்த்தூய்மையுடன் கட்டுரைகள் எழுதுவது தமிழ்வெறி என்றும் (நவ. 91) கணையாழியில் கருத்துரைக்கப்பட்டது.

## பார்ப்பனீயம்

தொடக்ககாலக் கணையாழியின் எழுத்தாளர்களில் பலரும் பார்ப்பனர்களாக இருந்தனராதலின், அவர்கள் பார்ப்பனீயத்தை ஒருபொழுதும் விட்டுக்கொடுத்ததில்லை. 'தசரா' அறக்கட்டளையின் பொறுப்பில் அது வரும்வரை தொடர்ந்து பார்ப்பனீய ஆதரவு அதில் வெளிப்பட்டுக்கொண்டேயிருந்தது. கணையாழியின் பார்ப்பனச் சார்பு ஒரு வாசகர் எழுதிய 'ராண்டம் சாம்பிள்' என்ற பகுதியில் வெளிப்படுத்தப்பட்டிருந்தது. கணையாழி இதழ் பற்றிப் பலரும்

கருத்துச்சொல்வது போல அவ்வாசகர் எழுதியிருந்தார். அதில் அம்புஜம் மாமியும் ஒருவர். அம்புஜம் மாமி, 'இந்தப் பத்திரிகையை நம்பளவா நடத்தறாளா! அல்லது நம்ப பாஷையை எழுதி நம்பளையெல்லாம் கிண்டல் பண்றாளான்னு புரிஞ்சிக்க முடியல" என்று கூறுவதாக எழுதியிருந்தார்.

பெரியாரது கர்ப்பகிரக நுழைவுப் போராட்டத்தின்போது, நகைகள் உள்ள தமிழகக் கோயில்களில் கர்ப்பகிரகங்களுக்குள் எல்லோரையும் அனுப்ப இயலாது என்ற கருத்து பார்ப்பனர்களால் தெரிவிக்கப்பட்டபோது கலைஞர் 'குறிப்பிட்ட ஜாதியார் மட்டும் திருடாதவர்களா?' என்று கேட்டார். இதற்குப் பதிலளித்த கணையாழிக் கட்டுரையாளர் தீரன் பாங்கியில் பணம் இருக்கும் இடத்திற்கு எல்லாமே போவது சரியாகுமா?' என்று கேட்டார் (டிச. 69).

சாதி பற்றிய பேச்சு, எழுத்துக்களை மத்திய அரசு தடைசெய்ய வேண்டும் என்று கலைஞர் கூறிய கருத்தைக் கேலி செய்தது. 'ஸ்காலர்ஷிப், கம்யூனல், ஜி.ஓ. இவற்றைப் போற்றிக் கொண்டே இலட்சியம் பேசுவது சரியல்ல' (மே 69) என்று தீரன் எழுதினார்.

பெரியார் சிலைத்திறப்பின்போது அவரது பொன் மொழிகளைப் பொறித்து வைப்பதைப் 'புண்மொழி' என்றும் கேலி செய்து தீரன் எழுதினார் (ஜூன் 69).

திராவிட இயக்கத்தினரைத் தாக்கி, 'பெரியாரே கடவுள். விடுதலையே வேதம். மதத்தை எதிர்ப்பதே மதம். கழக மாநாடே உற்சவம். கறுப்புச்சட்டை மதச்சின்னம். பெரியாரே கூறிவிட்ட பிறகு சிந்திப்பது எதற்காக என்பதே அவர்களுடைய பகுத்தறிவு (பிப். 70) என்றும் விமர்சனம் கூறப்பட்டது.

பெரியாரது சுயமரியாதை இயக்கம் வெறும் பார்ப்பன எதிர்ப்பு இயக்கமாக ஆனது துரதிருஷ்டவசம் என்றும் இதனால் தமிழ்ச் சமுதாயம் நலன் பாதிக்கப்பட்டிருக்கிறது என்றும் கணையாழி வருந்தியது (ஜூன் 88).

பார்ப்பனீயத்தின் குறியீடான சங்கராச்சாரியாரையும் கணையாழி விட்டுக்கொடுப்பதில்லை. சங்கராச்சாரியார் மௌனவிரதத்தில் இருக்கும்போது யாரிடமும் பேசுவதில்லை.

எப்போதும் பிராமண விதவைகளுக்குத் தரிசனம் தருவதில்லை. ஆனால் விதவையான இந்திராகாந்தி சங்கராச்சாரியாரைச் சந்தித்ததும் (மௌனவிரதத்தின் போது) பேசினார். இதுபற்றி ஒரு வாசகர் இவ்வாறு பதவியில் இருப்பவர்களுக்காக விதியைத் தளர்த்துவது முறையா? என்று கேட்டார். அதற்குப் பதிலளித்த கணையாழி ஆசிரியர், 'பரமாச்சாரியார் விருப்பு வெறுப்பு அற்றவர். இந்திராகாந்தி முழுமையான பிராமண விதவையல்ல. அதுவும் கிணற்றடியில்தான் சந்தித்தார். அதில் குற்றம் இல்லை. மௌனவிரதத்தை விடவில்லை. சைகையில்தான் பேசினார். என்றெல்லாம் சமாளிப்பு எழுதிவிட்டு, 'பரமாச்சாரியாரிடம் பேசுவதற்கு ½ மணி நேரம் ஒதுக்கிய இந்திராகாந்தி 1½ மணிநேரம் அங்கு இருந்தது பரமாச்சாரியார் மகிமைதானே என்றும் எழுதி மகிழ்ந்தார் (செப். 74). ஜெயலலிதா சங்கராச்சாரியாரை முறைத்துக் கொண்டபோது, சங்கராச்சாரியரோடு அவர் முறைத்துக்கொள்ளக் கூடாது என்று கணையாழி (மே 92) ஆதங்கப்பட்டது.

கணையாழியின் பார்ப்பனியப் போக்கு பற்றி, ஒரு வாசகர் 'கணையாழியில் ஒரு கதை வருவதற்கு அது பிராமணர்களைப் புழ்ந்ததாகவோ இகழ்ந்ததாகவோ இருக்க வேண்டும்' என்று எழுதினார். "பிராமின்களைக் கதை மாந்தர்களாக்கி எழுதிவிட்டால் போதும். அது கணையாழியில் பிரசுரமாகிவிடும் (ஜூலை 91) என்னும் வாசகர் கருத்து கருதத்தக்கது.

அரிசனத் தோழர்களுக்கு அர்ச்சகர் வேலை தரவேண்டும் என்ற பேச்சு எழுந்தபோது, 'பூணூல்களில் ஐயர்கள் பூணூல்கள் மட்டுமே கவனிக்கப்படுகிறது. ஆசாரியர் பூணூல் கவனிக்கப் படுவதில்லை என்று எழுதிவிட்டு அர்ச்சகர் தொழில் ஏழ்மைத் தொழில். அது அரிசனத் தோழர்களுக்கு வேண்டுமா? என்று கணையாழி எழுதியது (ஜூலை 85).

மண்டல் குழுவின் பரிந்துரைகளையும் எதிர்த்தது கணையாழி. 'மண்டல் கமிஷன் மண்டையடி' (செப். 90) என்று தாக்கியது. மண்டல் கமிஷன் 'அனுமன் வாலில் இட்ட தீ' (அக். 96) என்று வருணித்து எச்சரிக்கையும் செய்தது.

ஜெயலலிதா ஆட்சி தமிழகத்தில் ஏற்பட்டபின் கணையாழியில் மாறுபட்டகுரல் ஒலித்தது. 'பார்ப்பனிய ஆதிக்கம் விழுந்துவிட்டது. திராவிட இயக்கம் ஓய்ந்துவிட்டது. பார்ப்பன

எதிர்ப்பால் தமிழின் இயக்கத்தை வளர்க்க வாய்ப்பில்லை என்றும் எழுதியது (அக். 91) ஆரியரும் திராவிடரே என்ற கருத்தும் (பிப். 92) முன்வைக்கப்பட்டது.

## ஸ்வச்சித் (SWACHID) அமைப்பு

கணையாழி ஆசிரியர் கஸ்தூரி ரங்கன், ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி கார்த்திகேயன், இந்திரேசன் ஆகியோரும் ஆர்வமுள்ள பிறரும் இணைந்து ஸ்வச்சித் என்ற அமைப்பை உருவாக்கினார்கள். Soldiers of War Against Corruption Hunger Ignorance and Disease என்பதன் சுருக்கமே SWACHID என்பது. ஸ்வச்சித் செய்திகள் கணையாழியில் ஏப்ரல் 85 முதல் ஜூன் 89 வரை இடம்பெற்றன.

ஊரக வளர்ச்சி, குழந்தை நலம், பெண்கள் முன்னேற்றம், கல்வி, ஊனமுற்றோருக்கு உதவி, மதுவிலக்கு, போதைமருந்துத் தடுப்பு என்று பல நலத்திட்டங்களைப் பரப்ப ஸ்வச்சித் பல கிளைகளை அமைத்துக் கூட்டங்கள் நடத்தியது.

கண்மருத்துவ முகாம், குழந்தைகள் காப்பகம், மாலை நேரப்பள்ளி, கோடைப்பள்ளி, மருத்துவமனை மூலம் பல பணிகளில் நேரடியாக ஈடுபட்டது.

கொள்கைகளைப் பரப்ப 'இதழ்' ஒன்று நடத்தப்பட்டது. உறுப்பினர்களுக்கு R.S.S. பாணியில் பயிற்சி தரப்பட்டது.

பின்னர் அரசியலிலும் இவ்வமைப்பு ஈடுபடத் தொடங்கியது. 'தூய்மையான அரசு' என்பதை வலியுறுத்தும் People's Front for Clean Government என்ற அமைப்பையும் துணை அமைப்பாகக் கொண்டது. தேர்தல் பற்றிய வாக்களிப்பு பற்றிய வழிகாட்டுதல்களை வழங்கியது.

அத்துடன் நிற்காமல் தமிழ், இந்தி, ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளையுமே ரோமன் எழுத்தில் எழுதும் 'மும்மொழிப் பயிற்சித் திட்டத்தை'யும் அறிமுகப்படுத்தியது. ரோமன் எழுத்து முறையால் தமிழ் வளர்ச்சி பெறும் என்றும் கூறப்பட்டது.

இலக்கியத்துக்குப் புறம்பான இப்பகுதி கணையாழியில் இடம்பெறத் தேவையில்லை என்று எஸ்ஸார்கி எழுதியதற்குக் கணையாழி ஆசிரியர் "கணையாழியில் ஸ்வச்சித் அனுபவம் அவசியம். கணையாழி அரசியல் சமூகப் பிரச்சினைகளுக்கு எப்போதும் இடம்கொடுத்துள்ளது. சிந்திக்கும் திறனுள்ள கணையாழி

வாசகர்களைச் சமூகப் பணியில் ஈடுபடுத்த வேண்டும். ஸ்வச்சித் இல்லையெனில் வாசகர் எண்ணிக்கையும் குறையும். இதனால் ஸ்வச்சித்தால் கணையாழிக்கு லாபமேயன்றி நஷ்டம் ஏதுமில்லை" என்று குறிப்பிட்டார்.

ஆனால் கணையாழிக்கு வாசகர் எண்ணிக்கை பற்றிய நோக்கத்தைவிட அரசியல் நோக்கங்கள் இருந்திருக்கிறது என்பதை நாம் மறுக்கமுடியாது. ஸ்வச்சித் உறுப்பினர்கள் ஆர்.எஸ்.எஸ். காரர்களின் நடைமுறைகளைப் பின்பற்றவேண்டும் என்ற கருத்து கணையாழியில் தெரிவிக்கப்பட்டிருப்பதும் ஸ்வச்சித் என்ற சுருக்கப் பெயர் ஸ்வஸ்திக்கை நினைவூட்டுவதும் அரசியல் நோக்கத்தையே நினைவூட்டுகிறது எனலாம்.

## மதிப்பீடு

"படைப்பிலக்கியத்தில் மேற்கில் வளரும் மாற்றங்களையும் புதுமைகளையும் தமிழிற்கும் உரிமையாக்கித் தரும் முயற்சியாகவே கணையாழியின் தோற்றத்தைக் கொள்ள வேண்டியிருக்கிறது" என்று 1990 நவம்பர் இதழில் கணையாழி குறிப்பிட்டுக் கொண்டது.

"மணிக்கொடிக்கும் எழுத்துக்கும் என்ன பங்கு உண்டோ அதற்குச் சமமான பங்கு கணையாழிக்கு உண்டு" (செப். 95) என்று கணையாழிக் கட்டுரை ஒன்று குறிப்பிட்டுக் கொண்டது.

கணையாழி முப்பத்து நான்கு ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது. இது இதழியல் வரலாற்றில் ஒரு சாதனை. தனிமனிதரான கஸ்தூரி ரங்கனின் பிடிவாதத்தின் சாதனை. இதை எவரும் மறுக்க முடியாது; மறக்கக் கூடாது.

கணையாழியில் வந்த படைப்புகள் கவிதை, சிறுகதைத் தொகுப்புகளாக வெளியிடப்பட்டுள்ளன. கணையாழி வெள்ளிவிழா ஆண்டில் 'கணையாழி 25' என்ற தலைப்பில் அதன் சாதனை வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. 'கணையாழியின் பரிணாம வளர்ச்சி' என்ற தலைப்பிலும் வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. கணையாழிப் படைப்புகளில் சிறந்தவற்றைத் தொகுத்து 'கசடதபற' இதழ் தொகுப்பு போல வெளியிடும் முயற்சி (வே. சபாநாயகம் இம் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்) மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

முப்பத்து நான்கு ஆண்டுக் காலம் கணையாழி நல்ல எழுத்தாளர்களின் மேடையாக இருந்திருக்கிறது. பல புதிய

எழுத்தாளர்களுக்குப் படிக்கட்டாக இருந்திருக்கிறது. கணையாழியின் ஒரு தொடரான குருதிப் புனலுக்குச் சாகித்ய அகாதமி விருது கிடைத்திருக்கிறது. விருது பெற்ற இந்திரா பார்த்தசாரதி கணையாழி ஆசிரியர் பொறுப்பில் இருந்தவர். கணையாழியின் பொறுப்பாசிரியராக நீண்டகாலம் சிறந்த முறையில் பணியாற்றிய அசோகமித்திரனுக்கு சாகித்ய அகாதமி விருது கிடைத்திருக்கிறது. இதில் இலக்கியச் சிந்தனைகள் தொடரை எழுதிய க.நா.சு.வுக்கு இவ்விருது வழங்கப்பட்டிருக்கிறது. கணையாழி குறுநாவல் திட்டதின் மூலம் நல்ல குறுநாவலாசிரியர்கள் பலரை உருவாக்கியிருக்கிறது. பல நல்ல தரமான எழுத்தாளர்கள் எழுதியிருக்கிறார்கள். விருது பெற்ற ச. கந்தசாமி, தோப்பில் முகமது மீரான், கி. ராஜநாராயணன், சுந்தர ராமசாமி, நா. பார்த்தசாரதி ஆகியோருடைய படைப்புகள் இடம் பெற்றிருக்கின்றன. கவிதையைப் பொறுத்தவரை புதிய கவிஞர்களும் பழைய கவிஞர்களும் இதில் எழுதியிருக்கிறார்கள். புதியவர்களின் வளர்ச்சிக்கு இது உதவியிருக்கிறது.

இனப் போராட்டம் வலுப்பெற்று ஈழ எழுத்தாளர் பலர் புலம்பெயர்ந்து வந்த பின்பு அவர்களுடைய எழுத்துக்களை ஆதரித்து வெளியிட்டது கணையாழி. அண்மையில் இடதுசாரி முகாம் எழுத்தாளர்களின் பா. செயபிரகாசம், தியாகு, மருதமுத்து, தி.க. சிவசங்கரன் ஆகியோர் மிகுதியாக எழுதுகிறார்கள். திராவிட மரபு சார்ந்த கலைஞர் எழுத்தைப் பாராட்டிச் சிறப்பு மலர் வெளியிட்டிருக்கிறது கணையாழி. புதிய திறனாய்வுப் போக்குகள் பற்றிய கட்டுரைகள் இடம்பெறத் தொடங்கிவிட்டன. எல்லாம் சரிதான். ஆனால் மேற்கில் வளரும் மாற்றங்களையும் புதுமைகளையும் தமிழுக்கு உரிமையாக்கும் பணியைக் கணையாழி செய்துவிட்டதாகக் கூறமுடியாது.

மணிக்கொடி, எழுத்து ஆகிய இதழ்கள், 'மணிக்கொடி எழுத்தாளர்', 'எழுத்து வட்டத்தினர்' என்று உருவாக்கியது போலக் 'கணையாழி எழுத்தாளர்' என்று எவரையும் குறிப்பிட முடியாது. 'எழுத்து' இதழ் வந்திராவிட்டால் ந. பிச்சமூர்த்தி மீண்டும் எழுத முன்வந்திருக்க மாட்டார் என்பது போலக் கணையாழி வந்திராவிட்டால் இன்ன எழுத்தாளர் எழுதியிருக்க மாட்டார் என்கிற அளவு கணையாழி இயக்கம் என்பது இல்லை.

எழுத்தாளர்கள் மற்ற இதழ்களில் எழுதியது போலவே கணையாழியிலும் எழுதினார்கள். கணையாழி, நல்ல எழுத்தாளர்களின்

படைப்பை வெளியிட வேண்டும் என்ற ஆர்வத்தோடு யாரிடமும் விரும்பிக் கேட்டதில்லை. ஜெயகாந்தன் இப்போக்கு பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். தான் ஏன் கணையாழியில் எழுதவில்லை என்பதைப் பற்றிக் கூறுகையில், "நான் கேட்காமல் யாருக்கும் எழுதித்தந்தது கிடையாது. கணையாழி யாரையும் எழுதித் தரும்படி கேட்டது கிடையாது" என்று குறிப்பிட்டிருக்கிறார் (செப். 95). கணையாழியுடன் நெருக்கம் கொண்டிருந்த ஒரு சில எழுத்தாளர்களின் படைப்பையே இதில் மிகுதியாகக் காணமுடிகிறது. மணிக்கொடி போல ஒரு சிறுகதை மரபையோ, 'எழுத்து' போல ஒரு விமரிசன மரபையோ புதுக்கவிதை மரபையோ கணையாழி உருவாக்கிவிடவில்லை. அதனால் மணிக்கொடிக்கும் எழுத்துக்கும் உள்ள பங்கு கணையாழிக்கு இருப்பதாகச் சொல்ல முடியாது. இதற்குக் காரணம் என்ன?

கணையாழியைத் தொடங்கி நடத்தியவர்கள் பத்திரிகையாளர்கள். கி. கஸ்தூரி ரங்கன், கே. சீனிவாசன், என்.எஸ். ஜகந்நாதன் முதலானோர் இலக்கியத்தை விட அரசியலை முன்னிறுத்துவதை முதன்மையாகக் கருதினார்கள். இதற்கான விரிவான சாட்சியத்தை இக்கட்டுரையின் 'கணையாழி அரசியல்' பகுதியிலும், 'கணையாழியின் தற்காலிகப் பகுதி'யில் தரப்பட்டிருக்கும் பல்வேறு பகுதிகளிலும் காணமுடியும்.

அசோகமித்திரன், கா.நா.சு., திருப்பூர் கிருஷ்ணன், ஞானக்கூத்தன் போன்றவர்கள் கணையாழியை இலக்கியத்தின் பக்கம் இழுக்க முயன்று ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறார்கள். ஆனாலும் முழுக்க இழுத்துத் தீவிரமான முழு இலக்கிய இதழாக ஆக்கமுடியவில்லை.

ஓர் இலக்கிய இதழுக்குச் சமூக நீதி சார்ந்த ஒரு தீவிர அரசியல் இருக்கும் அல்லது அரசியல் கலப்பேயில்லாத தூய்மை இலக்கிய நோக்கம் இருக்கும். அரசியல் சார்பு கொண்ட இலக்கிய இதழ்கூட அரசியலைத் தன் படைப்பினூடே வெளியிடும். ஆனால் கணையாழி அரசியலைத் தனியாகவே வைத்துக்கொண்டது. படைப்புகளினூடே சாதிய அரசியலைக் கொண்டது. இந்தப் போக்கால் எழுத்தாளர் சிலர் கணையாழியில் எழுத முன் வந்ததில்லை. இன்குலாப், தான் கணையாழியில் எழுத விரும்பியதில்லை என்று குறிப்பிட்டபோது கஸ்தூரி ரங்கன், 'இன்குலாப் இதை ஏன் அக்கிரகாரத்துப் பத்திரிகையாகக் கருதுகிறார். இன்குலாப் தன் எழுத்துக்கள் கணையாழியில் வெளிவர வேண்டியதைத் தன்னுடைய

உரிமையாகக் கருதவேண்டும் (செப். 95) என்று குறிப்பிட்டார். இதில் கணையாழியைப் பற்றிப் படைப்பாளிகளுக்கு இருந்த 'சாதியப் படிமம்' புலப்படுகிறது. சு. சமுத்திரத்திற்கு சாகித்ய அகாதமி விருது வழங்கப்பட்டபோது 'சாகித்ய அகாதமி இதிலும் இட ஒதுக்கீடு வைத்திருக்கிறதா' என்று ஆதங்கப்பட்டது. இதற்கு எதிர்வினையாக ஒரு வாசகர் '25 வருஷங்களுக்குப் பிறகும் ஒரு விஷயத்தில் மட்டும் கணையாழி மாறவேயில்லை. ஜாதிய நமைச்சர்களின் அரிப்புக்கு அவ்வப்போது சொரிந்து கொள்வதில் என்று குறிப்பிட்டார் (ஜூன் 91).

இலக்கிய இதழ்களுக்கு ஒரு தேடல் இருக்கும். ஒரு கோட்பாட்டை நோக்கிய பயணம் இருக்கும். அதற்கான இயக்கம் இருக்கும். கணையாழியின் போக்கில் இதனைக் காணமுடியவில்லை. கணையாழியின் இயல்பு பன்முகத்தன்மை. "கணையாழியின் சுவாரசியமான குணமே அதன் unpredictability தான். அதில் என்ன வெளியாகும் என்று யாராலும் சொல்ல முடியாது என்று சுஜாதா குறிப்பிட்டிருப்பது (செப். 95) இப் பன்முகத் தன்மையை உணர்த்துகிறது. கணையாழியின் பன்முகத் தன்மையின் காரணமாக அதில் துணுக்குத் தன்மையும் இருந்தது. ஒருவாசகர் 'கணையாழியில் வரும் பகுதிகள் வேர் பிடிக்கும் முன்னரே மரம் விடுகின்றன. என்று குறிப்பிட்டிருப்பது உண்மைதான். கணையாழியின் போக்கில் இரட்டை நிலையும் உண்டு. இந்தப் பன்முகத் தன்மைதான் கணையாழியைத் தீவிர இலக்கிய இதழ் என்று காண்பதிலிருந்து தடுக்கிறது.

இலக்கியச் சிற்றிதழ்களின் போக்கு தொண்ணூறுகளில் மாறியுள்ளது. படைப்புகளின் உள்ளடக்கம் நீர்த்துப் போனதாகவும் ஒரே தடத்திலானதாக இருப்பதையும் உணர்ந்து படைப்புகளின் உருவம் இயங்கா நிலையில் ஒரே வார்ப்பில் இருப்பதையும் உணர்ந்து சிற்றிதழ்கள் பல பின்நவீனத்துவத் தாக்கம் கொண்டன. படைப்புகளில் சோதனை முயற்சிகளை மேற்கொண்டன. நேர்கோட்டு எழுத்தைத் தவிர்த்தல், அமைப்பியல், கட்டவிழ்ப்பு, வாசிப்பின் அரசியல் என்ற திறனாய்வுப் போக்குகளை மையப்படுத்தத் தொடங்கி விட்டன. ஆனால் கணையாழி இத்தகைய விவாதங்களில் நீண்டகாலமாகவே ஈடுபடவில்லை.

'எஸ்ஸார்சி', மே 87இல் குறிப்பிட்டது போல இலக்கியத் தேடல் இல்லாமை, ஓர் அந்தரங்க அழுகுரல் (சாதியக் கழிவிரக்கம்),

குறிப்பிட்ட இனத்தவரின் ஆளுகை ஆகிய இவை கணையாழியில் தூக்கலாக இருந்தது.

ஓர் இலக்கிய இதழைத் தொடர்ந்து நடத்துவது என்ற உணர்வில் அதன் தொடர்ந்த வாழ்வுக்கு உற்ற வகையில் உள்ளடக்கங்களைக் கொண்டு கணையாழி இயங்கியிருக்கிறது.

தசரா அறக்கட்டளை, கணையாழியை ஏற்றபோது கஸ்தூரி ரங்கன், "கணையாழியின் இலக்கிய முகத்தை மாற்றுவதற்கு வேறு துறைகளைப் பற்றிய அதிதீவிரமான கட்டுரைகளை வெளியிட்டும் கூட இலக்கிய முகம்தான் கடைசியாக மிஞ்சியது" (செப். 95) என்று குறிப்பிட்டார்.

உண்மையில் கணையாழியின் உள்ளடக்கங்களை ஆய்கிற போது அதற்கு இலக்கிய முகம் மட்டுமே இருப்பதான ஒரு படிமம் இருந்திருக்கிறதே யொழிய அதற்குப் பன்முகத் தன்மை இருந்திருக்கிறது.

கணையாழி பேரிதழ்களின் வணிகநோக்கு எழுத்துகளுக்கு எதிராகத் தரமான சிறுகதைகள், கவிதைகள், குறுநாவல்கள் வளரக் காரணமாக இருக்கிறது. தொடர்ந்து இயங்கிய ஓர் இதழ் என்பதால் தரமான இலக்கியத்தின் தொடர்ந்த வளர்ச்சியை ஊக்கப் படுத்தியிருக்கிறது. கணையாழி மற்ற சிற்றிதழ்கள் போலக் குழு மோதல்களில் ஈடுபடவில்லை என்பதே அதன் தனித்த போக்காகக் கண்டு பாராட்டலாம். வாசகர் கடிதங்கள் அவை கடுமையான தாக்குதல்கள் நிறைந்தவையாக இருப்பினும் அப்படியே வெளியிடும் நேர்மையும் பாராட்டத்தக்கது.

தசரா அறக்கட்டளை ஏற்ற பிறகு கணையாழியின் இலக்கிய முகத்தின் அடையாளம் புலப்படத் தொடங்கியிருக்கிறது. இன்று புதிய திறனாய்வுகள் இடம்பெறுகின்றன. இடதுசாரி எழுத்துக்கு இடம் கிடைத்திருக்கிறது. சாதியத் தன்மை மறைந்திருக்கிறது. புதிய எழுத்தாளர்கள் பலர் அறிமுகம் பெறுகிறார்கள். கணையாழி தன்னைப் பொதுவான இதழாகக் காட்டுகிற முயற்சியில் தன் உள்ளடக்கங்களைக் கவனமாகச் சேர்த்துத் தருகிறது எனலாம்.

# ஞானரதம்

## வேனிலா ஸ்டாலின்

அவ்வப்போது சீரழிவை நோக்கியும், விழிப்புணர்வை நோக்கியும் மாறி மாறிச் செயல்படுகின்ற சமுதாயத்தை இதழ்கள் பெரிதும் நெறிப்படுத்துகின்றன. அந்த வகையில், விழிப்புணர்வைத் தரக்கூடிய இதழ்களுக்கு மட்டுமே சமுதாயப் பொறுப்புணர்வு உண்டு. ஆகையால் அத்தகைய இதழ்களே இலக்கியத் தகுதி பெறுகின்றன. இப்பணியில், சிற்றிதழ்கள் பெரும் பங்கேற்கின்றன. சமுதாயப் பொறுப்பைத் தாங்கி நிற்கும் இத்தகைய இதழ்களின் பெயரமைப்பே வினாவிற்குரியதாகும். எனவே, அவற்றின் பெயரமைப்புப் பற்றி முதற்கண் ஆராய வேண்டியுள்ளது.

சிற்றிதழ்கள் என்ற சொல், சிறுமை இதழ்கள் என்ற பண்புத் தொகையடிப்படையில் உருவானதோ என ஆராயின், அவற்றின் பணிக்கு அப்பெயர் முரண்படுவதை அறிய முடிகிறது. எனவே, சிற்றிதழ்களை வேறு பெயரால் அழைக்க நேரிடுகிறது. இவை, விளம்பர, வணிக நோக்கின்றி இலக்கியத்தை மட்டுமே அடிப்படையாய்க் கொண்டவை யாதலால், இவற்றை இலக்கிய இதழ்கள் எனப் பெயரிடல் பொருத்தமாகும்.

இனி, இலக்கிய ஆர்வலர் எனும் சிறிய வட்டத்தினர்க்கு மட்டுமே பயன்பட்ட இலக்கிய இதழாகிய, 'ஞானரதம்' குறித்து ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம். 1970 ஜனவரித் திங்கள் முதல் வெளிவரத் தொடங்கிய இவ்விதழில் ஜெயகாந்தன் ஆசிரியராக இருந்த தொடக்கக் காலகட்டத்தில் வெளியான இதழ்களை ஆராய்வது ஆய்வெல்லையாகும்.

### நோக்கம்

தமிழகத்தைப் பொறுத்தவரையில் 1960-70 ஆகிய காலத்தில் பகுத்தறிவு இயக்கம், திராவிட இயக்கம், பொதுவுடைமை இயக்கம் ஆகியவற்றின் செல்வாக்கு இலக்கியத்தில் மிகுந்திருந்தது. இஃது, இலக்கியத்தின் இயல்பாக இருந்தாலும், இவற்றின் பிடியினின்று

இலக்கியத்தை மீட்டு, அது சமுதாயத்தின் போக்கில் தன்னிச்சையாகச் செயல்பட வேண்டும் என இலக்கியச் சிந்தனையாளர்கள் விரும்பினர். அவர்களுள் ஜெயகாந்தன் ஒருவர். எனவே, அந்நோக்கத்தில் தன்னைப் போலக் கருத்தொருமித்த சிந்தனையாளர்களுடன் இணைந்து இவ்விதழைத் தொடங்கினார். இதற்கு, தேவசித்ர பாரதி என்கின்ற இப்ராஹிம் நிர்வாக ஆசிரியராகப் பொறுப்பேற்றிருக்கிறார். ஆசிரியர் குழுவில், ந. முத்துசாமி, ஒய்.ஆர்.கே. சர்மா, ஜியாவுடீன், வையவன், செல்வி சாதனா ஆகியோர் இடம் பெற்றுள்ளனர்.

## அமைப்பு

'புதுமை இலக்கிய மாத இதழ்' எனக் குறிப்பிடப்பட்டு இருந்தாலும், இவ்விதழ் திங்கள் தோறும் முறையாக வெளிவரவில்லை. எனவே, ஜெயகாந்தன் இதழுக்குரிய திங்களைக் குறிப்பிடாமல் எண்ணைக் குறிப்பிட்டு வெளியிட்டார். காட்டாக, சனவரி 1970 எனக் குறிப்பிடாது 1/1970 எனக் குறிப்பிடுகிறார். இதிலும், பொதுவிதிக்கு உட்படாத அவரது இயல்பைக் காணமுடிகிறது. முதல் ஐந்து இதழ்கள் இவரால் ஆக்கம் செய்யப்பட்டவை. 6ஆவது ந. முத்துசாமியும், 7ஆவது ஞானக்கூத்தனும், 8ஆவது வல்லிக்கண்ணனும், 9ஆவது பரந்தாமனும் எனத் தொகுப்புப் பணியைப் பலரும் தொடர்ந்துள்ளனர். எனவே, ஜெயகாந்தன் பொறுப்பிலிருந்த முதல் ஐந்து இதழ்களே முற்றிலும் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

## பகுப்பு

"உண்மையைத் தேடும் எழுத்தைவிட உயர்ந்த இலக்கியம் இல்லை" எனும் தொடர், இதழின் தொடக்கமாக உள்ளது. இதிலேயே, இவ்விதழின் நோக்கம் பெறப்படுகிறது. இதழுக்குரிய அட்டைப்படத்திற்கு விளக்கமாக ஒரு கவிதையும் தரப்படுகிறது. காட்டாக, முதல் இதழில், அமுதோன் என்ற பெயருடைய ஓவியர், தாம் வரைந்த அட்டைப்படத்திற்கு அமுதபாரதி என்ற பெயரில், 'அலைச்சலின் பிள்ளை' என விளக்கக் கவிதை தருகிறார். இது ஒரு தனிக் கூறாகும். அடுத்த இதழில் அமுதோனின் அட்டைப்பட ஓவியத்திற்கு ஜெயகாந்தன் 'தனிவீடு' என்ற கவிதையும் தர இந்த நெறி முதல் ஐந்து இதழ்களுக்குத் தொடருகிறது.

### உள்ளடக்கம்

கட்டுரை, கவிதை, கதை, கேள்வி பதில், விமரிசனம், விளம்பரம் என உள்ளடக்கம் அமைகிறது. இவையன்றி, நூல்களினின்றும், அறிஞர்களின் கருத்துக்களும் மேற்கோள்களாய் ஆங்காங்கே காட்டப்படுகின்றன. விளம்பரங்கள் மிகக்குறைவாகவே இடம் பெற்றுள்ளன. அவை, தமிழ், ஆங்கிலத்தில் அமைந்துள்ளன.

### கட்டுரைகள்

நவீன ஓவியம் பற்றிய வெ. சாமிநாதன் கட்டுரை, எழில் முதல்வனின் 'வாசகன் யார்?', சச்சிதானந்தத்தின், 'பிக்காஸோ' முதலான கட்டுரைகள் தற்கால இலக்கியம், ஓவியம் முதலான கலைத் தொடர்பான கருத்துக்களைக் கூறுவனவாகும். "எந்தத் துறையானாலும் சரி; 'முதலில் அதனுள் நுழைய, பின் அதைப் பற்றித் தெரிந்து கொள்ள, அபிப்பிராயம் கூறத் தகுதி வேண்டும்; தன்னைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டும்' என்ற ஒரு ஆரம்பப் பாடம் கூட சாதாரண மனிதனும் சரி; வேறு துறைகளில் தலையிடும் ஒருதுறைப் பிரமுகர்களும் சரி; கற்றுக் கொள்ளவேயில்லை" என்று வெ. சாமிநாதன் 'அனுபவம் - வெளிப்பாடு - நவீன ஓவியம்' என்ற கட்டுரையில் தன்னுடைய மனத்தாங்கலை வெளிப்படுத்துகிறார். இதை எல்லாப் படைப்பாளிகளுக்கும் அவ்வப்போது நேரிடும் மனத்தாங்கலாக ஏற்றுக் கொள்ளலாம். மேலும், 'சிந்தனைச் சிதறல்' என்ற கட்டுரையில் வல்லிக்கண்ணன், "இந்த நாட்டினர்க்கு முக்கியமாகத் தமிழருக்கு மட்டும் தான் பண்பாடு என்ற ஒன்று இருப்பது போலவும், மற்றவர்கள் எல்லாம் பண்பாடு குறைந்தவர்கள் போலவும் ஒரு போலியான சித்திரம் தீட்டி நாட்டினரை மயக்கத்தில் ஆழ்த்தி வைப்பது வீணத்தனம். எழுத்தாளர்கள் வாழ்க்கையைத்தான் சித்தரிக்கிறார்கள்; இலக்கியங்கள் சமூகச் சித்திரங்களே; எந்த எழுத்தாளனும், எவருடைய பண்பாட்டையும் கெடுப்பது மில்லை; எந்தச் சமூகப் பண்பாட்டையும் சீரழிய வைப்பதுமில்லை" என்ற கருத்தை முன் வைக்கிறார். இவை போன்ற கருத்துக்கள் 1970களில் இலக்கியவாதிகளிடம் வாதத்திற்கு உரியனவாக இருந்துள்ளன.

### கவிதைகள்

'அலைச்சலின் பிள்ளை', 'தனி வீடு', 'நிழல்', 'காலை வரப் போகிறது', 'வரவு-செலவு-இருப்பு' ஆகிய அட்டைப்பட விளக்கக்

கவிதைகள் ஜெயகாந்தனின் மேற்பார்வை இதழ்களில் மட்டுமே வந்துள்ளன. மிகப் பெரும்பான்மையான கவிதைகள், உலகளாவிய சமுதாயச் சிந்தனையுடையன. குறிப்பாக, எஸ். வைத்தீஸ்வரனின், 'மை-லாய்-வீதி' என்ற கவிதையைக் காண்போம். "அமெரிக்கர்கள், வியட்நாமின் மை-லாய்-கிராமத்தில் புரிந்த அட்டூழியங்களைக் கேட்கும் போது, மனிதனுடைய அரக்கத்தனம் உலகம் முழுவதையும் அழித்துச் சாம்பலாக்கும் வரை ஓழியாது என்று பயப்படுகிறேன். அந்தப் பயத்திலிருந்து பிறந்தது நீங்கள் படித்த கவிதை" என்று குறிப்புரை தருகிறார். இருபதாம் நூற்றாண்டின் இறுதி எல்லையில் இருட்டு மூலையில் மனித நேயம் அச்சத்தோடு பதுங்கிக் கிடப்பதை இக்கவிதை வரிகள் மிகச் சிறப்பாக உணர்த்துகின்றன.

இன்று
தெருவில் நடக்காதே. திரு மனிதா!
இருபதாம் நூற்றாண்டு
தெரியுமா உனக்குத்
திரும்பி வா உள்ளே!

. . . . . . . . . . . . . . . . .

குப்பைத் தொட்டிகளில்
குழந்தைத் தலைகளும்.

. . . . . . . . . . . . . . . . .

அறுவடைக்குப் போன மக்கள்
அறுபட்டு உயிரற்று ஊதிப்போய்
வயற்காட்டுப் பொம்மைகளாய்

. . . . . . . . . . . . . . . . . . . .

நாகரிக எல்லையிலே
நகரங்கள் தெருக்களில்தான்

. . . . . . . . . . . . . . . . . . . .

டாங்கிகள் இழுத்துப்
பீரங்கி வெடிப்பதும்
எறும்புகள் உராய்விலே
மெல்லிசை ரசிப்பதும்

வாழ்க்கை நிகழ்ச்சிகள்

. . . . . . . . . . . . . . . . . . . .

ஒரு . . . . . . . . . . . . . . .

இருட்டுக்கு . . . காட்டுக்கு . . .

மூலைக்கு. . . வானுக்கு

எங்காகிலும் ஒரு

உலகத்தை விட்டு

இரண்டாம் இதழில் வெளிவந்த ஜெயகாந்தன் கவிதைகள் 'முன்னுரை' என்ற தலைப்பில் வெளிவந்தன. சான்றுக்கு,

கவிதை ஒரு மூட்டைப் பூச்சி

இரவில் என்னைத்

தூங்க விடாமல் தடுக்கிறது

இவ்வாறு பன்முக நோக்கில் கவிதைகள் உள்ளன. திரைப்படங்களில் சில கவிதைகள் எழுதிய ஜெயகாந்தன் அவ்வப்போது தன் கவிதைத் தாகத்தை இவ் இதழ் வாயிலாகத் தீர்த்துக் கொள்கிறார்.

இனி, கி.அ. சச்சிதானந்தத்தின் 'நகரம்' பற்றிய கவிதை.

நாற்ற மடிக்கிறது
நான் வாழும்
நகரம் . . .
. . . . . . . . . . . . . . . . . . . .
நாற்றத்தில் என்னை
நான் இழந்து
வீடு திரும்புகையில்
அம்மா கதவைத் திறந்து
அடையாளம் தருவாள்
எனக்கு . . .

யதார்த்தம் என்ற பெயரில் கவிஞர்கள், கவிதைகளை மன உணர்வுகளைக் குத்திக் கிளறும் ஆயுதமாகப் பயன்படுத்துதல், இடக்கரடக்கல் என ஒதுக்கப்படும் சொற்களைப் பயன்படுத்துதல் இயல்பென்று எண்ணி இலக்கியங்களில் சேர்ப்பது இலக்கிய

வாதிகளுக்குத் தகுதியன்று. பண்பாட்டுச் சீரழிவு பற்றிப் பேசுகின்ற இலக்கியவாதிகள் தம் படைப்புகளில் பண்பாட்டை ஏன் மறந்தனர்?

ஜெயகாந்தனின் 'ஒற்றைச் செருப்பு' என்ற கவிதை சோகத்தை வடிக்கிறது. இது புதுக்கவிதை. எப்பொருள் பற்றியும் பேசலாம் என்ற நிலையில் இருந்தாலும் சொற்களின் பயன்பாட்டில் பண்பாடு காத்தலை ஆசிரியர், ஆசிரியர் குழு கவனம் செலுத்தவில்லை என்பதைக் காட்டுகிறது.

## சிறுகதை

ஆசிரியர் குழுவில் இருந்த சில உறுப்பினர்கள் அவ்வப்போது தமது சிறுகதை படைப்புகளைத் தந்துள்ளனர். ஜெயகாந்தன், ந. முத்துசாமி, நீல. பத்மநாபன், வெ. சாமிநாதன், லா.ச.ரா., முத்துக்கூத்தன், கி.அ. சச்சிதானந்தன் ஜோதிர்லதா கிரிஜா, எஸ். வைதீஸ்வரன், அசோகமித்திரன், மணிசாஸ்திரி எனப் பல புகழ்பெற்ற எழுத்தாளர்கள் இதில் தமது படைப்புகளைத் தந்துள்ளனர்.

தம்முடைய இதழில் வெளிவந்த சிறுகதைகள் குறித்து, ஜெயகாந்தன் வாசகர்க்கு ஒரு செய்தியைக் கூறுகிறார். சிற்சிலக் கதைகளில் முகம் சுளிக்கக் கூடிய நிகழ்வுகள் இருந்தாலும் அவற்றில் அடங்கியுள்ள சிந்தனைக்குரிய செய்திகளின் பொருட்டு பெருந்தன்மையுடன் அந்நிகழ்வுகளை ஏற்குமாறு கூறுகிறார்.

சிறுகதை இலக்கியத்திற்கு, ஜெயகாந்தன் பங்களிப்பு பெரிது என்பதால் அவர் கூறும் இதனை வாசகர்கள் ஒத்துக் கொள்ள வேண்டும். அசோகமித்திரனின் 'இரு நண்பர்கள்' இன்றைக்கும் பாராட்டிற்குரியதாகும். ஆழ்ந்த கதைத் தன்மைகள் இந்த இதழ்ச் சிறுகதைகளில் பெரிதும் இல்லை. வெறும் நிகழ்வுகளின் கோர்வையாக உள்ள கதைகளே இடம் பெறுகின்றன. இத்தன்மையே ஆசிரியர் குழுவினரின் சிறுகதைகளுக்கு வரையறுத்த இலக்கணம் எனக் கருத இடமேற்படுகிறது.

இவை தவிர, மொழிபெயர்ப்புக் கதைகள் அவ்வப்போது இடம் பெறுகின்றன. காப்காவின் 'பட்டினிக் கலைஞன்' என்ற மொழி பெயர்ப்பை வையவன் செய்துள்ளார். காப்கா ஜெர்மன் எழுத்தாளர். கூண்டுக்குள் பட்டினியோடு இருக்கின்ற கலைஞனின் வயிற்றுப்

பசியை வென்று வயிற்றை வளர்க்கும் கட்டாயத்தில் இருக்கும் கலைஞன் குறித்துக் கதை போகிறது.

எழுச்சி, உச்சம், திருப்புமுனை, வீழ்ச்சி என்ற இலக்கணங்களுக்குக் கட்டுப்படாமல் இந்த இதழ்ச் சிறுகதைகள் அமைந்துள்ளன. கதைப் படைப்பாளர்கள் தங்கள் மனம் போன போக்கில் கதைகளைப் படைத்துள்ளனர். 'யுகசந்தி' என்ற பகுதியில், லா.ச.ரா.வை வாசகர்கள் கேள்வி கேட்க அவர் பதில் தருகிறார். இதன் முன்னுரையில், ஜெயகாந்தன் கருத்து இங்கு ஆய்விற்குரியது. "இந்த யுகத்தின் எழுத்தாளர்களின் படைப்புகளை எல்லாம் இந்த யுகத்தின் வாசகர்கள் புரிந்து கொள்கிறார்கள் என்று நிச்சயம் செய்ய முடியாது. எப்பொழுதும் எழுதுகின்றவன் தன் எதிரில் நிற்பவர்களுக்காக எழுதுவதில்லை. அவனுக்குப் பின்னால் வரும் யுகத்திலும் அவனை இந்த யுகத்து வாசகர்களைவிட அதிகமாகப் புரிந்து கொள்கிற வாசகர்களுக்காகவும் அவன் எழுதியிருக்கிறான் என்பதை நல்ல இலக்கியங்கள் நிரூபித்துள்ளன. அப்படிப்பட்ட வருங்கால யுகத்தின் பிரதிநிதிகளைப் போன்று ஒரு சிலரை ஓரளவிற்கு நிகழ்காலத்திலேயே அவனால் கண்டுகொள்ள முடிகிறது. அப்படிப்பட்ட வாசகர்களும் எழுத்தாளனும் சந்தித்துக் கொள்ளத்தான் வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை. அந்த இலக்கியத்தின் எதிரொலியாக அவர்கள் எங்கெங்கோ இருக்கிறார்கள். அந்த வாசகனையும் எழுத்தாளர்களையும் பரிச்சயம் செய்ய வைப்பது ஒரு ரசமான அனுபவமாக இருக்கும் என்ற எண்ணத்திலேயே இந்தச் சந்திப்பு இங்கே சம்பவிக்க நாம் இடம் தருகிறோம்" என்பதாகும். வியாசரும் வால்மீகியும் வள்ளுவனும் இளங்கோவும் வரும்காலம் நம்மைப் புரிந்து கொள்ளும்; போற்றும் என்று எண்ணித் தம் படைப்புகளை உலகுக்குத் தரவில்லை. அவ்வக்கால மக்கள் தம் கருத்துகளைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பது மட்டுமே அவர்களது நோக்கமாய் இருந்தது. எனவேதான் அப்படைப்புகள் இன்றளவும் நிலைத்திருக்கின்றன.

### விமரிசனக் கட்டுரைகள்

'இன்டலக்சுவல்', 'ரிங்', 'சிந்தனைச் சிதறல்', 'வாசகன் யார்', 'முன்னோட்டம்', 'பின்னோக்கு' என விமரிசனக் கட்டுரைகள் தொடர்ந்து இடம் பெற்றுள்ளன. முன்னோட்டம் என்ற விமரிசனக் கட்டுரை தொடர்ந்து ஜெயகாந்தனால் எழுதப்பட்டு வந்தது. இதழின் முதற்கட்டுரை தலையங்கம் போன்றுள்ளது. இப்பகுதி, ஓர் அரிய

பகுதியாகும். முந்தைய இதழ் குறித்து விமரிசனக் கடிதங்களின் அடிப்படையில், நல்லதொரு தெளிவான அலசல் கட்டுரையாக இது அமைகிறது. ஜெயகாந்தன், காய்தல் உவத்தலின்றித் தெளிவாகத் தம் கருத்துக்களை இதில் எழுதுகிறார்.

'இன்டலக்ட்ஸ்' பகுதியில் வந்த எல்லாமே நல்ல கருத்துக்கள். என்றாலும், ஒரு இன்டலக்சுவல் தன்மையில் விவாதிக்கப்பட வேண்டிய கருத்துக்கள் அதில் இல்லை. ஆரம்பித்துவிட்டோமே என்பதற்காகப் படிக்கிறவர்களைச் சோர்வடையச் செய்யக்கூடாது என்பதால் அது தற்காலிகமாக நிறுத்தப்படுகிறது. தகுந்த சந்தர்ப்பம் கிடைக்கும்போது அது மீண்டும் வரலாம்' (இதழ் 3/1970) என முன்னோட்டத்தில் ஜெயகாந்தன் தம் இதழ்களில் வெளியான பகுதியை விமரிசனம் செய்வது அவரது நேர்மையைக் காட்டுகிறது.

'சுய தரிசனம்' என்ற பகுதி, திங்கள்தோறும் ஒவ்வொரு எழுத்தாளனைக் கொண்டு வெளிவந்துள்ளது. சிதம்பர சுப்பிரமணியம், தம்முடைய சுய தரிசனத்தில், "ஒரு குழந்தை, ஏதாவதொன்றைக் கிறுக்கி விட்டு ஒரு அரிய சித்திரம் வரைந்து விட்டதாகப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கலாம். ஆனால், படைப்பாளி தன்னையே ஏமாற்றிக் கொள்ளக் கூடாது. வேற்று மனிதனை விட இரக்கமின்றித் தன் படைப்புகளின் குறைகளைக் கண்டு பிடிக்க முயல வேண்டும். அப்போதுதான், படைப்புக்களைக் குற்றமின்றிப் படைக்க முடியும் என்கிறார். இது மிகச் சிறப்பான அறிவுரையாகப் படைப்பாளிகள் ஏற்றுக் கொள்ளத்தகும்.

பாக்ஸரின், 'ரிங்' என்ற பகுதியில் எழுபதுகளில், இயக்கங்களின் செல்வாக்கு இலக்கியங்களைச் சிறைப்பிடிக்க முயல்வதை உணர்த்துகிறது. 'இலக்கிய விசாரம்' நடக்கப் போவதாக அறிந்து அக்கூட்டத்திற்குச் சென்ற பாக்ஸர், தாம் கண்ட நிகழ்ச்சியைத் தொகுத்தளிக்கிறார்.

ஒரு பெரிய எழுத்தாளரைப் (எழுத்தாளர் பெயர் குறிக்கப்படவில்லை) பலரும் கேள்விகேட்க, அவர் விடை தருகிறார். வியட்நாமில், அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் அட்டூழியத்தை எதிர்த்தல், தேசியப் போராட்டம், மார்க்ஸ் கருத்துக்கள், கலை மக்களுக்காக, கலைக்காக போன்றவற்றைக் குறித்தெல்லாம் கதையோ, கட்டுரையோ எழுதாதற்காக வினாக்கள் தொடுக்கப்பட, எழுத்தாளர் அதற்கு விடையிறுத்தமைபற்றி எழுதுகிறார்.

தம்முடைய இக்கட்டுரையில் ஒரு முடிவைப் போல, "இலக்கியமானது தனியாகக் கல்வி போல, அறைக்குள் மனசுக்குள் தனக்குள் தான் அனுபவிக்கத்தக்கது" என்கிறார். இன்டலக்ட்ஸ் பகுதி, முதலிரு இதழ்களில் மட்டுமே வந்துள்ளது. முதல் இதழில், 'சிந்தனைச் சிதறல்' என்ற தலைப்பில் வல்லிக்கண்ணன், இன்றைய தமிழ் இலக்கியத்தின் தேவைகள் குறித்துப் பட்டியலிட, சித்ரபாரதி, ரமணியன் அதற்கு விடையாகத் தம் கருத்துகளை அடுத்த இதழில் தருகின்றனர். எனினும் இப்பகுதி சுவையானதாய் அமையவில்லை.

## கேள்வி-பதில்

'உரத்த சிந்தனை' என்ற தலைப்பில் வினாவிடை இடம் பெறுகிறது. 'நிலப்பறிப்புச் சட்டம்' பற்றிய ஒரு கேள்விக்கு உழுபவனுக்கு நிலம் சொந்தம் - தேசப்பற்று சாதாரண எளிய மக்கள் பெறுவதற்கான வழிமுறை இது என்று கூறும் இவரது கருத்து சிந்தனைக்குரியது. நிலப்பறி இயக்கத்திற்குச் சார்பாகக் குரல் தரும் இவர் கம்யூனிஸ்டு கட்சியைத் தம் ஞானத் தந்தையாக ஏற்றுக் கொண்டவர் என்பதை உணர வைக்கிறார். 'எழுத்தாளரின் சமூகப் பொறுப்பு என்ன?' என்ற வினாவிற்கு, விடையாக, "எழுத்தாளரின் சமூகப் பொறுப்பு, தார்மீகப் பொறுப்பு, குடும்பப் பொறுப்பு, சொந்தப் பொறுப்பு எல்லாமே எழுத்து ஒன்றுதான்" எனச் சுவைபடக் கூறுகிறார். பிறிதொரு வினா, 'இலக்கியத்தில் பிரச்சாரத்தின் இடம் என்ன?' பதிலாக, "ஏசுநாதரும், இராமகிருஷ்ண பரமஹம்சரும், உபநிஷத்துக் கதைகளைச் சொன்னவர்களும் தங்கள் பிரச்சாரத்தையே இலக்கியமாக்கியதை நம்மால் பார்க்க முடிகிறது. ஆழ்ந்த ஞானம் இலக்கியத்திற்குப் புறம்பானதல்ல. இசை ஞானியான பியோத்தவனும் தியாகய்யரும் கூட . . ." என்கிறார். எனவே, அரசியல் இயக்கம், இலக்கியத்தைப் பிரச்சாரக் கருவியாக்குவதை ஜெயகாந்தன் விரும்பவில்லை என அறியலாம்.

## முடிவுரை

படைப்பாளிகளுக்கு ஞானரதம் தனி உயர்வைத் தருகிறது. "இலக்கியம் சம்பந்தப் பட்டவர்களில் புதிதாகப் படைப்புக்களை ஆக்கித் தருவோர்களே இலக்கிய மூலவர்கள்; மற்றவர்கள் அனைவரும் இலக்கியத் துணைவர்களே. இது படைப்பாளிகளுக்கு ஞானரதம் அளிக்கும் தனி மரியாதை. வாசகன் முதல் விமரிசகன்

வரையுள்ள இலக்கியத் துணைவர்கள் எவரும் ஞானரதத்தில் ஏறும் போது, படைப்பாளிகளுக்கு அளிக்க வேண்டிய இந்த முதல் மரியாதையைச் செய்யப் பழகிக் கொண்டுதான் ஏற வேண்டியிருக்கும்" என்று ஆக்கம் பகுதியில் கூறப்படும் செய்தி ஞானரதம், படைப்பாளிகளை முன்னிலைப்படுத்தியே நடத்தப்பட்டமைக்குச் சான்றாகும்.

சமுதாயத்திற்கு மிகத் தேவையான சிக்கல்கள் குறித்துப் பல இடங்களில் படைப்புகள் கவலைப்பட்டாலும் அவற்றை வெளிப்படுத்திய விதம் இலக்கியச் செருக்கோடு அமைந்திருந்த காரணத்தால் மக்களைச் சென்று சேரவில்லை. இதன் எழுத்தாளர்கள் தம்மைச் சுற்றிக் குறுகிய வட்டத்தைப் படைத்துக் கொண்டதால், மக்கள் தொடர்பு இந்த இதழுக்குப் பெரிதாகக் கிடைக்கவில்லை. இலக்கிய மூலவர்கள் திசைக்கு ஒருவராய்த் திரும்பிக் கொள்ள இதழ் நின்று போயிற்று.

# நாடகக் கலை

ஆ. தசரதன்

## முன்னுரை

'நாடக நிலையத்தார்' என்ற அமைப்பினர் ஆறு. அழகப்பன் அவர்களைச் சிறப்பாசிரியராகக் கொண்டு 1970ஆம் ஆண்டு மே மாதம் 15ஆம் தேதி முதல் 'நாடகக் கலை' என்ற மாத இதழை வெளியிடத் தொடங்கினர். அவ்விதழுக்கு அவ்வை சண்முகனார் அளித்துள்ள வாழ்த்தில்,

> நாடகக் கலை வளர்ச்சிக்கு ஒரு திங்களிதழ் தேவையென்பதைப் பல ஆண்டுகளுக்கு முன்பே உணர்ந்தவன் நான். என்போல் இதனை உணர்ந்த அன்பர்கள் சிலர் இதழும் தொடங்கி நடத்தினர். காலம் அவர்களுக்குத் துணை செய்யவில்லை. தோன்றிய நாடக இதழ்களெல்லாம் சில மாதங்களிலேயே மறைந்தன

எனக் குறிப்பிட்டுள்ளார். ஈராயிரம் ஆண்டுகளாக இலைமறைகாயாக இருந்துவந்த தமிழ் நாடகவியல், 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் செழிக்கத் தொடங்கியது. பல நாடக சபைகள், நாடகக் கம்பெனிகள், பாலர் நாடகக் குழுக்கள், பெண்கள் நாடகசபைகள், நாடக மன்றங்கள் தோன்றி, தற்காலத் தமிழ் நாடகவியலை வளர்த்தன. நாடகவியலோடு மிக இணைந்தே திரைப்படவியலும் ஒரு நூற்றாண்டாகத் தமிழ்நாட்டில் வளர்ந்தது. முத்தமிழில் ஒன்றான நாடகத் தமிழைப் பட்டும் படாமலும் தொட்டும் தொடாமலும் தமிழ் இதழ்கள் பிரசுரித்தன. தமிழ் எழுத்தாளர்களும், போனால் போகிறது எனத் தம் சிறுகதைகள், புனைகதைகள், புதுக்கவிதைகளோடு ஓரிரு நாடகங்களை எழுதிப் போட்டுவிட்டுப் பாராமுகமாயிருந்தனர். பல நாடகங்களை எழுதி, அச்சிட்டு, மேடையேற்றிச் சம்பாதித்த அல்லது இழந்துபோன நாடகக் குழுக்கள், தற்காலத் தமிழ் நாடகவியலுக்குக் கணிசமான பங்களிப்பைச் செய்திருந்தன. நாடக, இலக்கண நூல்கள் இரண்டும், நாடகவியல், நாடகக் கலை பற்றிய சொற்பொழிவுகள்

நாலைந்தும், நாடகமேடை நினைவுகள், நாடக வாழ்க்கை போன்ற சுயசரிதங்கள் சிலவும், நாடக ஆய்வுக் கட்டுரைகளும், நாடக ஆய்வு நூல்களும் நாடகத் தமிழை முத்தமிழில் ஒன்றாக அமைத்ததை நிலைநிறுத்தின. நவீன நாடகக் குழுக்கள் சில தோன்றி, தமிழ் நாடகவியலில் சோதனை முயற்சிகளைச் செய்தன. சுயமரியாதை இயக்கத்தினரும் தேசியவாதிகளும், மொழிப் போராளிகளும் தமிழ் நாடகமேடையை மரபிலிருந்து மாற்றித் தம் கைவசப்படுத்திக் கொண்டனர். இவர்களில் முகிழ்த்தெழுந்த சிறந்த நடிகர்கள் கூட்டமும், நாடகக் கம்பெனிகளில் உருவாகி வந்த தலைசிறந்த நாடகக் கூட்டத்தினரும் திரைப்படத்தில் ஒருகாலும், நாடகத்தில் ஒருகாலுமாக வைத்து, பின்பு பின்வைத்த காலை முன் இழுத்து முழுக்க முழுக்கத் திரைப்படங்களிலேயே காலூன்றினர். திரைப்பட வாய்ப்பில்லாத காலத்தில் கட்சிப் பிரச்சார நாடகங்களை நடத்திய சில சினிமா கலைஞர்களைப் போல இவர்களும், கோயில் திருவிழாக்கள், அல்லது நாடக சீசன்களில் நகைச்சுவை நாடகங்களை நடத்தித் தமிழ் நாடகவியலைச் 'சின்ன'ப் பொழுதுபோக்காக வைத்துக் கொண்டிருந்தனர். அவ் 'வைப்பு' முறை தற்போது சின்னத்திரைகளில் ஆக்கிரமித்துக் கொள்வதற்குச் சற்றுமுன்பே தமிழ் நாடகவியலை இழுத்துப் பிடிக்கச் சில நாடக இதழ்கள் தோன்றின; தோன்றி மறைந்தன. அவற்றுள் ஒன்றாகிப் போயிற்று நாடகக் கலை என்ற மாத இதழ். தற்காலத் தமிழ் நாடகவியலுக்கு ஒரு நூற்றாண்டு வயது முடிந்தபின் அதன் மறுபிறப்பாக இவ்விதழ் தோன்றித் தன் பணிமுடிந்ததும் அற்ப ஆயுளிலேயே மறைந்தும் விட்டது.

## தமிழ் நாடகவியலுக்குத் தனி இதழ்கள்

ஆய்வுக் கட்டுரைகளுக்கும், இலக்கிய விமர்சனங்களுக்கும், கவிதைகளுக்கும், ஜனரஞ்சக விசயங்களுக்கும், இசைக்கும், ஏன் சாதாரண நகைச்சுவைத் துணுக்குகளுக்குக் கூடத் தமிழ் இதழ்கள் தோன்றிய கால கட்டத்தில் நாடகத் தமிழியலுக்கெனத் தனி இதழ்கள் தோன்றின என நினைக்கும்போது நாடகவியலின் சிறப்பு அறியப்படுகிறது. நாடகப் பேராசிரியர் என அழைக்கப்பெற்ற பம்பல் சம்பந்த முதலியார் நடத்திய 'Indian Stage என்ற ஆங்கில இதழில் தமிழ் நாடகவியல் பற்றிக் கட்டுரைகள் வந்தன. அவ்வை சண்முகனார் தம் வாழ்த்தில் குறிப்பிட்ட இதழ்கள் எவை என அறிந்துகொள்ள முடியவில்லை. அதற்குப்பின், கலாவேனில் என்ற இதழ் 1957இல் தொடங்கப்பெற்றது.

> சிறுகதை நாவல் முதலியவற்றுக் கெல்லாம் ஏராளமான இதழ்கள் நடத்தப்படுகின்றன. ஆனால் நாடகக் கலைக்கெனத் தனிப்பட்ட இதழ் எதுவும் இல்லையே என்ற குறையைப் போக்குவதற்காக இவ்விதழ் திருநெல்வேலியில் தொடங்கப்பட்டது. இதன் வெளியீட்டாளரும் ஆசிரியருமாக இருந்து பொறுப்பேற்றி நடத்தியவர் திரு. திருமுகன்நாதன்.
>
> நாடகங்களை மாத்திரம் ஏந்தி வெளிவரும் பத்திரிக்கையை நடத்துவதென்பது எளிய செயலன்று. நாடகக் கலைக்குத் தொண்டாற்ற வேண்டுமென்ற ஆசிரியரின் உயர்ந்த குறிக்கோள் காரணமாகவே இவ்விதழ் நடத்தப்பட்டது. நாடகங்கள் பற்றிய செய்திகள், புதிய நாடகங்கள், நாடகப் பொன்மொழிகள் இவ்வாறு பலப் பல வகைகள் இவ்விதழ்களில் வெளிவந்தன
>
> நாடகம் எழுதும் ஆசிரியர்கள் குறைவு; நாடக அபிமானிகளும் குறைவு. நாடகத்திற்காக நடத்தப்படும் இதழ்களும் அரியன. நடத்தினால் ஆதரிப்பவர்களும் குறைவு. இத்தகைய சூழ்நிலையில் பொருள் வருவாய் கருதாது கலைத்தொண்டு ஒன்றையே எண்ணி இவ்விதழைத் தொடங்கி நடத்தியுள்ள ஆசிரியரின் துணிவும் தொண்டும் என்றும் நினைக்கத்தக்கன

என ஆறு. அழகப்பனார் இளவேனில் என்ற நாடக மாத இதழ் பற்றித் தம் ஆய்வு நூலான, 'தமிழ் நாடகம் தோற்றமும் வளர்ச்சியும்' (1987:246-47) என்ற நூலில் குறிப்பிட்டிருப்பது அவர்க்கும் பொருந்தும்; அவர் நடத்திய நாடகக் கலை என்ற இதழுக்கும் பொருந்தும்.

இளவேனில் இதழின் அவல நிலை தெரிந்திருந்த போதும் ஆழம் தெரிந்தே காலைவிட்ட ஆறு. அழகப்பனார் நாடகக் கலை என்ற இதழை 1970ஆம் ஆண்டு தொடங்கினார் எனில், அதற்குக் காரணம் இளவேனில், நாடகத் துறையின் புதிய அமைப்பு வளர்ச்சியை நன்கு சுட்டிக்காட்டியதாலேயே என்றால் அது மிகையாகாது. இளவேனிலைத் தொடர்ந்து அழகப்பனாரின் நாடகக்

கலை என்ற இதழ் தோன்றி இருபத்துநான்கு மாதமாக இருபத்துநான்கு இதழ்களுடன் தன்னை நிறுத்திக் கொண்டது. இவ்விரு இதழ்கள் பட்ட பாட்டைத் தெரிந்திருந்தும், ரேணுகாதேவி என்பவர் 1976ஆம் ஆண்டு 'சபாநாயகன்' என்ற மாத இதழை நாடகவியலுக்கென்றே அர்ப்பணித்துத் தோற்றுவித்தார். சென்னையிலிருந்து பிறப்பெடுத்த சபாநாயகன், சென்னை நாடக சபாக்கள் தோற்றுவித்த நாடக வரலாறு பற்றி அறிந்து கொள்ளவும், அந்நாடக சபாக்களில் எஞ்சியிருந்தவை நடத்திய கலை நிகழ்ச்சிகள் பற்றித் தெரிந்து கொள்ளவும் பயனாயிற்று. மேலும், நாடகக் கலைஞர்கள் பற்றியும், அவர்களின் பேட்டிகள், வாழ்க்கைக் குறிப்புகள், நாடகாசிரியர்கள் எழுதும் நாடகங்கள், மதிப்புரைகள் பற்றியும் செய்திகளைத் தொகுத்துத் தந்தது. ஸ்ரீரேணுகா கிரியேசன்ஸ் என்ற தம் நாடகக் குழுவின் அன்றாடச்செய்திகளையும் அவ்வம்மையார் அவ்விதழில் வெளியிட்டார்.

தமிழில் நவீன நாடகவியல் பற்றி அறிந்து கொள்வதற்குத் துணை செய்யும் வகையிலும், இந்திய, மேனாட்டு நாடகவியல் கருத்துக்களைத் தமிழாய்வாளர்கள் அறிந்து கொள்ளும் விதத்திலும் வெளிவரும் 'வெளி' என்ற நாடகவியல் மாத இதழ் மிகவும் பயனுள்ளதாகத் தற்போது விளங்கி வருவது நாடகவியலார்க்குத் தெம்பு ஊட்டுவதாக உள்ளது. ஈழநாட்டு 'அரங்கம்' என்ற இதழும் இவ்வாறே அமைந்தது.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய போது எண்பதுகளில், ஆறு. அழகப்பனார் நடத்திய 'நாடகக் கலை' என்ற மாத இதழைப் பற்றி ஏ.என். பெருமாள் தம்முடைய இருபதாம் நூற்றாண்டில் தமிழ் நாடகம் (1988:188-89) என்ற ஆய்வுநூலில் விரிவாகக் கூறியுள்ளார்.

> .பெரும் நாடக ஆசிரியர் சிறந்த கலைஞர் ஆகியோரின் கருத்துக்களை நேரில் கேட்டு அறிவிக்கும் அறிவுக்கருவூலமாக இது திகழ்ந்தது.
>
> சகஸ்ரநாமம், தி.க. சண்முகம், 'சோ' இராமசாமி போன்றோரின் பேட்டிக் கருத்துக்கள் விரிவாக வெளியிடப்படும். நாடகங்களும் தொடராக வெளிவரும். நாடகக் குறிப்புகள், அயல்நாட்டு நாடகம்

பற்றிய பயனான செய்திகள், அரிய கட்டுரைகள், நாடக மதிப்பீடுகள், ஆய்வுக் கருத்துக்கள், துணுக்குகள் இதில் இடம்பெறும். நாடகம் பற்றிய ஆய்வு செய்வோருக்கு 'நாடகக் கலை' கருத்துப் பெட்டகமாக அமைந்தது என்பது உண்மை. ஆசிரியரின் அரிய கருத்துரை நாடக வளர்ச்சிக்கு உதவும் கரமாக இருக்கும்.

இந்த இதழில் திங்களுக்கு ஒரு வானொலி நாடகம் மதிப்புரை செய்யப்பட்டது, பயனுடையதாக அமைந்தது. கேரளம், தெலுங்கு, கன்னட மொழி நாடகங்கள், கலைஞர் ஆசிரியர் பற்றியும் அரிய செய்திகளைத் தமிழ் மக்களுக்கு இந்த ஏடு அளித்தது

மேலே எடுத்துக்காட்டப் பெற்ற கருத்துக்களோடு, இதழியல் அடிப்படையில், நாடகக் கலை என்ற இதழ் பற்றிய சிறப்பியல்பு களைத் தெரிந்துகொள்வது மிகவும் இன்றியமையாதது ஆகும். தமிழ் ஆய்விதழ்களைப் போலவும் ஜனரஞ்சக இதழ்கள் போலவுமான ஒரு கூட்டு அமைப்புடையதாக விளங்கக் கூடிய நாடகக்கலை இதழின் பயன் குறுகிய காலத்தில் அதிகமாகவே ஏற்பட்டது. இதழியல் உத்திகளை, அவற்றிலும் ஆய்விதழ்களின் இயல்புகளையும் நன்றாகவே அறிந்திருந்த ஆறு. அழகப்பன் அவர்கள், படைப்பாளியாகவும், படிப்பாளியாகவும் இருந்ததால் மிகவும் குறுகிய காலத்தில் தம் இதழின் நோக்கத்தை எட்டிப்பிடித்துள்ளார் என்பது இவ்விருபத்து நான்கு இதழ்களிலிருந்து தெரிகின்றது.

## அட்டைப் படங்கள்

ஓர் இதழின் அக அமைப்பும் புற அமைப்புமே வாசகர்களைச் சுண்டி இழுப்பனவாம். ஆய்வு இதழ்களில் புற அமைப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படமாட்டாது. ஜனரஞ்சக இதழ்களில், அட்டைப்படத்துக்கே முதலிடம் தரப்படுகிறது. அதிலும் போனால் போகிறது என எப்போதாவது ஒருமுறை ஆண்களின் படங்கள் வருவதற்கு முற்றிலும் மாறாக, நாடகக் கலை இதழ்களில் எப்போதாவது ஒரு பெண்படம் வந்து, எஞ்சிய அனைத்திலும் தலைசிறந்த நாடகக் கலைஞர்கள்-புகழ்-திரை நடிகர்களின் படங்கள் வந்துள்ளன. இவை அன்னார்களுக்குச் செய்யும் மரியாதை ஆகும். சிலரின் நினைவாஞ்சலி ஆகும். அக்காலத்து அச்சு வசதிக்கேற்ப, அனைத்து முன் அட்டைப்படங்கள் வண்ணத்தில் வந்துள்ளமையும்,

உள் அட்டைப்படங்களும் பின் அட்டைகளும் விளம்பரங்களைத் தாங்கி இதழின் வருவாயைத் தந்தும் அமைந்துள்ளன. அட்டைப் படங்களை அலங்கரிப்பவை கலைஞர், அவ்வையார், கலைவாணர், அறிஞர், நடிகர் திலகம், இலங்கேசுவரர் மனோகர், மக்கள் திலகம், இவர்களுடனே 'சோ'வும் சகஸ்ரநாமமும் சந்திரகாந்தாவும், அவர்களுக்குப்பின் மேடையேறி அன்றைய திரைகளில் சூப்பர் ஸ்டார்களாகிக் கொண்டிருந்தவர்களின் படங்களும் ஆகும். நாடகக் கலை இதழ் எவரை எப்போது போட்டால் நன்றாக இருக்கும் என்ற நுணுக்கத்தைத் தெரிந்து வைத்துள்ளது. இவ் அட்டைப் பட நாயகர்கள் அலங்காரப் பொருளுக்காக மட்டுமின்றி அன்னாரின் பேட்டியோ, கருத்தோ இடம்பெறுவதற்காகவே அவ்வவ் இதழ்களை அலங்கரித்துள்ளனர்.

## அமைப்பு

இதழ்கள், டெமி அளவில், கறுப்பு வெள்ளையில், மேலிருந்து கீழாகவும் (vertical), இடமிருந்து வலமாகவும் (horizontal), ஒரு சில பக்கங்களைத் தவிர பெரும்பாலான பக்கங்கள் இரு பகுதியாகப் பகுக்கப் பெற்றும் அச்சடிக்கப்பட்டுள்ளன. ஓவிய பிளாக்குள் தலைப்புகளை அலங்கரிக்கின்றன. பெட்டிகள் (boxes) துணுக்குகளையும், விளம்பரங்களையும் நிரப்பியுள்ளன. பொருளடக்கம், கடிதங்கள், பதிப்புரை, சிறப்பு ஆசிரியரின் பக்கம், தெரிகிறதா யார் என? போன்ற Quizகள், நாடகவியல் ஆய்வுக் கட்டுரைகள், நாடகமேடை நினைவுகள், நாடக விமரிசனங்கள், நாடகவியலாளரின் தற்குறிப்புகள் (bio-data) திரைப்படமாக வந்த நாடங்களின் விமரிசனம், ஓரங்க நாடகம், தொடர் நாடகம், முழு நாடகம், கல்வியாளர்கள் நாடகம் பற்றி எழுதியுள்ள கருத்துக்களை எடுத்தாளல், வானொலி நாடகங்கள், நாடக மன்றங்களின் வரலாறு, அவற்றில் நடைபெறும் நிகழ்ச்சிகள், நாடக நூல்களின் மதிப்புரை, நாடகம் பற்றிய அயல்நாட்டுக் கருத்துக்கள், அயல்நாட்டவர் பற்றிய படங்கள், ஆய்வு-ஜனரஞ்சக இதழ்கள் அல்லது புத்தகங்களின் விளம்பரம், சிறந்த நடிகர்களின் அயல்நாட்டுப் பயணம், கலைஞர்களின் சிறப்புச்செய்தி, பத்திரிகைச் செய்திகள், நாடகம் தொடர்பாக இருப்பின் அவற்றை மறுபிரசுரம் செய்தல், நாடகவியலார் பற்றிய கவிதைகள், தொடர்கள், நாடகவியலாரைச் சிறப்புச் செய்த நிகழ்ச்சிகள் தொகுப்பு, நாட்டிய நாடகங்கள், அவற்றை விமர்சித்தல், செய்திச் சுருக்கம், பட்டி மன்றம் இப்படி எத்தனையோ செய்திகளைத் தாங்கி இவ்விதழ் வந்துள்ளது.

பொதுவாக, நாடகவியலில், 1. நாடகம், 2. மேடை எனும் இரண்டும் பார்க்கப்பட வேண்டும். நாடகம் எனும்போது, அதன் எழுத்துருவே இங்குக் கொள்ளப்படுகிறது. மேடை எனும்போது அரங்கம், திரை, காட்சி, காட்சிப் பொருள்கள், ஒலி-ஒளி, நடிகர்கள் பாட்டு, பின்னணிப் பாடகர்கள், இசை, அரங்க உதவியாளர்கள், நடிப்பு, ஒப்பனை, ஆடை, அணிகள் போன்றவை அடங்கும். இவையும், இவற்றுக்கு மேலாக, இந் நாடகக் கலை இதழில் அமைந்துள்ள பல விசயங்களும் சேர்ந்து தமிழ் நாடகவியலின் விஸ்தீரணத்தை நமக்குக் காட்டிவிடுகின்றன.

## பெயர்ப்பொருத்தம்

தற்காலத் தமிழ் நாடக இலக்கணம் 'நாடகவியல்' எனப் பரிதிமாற் கலைஞரால் பெயர் சூட்டப்பட்டது. பம்மல் சம்பந்த முதலியாரோ சென்னைப் பல்கலைக்கழகத்தில் நாடகத் தமிழ் எனப் பெயர் வைத்துத் தம் ஆய்வை நிகழ்த்தினார். அவ்வை சண்முகனாரோ அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில், 'தமிழ்நாடக வரலாறு', 'நடிப்புக்கலை', 'நாடகத்தில் பிரசாரம்' எனும் மூன்று சொற்பொழிவுகளை நாடகக்கலை எனும் பொதுத்தலைப்பில் ஆற்றினார். சகஸ்ரநாமமோ மதுரைப் பல்கலைக்கழகத்தில் 'நாடகக் கலையின் வரலாறு' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார். இவர்களைப் போன்று வேறு சிலரும் தமிழ் நாடகவியல் பற்றிப் பேசவும் ஆய்வு செய்யவும் ஒவ்வொரு தலைப்புகளைத் தேர்ந்தெடுத்தனர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய ஆறு. அழகப்பனார், அங்கு நடைபெற்ற சொற்பொழிவுகளின் கூட்டுத் தலைப்பான நாடகக் கலை என்பதைக் தம் இதழுக்கு வைத்து, அந் நாடக இதழில், 'நாடகங்கள், ஆய்வுகள், நாடகவாணர்களின் வரலாறு போன்றவைகளைச் சொல்ல அப்பெயரில் ஓர் இதழ் தோற்றுவித்தார் எனச் சொல்வது பொருந்துமா? அல்லது படைப்பாளியாகவும் நாடக ஆய்வாளராகவும் நாட்டுப்புறவியலில் தோய்ந்தவராகவுமிருந்த தாலும் அப்பெயரை வைத்தாரா? அல்லது நாட்டிய உருவில் எழுந்தருளியுள்ள நடராசப் பெருமான் உணர்த்தும் 'வாழ்க்கையே கலை, கலையே வாழ்க்கை' என்பதற்கேற்ப நாடகக் கலை என்ற பெயரைத் தம் இதழுக்கு வைத்தாரா? என்ற மூன்று அனுமானங்களில் இடைப்பட்ட அனுமானமே அவரைப் பொறுத்தவரை சரியாக இருக்கும் என நம்பலாம்.

## பேட்டிகளும் சந்திப்புகளும்

எவ்வளவுதான் நாடகக் கலை தொடர்பான செய்திகளை இவ்விதழ் வெளியிட்டாலும், நாடகக் கலைஞர்களைப் பற்றிய பேட்டிகளும் சந்திப்புகளும் உயிரோட்டமாக உள்ளனவாதலால் அவை முதலில் இங்கு எடுத்துக்கொள்ளப் படுகின்றன. மறைந்து போன நாடகவியலாளர்களைப் பற்றி ஆராய்ந்து எழுதுவதைவிட, உயிருள்ள போதே அக்கலைஞர்கள் வாயால் அவர்தம் அனுபவங்களைக் கேட்டு, அதிலும் துளைத்துக்கேட்டு, அவர் வாயிலிருந்து அன்னாரை அவர் வாழ்ந்த நாடகக் காலத்துக்கே இட்டுச் செல்வதே இப்பேட்டிகளின் நோக்கமாக இருக்கின்றது. பேட்டியெடுத்தோர் பலர்; பேட்டியெடுக்கப்பட்டோரும் பலர். சான்றாக, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ் நாடக மேடை முன்னோடிகள் (1998) என்ற தலைப்பில் வெளியிட்டுள்ள (பக். 57-62) ஒரு நூலில் ஆறு. அழகப்பனார் அவர்கள் நவாப் இராசமாணிக்கம் பற்றி எடுத்த பேட்டியை மறுபதிப்புச் செய்திருப்பதை எடுத்துக் கொள்ளலாம். இப்பேட்டி நாடகக் கலை இதழில் 1971ஆம் ஆண்டு ஜூன் மாதம் வந்துள்ளது.

> எழுபது வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் அவர் உருவத்தைப் பல்வேறு தோற்றங்களில் படங்களில் பார்த்ததுண்டு; எத்தனை வகையான முடி அலங்காரம் உடைய தலை, ஷேட்டுக்கள் அணியும் 'குல்லா' போன்ற குல்லாவை அணிந்து கம்பீரமாகக் காணப்படடம் தலை இன்று எளிமையாக வெறிச்சோடிக் கிடக்கிறது; 'நாடகத் தொண்டு' என்ற கிரீடத்தை இறக்கிவைத்து விட்ட அந்த வெறுமையைக் கண்டு வியந்தேன்.
>
> 'பக்த இராமதாஸ்', நாடகத்தில் 'நவாப்' வேடம் பூண்டு அன்றுமுதல் மக்களால் 'நவாப்' என்று அழைக்கப்பட்டவர் இவர்தானா? இராமாயணம், தசாவதாரம், குமார விஜயம், ஐயப்பன், சக்திலீலா, ஏசுநாதர் முதலிய நாடகங்களை நடத்தி ஒவ்வொரு நாடகத்தையும் நாடக உலகில் ஒரு மைல்கல்லாகச் சாதனை செய்து காட்டிய பெரியவர் இவர்தானா? என்ற மயக்கம் என்னைச் சிறிது நேரம் திணறச் செய்தது.

ஒரு சிறுகதையைப் போல, பேட்டியின் முஸ்தீபு அமைந்துள்ளது. கொடிய நோய்க்காளாகி, எப்பொழுது சாவு வரும் என மருகிக் கொண்டிருந்த அவரை விட, அவரைப் பேட்டி கண்ட ஆறு. அழகப்பனாரின் உணர்ச்சி இன்னும் உயிரோட்டமாக உள்ளது.

> என்ன விந்தையிது? 1933இல் மதுரை தேவி பால விநோத சங்கீத சபையைத் தொடங்கி, நாடகக் கலை அரசு, நாடகக் கலாநிதி, நாடககேசரி, நாடகமணி, நாடகக் கலைக்காவலன் முதலிய பட்டங்களை யெல்லாம் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்த ஒருவர் வாழ்வின் கடைசிக் கட்டத்தை சிமிண்ட் வாணிபத்தில் கொண்டு வந்து நிறுத்திய சமுதாய அமைப்பைக் கண்டு நொந்தேன். எப்படித் தொடங்கிய வாழ்க்கை எப்படி முடிவுக்கு வருகிறது. பொறியியல் படித்துத் தேறிய மாணவன் வங்கியில் குமாஸ்தாவாகச் சேர்கிறபொழுது நான் கேலி செய்வதுண்டு. படித்ததென்ன, பார்க்கும் வேலையென்ன, என்று வினா எழுப்பியதுண்டு. 'நவாப்' பின்வரலாறென்ன, இன்று அவர் வீட்டில் நடப்பதென்ன என்று வினா எழுப்பவில்லை. மாறாக அத்தோட்டத்தை விட்டுத் தாண்டும் பொழுது அங்கே சிறு . கட்டடத்திற்குள் அடுக்கி வைக்கப்பட்டுள்ள 'சிமிண்ட்' மூட்டைகளைப் பார்த்த நான் 'நவாப்பிற்கு சிமிண்ட் வியாபாரம் நன்றாக நடக்க வேண்டும்' என்று வேண்டிக் கொண்டு வெளியே வந்தேன்.

இது பேட்டியா? அல்லது சிறந்த உயிரோட்டமுள்ள சிறுகதையா? எப்படிக் கொள்ள இடமளிக்கிறதோ அப்படிக் கொள்ளச் செய்த ஆறு. அழகப்பனாரின் எழுத்துத் திறத்தை இவ்விதழ்களில் பல இடங்களில் காணமுடிகிறது. நவாப்பிற்கு ஏற்பட்ட கதி, மதுரையில் பாலாமணி அம்மாளுக்கு ஏற்பட்ட கதி, இன்றும் பலர்க்கும் ஏற்பட்டது. நாடக மேடைகள் சிலரை உயரத் தூக்கித் தொப்பென்று கீழே போட்டுவிடுகின்றன. சிலர் மட்டுமே உச்சாணிக் கொம்பிலேறிக் கொள்கிறார்கள். நாடகம் எழுதி, நடித்து, நாட்டையே பிடித்து ஆட்சி செய்த நாடகக்காரர்களும் உண்டு. நடிகர்கள் புகழடைந்து பொருள் ஈட்டுவது மட்டுமே நாட்டு மக்களுக்குத் தெரிந்திருக்கின்றதே அன்றி அவர்கள் சிலரின் மறுபக்கங்கள் தெரிந்தில. அவற்றைத் தெரிய

வைத்தது இவ்விதழ். அரை நூற்றாண்டாக அரங்கிலும் திரையிலும் இருந்த அவ்வை சண்முகனாரின் சந்திப்பும், பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே போதை ஏற்படுத்துகின்ற நாட்டிய நடிகை சந்திரகாந்தாவின் சந்திப்பும், அவரது வாழ்வும், சிறந்த திரைப்படங்களில் அவர் ஆடிய ஆட்டமும், அவற்றின் சில காட்சிகளும் நாடகக் கலை இதழ்களை அலங்கரிக்கின்றன. இதைப்போன்று சகஸ்ரநாமம், ஏ.வி.எம். ராஜன், 'சோ' இராமசாமி போன்றோர் பற்றியும் செய்திகள் உள்ளன.

## கட்டுரைகள்

நாடகக் கலை இதழில் வெளியான நாடகவியல் கட்டுரைகள் தமிழ் நாடகங்களை வரலாற்றுக் கண்ணோட்டத்தோடும், தமிழர் வாழ்வியலோடும் பார்த்து எழுதப் பெற்றவை. 'மறைந்துபோன நாடக நூல்கள்', (மே இதழ், 1970), பாபநாசத்தின், 'நாடகக் குறிப்புகள்' (மே 1970), ம.பொ.சி.யின் 'படிக்கும் நாடகமும் பார்க்கும் நாடகமும்' (ஜூலை 1970), டாக்டர் அ. சிதம்பரநாதனின் 'பழந்தமிழ் நாடகம்' (ஜூலை 1970), 'சமஸ்கிருத நாடகம்' (ஆகஸ்டு 1970), உ.வே.சா., பேராசிரியர் கா. சிவத்தம்பி போன்றோர் எழுதியிருந்த தமிழ் நாடகங்கள் தொடர்பான கட்டுரைகள், பிற கட்டுரைகளின் மறுபதிப்புகள் இப்படியாக இதழுக்கு இரு கட்டுரைகள் 'நாடக ஆராய்ச்சி' என்ற தலைப்பிட்டு இவ்விதழ்களில் வந்துள்ளன. இவற்றையெல்லாம் தொகுத்து நூலாக வெளியிட்டால், நாடகத் தமிழியலுக்கு மற்றுமொரு நாடக இலக்கண உரைநடை நூல் உண்டாகிவிடும் என்பதில் ஐயமில்லை.

## கலைஞர்களைப் பற்றிக் கலைஞர்கள்

நாடகக் கலை இதழ்களில் முக்கியமாக நாம் காணும் மற்றொரு மனநிறைவான செய்தி என்னவெனில் ஒரு கலைஞனைப் பற்றி மற்றொரு கலைஞன் மனநிறைவுடன் பாராட்டுவதுதான். நடிப்பு உலகில் இது அதிகமாகச் சாத்தியமன்று. ஆனால் சாத்தியமே எனச் சாதித்துள்ளது நாடகக் கலை இதழ்; அதிலும் மிகக் குறுகிய ஈராண்டு காலங்களில் 'கலைஞர் கருணாநிதி நாடக ஆசான்' (மே 1970) என்ற தலைப்பில் கவிஞர் எஸ். கருணானந்தத்தின் கட்டுரை முதல் இதழிலேயே இடம்பெற்றிருப்பது, நாடகக் கலை இதழ் சரியாகத்தான் கலைஞர்களை இனம்கண்டுள்ளது எனக் கருதத் தோன்றுகிறது.

> பேரறிஞர் அண்ணா அவர்களின் அடிச்சுவடு பிறழாது அவர் கையாண்ட நாடக வாயிலான பிரசாரமுறையினைக் கலைஞர் மு. கருணாநிதி அவர்களும் வெற்றிகரமாகக் கையாளும் செய்தி அனைவருமே அறிந்த ஒன்றாகும்

எனத் தொடங்கும் கருத்துரை எவ்வாறு ஓர் இயக்கம், முத்தமிழுள் ஒன்றான நாடகத் தமிழையும் கையிலெடுத்துக்கொண்டு, அதற்குத் தொண்டாற்றியதோடு தொண்டர்களையும் ஈர்த்துத் தன் தொலை தூரப்பயணத்தை மேற்கொண்டு வருகிறது என்பதற்கு அடையாளமாகத் திராவிட இயக்கப் பாரம்பரியத்தின் உயிர்நாடியை அறியுமாறு அமைந்துள்ளது. சதாவதானம் கிருஷ்ணசாமிப் பாவலரைப்பற்றி மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். எழுதிய மற்றொரு கட்டுரை புகைப்படங்களுடன் அதே இதழில் வந்துள்ளது. இது இந்த இதழிற்கு எப்படி சாத்தியமாயிற்று என்ற வியப்பு ஏற்படுகிறது. முதலில் தமிழ் இயக்கத்தின் தொடக்கம்; அடுத்த நிலையிலேயே இந்தியத் தேசியத்திற்கு இடம். மக்கள் திலகம் பாவலருடன் இருந்து வாழ்ந்தபோதிலிருந்து ஏற்பட்ட அனுபவங்கள், அக்கால சமூகத்தைப் பற்றிய அவரது சிந்தனைகள், நடிப்பு, நாடக வாழ்க்கை, நாட்டுப்பற்று எல்லாம் இங்கு வந்துவிடுகின்றன.

கலைவாணர், சங்கரதாஸ் சுவாமிகளை 'நாடக உலகில் இமயமலை' (ஆகஸ்டு 1970) என்று பாராட்டி எழுதப்பட்ட கருத்துரையும் பரிதிமாற் கலைஞரின் தொண்டை நினைத்து 'ஆயிரத்தில் ஒருவர்' என்ற தலைப்பில் 'ஞானம்' என்பவர் எழுதிய கருத்துரையும், 'மேடையில் உயிர்நீத்த வீரர் விசுவநாததாஸ்' என்ற தலைப்பில் அவ்வை சண்முகம் எழுதிய மற்றொரு கருத்துரையும், சங்கரதாஸ் சுவாமிகளைப் பற்றி மீண்டும் அவ்வை சண்முகம் எழுதிய மற்றுமொரு கருத்துரையும் இவ்வாறாகப் பலவற்றைப் பெற்றும், எடுத்து மறுபிரசுரம் செய்தும் நாடகக் கலை இதழ் செய்திருப்பது ஒரு நூற்றாண்டுத் தமிழ் நாடகவாணர்களை ஒருசில இதழ்களிலேயே பார்த்து விடக் கூடியதாக உள்ளது. கலைவாணரைப் பற்றி 'ஒரு மாபெரும் மேதை' என சகஸ்ரநாமம் புழ்வது (மே 1971), கலைவாணரைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறது.

### கலைஞர்களின் நாடக வாழ்க்கை வரலாறு

நாடகக் கலை இதழ் தற்காலத் தமிழ் நாடகவியலுக்கு ஆற்றிய அரும் பணிகளில் ஒன்று நடிகர்களின் சரிதங்களை இடம்பெறச்

செய்வதுதான். இப்படியான ஒரு பார்வை இல்லாமல்தான் நாம் பல அரிய பெரிய புலவர்களின் வரலாற்றையும் புரவலர்களின் வரலாற்றையும் இழந்தோம். இதை நன்கு உணர்ந்த இதழாசிரியர், கலைஞர்களின் வாழ்க்கை வரலாற்றை முறையாக எழுதச் சொல்லி இடம் பெறச் செய்திருப்பது, வருங்காலத்தினர்க்கும் இக்காலத்தினர்க்கும் சிறந்த வழிகாட்டியாக்குகின்றது. ஈழத்து நாடகவாணர் கலையரசு க. சொர்ணலிங்கம் முதல் தொடங்கி, அறிஞர் அண்ணா, கலைஞர், பாவலர், கலைவாணர், இப்படியே ஒரு பாரம்பரியமே படிப்படியாக இவ்விதழ்களில் இடம்பெறுகின்றது. நாடக முன்னோடிகளின் வாழ்க்கை வரலாற்றுடன், அண்மைக்கால, சங்ககால நாடகக் கலைஞர்களைப் பற்றிக் குறிப்பிடவும் இவ்விதழ் தயங்கவில்லை.

## நாடகங்களும் நாடக மன்றங்களும்

தமிழ் நாட்டில் பார்சி நாடகக் குழுவினர் மற்றும் தெலுங்கு நாடகக் குழுக்கள் அவ்வப்போது வந்து போனதால்தான் நாடகத் தமிழ் பிழைத்தது. என்பது தொழில் முறை, பயில் முறை, பாலர் முறை நாடகக் குழுக்களை முறையே தோற்றுவித்த தஞ்சை கோவிந்தசாமி ராவ், பம்மல் சம்பந்த முதலியார், சங்கரதாஸ் சுவாமிகள் போன்றோரின் பொதுவான கருத்து. அதனால், பல நாடகக் குழுக்கள் தமிழ்நாட்டில் ஏற்பட்டன. இவை சபைகள் என்றும், கம்பெனிகள் என்றும், சங்கீத கான சபாக்கள் என்றும் பெயர்பெற்றன. ஆனால் அவை இக்காலத்திலோ நாடக மன்றங்களாகி விட்டன. அவ்வாறான நாடக மன்றங்களை அறிந்து கொள்ள இவ்விதழ் பெரிதும் துணைபுரிகின்றது. 'சோ' இராமசாமி அவர்களின் பல நாடகங்களை விவேகா பைன் ஆர்ட்ஸ் குழுவினர் பலமுறை நடித்த விவரம் (மே 1970), மேஜர் சுந்தரராஜனின் நாடக மன்றம் நடத்திய நாடகங்கள் (மே 1970), சிவாஜி நாடக மன்றத்தார் நடத்திய நாடகங்கள் (அக் 1970), ஜெய்சங்கர், ஏவிஎம் இராஜன், மனோகர் போன்றோர் பொறுப்பேற்று நடத்தும் நாடக மன்றங்களின், நாடகங்களின் விவரம் சேவா ஸ்டேஜை நடத்திய சகஸ்ரநாமத்தின் பல நாடகங்கள், வி.ஜி.பி. சகோதரர்கள் பங்கேற்ற நாடகங்கள், நகைச்சுவை நடிகர் ஐசரிவேலன் நடித்த நாடகங்கள் இவ்வாறு, பிற்கால ஆய்வாளர்க்கும் பயன்படும் விதத்தில் நாடகக் குழுக்களை இவ்விதழ் திரட்டித் தந்துள்ளது.

## நாடகப் படைப்புகள்

படைப்பிலக்கியம் இல்லாது இதழ்கள் இருக்க முடியாது. அதற்கேற்ப நாடகக் கலை இதழில் எத்தனையோ நாடகப்

படைப்புகள் அச்சேறியிருக்கின்றன. ஆறு. அழகப்பன் அவர்கள் படைத்த பல சமூக நாடகங்களோடு, மு. தமிழரசுவின் வரலாற்று நாடகங்கள், பொ.ம. ராசாமணி அவர்களின் தொடர்நாடகங்கள், நாஞ்சில் ஷாவின் நாடகங்கள், கோ.சி. காலத்தின் நாடகங்கள் எனப் புதிய நாடகங்களின் பட்டியல் நீண்டு கொண்டேபோகிறது. பழைய நாடகங்களும் மறுபதிப்புச் செய்யப்படுவதோடு மதிப்பீடும் செய்யப்பட்டுள்ளன.

### நாடகமேடை நினைவுகள்

நாடகமேடை நினைவுகள் என்றாலே பம்மல் சம்பந்த முதலியாரே நினைவுக்கு வருவார். அந்த அளவு அவர் தற்காலத் தமிழ் நாடகவியலுக்குப் பாடுபட்டவர். தன்னை முன்னிலைப்படுத்தி எழுதும் இவ்வாறான முயற்சிகள் படிப்போர்க்கு அக்கால நாடக வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டவல்லன. இப்படியான நாடகமேடை நினைவுகளைப் பல்வேறு நூல்களிலிருந்தும் அல்லது தொடர்புடைய மேடைக் கலைஞர்களிடமிருந்தும் பெற்று நாடகக் கலை இதழ் வெளியிட்டுள்ளது. பம்மலார், அவ்வையார், கலைவாணர், மக்கள் திலகம், நடிகர் திலகம், சந்திரகாந்தா, ஈழத்துச் சொர்ணலிங்கனார், சகஸ்ரநாமம், சோ போன்ற பலரின் இனிய அல்லது இரங்கத்தக்க நிகழ்ச்சிகள் இவ்விதழில் பதிவாகியுள்ளன.

### நாடக விமரிசனங்கள்

ஓர் ஆய்விதழுக்கு மிகவும் இன்றியமையாதது படைப்புகளும் அவற்றின் விமர்சனங்களுமே. நாடகக் கலை இதழ் நடத்தப்பெறும் பொழுது இலக்கிய விமர்சனம் தமிழில் நன்றாகவே வேரூன்றியிருந்தது. ஆனால் அங்கொன்றும் இங்கொன்றுமாகவே நாடக விமர்சனங்கள் இருந்தன. இவற்றை அவ்வப்போது நாளிதழ்களும் செய்துவந்தன. முறையான விமரிசனமாக அமைவன பல நாளிதழ்களில் வெளிவருவதில்லை. அப்படியான குறையை நாடகக் கலை இதழ் செய்தது. தியாகம் என்ற நாடகம் மேஜர் சுந்தரராஜன் பார்வையில் சென்னையில் நடிக்கப் பெற்றுவந்ததை மே 1970 இதழில் விமரிசிக்கப்பட்டுள்ளது. அதிலொரு பகுதி வருமாறு:

> சென்னை நகர நாடகங்களில் அடிக்கடி பார்த்த வீட்டு அமைப்புதான் இந்நாடகத்தின் எல்லாக் காட்சிகளிலும் வருகிறது. இந்நாடகத்தில் பின்னணி போதிய அளவிற்கு

> இல்லை. ஒளி அமைப்பிலும் சில இடங்களில் தடுமாறுகிறார்கள்.

ஆயினும், நாடகத்தின் நற்குணங்களும் இவ்விமர்சனப் பகுதிகளில் கூறப்படாமலில்லை. சென்னை நகர நாடகங்கள் பெரும்பாலும் ஏனோதானோவென்று நடத்தப்படுவதைப் பலரும் பல கால கட்டங்களில் கூறியுள்ளனர். பொருள் ஈட்டுவதையே முக்கியமாகக் கொண்டு இவ்வாறு நடத்தப்படுவதினாலேயே இக்குறைகள் தோன்றுகின்றன. நாடகங்கள் நடத்துவதில் தேர்ந்த சி. கன்னையா, ஆர்.எஸ். மனோகர் போன்றோரைப் பார்த்தாவது இவர்கள் தங்களைத் திருத்திக் கொண்டிருந்திருக்கலாம்.

நாடக விமரிசனத்தில் நாடக நூல்களின் மதிப்புரைகளையும் இவ்விதழ் வெளியிட்டுள்ளது. சான்றாக, புரட்சிக் கவிஞரின் பிசிராந்தையார் என்ற நாடகம் (மே 1970), முதல் இதழிலேயே மதிப்புரையைப் பெற்றுள்ளது. உரைநடையும் செய்யுளும் சேர்ந்து எழுதப்பட்டது இந்நாடகம். அறிஞர் அண்ணாவின் ஓர் இரவு நாடகம் பற்றிய ஆறு. அழகப்பனாரின் ஆய்வுரை, அந்நாடகம் பற்றிய பலரின் ஆய்வுரைகளினின்றும் தனித்துவம் பெற்று நிற்கிறது.

> நடிப்பதற்கும், படிப்பதற்கும், படம்பிடிப்பதற்கும் ஏற்ற ஒரு படையல் அறிஞரின் ஓர் இரவு; மகான்கள், மந்திரிகள், இவர்களின் வரலாறுகளை மக்களுக்குக் காட்டும் பொழுதில் அவர்களின் வேலைகளையும், வாழ்வுகளையும் விளக்கிக் காட்டுவார்கள். அறிஞர் தமிழகத்தில் பகல் பொழுதில் தமிழகத்தின் வரலாற்றினை எழுதியதைவிட இரவுக் காலங்களிலேயே எழுதியவர்; அவரது ஒவ்வொரு இரவும் தமிழகத்தின் வரலாற்றுக்காகவும், பெருமைக்காகவும் கழிந்த இரவுகளாகும்; காலை ஐந்துமணிக்குத் தூங்கச் செல்லும் ஓர் இரவும் அவரது இரவுகளில் 'ஓர் இரவின்' சாதனைதான்.

எழுத்திலும் அரசியலிலும் மேடைப்பேச்சிலும் பொது வாழ்க்கையிலும் ஈடுபடக் கூடிய பலரில் ஒருசிலரே அண்ணாவைப் போல், அவரிடத்தைப் பிடித்துக்கொண்டு வருகின்றனர். இதனை மேலை சுட்டிய பகுதி தெள்ளத்தெளிவாகக் காட்டுகின்றது.

## அயல்நாடுகளில் நாடகம்

அயல்நாடுகளில் நாடகம் எனும் பகுதி, நாடகக் கலை இதழ்களில் தவறாது இடம்பெற்றிருப்பது கிணற்றுத் தவளையாயிருக்கும் தமிழ் நாடகவியலார் சிலர்க்கு உணர்த்துவதற்காகவே என நினைக்கத் தோன்றுகிறது. மலேசியா-சிங்கப்பூர், இலங்கை போன்ற அண்டை நாடுகளில் வாழும் தமிழர்களின் நாடகச் செய்திகளோடு, சோவியத் நாடகங்கள், ஸ்பெயின் நாடகங்கள், சீன நாடகங்கள், நார்வே நாட்டு நாடகங்கள் எனத் தந்திருப்பதும், பிறமொழி நாடகங்களை மொழிபெயர்த்தோ மதிப்புரை செய்தோ அமைத்திருப்பதும் இந்நாடகக் கலை இதழின் விசாலமான பார்வையையும், தேனீ போலச் செய்திகளைச் சேகரித்து உழைத்து இவ்விதழ்களில் தித்திக்கத் தக்க அளவில் சேகரித்துத் தந்திருக்கும் சிறந்த சேவையைப் பாராட்ட வேண்டும்.

## பட்டிமன்றங்கள்

பட்டிமன்றங்களும் கூட ஒருவகையில் நாடகங்கள்தாம்' என நினைக்கும் அளவுக்கு நாடகக் கலை இதழ் சில பட்டிமன்றங்களைப் பிரசுரித்துள்ளது. இதற்குப் பிள்ளையார் சுழி 'சோ'வினுடைய நாடகங்களே போட்டுள்ளன. விவாத மேடைக்குப் பதிலாக இவ்விதழே விவாத இடமாகிறது. இவற்றின் முடிவு என்ன தெரியுமா? படைப்பாளனோ, நாடக இயக்குநரோ தலையிட்டுத் தம் கருத்துக்களைக் கூறுவது வரை விடப்போதில்லை எனும் அளவுக்குச் சூடுபிடித்துள்ளதாம். திரைப்படத்தில் முத்தக்காட்சி தேவையா? என்பது போன்ற தலைப்புகள் அலசி ஆராயப்படுகின்றன.

## வேறு செய்திகள்

ஓர் இதழில் கொடுக்கப் பெற்றுள்ள எல்லாச் செய்திகளையும் எல்லோரும் படிப்பர் எனச் சொல்ல முடியாது. சிலர்க்குக் கட்டுரைகள் பிடிக்கலாம். சிலர்க்குச் சந்திப்புகள் பிடிக்கலாம். இப்படியாக வாசகர்களின் மனநிலைகளைப் புரிந்து கொண்டோ என்னவோ, இவ்விதழாசிரியர் சிந்தனை மேடை என்ற ஒரு பகுதியையும், சேய்க்கலை என்றொரு பகுதியையும், மற்றும் செய்திமலர் போன்ற பொதுவான, இலகுவான விசயங்களையும் வெளியிட்டுள்ளார். இப்பகுதிகளில் நாடகவியலார்தான் கலந்து கொள்ள வேண்டுமென்பதில்லை. எவரும் கலந்துகொள்ளலாம் என்ற நோக்கத்தாலும், சாதாரணச் செய்திகள் கூட இதழில்

வரும்போது தரம் பெற்றுவிடுகின்றன எனக் காட்டுவதற்கும் இவ்வாறான உத்திகளை அவர் ஏற்படுத்தியிருக்கலாமெனத் தோன்றுகிறது. வானொலி நாடகங்கள் பல இவ்விதழ்களில் இடம்பெற்றும் கருத்துப் பெற்றுமுள்ளன. நாடகக் கலைஞர்களைப் பாராட்டி விருதும் இவ்விதழ் கொடுத்துள்ளது பராட்டத்தக்கது.

### நாடகவியல் கூறுகள்

தமிழ் நாடகவியலில் என்னவெல்லாம் தொடர்புபடுமோ அவையெல்லாம் ஒருங்கே அமைந்த ஒரு களஞ்சியமாக நாடகக் கலை இதழ் அமைந்திருக்கிறதென்றால் அது மிகையாகாது. படிக்கும் நாடகங்கள், பார்க்கும் அல்லது மேடை நாடகங்கள், நாடகமேடை நினைவுகள், நாடக ஆய்வுகள், நாடகப் படைப்புகள், மேடை இயல்கள் என எவ்வளவோ கூறுகளை இந் நாடகக் கலை இதழ் தாங்கி வந்திருப்பது குறிப்பிடத்தக்கது. தமிழுக்கே, தமிழருக்கே உள்ள சாபக்கேட்டினால் இந்த இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் நின்று போனது. நாடகவியலுக்கு ஏற்பட்ட இழப்பாகும்.

### சிறப்பாசிரியரின் பக்கம்

இப்பகுதியில்தான் உண்மையிலேயே நாடகக் கலை இதழாசிரியரின் சிந்தனையும், செயல்வீரமும் நன்கு தெரிகின்றன. முதல் இதழில் அவர் பின்வருமாறு எழுதுகின்றார்.

> இன்று நாடகத் துறையில் சிறிது புத்துணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. சென்னையில் மேடை நாடகங்களின் வளர்ச்சி மகிழக்கூடிய வகையில் இருக்கிறது. நூல் வடிவில் வந்தாலும் விற்பனை ஆகாமல் இருந்த நாடகங்கள் விற்பனை முகம் நோக்கிச் செல்கின்றன. புதிய நாடகங்கள் பல வெளிவந்து கொண்டிருக்கின்றன. நாடக அரங்குகள் புதிதாகப் பல கட்டப்பட்டுள்ளன. அனைத்துத் தரப்பிலிருந்தும் திரைப்படங்கள் பார்ப்பதைப் போல நாடகம் பார்க்கவேண்டும் என்ற நாடக ஆர்வம் நாளும் பெருகி வருகின்றது. நடிப்பதற்கும் பயிற்சி, ஓய்வு கால ஊதியம் முதலியன கொடுக்கலாம் என்ற எண்ணம் மலர்ந்து வருகிறது. நடிகர் கூத்தர்கள் என்று எள்ளப்பட்ட நிலையிலிருந்து இன்று மதிப்புக் கொடுக்கத் தகுந்தவர்களாகக்

> கருதப்படுகின்றனர். நாடகத் துறையில் பணியாற்றியவர் களுக்கு விருதுகள், மக்களவை, மாநில அவைகளில் உறுப்பினர்கள் ஆகிய பதவிகளை அரசியலார் அளித்து வருகின்றனர். இவ்விதழ் கூட இக்கலையின் வளர்ச்சியில் ஏற்பட்ட முக்கிய கட்டமாகும். இத்தகைய நம்பிக்கை மிக்க சூழல்கள் தொடரவேண்டும்

ஆகா! எத்தனை கனவுகள்! எத்தனை எதிர்பார்ப்புகள்! எப்படிப்பட்ட நல்லுள்ளம்! இவ்வளவையும் செயல்படுத்தத் தோன்றிய இந் நாடகக் கலை இதழ் 50 பக்கங்களுக்கு வெறும் 50 பைசாக்களைச் சந்தாவாகச் செலுத்தாதவர்களால் நின்று போயிருக்குமா? என்று எண்ணத் தோன்றவில்லை. வேறு ஏதேனும் முக்கிய காரணங்கள் இவ்விதழ் இருபத்தைந்தாம் இதழைத் தொடங்காமலே நின்று போனதற்கு இருக்கலாம். அது ஆறு. அழகப்பனார்க்கே தெரியும்! ஒருவேளை அவர் இந்நாடகவியலை விடுத்து நாட்டுப்புறவியலுக்குச் சென்றமையா? அல்லது பணியும் செய்து பயனுள்ள மாத இதழையும் நடத்துவதற்கு உடல்வலிமையும் மனவலிமையும் இல்லையா? தமிழ்த் தொண்டாற்ற அன்னாருக்குத் தடையாக இருந்தவை எவை என்பது அவர்க்கே வெளிச்சம். ஆயினும் முத்தமிழில் நாடகத் தமிழுக்கு இருட்டு சூழ்ந்து விட்டது.

# வானம்பாடி

## சிற்பி பாலசுப்பிரமணியம்

அழகியல் நிரம்பியதென்றாலும் புனைவியல் தொனி ஒலிக்கின்ற பெயர் சூடிக்கொண்டு 1971 அக்டோபர் 9இல் வெளிவரத் தொடங்கியது 'வானம்பாடி' கவிதைச் சிற்றேடு.

'உளங்குளிர்ந்த போதெலாம் உவந்துவந்து பாடுவேன்' என்னும் கூற்றை மெய்ப்பிப்பது போலக் குறிப்பிட்ட காலவரையறை ஏதுமின்றி வாய்ப்பும் வசதியும் ஏற்பட்ட போதெல்லாம் வெளிவந்தது. 1983 செப்டம்பரில் வந்த இருபத்திரண்டாம் இதழோடு தன் பறத்தலை நிறுத்திக் கொண்டது வானம்பாடி.

எனினும் தமிழ்க் கவிதையின் தீவிர வெளிப்பாடு நிரம்பிய இருபதாம் நூற்றாண்டில் தன் குறிப்பிடத்தக்க பங்களிப்பைத் தந்திருக்கிறது வானம்பாடி என்பதில் ஐயமில்லை.

### இருபதாம் நூற்றாண்டில் கவிதை

இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகள் நீண்ட வரலாறு படைத்த தமிழ்க்கவிதை பெரும்பாலான காலங்களில் தேங்கியும், சில நூற்றாண்டுகள் மட்டும் ஒளிக்கிரணங்களாக மின்னியும் வந்திருக்கிறது. சங்க காலம், சிலப்பதிகாரம், திருக்குறள் பிறந்த சங்கம் மருவிய காலம், ஏறத்தாழ நானூறு ஆண்டுகள் வெற்றிடத்திற்குப்பின் பூத்துச்சொரிந்த பக்தி இலக்கியக் காலம், அந்த பக்தி இலக்கிய மொழிச் சோதனைகளால் மென்மையாகிவிட்ட தமிழைக் கொண்டு விந்தைகள் புனைந்த கம்பனின் ஒன்பதாம் நூற்றாண்டு, தொடர்ந்தெழுந்த காப்பியக் காலம், அதனைத் தொடர்ந்து சாதனைகளாகப் பெருமை பாராட்டிக் கொள்ள முடியாமல் தொடர்ந்த நீண்ட பல நூற்றாண்டுகள், சில்லென்று பூத்த சிறுநெருஞ்சிக் காடு போலக் கிடந்த சிற்றிலக்கியக் காலம். . ., இப்படி யானை தேய்ந்து எறும்பான கதையாகிவிட்ட பதினெட்டாம் நூற்றாண்டு முடிந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு பிறந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டைப் பொறுத்தவரை இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதையின் மாபெரும் பாய்ச்சலுக்குப்

பயிற்சிகள் தந்த 'ஆயத்த நூற்றாண்டு' அது என்று கூறலாம். மனோன்மணீயம் சுந்தரனார், கோபாலகிருஷ்ண பாரதியார், வேதநாயகனார், வள்ளலார் ஆகிய நால்வரும் மகாகவி பாரதியாரையும் அவர் கவிதையால் ஏற்பட்ட பின்விளைவுகளையும் உருவாக்கிய முன்னோடிகள் என்று கூறுவது சரியாக இருக்கும்.

பண்டித நடையில் எழுதிய போதிலும் அறிவியல் பார்வையும் தத்துவக் கனமும் பெண்ணிய நோக்கும் ஒன்று கலந்த படைப்பைத் தந்தவர் சுந்தரனார். இறுகிக்கிடந்த சாதியக்கட்டுக்களை நெகிழ்விக்கும் இசை நாடகத்தை அளித்தவர் கோபாலகிருஷ்ண பாரதியார். பேச்சு நடையும் இவர் சேமித்துத் தந்த நன்கொடை எனலாம். பெண்கல்வி, தமிழ்நேயம், சமய ஒருமைப்பாடு என்னும் புதிய கோணங்களை அறிமுகப்படுத்தியவர் வேதநாயகனார். இவர்களோடு மொழியில் எளிமையையும், கருத்தில் புரட்சியையும் விதைத்த வள்ளற் பெருமானும் தன் பங்களிப்பைச் செய்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு செய்த இந்த ஆயத்தங்களால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கமே கவிதை விடியலாக விளைந்தது. இருபதாம் நூற்றாண்டில் விளைந்த ஒவ்வொரு இலக்கிய மாற்றத்துக்கும் காரணமாகத் திகழ்கின்ற மகாகவி பாரதியாரின் வருகைதான் அந்த விடியல்.

### பாரதியார் யுகம்

இருளை விரட்டி, பறவைகளைப் பாட வைத்து, உயிரினங்களுக்கு உவகை தந்து - நிறமும் ஒளியும் வெப்பமும் தருகிற சூரியனைப் போல் புதியபுதிய படைப்புகளுக்கு வழிகாட்டியது பாரதியின் வரவு. அந்தக் கதிரின் வரவு விளைவித்த அதிர்வுகளாகத்தான் பாரதிதாசன் முதல் புதுக்கவிதையாளர் வரையிலும் தோன்றிய படைப்பாளிகளை நாம் காண முடிகிறது.

பாரதியாரின் தமிழ்த் தேசியமும் சமுதாய நோக்கும் பாவேந்தராகவும் இந்தியத் தேசியம் நாமக்கல் கவிஞராகவும் தன்னுணர்ச்சிப் பாங்கும் குழந்தைமைப் பண்பும் கவிமணியாகவும் பரிணமித்தன. அளந்தறிய முடியாத மகாகவியின் ஆளுமை பல சால்களாகப் பரந்தோடியது. அவற்றுள் ஒன்றுதான் மொழியின் ரசவாதமான புதுக்கவிதையும் கூட

புதுக்கவிதையின் முதல் தலைமுறைக் கவிஞர்கள் இதனை மிகத் தெளிவாக உறுதிப்படுத்தியுள்ளனர். வால்ட் விட்மனின் 'புல்லின் இதழ்கள்' படித்த போது கவிதையின் ஊற்றுக்கண் தெரிந்ததாகக் கூறும் ந. பிச்சமூர்த்தி, "பின்னர் பாரதியின் வசன கவிதையைப் படிக்க நேர்ந்தது. என் கருத்து வலுவடைந்தது" என்கிறார்[1]. புதுக்கவிதை குறித்து 'சூறாவளி' இதழில் அன்று எழுந்த வாதப்பிரதிவாதங்களில் கு.ப.ரா. புதுக்கவிதைக்குச் சார்பாகப் பாரதியின் வசன கவிதைகளையே சான்று காட்டுகின்றார்[2]. பின்னர் திருலோகசீதாராம், வல்லிக்கண்ணன் இருவரும் 'கிராம ஊழியன்' இதழில் (16.6.1944), 'பாரதியின் ரசிகர்கள் நாங்கள்' என்று தொடங்கி 'பாரதி இலக்கியத்தின் புது அத்தியாயத்தை வளர்க்கப் போகிறோம்' என்று விளக்கிப் புதுக்கவிதைகளை எழுதிக் குவித்திருக்கிறார்கள்.[3] 1958இல்தான் மீண்டும் புதுக்கவிதை பற்றிய பேச்சு வருகிறது. சரஸ்வதி இதழில் க.நா.சு. புதுக்கவிதைகள் எழுதினார். 1959இல் 'சரஸ்வதி' மலரில் தம் கவிதைகளை நியாயப்படுத்தி எழுதிய கட்டுரையில் மீண்டும் பாரதியார் கருத்துக்களை எடுத்துக்கூறினார், க.நா.சு[4]. அதே ஆண்டில் (ஜனவரி, 1959) 'எழுத்து' இதழைச் சி.சு. செல்லப்பா தொடங்கினார். சில புதுக்கவிதைகளை வெளியிட்ட பின் எழுத்து 14ஆம் இதழில் ஆசிரியர் புதுக்கவிதைக்குப் பாரதியாரின் பங்களிப்பை நினைவு கூர்ந்தார்.[5] அதே இதழில் வசன கவிதை பற்றி எழுதிய ந. பிச்சமூர்த்தி மீண்டும் தமக்கு வலிமைசேர்க்கப் பாரதியாரின் 'காட்சிகள்' கவிதைக்கே திரும்பிச் சென்றார்[6].

எனவே தமிழில் புதுக்கவிதைப் பிறப்புக்கும் வளர்ச்சிக்கும் பாரதியாரே தூண்டுதல் என்பது பெறப்படுகிறது.

'வானம்பாடி'யின் தோற்றத்திற்குப் பல உந்துசக்திகளும், காரணிகளும் இருந்தபோதிலும் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியத்தின் தலைக்கோழியான அதே பாரதியார்தான் வானம்பாடிக்கு உள்ளும் ஊடுருவிப் பாய்கிற மின்சக்தியாகத் திகழ்ந்திருக்கிறார். முதல் இதழில் 'கூடுகள் திறக்கின்றன' என்ற கொள்கை அறிவிப்பு இதனைத் தெளிவுபடுத்துகின்றது.

> இருநூறு ஆண்டுக்கால அரசியல் அடிமைத் தனத்தையும், ஈராயிரம் ஆண்டுக்கால மனிதப்பேடிமைத் தனத்தையும், ஒற்றை மானிடனாக நின்றெதிர்த்துப் போராடியவனின் யுகமிது. 'இனியொரு விதி

> செய்வோம், அதை எந்நாளும் காப்போம்' எனத் தன் சமகால விடுதலை விரும்பிகளுக்கு - வருங்காலப் பொதுமை விரும்பிகளுக்கு, வெடிப்புறப் பேசியும், நயம்படச் சொல்லியும் அறைகூவல் விடுத்த தமிழ்ச்சாதியின் ஈடிணையற்ற மானிடனும், நவ இந்தியாவின் நிர்மாணச் சிற்பியும், ஆசியாவின் ஒப்பற்ற மனிதாபிமானிகளுள் ஒருவனும் இருபதாம் நூற்றாண்டின் உலகமகா கவிகளுள் ஒருவனுமான பாரதிக்கு, அவன் விட்ட பயணத்தைத் தொடர வந்த பறவைகள் இன்று, தங்களைச் சுற்றிப் புகைப்படலமாகச் சுற்றிப் பிணைந்துள்ள சமூகவலைகளைத் தூக்கிக் கொண்டு பறந்தபடி - அவனுக்கு அஞ்சலிகள் செலுத்துகின்றன[7]

இவ்வாறு பாரதியாரை முன்நிறுத்திய வானம்பாடி அவன் வழியில் பயணம் போவதாக உறுதி எடுத்துக் கொண்டதன் மூலம் அந்த மகாகவியின் ஆற்றலைத் தன் சிறகுகளுக்கு உரிய வலிமையாக ஏற்றுக்கொண்டது.

## தோற்றத்தின் பின்னணி

கோவை நகரம் நீண்ட நெடுங்காலமாகத் தமிழ் எழுச்சியும் இலக்கியத் தாகமும் அரசியல் ஈடுபாடும் கொண்ட நகரம். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இதழியலாளரும், பிரம்மசமாஜியும், தமிழின் முதல் பயண நூலாசிரியருமான எஸ்.பி. நரசிம்மலு நாயுடு இங்கு வாழ்ந்திருந்தார். சிவக்கவிமணி, கோவைக் கிழார் முதலிய அறிஞர்களும், பெ. தூரன், ஆர். சண்முகசுந்தரம் போன்ற எழுத்தாளர்களும் தமிழ் வளம் பரப்பிய நகரம் கோவை.

புதுக்கவிதை இயக்கம் வளருமுன்பே இங்கு மரபுக் கவிதைப் படைப்பாளிகள் பலர் இயங்கி வந்தனர். அவர்களில் புவியரசுவும் இளமுருகும் 'தேனீ' என்ற இதழை 1967-1968ஆம் ஆண்டுகளில் நடத்தி வந்தனர். மரபுசார் கவிஞர்கள் நடத்தி வந்த கோவைக் கவிஞர் மன்றம், தீபம் வாசகர் வட்டத்தினின்று உருவான கோவை இலக்கியப் பேரவை, மார்க்சியப் பார்வை கொண்ட கம்பராயனின் தோழமைக் கழகம், பெரியாரிய மார்க்சியப் பாதையில் நடைபோட்ட சிந்தனைப் பேரவை, படித்த இளைஞர்களின் இயக்கமாக இருந்த பூம்பொழில் இலக்கிய வட்டம் முதலான இயக்கங்கள் வானம்பாடிக்கு முன்னோடிகளாக இயங்கி வந்தன.

1967 முதல் 1969 வரை முற்போக்கு இலக்கியத் தத்துவத் திங்கள் இதழாக வெளிவந்த 'புதிய தலைமுறை' ஞானி, ஜன. சுந்தரம், புலவர் ஆதி, இரா. நஞ்சப்பன் ஆகியோரின் தலைமையில் நடைபெற்றது.

இந்த இயக்கங்களும் இதழ்களும் சோர்வு கொண்ட சூழலில் அவற்றின் கூட்டு முயற்சியாக வானம்பாடி எழுந்தது என ஆய்வாளர் ஜே. மஞ்சுளா தேவி குறித்திருப்பது இங்கு கவனத்திற்கு உரியது.[8]

இவைகளுக்கெல்லாம் மேலாக மார்க்சியச் சிந்தனைகளின் ஈர்ப்பு என்ற அடிச்சரடு வானம்பாடிகளை இணைத்திருந்தது என்பது உண்மை.

தோற்றத்திற்கான பின்புலம் இது என்றாலும், ஒருங்கிணைதல் நேர்ந்ததற்குப் பின்வரும் காரணிகள் துணைபுரிந்தன எனலாம்.

1. கவிதைப்படைப்பில் எழுத்து, கசடதபற, நடை இதழ்கள் ஏற்படுத்திய மாற்றங்கள்.
2. அக்குழுவினர் முன்வைத்த வடிவ மாறுதல்களை வரவேற்றது போல உள்ளடக்கத்தில் இக்குழுவினருக்கு ஏற்பட்ட நிறைவின்மை.
3. மார்க்சியச் சாய்வினருக்குத் திராவிட இயக்க, அரசியல் ஏற்படுத்திய ஏமாற்றம்.
4. அண்டை மொழியில் 'திகம்பர கவிகள்' ஏற்படுத்திய சலனங்கள்.
5. மரபு ஏற்படுத்திய தீராச் சலிப்பும் - நவீனத்துவத்தில் ஏற்பட்ட ஈர்ப்பும்.

இவை குறித்தெல்லாம் தீவிரமான விவாதங்கள் கோவை என்.டி.சி. கல்வியகத்தில் பல மாதங்கள் தொடர்ந்து நடந்ததன் விளைவாக வானம்பாடி கவிதை இயக்கமும், இயக்க இதழாக வானம்பாடியும் பிறந்தன.

## வானம்பாடியின் சாதனைகள்

வானம்பாடி இதழில் இருநூற்றி இருபத்தொரு கவிஞர்களின் நானூற்றித் தொண்ணூற்றொரு கவிதைகள் வெளிவந்துள்ளன.

முதல் ஒன்பது இதழ்கள் ஒருங்கிணைந்த இயக்க இதழ்களாகவும் பின் வந்த இதழ்கள் பிளவுபட்ட இயக்கச்சூழலில் கவிதை இலக்கிய இதழ்களாகவும் அமைந்தன. பத்தாவது இதழில் வெளிவந்த 'முத்திரைகளும் முகத்திரைகளும்' என்ற தலையங்கம் பிளவின் காரணங்களை முன்வைக்கின்றது. ஏறத்தாழ முப்பதாண்டுக் காலத்துக்குப் பிறகு மீள் பார்வையாக நோக்கும்போது, இயக்கப்பிளவும், சில காலத்துக்குப் பிறகு இதழ் நிறுத்தமும் எல்லா இயக்கங்களிலும் நேரும் இயற்கையான நிகழ்வுகளாகவே படுகின்றன. தமிழ்க் கவிதையில் வானம்பாடி ஏற்படுத்திய தாக்கம் என்ன என்ற கேள்வி மட்டுமே நின்று நிலைக்கிறது.

முதலாவதாக வானம்பாடிக் கவிதைகள் சராசரி மனிதர்களின் வாழ்க்கைச் சிக்கல்களையும் சமுதாயப் பிரச்சனைகளையும் அழுத்தமாகவும் ஆழமாகவும் கவிதைப்படுத்துவதில் வெற்றி பெற்றன.

வாழ்வை ஒருபோராட்டக் களமாக உருவகம் செய்து வாழையை முன் வைத்துப் பாடினார் கவிஞர் மு. மேத்தா.

> . . . மண்ணில் வேரோடி
> மாநிலத்தில் கால்பதித்து
> வீசும் புயல்காற்றை
> விழும்வரைக்கும் நின்று எதிர்ப்பேன்
> நின்றெதிர்த்த முடிவினில் நான்
> நிலத்தில் விழுந்துவிட்டால். . என்
> கன்றெதிர்க்கும்-கன்றுகளின்
> கன்றெதிர்க்கும்-கன்றுடைய
> கன்றெதிர்க்கும்

இந்தப் போராட்டப் பண்பு பல கவிதைகளின் அடிநாதமாக இருந்தது.

ஒரு கலகக் குரலின் தீவிரத்தை வானம்பாடிக் கவிதைகள் உட்கொண்டிருந்தன. கொ.ச. பலராமன் எழுதிய 'தீட்டு' இதற்கு எடுத்துக்காட்டு.

> கோவில் தாழ்வாரத்தில்
> கோடைமழைக்கு ஒதுங்கினேன்

பட்டர் என்னை
'தீட்டு ஒதுங்கடா' என்றார்
அந்தக் கோவிலின்
சொர்க்க வாசலுக்கு
வாணம் தோண்டியவனின்
பேரன் நான்

அஸ்திவாரம் தோண்டியவனுக்குக் கோயில் நுழைவு மறுக்கப்படும் சாதிக்கொடுமையை எதிர்க்கும் வெஞ்சினம் இங்கு வெளிப்படுகின்றது.

இதுவரை கவிதைக்குள் இடம்பெறாத பல பாடுபொருள்கள் வானம்பாடிக் கவிஞர்களிடமிருந்து வெளிப்பட்டன. கவிஞர் இளமுருகு 'சாலைக்கடவுள்கள்' என்ற கவிதையில் தெருவோரத் திடீர்க் கோயில்களின் முளைப்பைக் குறித்துக் குரல் எழுப்பியது இதற்கு உதாரணம்.

இயற்கை கொடுத்த தண்டனையாக, பூப்படையாமலே வாழும் கன்னியர்கள் பற்றி மு. கதிரேசன் எழுதிய 'மார்க்கண்டேயனி' மாறுபட்ட ஒரு சிந்தனையைப் பின்னிக்காட்டியது.

காதலைக் கூட நதியில் ஏற்படும் சுழிப்புப் போல் நயமாகச் சொல்லும் பாங்கை 'அவன் வந்தபின்னால்' கவிதையில் கங்கைகொண்டான் படைத்துக்காட்டினார்.

தினம்தோறும் போர்வைக்குள்
முகம் வீங்க போட்டமுக்கும்
கனவுப் பார வண்டி.. என்
ஸீவாலஜி நோட்டுக்குள் அறுபட்ட
தவளைகள் இரைச்சல்..

காதலைப் புதிய வளைவுகளோடு சொல்லிக் காட்டியது கங்கையின் கவிதை.

சுற்றுச் சூழலைக் குறித்து எழுபதுகளில் குரல் கொடுத்த முன்னோட்டக் கவிதையைத் தமிழ்நாடன் படைத்துத் தந்தார்.

பண்டைய தொன்மங்களை அர்த்தச் செழுமையோடு நவீனப்படுத்திய கூர்மையை வானம்பாடிக் கவிதைகள் அறிமுகம்

செய்தன. சிற்பியின் 'சர்ப்பயாகம்' - இந்த வகையில் மிகச் சிறந்த குறியீட்டுக் கவிதையாகத் திகழ்வதைக் குறிக்கலாம்.

பரமபத சோபான படம்
எங்கள் தேசம்-இதில்
கட்டங்கள் தோறும் நச்சுப் பாம்புகள்
காத்துக் கிடக்கின்றன

என்று தொடங்கும் கவிதைக்குள் தேசத்தைக் குறித்த ஆதங்கங்களும், ஆத்திரங்களும் கூடைக்குள் அடங்க மறுக்கும் நாகத்தின் சீற்றமாய்ப் பொங்கி வழிகின்றன.

அகலிகை கதையைக் 'கல்லிகை' என்ற மாபெரும் உருவகமாக மாற்றி அளித்தார் ஞானி. கவிஞர் மீரா குறிப்பிடுவது போல, "ஞானி அகலிகையை அடிமைப்பட்ட மனித குலமாக (Enslaved mankind) உருவகப்படுத்துகிறார். கௌதம முனிவரையும், இந்திரனையும் ஆளும் வர்க்கத்தின் சார்பாளராகப் படைத்துள்ளார்'' வர்க்கமற்ற சமுதாயத்திற்கான, காத்திருப்பாகக் கல்லிகை திகழ்கிறது.

கொச்சையான, பாலுணர்வு ததும்பும், பிராய்டிசம் கசியும் ஒரு கவிதையைக் கூட வானம்பாடியில் காண்பது அரிது.

பெண்ணியச் சார்பான கவிதைகளை நிரம்பத் தந்தது வானம்பாடி.

இனியும் இவனொடு வாழ்க்கை நடத்த
என்னால் முடியாது

என்று விவாகரத்தை நியாயப்படுத்திய இளமுருகுவின் கவிதையைத் தந்தது. தன் செல்ல மகளுக்கு நகை போட்டுத் திருமணம் செய்ய முடியாத தாய், கோயிலில் மகமாயி கனக்கக் கனக்க நகை சுமந்திருப்பதைப் பார்த்துக் குமுறிச் சொல்கிறாள் (நிமல விஸ்வநாதன்: முனியம்மா சாபம்).

ஏலே ராமாயி
வாலே இங்கிட்டு
போலே நீயும் கல்லாவே

ஒரு சராசரி அலுவலக ஊழியனின் பயனற்ற கோபத்தைப் படம் பிடிக்கும் சிற்பியின் 'ரோஷம்'

கண்ணே நானென்ன
ஷாஜகானா? ஏழை!
உன்னை எழுத்தில்தான்
புதைக்க முடியும்

என்று அங்கலாய்த்த ஏழை எழுத்தாளனைச் சொன்ன சிதம்பரநாதனின் 'கல்லறை', கையில் பூக்கூடையோடு ஆனால் கூந்தலில் பூ இல்லாமல் வரும் பூக்காரியைச் சித்திரப்படுத்திய பாலாவின் 'பூக்காரி', வறுமையின் கோரத்தைக் காணாமல் ஒரு பிச்சைக்காரச் சிறுமியின் கெஞ்சலில் காணப்படும் நயத்தை ரசிக்கும், போலித்தனத்தைத் தோலுரிக்கும் தேனரசனின் 'நான் நானேதான்' என வியப்பூட்டும் ஓவியங்களைக் காட்சிக்கு வைத்தது வானம்பாடி.

எழுபதுகளில் எண்பதுகளில் ஏன் தொண்ணூறுகளிலும் இயங்கிக் கொண்டிருக்கும் சிறந்த கவிஞர்களின் புகழ்பெற்ற கவிதைகள் பல வானம்பாடியில் வெளிவந்தவை.

அப்துல் ரகுமானின் 'சுட்ட பழம்', 'இரவுகளைப் படிக்க விடுங்கள்', அபியின் 'முத்திரைகள்', 'யதார்த்த விடியலில்', கங்கை கொண்டானின் 'எந்தக் கண்ணன் இங்கு பிறந்தால்,' 'தாத்தாவின் கைத்தடி', 'ங்கா', கல்யாண்ஜியின் 'கற்றுக்கொடுக்கும் சக மனிதர்கள்', கலாப்பிரியாவின் 'குருடர் பள்ளியில் கொடியேற்றம்', சக்திக் கனலின் 'ஒரு ரோடு ரோலரின் பவனி', சிற்பியின் 'மதுரை வீரன்', 'துணை', 'நாய்க்குடை', தமிழ்நாடனின் 'நட்சத்திரப்பூக்கள்', 'மானுடத்தின் பிரகடனம்', தமிழவனின் 'தெரியுமா?', தமிழன்பனின் 'நயன தாரா', 'நாம்', தேனரசனின் 'ஆதிவாசிகள்', 'வச்சேஎஎ', 'சலிப்பே இல்லாமல்', புவியரசுவின், 'ஒரு அப்பளத்தின் மரணம்', 'நானும் மரணத்தைப் பற்றி சிந்திக்கிறேன்', 'ஏலி ஏலி லாமா சபக் தானி', 'ஒரு கவிஞனின் சிலுவைப்பாடு', மீராவின் 'செத்தாலும் மேன்மக்கள்', மு. மேத்தாவின் 'வாழையடி வாழை', 'தாலாட்டுக் கேட்காத தொட்டில்கள்', ஞானியின் 'கல்லிகை' ஆகியன எல்லாம் வானம்பாடியின் பொன் முட்டைகள் ஆகும்.

வானம்பாடியில் அக்கினிபுத்திரன் இயக்கப் பிரதிநிதியாகச் செயல்பட்டமையின் அடையாளங்களாக அவர் கவிதைகள் விளங்குகின்றன. 'கோஷம்', 'கூச்சல்' என்று தாறுமாறாகப் பிறர் விமர்சித்தபோது பதிலடி கொடுக்கிற விமர்சனக் கவிதைகள் தந்து

ஒரு புதுவகைக் கவிதைப் பாணியை அறிமுகப்படுத்தினார் அக்கினி புத்திரன். 'நீங்கள் வல்லினங்கள் அல்ல' என்னும் கவிதை விவாதத்துக்கு எப்போதும் உரியதாக இருக்கும்.

சின்னக் கவிதைகளை வானம்பாடி தந்து சிகரங்களைத் தொட்டதும் உண்டு. அரங்கநாதனின்,

இரவிலே வாங்கினோம்
இன்னும் விடியலே இல்லை

நாடாளுமன்றம் வரை பேசப்பட்ட கவிதை. அதே போன்று நெடுங்கவிதைகளால் வானம்பாடி புகழ் பெற்றதும் உண்டு. எடுத்துக்காட்டு : சிற்பியின் 'சாக்கடைகளும்தான் வற்றி விடவில்லை", ஞானியின் 'கல்லிகை'.

காலம் வியந்து கொண்டே இருக்கும் உன்னதமான கவிதைகளைத் தந்தது போன்றே வேறு பல சாதனைகளையும் வானம்பாடி சாதித்துக் காட்டி இருக்கிறது.

மொழிபெயர்ப்புக் கவிதைகளுக்கு வாசலை அகலத் திறந்து வைத்தது வானம்பாடி. அதன் மூலம் முப்பது கவிதைகள் பிறமொழியினின்று தமிழுக்கு வந்துள்ளன. மலையாளக் கவிஞர் கடம்மனிட்ட இராமகிருஷ்ணனுக்குச் சிறப்பிதழ் வெளியிட்டு மரியாதை செலுத்தியது வானம்பாடி.

உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழும், ஈழத்தமிழ்க் கவிதைச் சிறப்பிதழும் வெளியிட்டுத் தன் தரத்தைக் உயர்த்திக்கொண்டது வானம்பாடி.

தருமுசிவராம், கடம்மனிட்ட, லா.ச.ரா. நேர்முகங்களை வெளியிட்டு மாற்றுக் கருத்துக்களை விவாதிப்பதற்கு வாய்ப்புகளை உருவாக்கியது வானம்பாடி இது ஒரு புதிய பரிமாணமாய் அமைந்தது.

வானம்பாடியில் குறைவான அளவில்தான் கட்டுரைகள் வெளிவந்தன. கவிதைசார் கட்டுரைகளாகப் 'புதுக்கவிதையில் நெருக்கடி' குறித்துப் புவியரசுவும், 'ஒரு கவிதை உருவாக்கம்' பற்றி பாலாவும், ஈழத்துக் கவிதைப் பற்றிச் சேரனும், ஏசுராசாவும் எழுதிய கட்டுரைகள் இன்றும் மிகவும் பயனுள்ளவை.

## வானம்பாடி மீது விமரிசனங்களும் உண்மையான விளைவுகளும்

அகர வித்தாகத் தமிழ்ச் சமுதாயத்தின் மடியில் வானம்பாடி விழுந்தபோது முதலில் மரபாளர்களின் எதிர்ப்பு எழுந்தது. மரபு அறிந்தவர்களே வானம்பாடியின் மூலவர்களாக இருந்தமையால் அந்த எதிர்ப்புப் பட்டுப்போயிற்று.

அடுத்தாற் போல் அரசியல் தீவிரவாத ஏடு என்று அதிகார பீடங்களிலிருந்து கண்காணிப்பு மிகுந்தது. சில விசாரணைகளும் சில பேர் மீது நிகழ்த்தப்பட்டது. எனினும் காலம் அந்தத் தவறான கணிப்புகளைத் துடைத்தெறிந்து விட்டது.

வானம்பாடிகளின் மார்க்சியச் சாய்வைச் சகித்துக் கொள்ள முடியாதவர்கள் - முன் வைத்த குற்றச்சாட்டுதான் சப்தங்கள், முழக்கங்கள், உரத்த கூவல்கள், வானம்பாடிக் கவிதைகள் என்பது. தருமு சிவராம், வெங்கட் சாமிநாதன் காலத்திலிருந்து இன்று முளை விட்டிருக்கும் ஜெயமோகன் வரைக்கும் இந்தக் கீறல் விழுந்த வாதத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கின்றனர். குற்றம் சாட்டுபவர்களைக் கீறிப் பார்த்தால் அவர்களுக்குள் ஓர் அரசியலும், மதவாத அழுக்கும் இருக்கக் காணலாம்.

கவிதை யாருடைய அந்தரங்கமான ரகசியச் சொத்தும் அல்ல. அது நிலா வெளிச்சம்போல், காலை நேரத்து உயிர்ச்சத்து மிகுந்த காற்றுப்போல், வானம்போல் - ஐம்பூதங்கள் போல் அனைவருக்கும் உரியது. வாழ்க்கை அகமும் புறமுமாக இணைந்து கிடப்பது. அதனால்தான் அந்த பாகுபாட்டில் கவிதைகளும் எழுந்தன. வானம்பாடிக் கவிதைகளில் சிற்பியின் 'துணை', அபியின் 'முத்திரைகள்' போல நுட்ப உணர்வு அகமனப் பயணங்களும் உண்டு. புவியின் 'சிலுவைப்பாடு' போலப் புதிய உத்திக் கவிதைகளும் உண்டு. வாழ்வின் அகல நீளங்களைக் காணும் பாய்ச்சலில் அதன் வெந்துயர் முட்களின் உறுத்தலில் கோபம் கொண்டு பேசிய கவிதைகளும் உண்டு.

புயல். . .என் விசிறி<br>
பூமியை நடுநடுங்க வைக்கும்<br>
பூகம்பம் எனக்கு<br>
ஊஞ்சல் விளையாட்டு. .

என்று மு. மேத்தாவும்,

அப்போது. .
இந்தப் புழுதிகளும்
பிரளயங்களாகும்

என்று அக்னிபுத்திரனும்,

மண்ணைக் குருதி நீராட்டு பின்னர்

என்று பா. செயப்பிரகாசமும்,

வானத்தைக் கீறியே
வைகறைகள் பறித்தெடுப்போம்

என்று தமிழன்பனும் அவ்வப்போது சீற்ற அம்புகளை எய்தது உண்டு. ஆனால் அவையெல்லாம் ஏறத்தாழ ஐந்நூறு கவிதைகளில் ஐந்தில் ஒரு பங்கு கூட இருக்காது.

அது மட்டுமின்றி அக்கினி புத்திரனே கூறுவது போன்று உரக்கப் பேசும், 'சப்த மரபு' தமிழ்க் கவிதை மரபில் முன்னரும் இருந்திருக்கிறது. எனவே உரத்த குரல் அவ்வப்போது தேவையின் பொருட்டு எழுந்திருக்கிறது. இதனைக் காரணம் காட்டி வானம்பாடியின் மொத்த உயிர்ப்பே இதுதான் என்று கூறுவது தங்கள் கண்களுக்குத் தாங்களே திரைபோட்டுக் கொள்கிற அவலமாகும். மௌனம் தியானத்தின் சக்திமையம் என்றால் திரும்பத் திரும்பச் சொல்லும் மந்திரம் மற்றொரு சக்தி மையம் அல்லவா? புறம் இன்றி அகம் எது?

இந்த விமர்சனத் தூசிகளுக்கு அப்பால் விரிந்து கிடக்கிறது வானம்பாடியின் வானம்.

வானம்பாடியின் வரவால் நிகழ்ந்த ஆக்கபூர்வமான விளைவுகள் பல.

மன உளைச்சல்கள் மட்டுமல்ல - மனித சமுதாயத்தின் துயரங்களும் விடுதலையும் கூடக் கவிதைக்குரிய பாடுபொருள்கள் ஆகும் என்று வானம்பாடி தெளிவுப்படுத்தியிருக்கிறது.

எண்ணற்ற இளம்படைப்பாளிகள் வானம்பாடியின் மூலம் உந்து சக்தி பெற்று வளரக் களம் அமைத்துத் தரப்பட்டது.

தமிழகம் முழுவதிலும் சிற்றிதழ் இயக்கம் வலுப்பெற அந்நாளில் வானம்பாடி வரலாற்று மையமாகத் திகழ்ந்திருக்கிறது. புதிய புதிய சிற்றிதழ்கள் எழுத்துப் பயிற்சிக்குக் களங்களாய் உருவாயின.

புதுக்கவிதையின் வாசகர் வட்டம் விரிந்து விசாலப்படுவதற்கு வானம்பாடி காரணமாக இருந்துள்ளது. புதுக்கவிதை எதிர்ப்பாளர்களாக இருந்த பலரை யோசிக்க வைத்தது வானம்பாடி. இதன் வாசகர் வட்டத்தில் இந்தியா முழுவதிலும் தேர்ந்த தமிழ்ப் படிப்பாளிகள் இருந்தனர்.

"வானம்பாடியின் தாக்கம் இல்லாமல் இருந்திருக்கும் பட்சம், தற்காலத் தமிழ்க் கவிதை திராவிட இயக்கப் போக்குக் கவிதையாகி, 'இனி ஒருவிதி செய்வோம்' முருகையன் குறிப்பிட்ட மாதிரி வழிவழி வந்த செய்யுள் வழு இல்லாமல் யாப்பிலக்கணப்படி பின்பற்றப்பட்டிருக்கும்' என்று தமிழ்நாடன் குறிப்பிட்டிருக்கிற கருத்து சிந்தனைக்கு உரியது. புதுமைக்கு மணிக்கொடியும் எழுத்தும் விதை தூவின என்றால் நாற்றுப் பாத்திக்குக் காவல் இருந்தது வானம்பாடி.

எதிர்நிலை வகித்த 'கசடதபற' குழு படைப்பாளிகளையும் சமூக உள்ளடக்கத்தை நோக்கி நகர்ந்து வரத் தூண்டி இருக்கிறது என்பதும் கூட வானம்பாடியின் ஒரு பங்களிப்பு எனலாம்.

வானம்பாடிக் காலத்துக்குப் பின் வளமான பயிற்சினை உள்வாங்கிக்கொண்ட பாலா, புவியரசு, தமிழன்பன், சிற்பி, மீரா ஆகியோர் மேலும் கவிதைக்கு வளமான பங்களிப்பைச் செய்து வருகின்றனர். ஞானி, பாலா ஆகியோர் திறனாய்வில் சரித்திரம் படைத்துள்ளனர். சி.ஆர். ரவீந்திரன், கொ.மா. கோதண்டம், பிரபஞ்சன் முதலியோர் நாவல், சிறுகதை இலக்கியத்தில் தங்களை அடையாளப்படுத்திக் கொண்டுள்ளனர். மு. மேத்தா திரைத்துறையிலும் கவிதையிலும் சலனங்களைப் படைத்திருக்கிறார்.

வானம்பாடியின் அகமும் புறமுமாக ஊடும் பாவுமாக இருந்த என்னைப் போன்றவர்கள் இதன் வரலாற்றுப் பாத்திரத்தை நிர்ணயிப்பதில் தடுமாற்றம் இருக்கவே செய்யும். எனினும் ஒட்டியும் ஒதுங்கியும் நின்று கணித்த தமிழ்நாடனின் கருத்து மிகவும் பொருத்தமானதாகப்படுகிறது.

மின்னலைப் போல வானம்பாடி இயக்கத்தின் வாழ்நாள் என்றாலும் இன்று கவிஞர் யாவருக்கும், அதன் வெளிச்சம் கலங்கரை விளக்கம். எவ்வுளவு நேரம் பறந்தோம் என்பதல்ல. எவ்வளவு தூரத்தை வென்றோம்; எந்த எந்த எல்லைகளைக் கண்டோம் என்பதே முக்கியமானது.

- தமிழ்நாடன் (ஒரு வானம்பாடியின் இலக்கிய வானம்-ப.21)

## குறிப்புகள்

1. வல்லிக்கண்ணன், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 7
2. மேலது, பக். 16-17
3. மேலது, ப. 42
4. மேலது, ப. 71
5. மேலது, ப. 85
6. மேலது, ப. 86
7. வானம்பாடி, இதழ் 1
8. ஜே. மஞ்சுளாதேவி, வரலாற்றுப் பார்வையில் வானம்பாடி இயக்கம், எம்ஃபில் ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், 1994

# சுபமங்களா

சா. வளவன்

பத்திரிகைகளின் பெயர்களையோ, அவற்றின் உள்ளே வகைப்பிரித்திருப்பதற்காகத் தலைப்பிட்டுள்ளவற்றையோ சிந்திக்கிற பொழுது ஆங்கிலச் சொற்களும் வடமொழிச் சொற்களுமே உள்ளமை தெரியவரும்.

பத்திரிகைகள் தற்காலச் செய்திகளைச் சொல்லுவன என்னும் எண்ணம் எல்லாருக்கும் உண்டு. ஆனால் அரசியல் நிகழ்வுகளை, ஆன்மிக விழாக்களை, அன்றாடம் நடக்கும் திரைப்படப் பிடிப்புகளையே அவை காட்டும். கட்டுரை வடிவில் எழுதப்படும் செய்திகளை ஆராய்ந்தால் விடுதலைக் காலம் வரைதான் ஆய்வுப் பொருள் அமையும். அல்லது இருபது ஆண்டுகளுக்கு முந்தைய செய்திகள் வரைதான் கட்டுரையின் பாடுபொருள் அமையும்.

'சுபமங்களா' மாத இதழைப் படித்தவர்கள் பத்திரிகைகளின் பொதுத்தன்மைகளிலிருந்து மாறுபட்டு இயங்கியதை அறிவார்கள். இது பொழுதுபோக்கு இதழ்களிலிருந்தும் மாறுபட்டது; இலக்கிய இதழ்களிலிருந்தும் வேறுபட்டது. இலக்கிய இதழ்கள் ஆய்வு இதழ்களாகவோ, கவிதை பற்றியே பெரும்பாலும் பேசுவனவாகவோ அமைந்துள்ளன. தற்காலப் போக்கினை அதாவது, பத்தாண்டுகளுக்கு முந்தைய இலக்கியப் போக்கினை நாடகம், ஓவியம், திரைப்படக் கலைப் போக்கினை அறிமுகம் செய்யவும் கலந்துரையாடவும் செய்த இதழ் சுபமங்களா.

பிற மாநிலங்களில், பிற நாடுகளில் காணும் கலை இலக்கியப் போக்கினை அறிமுகம் செய்யும் மாத இதழ் இதுவாகும். ஆயினும் கூடுமானவரை ஆங்கிலச் சொற்களைக் குறைக்கும் முயற்சியை மேற்கொண்டுள்ளது இந்தப் பத்திரிகை.

கோமல் சாமிநாதன் ஆசிரியராகப் பணியாற்றிய ஐந்தாண்டு இதழ்களே இக்கட்டுரையில் ஆய்வுக்குள்ளாகியுள்ளன. கோமலுக்கு முன்னுள்ள இதழ்கள் ஆராயப் பெறவில்லை. கோமலுக்குப்பின் டிசம்பர் 1995க்குப் பின் இதழ் நின்றுபோனது. கோமல் இருந்த

காலத்து இதழ்கள் வடிவமைப்பிலும் உள்ளடக்கத்திலும் பொலிவு பெற்றிருந்தமையால் இருபதினாயிரம் படிகள் விற்பனையாகின. 59 மாதங்கள் தொடர்ந்து வெளியான சுபமங்களா கோமலின் மறைவுக்குப் பின் - நவம்பர் 1995க்குப் பின் நின்றுபோனது.

> ஒவ்வொரு பத்திரிகை அலுவலகத்திலும் அதன் பின்புலத்தில் அச்சேறாத ஒரு அரசியல் உண்டு அந்த அரசியல்தான் சுபமங்களாவை சூறையாடியதாக இருக்கலாம்[1]

என்கிறார் அதன் உதவியாசிரியர் இளையபாரதி. ஏனெனில், எந்த இதழும் பொருளாதார நெருக்கடியால் பாதிக்கப்படுவது இயல்பு. ஆனால் இந்தப் பத்திரிகையைப் பொருளாதாரத்தில் உயர்ந்திருந்த ஓர் அறக்கட்டளை (ஸ்ரீ ரஞ்சனி டிரஸ்டு) நடத்திக் கொண்டிருந்தது.

ஐம்பதாவது இதழை வெளியிட்டபோது கோமல்சாமிநாதன் எழுதிய தலையங்கத்தில் ஒரு குறிப்பும் தந்துள்ளார்.

> இன்னொரு நோயும் தமிழ்ப் படைப்பாளர்களிடம் தோன்றியுள்ளதோ என்று எண்ணத் தோன்றுகிறது. அதாவது தனக்குத்தானே மடம் கட்டித் கொள்வது, அதற்குத் துணையாகக் கட்டளைத்தம்பிரான்களை, காறுபாறுகளையும் நியமித்துக் கொள்வது, இந்த மடாதிபதியை விட்டால் மிகச்சிறந்தவர் எவருமே இல்லை; இவர்தான் இருபத்தியோராம் நூற்றாண்டின் இலக்கிய மேதை என்று சேகண்டி அடித்துக் காதுகளைத் துளைக்கும் வழக்கம் அதிகமாயிருக்கிறது. மாற்றுக் கருத்துக்கள் உள்ளவர்களைக் கடும் விமர்சனம் செய்வதும் சொற்களால் அடித்து ஒதுக்குவதும், அந்தக் கருத்தே இல்லாமல் ஆக்குவதற்கான வழிமுறைகளைச் செய்வதுமான நிலமான்யச் சமூகப் பண்பு தலை எடுப்பதாகவும் தோன்றுகிறது[2]

ஒன்பது மாதங்களில் கோமலின் மறைவுக்குப் பின்பு இக்கூற்றின் சாரம் அவரது அலுவலகத்திலேயே தலையெடுத்துவிட்டதை உணர முடிகிறது.

சுபமங்களா சாதித்தனவாக ஆசிரியரே நான்கு கருத்துக்களைக் குறித்துள்ளார். வணிக எழுத்துக்களையே இலக்கியம் என்று எண்ணிக்

கொண்டிருக்கும் பெரும்பான்மையான வாசகர்களில் சிலராவது 'இலக்கியம் வேறு' என உணர்ந்து கொண்டமையைச் சாதனை என்கிறார்.

திரைப்படம், களியாட்டம், சிறுதகவல்கள், கிளுகிளுப்பூட்டும் கதைகள், அக்கப்போர் என்ற சிந்தனை ஓட்டத்திலேயே தடம்புரளாமல் சென்றுகொண்டிருப்பது தமிழ்நாட்டுப் பத்திரிகைச் சூழல். அதிலிருந்து மாறிச் சமூகவியல், மானிடவியல், ஓவியம், சிற்பம், பண்பாடு, கலை, திரைக்கலை, அரசியல், தற்கால இலக்கியப் போக்கு முதலிய பல்துறைகளையும் குறிக்கும் இதழாக சுபமங்களா விளங்குவதைக் குறிப்பிட்டுள்ளார். மேலும் படைப்பாளரின் ஆளுமையைக் காட்டும் விரிவான நேர்காணல் ஒவ்வோர் இதழிலும் வெளியிட்டதைப் பெருமையுடன் குறித்துள்ளார். வாசகர்களிடையே விழிப்புணர்வை இந்த நேர்காணல்கள் ஊட்டின; விவாதங்களை எழுப்பின; திறனாய்வாளரும் பங்குகொண்டனர். சுபமங்களாவின் குறிப்பிடத்தக்க சாதனையாக நேர்காணல் விளங்குவதால் அவற்றைத் திரட்டி தனி நூலாயும் ஆக்கியுள்ளனர்.

படைப்பாளர் தம்முடைமையாக (Sense of Belonging) சுபமங்களாவைக் கருதும் உணர்வைக் கொண்டதை மூன்றாவது சாதனையாகக் கருதியுள்ளார் கோமல் சாமிநாதன். அதற்குக் காரணமாக ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம் - 1991 ஜனவரி 16ஆம் நாள் சுபமங்களாவில் ஆசிரியர் பொறுப்பேற்ற நாளில், சென்னையில் இருபத்து இரண்டாவது உலகத்திரைப்பட விழா நடந்து கொண்டிருந்தது. அவ்விழாவிற்கு வருகை தந்த படைப்பாளர் பலரோடும் தம் உணர்வைப் பகிர்ந்து கெண்டார். 1988ஆம் ஆண்டுக்கான சாகித்திய அகாதமி விருதினை 'விசாரணைக் கமிஷனு'க்காகப் பெற்ற சாயாவனம் கந்தசாமியையும் அவ்விழாவில் கண்டார் கோமல். பத்திரிகையில் வெளியிட ஒரு கதையைக் கேட்டார் உடன் வந்த உதவி ஆசிரியர் இளையபாரதி. ஒன்றும் சொல்லாத கந்தசாமி மூன்றுநாள் விடாமல் கேட்டபின் "கதையா அது குப்பையில் கிடைக்கும் தேடணும்" என்றார். அருகிலிருந்து கேட்ட கோமல் துடித்துப் போய் இனி அவரிடம், கதை கேட்கவேண்டாம் என்றார். ஒருவாறு பதிப்பிக்காமல் ஒரு பதிப்பகத்தில் (கலைஞன்) கிடந்த குறுநாவலான 'சாந்தகுமாரி'யை வாங்கிக் கொள்ளச் சொன்னார். அந்தக் குறுநாவல் கந்தசாமிக்கும் சுபமங்களாவிற்கும் புகழை ஈட்டித்தந்தது. முன்வந்த சுபமங்களாவைப் போல் மறுபிறவி எடுத்த சுபமங்களாவும் இருக்கும் என எண்ணியதால் இந்த மெத்தனம்

இருக்கக் கூடும். இலக்கியவாதிகளை ஈர்க்கத் தொடங்கியது பத்திரிகை. 'கதையைக் குப்பையில் தேடச் சொன்ன' சா. கந்தசாமி[3] அலுவலகத்திற்கு வந்து தாமாகவே கதையைத் தரும் நிலை பின்பு ஏற்பட்டதை உணர்ந்தார் கோமல். அதனால் "படைப்பாளர் அனைவருக்குமே சுபமங்களா தனதேயானது என்ற உணர்வு ஏற்பட்டதை மூன்றாவது சாதனையாகக் கருதுகின்றார். நேர்காணலில் கந்தசாமியின் ஆளுமையை வெளிப்படுத்தவும் செய்தார் கோமல்.[4]

எந்த அணியின் தோள்களிலும் சாயாமலும், எல்லா அணியின் கருத்துக்களையும் முன்வைக்கும் தளமாகவும், மக்களாட்சிப் பண்பில் நம்பிக்கை வைத்துச் செயல்படும் சுபமங்களாவின் தனித்தன்மை தொடர்வதை நான்காவது சாதனையாகக் குறித்துள்ளார்.[5]

எல்லா இதழ்களுக்கும் பொருளாதாரச் சிக்கல் இன்றி வேறொரு சிக்கல் தோன்றுவது இயல்பு. வாசகர் பெருகும் போது தோன்றும் சிக்கல் அது. இதழில் வெளிவரும் துறைகளுள் சில சிறப்பான வரவேற்பினைப் பெறும். அவற்றுக்கென இருக்கும் வாசகர்களும், பொதுவான வாசகர்களும் இரு பிரிவாக வளர்வர்.

பொதுவாக இருந்த இதழ்கள், தொடங்கும் போது இருந்த நோக்கங்களைப் பின்பற்றுவதா? குறிப்பிட்ட துறைகளின் வாசர்களின் தேவைக்கேற்ப படைப்பினைக் கூடுதலாக்குவதா? என்னும் சிக்கல் தோன்றும்; இலக்கிய இதழ்களிலும் இச்சிக்கல் தோன்றும். படைப்புகளை மேலோங்கச் செய்வதா? திறனாய்வை வளர்ப்பதா? படைப்பாளர் ஆளுமையை வெளிப்படுத்துவதா? என்னும் சிக்கல் தோன்றக்கூடும். சுபமங்களா இதழுக்கும் இச்சிக்கல் தோன்றியது. வாசகர் வட்டத்தினை மாவட்டந்தோறும் கூட்டி அவ்வப்போதைய பதிவுகளை ஆராய்ந்து, இதழும் வாசகரும் இணைந்து செயல்பட வழியமைத்து வெற்றிகண்டது.

தமிழ் மக்களிடையே வளர்ந்துகொண்டிருந்த ஒரு புதிய வாசகர் வட்டத்தைக் கண்டுபிடித்தது சுபமங்களா என்றே கூறவேண்டும். கலை இலக்கிய முயற்சிக்குப் பெருந்தொகையான வாசகர் வட்டம் உள்ளது என்பதை வெளிப்படுத்தியது. இருபதாயிரம் படிகள் விற்றால் ஒரு படிக்குப் பத்து வாசகர் என்ற அடிப்படையில் 2 இலட்சம் வாசகர் உள்ளனர் என்று கணக்கிடுவர். சிற்றிதழ் நோக்கத்தினைப் பெரும் வெற்றியாக்கியது சுபமங்களா என்பதையே

இது உணர்த்தும். அதற்காகக் கலை இலக்கியத்தை மலிவாக்காமல் சனநாயகமாக்கியது என்றே போற்றுகிறார் கா. சிவத்தம்பி.[6]

புத்திலக்கியமான சிறுகதை இலக்கியத்தினை வலிவுடையதாகப் படைக்கும் விவாதிக்கும் இலக்கிய இதழ் 'மணிக்கொடி'க்குக் குறிப்பிடத்தக்க இடம் உண்டு. மணிக்கொடி முதலில் அரசியல் பின்புலத்தோடு தொடங்கிப் பின்னர் இலக்கியப் பரிசோதனை முயற்சிக்கான களமானது. அக்கால ஆனந்தவிகடன் இலக்கியத்தை மலினப்படுத்திய தன்மைக்கு எதிராக எழுந்ததால் மணிக்கொடி இலக்கியப் பரிசோதனை முயற்சியை மேற்கொண்டதென்பார் கா. சிவத்தம்பி.[7]

பாரதி காலம் முதல் தமிழ் இலக்கியத்தில் ஏற்படும் புதுமையாக்கமும் அதனால் நிகழும் வளமும் தமிழின் மறுமலர்ச்சியாக இலக்கிய ஆர்வலர் கருதினர். அதனால் மணிக்கொடியைத் "தமிழ் நாட்டின் முதலாவது மறுமலர்ச்சி இலக்கியப் பத்திரிகை"யாகப் போற்றினர். அதில் எழுதிய எழுத்தாளர்களும் தங்களை 'மறுமலர்ச்சி எழுத்தாளர்கள்' என்றே அறிவித்துக் கொண்டனர்.[8]

இந்திய விடுதலைக்குப் பின்னர் வாசகர்கள் பெருகியதால் ஒரு பெருங்குழு 'வலிமை மிக்க இலக்கியத்தை' விரும்பியதால் பல பொதுக்கூறுகளைப் படிக்கும் வாசகர்களுக்கும், வலிமைமிக்க இலக்கியத்தை விரும்பும் வாசகர்களுக்கும் இடையே மோதல் எழுந்தது. குமுதம், மகிழ்வைத் தரும் கருவியாக இதழ் பயன்பட வேண்டும் என்ற வாசகர் வட்டத்துக்குத் தீனியிட்டது. அதன் படைப்பாளர்கள் செய்யும் தொழிலை "இலக்கியக் கைத்தொழில் அல்லது எழுத்துக் கைத்தொழில்" என்று பெயரிடுகின்றார் கா. சிவத்தம்பி. திராவிடர் கழகங்களின் இதழ்கள் ஒரு பக்கம் வாசகரை ஈர்த்தன.

மீண்டும் வலிமைமிக்க இலக்கியங்களை அணுகும் முறையில் மாற்றம் ஏற்படவே பொதுவுடைமையைப் போற்றுவோர் இலக்கியத்துறையை நாடினர். 'சாந்தி', 'தாமரை', 'சரஸ்வதி' இதழ்கள் தோன்றின.

பொதுவுடைமைவாதிகளின் கருத்துக்களை மறுப்போரும் இலக்கிய நோக்கில் இதழ் வேண்டுமென விரும்பினர். 'எழுத்து', இதழ் தோன்றியது. அதன் மூலம் 'சிற்றிதழ்' என்னும் மரபும் தோன்றியது.

வல்லிக்கண்ணன், சிற்றிதழ் என்பதற்கு வரைவிலக்கணம் கூறியுள்ளார். "— ஆற்றலும், ஆர்வமும், இலட்சிய வேகமும் தொண்டர்களும் புதுமை சாதிக்க விரும்பும் நவவேட்கைவாதிகளும் சஞ்சிகைப் பதிப்பு மூலம் ஆளுமையை முன்னெடுக்க விரும்புபவர்களும் இதில் (சிற்றிதழ்) ஈடுபடுவர். இதில் பிரதான அம்சம் யாதெனில் ஒரு மேற்கோள் வரையறுக்கப்பட்ட வட்டத்திற்குள் நடத்தப்பெறும் விவாதமே சிறுபத்திரிகையின் தளமாகும். அது படைப்பு முறையாலும் வரலாம். விமர்சன முறையாலும் வரலாம். பொதுவாக இரண்டும் இணைந்தே வரும்."[9]

இதன் அடிப்படையில் 'தீபம்' இதழ் வெளிவரலாயிற்று. சிற்றிதழ்கள் 1970இல் வளர்ந்தன. பொழுதுபோக்கு இதழ்களும் 70களில் பெருகின. இலக்கிய நோக்கில் ஆர்வம் கொண்டோர் இந்தியா முழுமையும் ஆங்காங்கே இருந்தமையால் அவ்வவ் பகுதிகளிலிருந்து சிற்றிதழ்கள் தோன்றின. சிற்றிதழ்களை நடத்துவோர் பல கருத்து குழுக்களாக இருந்தமையால் கருத்து வேறுபாடுகளும் நிரம்ப இருந்தன. பொழுதுபோக்கு இதழ்களின் ஈர்ப்புத் தன்மை அவற்றின் போட்டிகளால் மேலும் கூடியது. இவற்றால் இலக்கியப் பத்திரிகைகளைப் படிப்போர் எண்ணிக்கைக் குறைந்ததில் வியப்பில்லை. எண்பதுகளின் இறுதியில் இந்த நிலைமை இருந்த போதுதான் சுபமங்களா 1991 பிப்ரவரி மாதம் வெளிவரத் தொடங்கியது.

பல குழுக்களாலும் நடத்தப்பெறும் பத்திரிகைகளைப் பொதுநிலையில் படிப்போரின் செலவைக் குறைப்பதாகவும், தடைபட்டு வரும் சிற்றிதழ்களால் வரும் தேக்க நிலையைப் போக்குவதாகவும் அமைந்தது சுபமங்களாவின் வெற்றிக்குக் காரணங்கள் எனலாம். பொருளாதாரத் தடையின்றி வரும் ஓர் இலக்கிய இதழ் என்பது மேலும் ஒரு காரணமாகும்.

சுபமங்களா இலக்கிய ஆர்வமுள்ள வாசகர்களுக்கு நல்ல களமாக அமைந்தது. சுபமங்களா களம் அமைத்த பின், தமிழின் பல முகங்களைக் காண முடிந்தது. பலரும் களத்தில் தங்களது எழுத்துக்களை வைத்தனர். ஆசிரியர் சார்ந்திருக்கும் இலக்கிய அமைப்பு மட்டுமல்லாமல் அதை விமரிசிக்கும் அமைப்பினுக்கும் இதழில் இடம் தந்து நடுநிலைமையோடு செயல்பட்டிருக்கிறது இப்பத்திரிகை. "ஒரு பத்திரிகையின் வாழ்க்கையை ஆராய்ச்சி செய்ய அல்லது இலக்கியத் தாக்கம் ஏற்படுத்த 50 இதழ்கள் என்பது போதுமானதல்ல. ஆனால்

இலக்கிய இதழ்கள் வரலாற்றில் சுபமங்களா தடம் பதித்துவிட்டது என்பது தெளிவாகிவிட்டது"[10] என்ற ஒரு வாசகரின் கடிதம் இந்த இதழின் தொடர் வெற்றியைக் காட்டுகிறது. அந்த வாசகர் மலையாள வாசகர். அதனால் இயல்பாகவே மலையாள இதழுடன் ஒப்பிடும் ஆர்வம் அவருக்குத் தோன்றியது. "என் போன்ற மலையாள வாசகர்கள் சுபமங்களாவை மலையாள வார இதழான கலாகௌமுதியுடன் ஒப்பிட்டுப் பேசினோம். பின் அது சற்று மாற்றம் பெற்றதை உணர முடிந்தது. அப்போது மாத்ருபூமியுடன் ஒப்பிட முயற்சித்தோம். ஆனால் தற்பொழுது சுபமங்களாவை, சுபமங்களாவாகவே பார்க்க விரும்புகிறோம்"[11] என்று கடிதத்தை முடித்திருக்கிறார்.

சுபமங்களா பற்றிய இரண்டு உண்மைகளை இக்கடிதம் காட்டுகிறது. ஒன்று சுபமங்களாவின் வளர்ச்சி. அதனால் முதலில் ஓர் இதழுடனும் அடுத்து வேறோர் இதழுடனும் ஒப்பிடும் முயற்சியை உருவாக்கியதைக் காட்டுகிறது. இரண்டாவது இதழ் ஒரே சீராக இருந்திருக்குமானால் எந்த நேரத்திலும் வாழ்விழந்து போயிருக்கும். என்ற உண்மையை உணர்த்துகிறது.

சுபமங்களா எத்தனையோ இதழ்களுக்கு இடையில் தமிழின் தரம் ஓரளவிற்குக் குறையாமல் இலக்கியம், நாடகம், நாட்டியம், சிற்பம், நாட்டுப்புறவியல் போன்ற பல துறைகளிலும் ஆர்வம் காட்டிவந்தது. தமிழ்ப்பண்பாட்டிற்குப் புதுவடிவம் தந்து மேலும் மெருகூட்டியது. பல்வேறுபட்ட கலைஞர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்களிடம் நேர்காணல் கண்டு அத்துறை ஆர்வத்தை வளர்த்து, விளங்கிக் கொள்ளவும் புதிய பாதைக்கு வாசகரை இட்டுச் செல்லவும் செய்தது. சர்ச்சைக்குரிய கட்டுரைகளையும், அவற்றின் ஆதரவு, எதிர்ப்புக் குரல்களையும் தவறாமல் வெளியிட்டு இலக்கியப் பணியில் நடுநிலைமையில் பங்காற்றியது என்றே கூற வேண்டும்.

சுபமங்களா, இந்திய-தமிழக இலக்கியப் போக்குகள் குறித்தும், சமுதாயம் குறித்த இலக்கியம் சரிவரப் படைக்கப்படாமை குறித்தும் அதற்கு விடை தருவது போன்று படைப் பாளர்களிடமிருந்து படைப்புகளைத் தேர்ந்து வெளியிடுவதையும் பணிகளாகக் கொண்டிருந்தது. இலக்கியத்தின் பன்முகங்களை அறிந்துகொள்ள சி.சு. செல்லப்பா போன்றோரின் 'காவிய இயல்' போன்ற கட்டுரைகளை (ஏப்ரல், மே 1992 இதழ்கள்) வெளியிட்டுள்ளது. முன்னதாக நூலாக எழுதியதிலிருந்து மீண்டும் பதிப்பித்துக் கொள்ள சுபமங்களாவிற்கு அனுமதி வழங்கியிருக்கிறார் சி.சு. செல்லப்பா.

அழகுணர்வு, பொருட்செறிவு நிறைந்த கவிதைகளைத் தொடர்ந்து வெளியிட்டுள்ளது. மனித இனத்தின் காயம், வடு முதலியனவற்றை முழுமனத்துடன் உணர்த்தும் சிறுகதைகளை வெளியிட்டுள்ளது; தன் மதிப்பீட்டை வாசகரிடையே கேட்டறிந்து கட்டுரைகளாக வெளியிட்டுள்ளது.

சுபமங்களாவில் நேர்காணல், கட்டுரைகள், கவிதைகள், சிறுகதைகள், தலையங்கம், வாசகர் கடிதம், புத்தக அறிமுகம், அந்தந்த மாதத்தில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க நிகழ்ச்சிகளைப் பற்றிய மாதபலன், ஆசிரியர் வாழ்க்கையிடையே நிகழ்ந்த சில நிகழ்வுகளைக் கூறும் 'பறந்து போன பக்கங்கள், புத்தகங்களை விமரிசிக்கும் 'நூலகம்', நகைச்சுவைத் துணுக்காக இல்லாமல் பயனுள்ள பொன்மொழிகளையும் அறிஞர்தம் வாழ்விலிருந்து பயனுள்ளவற்றைத் தொகுத்தும் துணுக்குகளாக வெளியிடும் தன்மை ஆகியன இடம்பெற்றுள்ளன. பத்திரிகைகளும் பதிப்பகங்களும் விளம்பரம் செய்துகொள்ள, பெரும் சலுகை வழங்கியுள்ள மனம் சுபமங்களாவிற்கு இருந்தது. பிற இதழ்களைப் போற்றும் பரந்த மனம் இதனால் வெளிப்படுகிறது.

"சுபமங்களாவின் தனித்தன்மையாக அதன் அடையாளமாக, ஏன் - முகமாக அமைந்தது அதன் நேர்காணல்கள்"[12] என்று உதவியாசிரியராக இருந்த இளையபாரதி கூறியிருப்பது உண்மைதான். தமிழில் பலவகையான எழுத்தாளர்கள் உள்ளனர் என்பதை இந்த நேர்காணல்கள் வெளிப்படுத்தியிருக்கின்றன. கடந்த நாற்பதாண்டுகளாக விளங்கிவரும் இலக்கியப் போக்கினை அறிய இவை உதவும். திராவிட இயக்க எழுத்தாளர்கள், இடதுசாரி சிந்தனையாளர்கள், மார்க்ஸிய இலக்கியவாதிகள், அமைப்பியலாளர்கள் எனப் பலரும் இடம் பெற்றனர் என இளையபாரதி குறிப்பிட்டிருந்தாலும் 37 நேர்காணல்களில் நாவல், சிறுகதை எழுத்தாளர் 19 பேர் நேர்காணப் பெற்றுள்ளனர். ஓவியம், இசை, நாடகம், அரசியல், திரைப்படம் ஆகிய துறைகளில் ஒவ்வொருவர் நேர்காணப் பெற்றுள்ளனர். இசை விமர்சகர் ஒருவரும், விமர்சனக் கலைஞர் இருவரும், பத்திரிகையாளர் மூவரும் கவிஞர் நால்வரும் நேர்காணப் பெற்றுள்ளனர். அந்நிய மாநில மொழிகளில் காணும் நவீன இலக்கியப் போக்கினை ஓரளவு உணர சுபமங்களாவின் நேர்காணல் உதவியுள்ளது. மொழிப்பெயர்ப்பாளர் ஒருவரையும் நேர்கண்டு தமிழில் மொழிபெயர்த்த இலக்கியங்களின் போக்கினை விளக்கி, தமிழோடு ஒப்பிடவும் வைத்த பணி போற்றத்தக்கது. நாடகாசிரியராக, இறுதியில் பத்திரிகையாளராக மாறியும்,

பத்திரிகைகளில் பெரிதும் இடம்பெறும் நாவல், சிறுகதைகளின் படைப்பாளர்களையே நிரம்ப நேர்காணவைத்தார் கோமல். கோமல் மாறுபடும் எல்லா இலக்கியக் கருத்துகளுக்கும், அவரவர் நிலை நின்று தத்தம் கருத்துக்களை எடுத்துக் கூறுவதற்கு நேர்காணலில் வாய்ப்பளித்தார்.

நேர்காணலில் கலை இலக்கிய ஆளுமைகளை நன்கு வெளிக்கொணர்ந்துள்ளனர். மேலும் விவாதங்களை வாசகர் நிகழ்த்தினர் என்றாலும் குழுமனப்பான்மையில் இயங்குவோருள் ஆயிரம் படிகள் விற்பனையாகும் சிற்றிதழ்களில் எழுதுவோருள்ளும் பேராசிரியர்களை வம்புக்கிழுக்கும் சிலர் இருப்பதை நேர்காணல்கள் புலப்படுத்துகின்றன. பேராசிரியர்கள் படிப்பதே இல்லை என்றும் அவர்களின் திறனாய்வு நெறி வேறென்றும் சிற்றிதழ்களில் கதை முதலியவற்றை விமர்சனம் செய்வோர் நெறி வேறென்றும் குறைகண்டு வேறுபடுத்தியுள்ளனர்.

சிற்றிதழ் எழுத்தாளர், அவர்தம் எண்ணிக்கையை விட அதிக அளவில் ஈடுபடும் பேராசிரியர்களின் இலக்கியப்பரப்பு அதிகமானது. அதிலும் 80களில் வெளிவந்த படைப்புக்களைப் பாடமாக ஆக்கினால்கூட அனைவராலும் கற்கவும் முடியாது; கற்பிக்கவும் முடியாது. இவற்றை உணர்ந்து நவீன இலக்கியக் குழுமனப்பான்மையுடைய எழுத்தாளர் ஓரம் சொல்லாமல் இருந்தால், இதழியல் கருத்தரங்கம் பத்து நடத்தியவர்களுக்கு மேலும் வலிமை கூடும். நேர்காணலில் பேராசிரியர் கா. சிவத்தம்பி, இன்குலாப், மேத்தா ஆகியோர் 'பானைச் சோற்றுக்கு ஒரு சோறுபதம் போல்' இடம் பெற்றுள்ளனர். அவர்களைத் தமிழ்ப் பேராசிரியர்கள் என்றே காண்க. எங்களைப் போன்றோர் முன்னிற்க முயல்கிறோம், சென்னைப் பல்கலைக்கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் முதலிய நிறுவனங்கள் முன்னிற்கின்றன. இத்தகு சான்றுகள் இருக்கையில் படைப்பாளர்கள் மேலும், மெருகேறப் படைக்கலாம்.

சுந்தர ராமசாமியை ஆறாவது இதழுக்காக நேர்கண்டவர் கேட்ட வினாவும் அவர் அதற்கு அளித்த விடையும் எண்ணத்தக்கவை.

> ஐந்து இதழ்களாகச் சுபமங்களா பார்த்துகிட்டு வர்ரீங்க. அதப்பத்தி உங்க அபிப்ராயம்? இதுல உள்ள குறைகள் என்னென்ன? எப்படி எப்படி செய்யலாம்?

> இளம் எழுத்தாளர்களுக்கு ஆதரவு கொடுத்துக்கிட்டு இருக்கிறீங்க. அது எனக்கு மகிழ்ச்சியைத் தருது. மதிப்புரையும் நல்லாப் போடுறீங்க. இன்னும் இலக்கிய விமர்சனக் கட்டுரை நிறைய வரணும். தமிழ்சினிமா, அரசியல் இதைப் பற்றி விமர்சன ரீதியா கருத்துக்களை எழுதிப் பெரிய சர்ச்சையை எழுப்பணும். நமக்கு ஏற்பட்டுள்ள தாழ்வுக்குக் காரணம் என்னவென்று கண்டு அதைக் களைய வேண்டும். அதற்கு சுபமங்களா ஒரு கருவியாக வேண்டும்[13]

சுபமங்களா அந்தக் கருவியாகவில்லை என்பது உண்மை. கருவியாக முடியாது என்பதும் உண்மை. எல்லாரையும் நிறைவு செய்ய முடியாது என்பதை தி.க.சி.யின் மகன் (சி. கல்யாணசுந்தரம் என்னும் கல்யாண்ஜி என்னும்) வண்ணதாசன் நேர்காணலில் குறிப்பிட்டுள்ளதைக் காட்டியே கூறலாம்.

> எனக்குக் கவிதை என்னன்னு தோணுதோ அதைத்தான் பேசமுடியும். அவங்க (முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தினர்) கவிதைப்பற்றி நினைப்பதை நான் பேச முடியாதில்லையா? நான் என்ன பேசணுமோ அதைப் பேசிட்டு வந்தேன். அவங்களுக்கு அது ஒண்ணுமே திருப்தியா இல்ல. அவுங்க நான் என்ன சொல்லணுமுன்னு நெனைச்சாங்களோ தெரியலை. அவங்க நினைக்கிறத நாம சொல்லவும் முடியாது. அவங்க எதிர்ப்பார்க்கிறத நாம செய்ய முடியல. நமக்கு சந்தோஷமாபடுகிறது அவங்களுக்குப் பிடிக்கலை.[14]

இக்கூற்று பேராசிரியர்களுக்கும் பொருந்தும்; சுபமங்களாவிற்கும் பொருந்தும். தம்மால் முடிந்ததை எல்லாம் செய்தது சுபமங்களா. அந்த அளவில் அதற்கு வெற்றியே. பேராசிரியர்கள் முடிந்ததை எல்லாம் செய்கின்றனர். அந்த அளவில் அவர்கட்கும் வெற்றியே!

சுபமங்களாவின் சிறந்த பண்புகளாக ஏழினைக் குறித்துள்ளார். கா. சிவத்தம்பி.[15]

1. சுபமங்களா தான் மாறுபடும் இலக்கியக் கருத்துகளுக்கும் அவரவர் நிலையில் நின்று தத்தம் கருத்துகளை எடுத்துக்கூற வாய்ப்பளித்தது.

2. நுண்கலைகளிலும் (ஓவியம், செதுக்கற்கலை) தொழில் நுட்பக்கலைகளிலும் (திரைப்படம், தொலைக்காட்சி) மிகவும் திடமான விவாதங்களை நடத்தியது. இந்தக் கருத்துப்பரிமாற்றங்கள் முன்பெல்லாம் மிகக்குறைவு. மேற்குலகின் சிந்தனைகளைத் தரும் களமாகவும் விவாதங்களை அமைத்தது இப்பத்திரிகை.

3. அச்சுத் தொழிலில் அண்மைக்கால வளர்ச்சியைக் கொண்டிருந்தது. அச்சமைப்பு (Layout), பக்க அமைப்பு, புகைப்படங்களை அமைத்த முறைகளில் கவர்ச்சி இருந்தது.

4. இலக்கியம், கலை பற்றிய துறைகளில் தமிழ் வாசகரை ஒருங்கு சேர்த்தது. அது, இப்பத்திரிகையின் ஒரு பண்பாகும்.

5. ஈழத்து இலக்கியத்திற்கும் அதன் விரிவான புகலிட இலக்கியத்திற்கும் சுபமங்களா ஆற்றிய பணி சிறப்பானது; கோமல் சாமிநாதனின் இலங்கைப் பயணம் (1993) முக்கியமானது (தமிழ்ப் போராட்டம் தவறாக விளக்கப் பட்டதை மாற்றும் முயற்சியாக இப்பயணம் அமைந்தது).

6. சுபமங்களா, திடமான கலை, இலக்கியங்களை மலினப்படுத்தாமல், சனநாயகமயப்படுத்தியது மற்றுமொரு பண்பாகும்.

7. நவீன தமிழ் இலக்கியத்தின் திடமான சிந்தனைப் போக்குகள் அகண்ட அரங்கில் விவாதிக்கப்பட்டன; பகிர்ந்து கொள்ளப்பட்டன (மறைக்கப்படவில்லை). இந்த வரலாற்றுப் பணியைச் சுபமங்களா நிறைவேற்றியது.

சுபமங்களாவின் சிறந்த பண்புகளால் புதிய வாசகர் வட்டம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இன்றைய சூழல், தனித்துருவ அதிகாரமும் கருத்துமயமாக்கும் சூழலும் கொண்டதாக உள்ளது. அவற்றிலிருந்து விடுபட்டு, திடமான இலக்கிய நோக்குடையோரிடத்து வரன்முறையான தொடர்பாடல் தேவை என்பதைச் சுபமங்களா உணர்த்தியது.

## குறிப்புகள்

1. 'கலைஞர் முதல் கலாப் பிரியா வரை' - சுபமங்களா நேர் காணல்கள், முன்னுரை, ப. x, கோமல் சாமிநாதன், இளையபாரதி
2. சுபமங்களா 50ஆவது இதழ் மார்ச்சு 1995, ப. 2
3. கலைஞர் முதல் கலாப்பிரியா வரை, முன்னுரை, ப. xi
4. சுபமங்களா, ஏப்ரல் 1992 சித்திரைச் சிறப்பிதழ், பக். 8-15
5. சுபமங்களா, 50ஆவது இதழ், மார்ச்சு 1995, ப. 1
6. கலைஞர் முதல் கலாப்பிரியா வரை, கா.சிவத்தம்பியின் 'தமிழ் இலக்கியச் சஞ்சிகை மரபும் சுபமங்களாவும்' - பின்னிணைப்புக் கட்டுரை, ப. 537
7. மேலது, ப. 528
8. வல்லிக்கண்ணன், தமிழில் சிறுபத்திரிகைகள், ப. 149
9. கலைஞர் முதல் கலாப்பிரியா வரை, ப. 531
10. சுபமங்களா ஏப்ரல் 1995 ப. 21, (பொன்மனை வல்சகுமார், குலசேகரம்)
11. மேலது
12. கலைஞர் முதல் கலாப்பிரியா வரை, ப. 2
13. மேலது, ப. 76
14. மேலது, ப. 183
15. மேலது, கா. சிவத்தம்பியின் கட்டுரை, பக். 535-537

சென்னைப் பல்கலைக்கழகம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
இதழியல் ஆய்வு மையம்

இணைந்து நடத்தும்

# இலக்கிய இதழ்கள் கருத்தரங்கம்

## *அழைப்பிதழ்*

(இதழியல் கருத்தரங்கம் 10)

அன்புடையீர்,

வணக்கம்.

தமிழ் இலக்கிய இதழ்கள் என்னும் பொருள் பற்றிய கருத்தரங்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் (சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை-113) 8.10.99, 9.10.99, 10.10.99 ஆகிய நாள்களில் நடைபெற உள்ளது.

அனைவரும் வருகைதந்து சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை**

**சென்னைப் பல்கலைக்கழகம்**
**சென்னை**

**டாக்டர் மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையம்**
**சென்னை**

# தொடக்க விழா

8.10.99 முற்பகல் 10.00 - 1.00

**தலைமை :**

முனைவர் இரா. இளவரசு அவர்கள்
பேராசிரியர் - தலைவர்
பாரதிதாசன் உயராய்வு மையம்
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி

தொடக்கவுரை :

முனைவர் கா. சிவத்தம்பி அவர்கள்
வருகைதரு பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**சிறப்புரை :**

முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்கள்
தமிழ்த்துறைத் தலைவர் - ஓய்வு
பாரதியார் பல்கலைக்கழகம், கோவை

**வாழ்த்துரை :**

திருமிகு இரா. முத்துக்குமாரசாமி அவர்கள்
மேலாண்மை இயக்குநர்
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

திருமிகு க. திருநாவுக்கரசு அவர்கள்
பொறுப்பாசிரியர், சங்கொலி

திருமிகு கீ. சீனிவாச ராகவன் அவர்கள்
நிலைய இயக்குநர், வர்த்தக ஒலிபரப்பு
சென்னை வானொலி நிலையம்

# முதல் அமர்வு

**8.10.99** **பிற்பகல் 2.00 - 5.00**

தலைமை :

**முனைவர் சுந்தர ஆவுடையப்பன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு ப. புகழேந்தி | தென்றல் |
| முனைவர் ச. சிவகாமி | உமா |
| முனைவர் ஆ. தசரதன் | நாடகக் கலை |
| திரு க. சந்திரசேகரன் | சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் |

கருத்துரை :

**முனைவர் பழ. அதியமான்**

# இரண்டாம் அமர்வு

**9.10.99** **முற்பகல் 10.00 - 1.00**

தலைமை :

**முனைவர் இரா. ஞானபுஷ்பம்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் ஆ. கந்தசாமி | அமுதசுரபி |
| முனைவர் பு. பிரகாசம் | மஞ்சரி |
| திரு மா.ரா. அரசு | சிவாஜி |
| திரு ஆ. இளங்கோவன் | தமிழ்ச்செல்வி |
| திருமதி மு. சுப்புலட்சுமி | தீபம் |

கருத்துரை :

**திரு பெ.சு. மணி**

## மூன்றாம் அமர்வு

9.10.99 பிற்பகல் 2.00 - 5.00

தலைமை :

**முனைவர் தி. இராசகோபாலன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் மே.து. இராசுகுமார் | கசடதபற |
| முனைவர் மு. சுதந்திரமுத்து | கணையாழி |
| முனைவர் சா. வளவன் | சுபமங்களா |
| முனைவர் மு. இளமுருகன் | முல்லை |
| திரு தா. திலீப்குமார் | காலச்சுவடு |

கருத்துரை :

**முனைவர் முத்து சண்முகம்**

## நான்காம் அமர்வு

10.10.99 முற்பகல் 10.00 - 1.00

தலைமை :

**முனைவர் அ.அ. மணவாளன்**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் பொற்கோ | கண்ணதாசன் |
| முனைவர் இரா. இளவரசு | தனித்தமிழ் இயக்க இதழ்கள் |
| முனைவர் இ. சுந்தரமூர்த்தி | குறள் இதழ்கள் |
| முனைவர் சிற்பி | வானம்பாடி |
| திரு பெ.சு. மணி | தமிழ் முரசு |

கருத்துரை :

**திரு பல்லடம் மாணிக்கம்**

## ஐந்தாம் அமர்வு

10.10.99 பிற்பகல் 2.00 - 5.00

தலைமை :

முனைவர் ம.செ. இரபிசிங்

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் தி.சு. நடராசன் | எழுத்து |
| முனைவர் சு. ராஜசேகரன் | திங்கள் |
| முனைவர் கி. இராசா | எழுத்தாளன் |
| முனைவர் இர. வேனிலா | ஞானரதம் |

கருத்துரை :

முனைவர் திருப்பூர் கிருஷ்ணன்

## நிறைவு விழா

10.10.99 மாலை 5.00 - 7.00

தலைமை :

முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள்
இயக்குநர், பதிப்புத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்

சிறப்புரை :

முனைவர் ஈரோடு தமிழன்பன் அவர்கள்
தமிழ்ப் பேராசிரியர் - ஓய்வு
புதுக்கல்லூரி, சென்னை

நிறைவுரை :

முனைவர் பொற்கோ அவர்கள்
துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக்கழகம்

## இதழியல் கருத்தரங்குகள் - 10

| நாள் | கருத்தரங்கப் பொருள் | நிகழிடம் |
|---|---|---|
| 13.10.97<br>14.10.97 | இந்திய விடுதலைக்கு<br>முந்தைய தமிழ் இதழ்கள் *1* | தமிழ் மொழித்துறை<br>சென்னைப் பல்கலைக்கழகம் |
| 13.12.97<br>14.12.97 | இந்திய விடுதலைக்கு<br>முந்தைய தமிழ் இதழ்கள் *2* | பச்சையப்பன் கல்லூரி<br>சென்னை |
| 6.2.98<br>7.2.98 | திராவிட இயக்க இதழ்கள் *1* | தமிழ் இலக்கியத்துறை<br>சென்னைப் பல்கலைக்கழகம் |
| 3.4.98<br>4.4.98 | இந்திய விடுதலைக்கு<br>முந்தைய தமிழ் இதழ்கள் *3* | காதி பவன்<br>சென்னை |
| 29.7.98 | இந்திய விடுதலைக்கு<br>முந்தைய தமிழ் இதழ்கள் *4* | சென்னை வானொலி நிலையம்<br>சென்னை |
| 21.9.98<br>22.9.98 | திராவிட இயக்க இதழ்கள் *2* | தமிழ் இலக்கியத்துறை<br>சென்னைப் பல்கலைக்கழகம் |
| 12.12.98<br>13.12.98 | தமிழ் ஆய்வு இதழ்கள் | பச்சையப்பன் கல்லூரி<br>சென்னை |
| 10.4.99<br>11.4.99 | பொதுவுடைமை<br>இயக்க இதழ்கள் | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை |
| 24.7.99 | மகளிர் இதழ்கள் | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை |
| 8.10.99<br>9.10.99<br>10.10.99 | இலக்கிய இதழ்கள் | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை |

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100 | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| வ. உ. சி. வளர்த்த தமிழ் | 20.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

**Pub.No.511 இலக்கிய இதழ்கள் 110.00**